தமிழ் - ஆங்கில அகராதி

TAMIL – ENGLISH

# DICTIONARY

OF

## MEDICINE, CHEMISTRY, BOTANY

AND

## ALLIED SCIENCES

(BASED ON INDIAN MEDICAL SCIENCE)

**Volume – V**

BY

T. V. SAMBASIVAM PILLAI

# தமிழ் - ஆங்கில அகராதி

## TAMIL - ENGLISH

# DICTIONARY

OF

## MEDICINE, CHEMISTRY, BOTANY

AND

## ALLIED SCIENCES

(BASED ON INDIAN MEDICAL SCIENCE)

**Volume - V**

BY

T. V. SAMBASIVAM PILLAI



# முகவுரை

தமிழ் மேதை காலஞ்சென்ற டி. வி. சாம்பசிவம் பிள்ளை அவர்கள் இயற்றிய இந்திய மருத்துவ அகராதி வரலாறு சிறப்பு மிக்கது, பாராட்டுக்குரியது. தமிழ் – ஆங்கிலக் கலைக்களஞ்சியம் போன்ற இந்த நூல் சித்த வைத்தியத்திற்குப் பெரிதும் பயன் படக்கூடியது. இந்த நூல் அகரமுதலியாக வரிசைப் படுத்தப் பெற்று வேறு எவரும் செய்திராத சித்த வைத்தியக் குறிப்பு களும், இடையிடையே ஆயுள்வேத, யுனானி வைத்தியக் குறிப்பு களும் கொண்டது. இது தமிழ் உலகிற்கும், மருத்துவத் துறைக்கும் ஒரு பொக்கிஷம் என்றால் மிகையாகாது.

இந்த நூலில் ஆங்கிலத்திலும் விளக்கம் கொடுக்கப் பட்டு யாவரும் எளிதாகப் புரிந்து கொள்ளும் வகையில் இயற்றப் பட்டுள்ளது இதன் தனிச்சிறப்பாகும்.

ஐந்து பாகங்கள் கொண்ட இந்த சிறப்பு அகராதியின் மூன்று பாகங்கள் முன்பே வெளியிடப்பெற்றுள்ளன. இந்த மருத்துவக் கலைக்களஞ்சியத்தில் மருத்துவ வேதியியலும் (Medicine Chemistry), தாவர இயலும் (Botany), பல்வேறு மூலிகைகள் அவற்றின் இரசாயனம் குணதிசயங்கள், அவற்றை பயன்படுத்தும் முறைகளும் ஒருங்கே காணக்கிடக்கின்றன.

இந்த நூல் இயற்றும் அரும் பணியில் விடாமுயற்சி யுடன் பல இன்னல்களுக்கிடையே தியாக உணர்வுடன் தம் ஓய்வு காலவாழ்வை அர்ப்பணித்துக்கொண்டு நூலை இயற்றி முடித்த ஆசிரியர் மேதை திரு. சாம்பசிவம் பிள்ளை அவர்களுக்குத் தமிழகம் என்றென்றும் கடமைப்பட்டுள்ளது.

முதல் இரண்டு பாகங்களைத் திரு. சாம்பசிவம் பிள்ளை யவர்களே ‘ தாம் ஒருவராக ’ ‘ தனி மனிதனாக ’ பெரும் நஷ்டத்தைப் பொருட்படுத்தாது பிரசுரித்தார். மூன்றும் பாகம் திரு. சாம்பசிவம்

பிள்ளை காலத்திலேயே அச்சிடப்பட்டு அரைகுறையாய் தாள்கள் மடிக்கப் பெருமலை கிடந்தன. பிறகு அரசின் மானிய உதவியுடன் மூன்றும் பாகம் வெளியிடப்பெற்றது. இந்தப்பணியில் இயக்குநர் டாக்டர் பு. மு. வேணுகோபால் அவர்களின் முயற்சியும் பணியும் பாராட்டத்தக்கது.

ஆனால் அதற்குமேல் ஆசிரியர் அருளிய மீதியுள்ள பாகங்களை வெளியிடும் முயற்சி ஈடேறவில்லை. எனவே, அரசினர், விந்தை மனிதர் விஞ்ஞான மேதை ஜி. டி. நாயுடு அவர்கள் இந்திய மருத்துவ அகராதியின் அடுத்த பாகங்களை அச்சிட முன் வந்ததை வரவேற்றனர். மேதை ஜி. டி. நாயுடு அவர்கள் அமரராகவே அவர்தம் திருமகன் ஜி. டி. கோபால் அவர்கள் அகராதியை அச்சிடும் அறப்பணியை மேற்கொண்டார்; ஐந்தாம் பாகத்துடன் இந்நூல் நிறைவு பெறுகிறது. இவ்வாறான பெருமுயற்சிகளின் விளைவாக உருவான இந்திய மருத்துவக் கலைக்களஞ்சியத்தின் (Indian Medical Encyclopedia) ஐந்தாம் பாகம் 'ப' முதல் 'ஜோ' வரை கொண்டதாகும்.

முன் வெளிவந்த இந்தக் கலைக்களஞ்சியத்தின் நான்கு பாகங்களையும் படித்து பயன்பெற்ற தமிழுலகமும் மருத்துவத் துறையினரும் இந்த ஐந்தாம் பாகத்தையும் துய்த்துப் பலனடைவர் என நாம் நம்புகிறோம். இத்துறையின் இந்தக் கலைக் களஞ்சியத்தைப் பயன்படுத்தி நோயாளிகளுக்கு நிவாரணம் அளிப்பதன் மூலம் இந்த வெளியீட்டின் ஆசிரியர் அமரர் சாம்பசிவம் பிள்ளைக்கு ஆற்றும் நன்றி ஆகும். வாழ்க அவர்தம் பெயரும் புகழும்.

இந்த நூலில் ஏதேனும் குறைபாடுகள் இருப்பின் வாசகர்கள் தயக்கமின்றித் தங்களுடைய ஆலோசனைகளைத் தெரிவிக்குமாறு வேண்டுகிறோம். நல்ல கருத்துக்களை நாங்கள் வரவேற்கின்றோம்.

ஜி. டி. நாயுடு அறக்கட்டளை.

கோயமுத்தூர்-18.
1978.

**ப,** காற்று, wind; 2. சாபம், curse; 3. பெருங்காற்று, stormy or violent wind; 4. குடித்தல், drinking.

**பக,** கோமயம், கோசலம், cow's urine.

**பகடி,** பிரகிரிதி தத்துவம், existance of matter; 2 சடப்பொருள் தத்துவம், philosophy of matter.

**பகடித்தல்,** அரோசித்தல், nauseating; 2. கண் மயங்கப்பண்ணல், to cause drowsiness; dizziness; 3. கவுதாரி, partridge—Perdix orientalis.

**பகடிபம்,** எருமை, buffalo.

**பகடு,** ஆண் யானை, male elephant; 2. இடபம், bull; 3 எருமைக்கடா, male buffalo ox; 4. வலிமை, strength.

**பகடை,** சிவதை, Indian rhubarb — Ipomaea turpethum; 2. எதிர்பாரத அதிர்ஷ்டம், unexpected luck.

**பகட்டு,** பார்வை, sight; 2. பிரகாசம், lustre, brilliancy; 3. மயக்கம், mental delusion.

**பகட்டுக்கல்,** தவளைக்கல்; இது உபரசச்சரக்கிலொன்று, any ore of iron; ironstone. This is one of the 120 kinds of natural substances described in Tamil Medicine.

**பகண்டம்,** கடலை, Bengal gram.

**பகன்றை,** ஓர் வகைக் கவுதாரி, a kind of partridge; 2. சிவல் பட்சி, a class of birds consisting of partridge, quiul etc; 3. see பகன்றை; 4. சிவதை; see பகடை. Indian jalap, turpeth root — Ipomea turpethum.

**பகநோய்,** பெண்குறி நோய், disease of the female genital.

**பகந்தாம்,** see பகந்திரம்.

**பகந்திரம்,** பவுத்திரம், ஆசனவாயில் புரை வைத்த புண், இது வாதபித்த கபதோஷங்களினாலும், சதா உட்கார்ந்திருத்தல், குதிரை, யானை சவாரி செய்தலினாலும், மிகுதியாக போகத்தில் ஈடுபடுவதாலும் உடம்பில் கொதிப்பேறி பிரமேகம் உண்டாவதாலும், குய்யத்திற்கும், அபானத்திற்கு மத்தியில் கொடியின் அடி நரம்பின் பேரிலாவது அதன் பக்கங்கள், அபான வாயில் இவ்விடங்களிலாவது அண்டத்திலாவது முளைபோல் அல்லது கழற்சிபோல் புடைத்துக்கண்டு, அதினின்று சீழ் வடியும், இதற்கு உடனே சிகிச்சை செய்யாவிட்டால், ஆண்களுக்கு குதம், பீடமத்தியிலும் பெண்களுக்கு யோனி ஆசனப்பக்கம் இவ்விடங்களில் உபாதை உண்டாகி அதன் வழியாய் மல சலம் இறங்கும்படி ஏற்படும்.

This is sinus in ano. It is caused by the vitiation of the three humours which get deranged due to sitting in the hard seat for a long time daily, riding on elephant, or horse, excessive sexual indulgence and venereal disease. It first appearance as a protuberance in the perineum near the anus or scrotum. then it opens and foul smelling pus and blood oozes out. If this is not cured, a sinus forms through which faeces and urine may pass out.

2. பவுத்திரம், இது கொடி, மூத்திரப்பை இவைகளின் அருகேயுள்ள இடங்களிலும் வழியுண்டாக்குவதால் இதற்கிப் பெயர் வாய்ந்தது போலும், fistula in ano. It is so called from the fact that it pierces through the rectum the perineum, the bladder and the places adjoining them, thereby setting up a mutual communication between them.

**பகந்திரவிரணம்,** பவுத்திரப்புண், இது ஆசன வெலும்புகளின் இடையே வலியையும், குதத் தண்டை நமைச்சலையும் உண்டாக்குவதுடன், வீக்கமும் எரிச்சலையும் தரும், இது சாதாரணமாய் ஆசன வாயிலிருந்து இரண்விரற்கடை தூரத்தில் எழும்பும், fistula or ulcer. It is marked by pain about the sacral bones and itching about the anus followed by swelling and burning sensation which are considered to be the preliminary symptoms of this disease. It generally occurs within a space of two fingers from the distal end of the rectum.

**பகபகவெனல்,** பசியினால் உண்டாகும் வயிற்றெரிச்சலின் குறிப்பு, a term applied to the peculiar burning sensation in the stomach from hunger.

**பகப்பாதி,** சித்திர மூலம், Ceylon leadwort — Plumbago zeylanica.

**பகமலர்,** கருப்பை, the womb. uterus.

**பகம்,** காந்தி, lustre; 2. பெண்குறி, the genital of a female — Pudendum or vulva as generally applied includes, monspubis, the cubia majoraet minora pudendi, the clitoris, the vestibule of the vagina, the bulb of the vestibule and the greater vestibular glands; 3. கொக்கு, stork; 4. கொக்கு மந்தாரை, crane's feather — Bauhinia acuminata; 5 ஞானம், wisdom; 6. அழகு, beauty; 7 காக்கட்டான் கொடி, mussell shell creeper — Clitoria ternatea (typica) 8. குதத்திற் கும் குய்யத்திற்கும் நடுவேயுள்ள பாகம், Perineum, interspace between rectum and genital.

**பகரம்,** கொக்கு மந்தாரை, which see.

**பகராசிகம்,** தூலி, Indian mahogony.

**பகரி,** ஆவிரை, tanners cassia — Cassia auriculata.

**பகர்,** பங்கம்பாளை, worm killer — Aristolochia bracteata.

**பகர்விலி,** நெய்தல், white Indian water lily— Nymphae pubescence alias N. lotus.

**பகலசனம்,** பகல்சாப்பாடு, midday meals; dinner.

**பகலிருக்கை,** ஏகாந்தவிடம் solitary place; seeluded place.

**பகலுறக்கம்,** see பகல் தூக்கம், day sleep as opposed to night sleep.

**பகலைக்குமேல்,** உருமத்திற்குமேல், after noon.

**பகல்,** பகற்காலம், day time; 2. மத்தியானம், noon, midday; 3. பிளத்தல், splitting; 4 நடுநிலைமை, middle state or degree; mediocrity; 5. காலை முதல் மாலை வரையுள்ள பொழுது, period or duration from morning to evening - day time; 6. இளவெயில், morning sun; 7. பிரகாசம், brightness; 8. கமுக்கட்டு, armpit.

**பகல்தூக்கம்,** பகலில் தூங்குதல், முதுவே னிற்காலந்தவிர மற்ற காலங்களில் இத் தூக்கம் கூடாதென்பது, இதனால் காசம், பீனசம், பசியின்மை, கைகால் சோர்வு முத லியவைகள் உண்டாகும், ஆயினும் உழைப் பாளி, கிழவர் பிரயாணிகள் இராக் கண் விழிப்பவர் ஆகிய இவர்கள் தூங்கலாம், day sleep is forbidden in all seasons except summer (siesta) It brings on athma, catarrh, loss of appetite lastitude of the limbs etc. The following persons may have day sleep, labourers, old men, tourists, those who keep awake during nights.

**பகல்நட்சத்திரம் தோன்றி,** பொன்னுங் காணி, இது பார்வையை மிகக் கூர்மை யாகச் செய்வதாலிப் பெயர், sessile plant — Illecebrum sessile It is so called because it lends keeness to vision so as to enable one to see the stars in the day time.

**பகல்நித்திரை,** see பகலுறக்கம்.

**பகல்மருட்டி,**

**பகல்மாறு,** பகற்பொழுது, day time; 2. பகற்பொழுது மாறும்வேளை, evening time; dusk.

**பகல்மானம்,** பகற்பொழுது, day time.

**பகல்வெளிச்சம்,** சூரிய வெளிச்சம், sun light.

**பகவஞுதி,** வெள்ளெருக்கு, white flowered madar plant — Calotrophis gigantia (albiflora).

**பகவிருக்கம்,** நிலக்கடம்பு, Cadamba tree — Justicia acaulis.

**பகவு,** பிளப்பு, split: fissure: 2. துண்டு, slice; 3. வெடிப்பு, crack; 4 பிளவு, crevice; 5. வெடியுப்பு, nitre.

**பகவூகம்,** பாற்குரட்டை, a variety of குற ட்டை, round snake gourd — Trichosanthes genus.

**பகளமல்லிகை,** பவளமல்லிகை, which see.

**பகறட்டை,** ஓர் வகைப்பழம், an unknown fruit.

**பகறும்,** வெள்ளி, silver.

**பகற்கண்,** பகலில் கண் தெரியாதிருத்தல், day blindness — Hemeralopia as opposed to இராக்கண் (மாலைக்கண்) night blindness — Nyetalopia.

பகற்கறி, பகற்காலத்தில் உண்ணக்கூடிய கறிவகை, vegetables that can be eaten during the day time as opposed to இராக் கறி, those that can be taken during the night time.

பகற்காலம், பகற்பொழுது, day time; 2. ஆயுள்நாள், life time.

பகற்குருடு, பகற்பொழுதில் கண் தெரியா திருத்தல்; கூகை; a condition of the eye in which the patient sees worse during day than his normal vision would seem to warrant; 2. பூமி குளிர்ச்சி யடைந்தும், சுற்றிலுமுள்ள காற்றும் குளிர்ச்சி யடைவதனாலும் உடம்பில், பித்தக் கோளாறு ஏற்பட்டு, பகற் காலங்களில் பிரகோபமடைந்த பித்தம் பார்வையைக் குறைப்பதனால் சிறிய வஸ்துக்கள் எளிதாகக் கண்ணுக்குப் புலப்படாது, ஆனால் இராக்காலங்களில் மேற் கண்டபித்தம் தணிவதனால் அதே சிறிய வஸ்துக்கள் தெளிவாகக் கண்ணுக்குப் புலப்படும், sun blindness — an eye disease in which small things can be viewed only with the greatest difficulty in the day time, but can be viewed easily and clearly in the night owing to the subsidence of the deranged bile humour (Pitham) through the chillness of the surrounding atmosphere and the general cooling of the earth's surface; 3. காக்கை, crow so called from its dim vision during the day.

பகற்குரட்டை, பகலில் விழித்திருக்கும் பொழுதே குறட்டை விடுதல், a spasmodic snoring in the day during waking hours — Rhincospasm.

பகற்பசும்பால், பகலில் சுரந்து இரவில் கறக்கும் பால், இது பத்தியத்திற்குதவும், Cow's milk secreted during the day-time and drawn in the night. This milk is said to be useful in diet.

பகற்பலி, பனைமரம், palmyra tree — Borassus flabellifer.

பகற்பாடு, see பகற்காலம்.

பகற்பொழுது, See பகற்போது.

பகற்போசனம், See பகலசனம்.

பகற்போது, பகற்பொழுது, day time; 2. பகலில் மலரும் பூ, flower blossoming during the day

பகனம், முட்டுநழுகல், dislocation of joint; 2 எலும்பு முறிவு, fracture.

பகன்றை, கிலுகிலுப்பை, rattle wort — Crotolaria verrucosa; 2. சிவதை, Indian rhubarb — Ipomaea turpethum; 3. சீந்தில், moon creeper — Menisperum cordifolia alias Tinosphora cordifolium.

பகா, தூதுவளை, three lobed night shade — Solanum trilobatum.

பகாங்கம், பெண்குறி, female genital.

பகாங்குரம், (பகம் + அங்குரம்) பெண்குறி இரத்தம், அதாவது மாதவிடாய், menstrual blood; 2. யோனியின் முளை, clitoris; 3. பெண்குறிமயிர், pubic hair.

பகாரிசம், பெண்களின் உடம்பில் கோளாறடைந்த வாயுவானது யோனிப் பாதையிற் றங்கி அவ்விடத்தில் சதை வளர்ச்சி, காளானைப்போல் பருத்து, துர்நீர் வழிவதால் கெட்ட நாற்றத்தை வீசும் ஓர் நோய், a disease of the vagina in which the deranged (Vayu) wind humour etc., of the body is lodged in the vaginal region giving rise to crops of soft polypus in the passage which after sometime assumes the shape of a mushroom secreting foul smelling fluid c. f. இலிங்காரிசம்.

பகாலம், கபாலம், skull especially human skull.

பகாலி, சிவதுளசி, Shiva's basil — Basilium alba.

பகிகண்டம், பிடரி, nape of the neck.

பகிசங்கை, மலங்கழிக்கை, evacuating the bowels, discharging from the bowels.

பகிரண்டம், அண்டத்தின் வெளி, that space out side the earth, the vault of the heaven, firmament.

பகிரதிப்பூடு, கற்பூரவள்ளி, camphor creeper thick leaved lavender — Anisochilus carnosus alias Lavendula carnosus.

பகிரந்தரசத்தி, தாமரை வளையம், lotus stalk; 2. உண்டாக்கும், காக்கும், அழிக்கும் சத்தி, the power of creating, acting and destroying.

**பகிரந்தரம்,** வெளியும் உட்புறமும், external and internal.

**பகிராயாமவரதம்,** see பகிராயாமவாதம்.

**பகிர்,** வெடியுப்பு, nitre; 2. வெடிப்பு, crevice; 3. வெளிப்புறம், outside, the outside surface; 4. வெளியாயிருப்பது, that which is external.

**பகிர்க்கதகண்ட நாளம்,** வெளிப்புறமாய்க் கழுத்தில் ஓடும் நாளம், external jugular vein.

**பகிர்ச்சராயு,** கருப்பையின் வெளிப்புற மிருப்பது, situated or occuring out side the uterus — Extravterus.

**பகிர்தல்,** பிளத்தல், splitting; 2. பங்கிடல், dividing in shares or portions.

**பகிர்மார்க்கம்,** வெளிப்புறம், the outward surface.

**பகிர்விடல்,** பிளவுண்டாதல், forming a crevice formation of a fissure.

**பகிளவர்த்தம்,** இரப்பையில் அதிக மாமிச வளர்ச்சி கண்டு நெருக்கமடைதல், tumour or cyst of an eye lid — Blepharo atheroma or fleshy tumour or growth on the eye lid — Blepharoncus.

**பகீகனநேத்திரம்,** கண் நரம்பைப் பற்றிய ஓர் வகை சன்னி, a kind of brain fever due to the affection of the optic nerve.

**பகீரதம்,** பனைச்சருக்கரை, palmyra sugar.

**பகீரதி,** படிக்காரம், alum.

**பகீரிடுதல்,** வெடித்தல், cracking with a sharp abrupt sound.

**பகீரெனல்,** மனதிலேற்படும் ஓர் அச்சக் குறிப்பு, a sudden prostration and perturbation of body and mind through fear, a sudden disturbing emotion from a blow to the feelings.

**பகு,** வகு, to divide into parts; 2. அதிகமான, much; 3. வெகு, many as பகுபேர்.

**பகுக்கக்கூடிய,** பிரிக்கக்கூடிய, divisible, separable; 2. கலப்பினின்று பிரிக்கக்கூடிய, separating from the mixture; 3. கூட்டு முறையினின்று பிரிக்கக்கூடிய, capable of separating the constituent parts or the elementary particles, decomposable.

**பகுசாரம்,** நறுவிலி, sebesten — Cordia rothi alias C. obliqua; 2. அதிசாரம், diarrhoea.

**பகுசுவாசம்,** மேல்மூச்சு, hard breath; heavy breathing.

**பகுதாகம்,** மிக்க நீர்வேட்கை, indefatigable thirst, unquenchable thirst.

**பகுதி,** பிரகிருதி, material nature, the passive cause of the world; 2. மூலப்பிரகிருதி, அதாவது, பிரபஞ்ச காரணமாயை, Maya as the cause of visible creation and material nature.

**பகுதூக்கம்,** மிகுந்ததூக்கம், excessive sleep — Hyper somnia.

**பகுத்தல்,** பிரித்தல், dividing; 2. பங்கிடல், apportioning.

**பகுத்தறிவு,** பிரித்தறிதல், knowledge of discremination; 2 விஷயங்களை வகைப்படுத்தியுணர்தல், faculty of discerning things.

**பகுத்திரரோகசமனி,** திருநாமப்பாலை, wild sarsaparilla — Similax macrophylla.

**பகுநிறமூத்திரம்,** மஞ்சள் அல்லது செந்நிற மூத்திரம், high coloured urine chromaturia.

**பகுபசி,** மிக்கபசி, voracious hunger.

**பகுபித்தம்,** அதிகபித்தம், excessive bile — Hypercholia.

**பகுபுடசத்திரா,** பூசபத்திரி, an unidentified plant.

**பகுபுத்திபாதி,** சிறுகல்லூரி, an unidentified plant.

**பகுபுத்திரசிகண்டி,** வெட்பூலா, white honey shrub — Fluggia leucophyrus.

**பகுபேதா,** பிரமி, Indian brami — Gratiola.

**பகுப்பிசா,** see பகுபுத்திர சிகண்டி.

**பகுமூத்திரம்,** அதிகமாக நீரிறங்கல், copious discharge of urine polyurea; 2. விபரீத நீர் இறங்கல், abnormality in the discharge of urine, a strange or perverted condition in the discharge of urine — Allotriuria.

**பகுமூலம்**, சதாவேரி, water root — Asparagus racemosus.

**பகும்புல்**, உருத்திராட்சம், bead tree — Eleocarpus tuberculatus.

**பகுவாதா**, ஆல், banian tree — Ficus bengalensis.

**பகுவாந்தி**, அதிக வாந்தி, severe vomitting — Anacatharsis.

**பகுவாய்**, அகன்றவாய், wide mouth, 2. பிளந்தவாய், a longitudinal opening, fissure.

**பகுவாரகம்**, நறுவிலி, sebestin plum — Cordia myxce.

**பகுவாரம்**, நறுவிலி, sebestin fruit — Cordia myxa alias C. latifolia.

**பகுளம்**, மிகுதி, excessiveness. abundance.

**பகுளவர்த்தமம்**, சதையை வளர்ப்பித்து நாளுக்கு நாள் புதிது புதிதாகக் கொப்புளங்களை யெழுப்பி இமையைக் கடினமாகப் பண்ணும் ஓர் வகைக் கண்ணோய், an eye disease developing a fresh pustules equal in size and colour from day to day all along the eye lid thereby rendering it hard.

**பகுளாங்கிசம்**, ஒதிய மரம், Indian ash tree — Odina wodier.

**பகூதகம்**, சன்னியாச ஆச்சிரமம் நான்கினி லொன்று, அதாவது நியமப்படி ஒழுகும் துறவு, one of the four states of asceticism.

**பகேசிகை**, காயாமரம், tree not baring any fruit — Multiple myelonius.

**பகை**, நரம்புகள், nerves; 2. ஆறுநரம்பு, an auditory nerve — Abducens; 3. பகை நரம்பு. which see 4. உடல், body.

**பகைக்கட்டி**, கழலைக்கட்டி, tumour; 2. படரும் விரணம், spreading ulcer.

**பக்க இழுப்பு**, பக்க இசிவு, fits of the limbs on one side.

**பக்ககேசம்**, நரை மயிர், grey hair.

**பக்கசூலை**, விலா பக்கத்தில் ஏற்படும் குத்தல் நோய், இது உடம்பில் தங்கி நிற்கும் வாயு, கபம் கோளாறடைவதால் ஏற்படும் வயிற்றுப்பிசம், பொருமல், தூக்கமின்மை, உணவில் வெறுப்பு, வலியுடனும் கஷ்டத்துடனும் மூச்சு விடுதல் முதலிய குணங்களுண்டாகும், இது ஈரலுக்கு அழற்சி கண்டு, அதனால் வீக்கமடைந்து இக்குணங்கள் நேருமெனக் கருதப்படும், சில சமயம் சுரம் காய்ந்து உடம்பு நொந்து புண்போல உளைந்துத் தலைவலியுங் காணும், Pin prick or shooting pain felt on the sides. It is due to derangement of Vayu (wind) and kapham (phlegm) humours in the body and is characterised by the following symptoms — flatulence and tension of the abdomen, rumbling noices in the intestines, sleeplessness, no relish for food painful and difficult respiration. It is invariably accompanied by fever-pain all over the body, especially in the sides of the chest, headache etc. It is said to be caused by the inflammation and swelling of the pleura of the lungs—Pleurisy. It is cured by administering Vishnu chakaram tablet with honey twice or thrice a day.

**பக்கச்சோர்வு**, உடம்பின் ஒரு பகுதியில் காணும் சோர்வு, paralysis or loss of sensation on one side of the body — Hemiplegia

**பக்கணம்**, உண்டல், eating consuming; 2. பட்சணம், eatables.

**பக்கத்தம்**, குட்டுதல், dealing a blow with the fist or knukle cuffing on the head; 2. மார்பில் குட்டுதல், இது ஓர் காம சேட்டை, a gentletas on the breast — a sex play act for increasing the sexual passion.

**பக்கத்தலைநோய்**, ஒற்றைத் தலைவலி, pain on one side of the forehead — Hemicrania.

**பக்கத்திமிர்**, உடம்பின் ஓர் பாகத்தில் வலி தோன்றாது மரத்துக்காணல், absence of sensibility to pain on one side of the body—Hemianalgecia.

**பக்கத்துணைவி**, நோயாளிக்கு வேண்டியவற்றை அளிக்கவேண்டி, பக்கத்தில் துணையாகவிருக்கும் பெண் பிள்ளை. a woman or any person who not only takes care of the patient sick, wounded or enfeebled but also attends to meet the necessary wants or requirements — Nurse - a female attendant in a hospital.

**பக்கத்தெலும்பு,** விலாவெலும்பு, rib bone.

**பக்கநடுக்கம்,** உடம்பின் ஓர் பாத்திற் காணும் நடுக்கம், tremor of one side of the body — Hemitremor.

**பக்கநரை,** ஒரு பக்கத்து நரை, grayness of the hair on one side of the body — Hemicanitis.

**பக்கநோய்,** விலாப் பக்கத்தி லுண்டாகும் நோய் அல்லது நோய்கள், any disease or pain arising in or affecting the sides of the body; 2. ஒரு பக்கத்துத் தலையிலும் கண்ணிலும் காணும் வலி, pain on one side of the head and one eye — Hemiopalgia.

**பக்கப்பகந்திரம்,** குறியின் பக்கத்தில் மூத்திரப்பை, மூத்திரத்தாரை, யோனிவாய் இவ்விடங்களில் காணும் பவுத்திரம், fistula having its opening or communication in the adjacent parts of the genitals such as urethra, vagina, bladder etc.

**பக்கப்படுவன்,** கண்கடுத்து, சிவந்து வலித்து, வெள்விழியில் அழிந்த புண்போல் குத்தலுண்டாகி, உடனே முளையைப்போல் படுவன் வெளியில் தள்ளி, சீழ்பிடித்து உடைந்து, நீரொழுகித் துன்புறுத்தும் ஓர் கண்ணோய், an eye disease marked by irritation, inflammation with pin prick pain on the white of the eye due to ulcerous growth of flesh followed by supuration and purulent discharge.

**பக்கப்பிடிப்பு,** உடம்பின் ஓர் பகுதியிற் காணும் நரம்புப் பிடிப்பு, a spasam occuring on one side of the body.

**பக்கப்பிளவை,** சாதாரணமாய் பிடரி, முதுகு, பிட்டம் இவைகளின் ஒரு பக்கத்தில் காணும் கட்டி, முகத்திலும் முள்ளந் தண்டு ஓரத்திலும் காணலாம், இது நீரழிவு; குண்டிக்காய் நோய் கண்ட 45 வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு காணும், இக் கட்டி கருஞ் சிவப்பு நிறமாயுள்ளதால் இரத்தம் கெட்டு பலவீனப்பட்டுத் தான் இது காணுமென்பது ஓர் காரணம், இது சதையின் உட்பக்கம் திரண்டு பல கண்களும் புரையுமுண்டாகி அவ்வழி இரத்தம் சீழ் வெளிப்படுவதுடன் மற்ற குறிகளும் காணும், இது உள்ளாக அழுகி பக்கத்திலுள்ள சதைகளைப் பற்றி அரித்துக்கொண்டே போகக் கூடிய தன்மையாகையால் உட்பக்கம் ஆழ்ந்த பள்ளம் விழும், இதை மருந்தினாலும் சத்திர சிகிச்சையாலும் வசப்படுத்தலாம், corbuncle Rajah's boil. It generally occurs on one side of the nape of the neck, the back and buttocks. It may also appear on the face and near the vertebral column. It is usually seen in bedilitated person over 45 years old and especially those who are suffering from diabetes or kidney disease. It is of a dusky red colour and results from an impure vitiated and debilitated condition of the blood.

It is an inflammation of the subcutaneous tissues terminating in a slough and in supution, accompanied by marked constitutional symptoms. The swelling is perforated by a number of openings discharging pus and blood. This mass finally sloughs away leaving internally an ulcerated excavation which burrows under the neighbouring skin. It may be cured by surgical and medical aid.

**பக்கமகோதரம்,** வயிற்றின் இரு பக்கங்களிலும் கெட்ட நீர் சுரந்து வீங்கிக் காணும் ஓர் வகைமகோதரம், abnormal accumulation of servous fluid on the two sides of the belly— Abdominal dropsy.

**பக்கமலம்,** அக்கமலம் அதாவது மலக் குடலில் ஓர் பக்கமாக தங்கி நிற்கும் பழமலத்தினால் ஏற்படும் நோய், a disease of the intestines caused by the accumulation and retention of faecal matter on the sides or walls of the intestines.

**பக்கமூலம்,** செட்டைக்குழி, அதாவது கமுக்கட்டு, arm pit, சிறகின் அடிப்பக்கம், the bottom portion of the bird's wing.

**பக்கம்,** இறகு, feather; 2. நாரை, stork; 3. மாதவிடாய் நாள், menses period; 4. வரிக்கும்மட்டி, stripe gourd — Citrullus vulgaris; 5. அவயவம், organ; 6. இடம், place; 7 சுத்தம், cleanliness; 8. ஒருபாதி, ono half; 9. பறவைபொது, birds in common; 10 வகுப்பு, class, classification; 11. வால், tail; 12. விலாப்புறம், inter costal surface; 13. நரை, grey hergon, 14. உணவு, food.

**பக்கரசம்,** தேன், honey; 2. சுத்தரசம், pure fresh juice; 3. சுத்தி செய்த பாதரசம், purified mercury.

**பக்கவலி,** விலாப்பக்கத்தில் வலியை உண்டாக்கும் ஓர் நரம்பு நோய், neuralgia of the intercostal nevers causing pain on the sides — Intercostal neuralgia.

**பக்கவாகனன்,** பறவை, bird.

**பக்கவாதம்,** பாரிச வாதம் அதாவது உடம்பில் ஒரு பக்கத்துக் கையும் காலும் அல்லது ஒரு பாதி உடம்பும், செயலற்று அசைக்கமுடியாமலும் சில சமயம் சுவரணையும் அல்லது பரிச வுணர்ச்சியும் அற்றுப்போகும், இது சாதாரணமாய் மந்த பண்டங்களைச் சாப்பிடுவதாலும், குளிர்ந்த இடத்தில் படுப்பதாலும் சீதள சேர்க்கையாலும் வாதம் உற்பத்தியாகி இரத்தவோட்டம் குறைந்து பாதி உடம்பில் தங்கி நரம்புகளில் பரவி அப்பக்கத்து நரம்பு இழுத்து; கையையும் காலையும் தாக்கும் ஓர் வாத நோய், இதில் பல விதமுண்டு. paralysis or palsy marked by loss of power of motion of the limbs of one side or one half of the body and sometimes sensation or power of feeling is also lost. It is said to be due to the following causes viz. eating indigestable rich food or other substances difficult for digestion, taking bed on cold chill surface or being exposed to chill weather, eating substances that cause Kapham ( increase of the phlegm humour ) etc., by which the Vayu ( wind ) humour in the system becomes deranged and affects the communication in the nerves and vessels and thereby rendering the limbs of one side powerless and sometimes without sensation — Hemiplegia.

1. பட்ச வாதம், which see.
2. ஏகாங்க வாதம், paralysis of a single part or organ.
3. அர்த்தாங்க வாதம், hemiplegia of the limbs of one side.
4 பாரிச வாதம், paralysis of one side of the body.
5. இளம்பிள்ளை வாதம், infantile paralysis — Poliomyelitis. யூகிமுனி 800-ல் சொலலியுள்ளபடி. பக்கவாதத்திற்கும் பட்சவாதத்திற்கும் வித்தியாசமுண்டு. பக்கவாதத்தில் ஒரு பக்கத்தில் இசிவுண்டாகி நரம்பிழுத்து கையும்காலும் கோணும், ஆனால் பட்சவாதத்தில் கைகால் செத்தாற்போற் சோர்ந்து உணர்ச்சியின்றி மயிர்த் திமிர்ப்புண்டாம், வாய்கோணி நீர்வடியும்.

NOTE :— It is a disease in which the extremely agitated Vayu affects the nerve chains, which spread either in the left or in the right side of the body making them lax, vigourless and functionless and sometimes lose all sensibility. It becomes incurable when caused through the waste of the root principle ( Dhatu, தாது ) of the body.

A case of this kind brought about through the single action of the enranged or agitated Vayu of the body can be cured only with greatest care and difficulty. Although the whole or half of the body of the patient becomes almost in operative and lose all functions and sensibility. Yet the consciousness will be retained so long as there remains the least vestige of vitality in the affected part and then the patient may suddenly fall down and die.

**பக்கவாயு,** see பக்கவாதம்; 2. பக்கத்தில் நெருக்கும் வாயு, the pressure brought about to bear upon the sides of the body due to the deranged vayu lodged in the adjccent organs such as stomach, intestines, liver, spleen etc; 3. ஓர்வகைக் கல்லீரல் நோய், a disease of the liver due to the agitated vayu prevailing on that side of the body; 4. அண்டவாயு, deranged vayu affecting the scrotum and causing inflammation and swelling of the testes — Orchitis; 5. வாயுவினால் உடம்பின் ஒரு பக்கத்தில் சுவரணை இல்லாமற் செய்தல், loss of sensation on either side of the body due to the deranged condition of Vayu prevailing on that side — Hemianesthesia.

**பக்கவாரி,** வெந்நீர், hot water; 2. ஓர் வகைக் கொள்ளை நோய், a kind of epidemic extending to the neighbouring parts.

**பக்கவிசிவு,** பக்கத்துவிலாப் புடைத்துக் காணும்படி உண்டாகும் ஓர்வித இழுப்பு அல்லது இசிவு, any convulsion or spasm marked by alternating contraction and relaxation extending to the intercostal region; 2. சன்னியால் உடம்பை ஒரு பக்கமாக வளைக்கும் ஓர் நோய், atonic bending of the body to one side — Pleurotonous.

**பக்கவிலா,** விலாவெலும்பின் கீழாகவுள்ள வயிற்றின் இருபக்கத்துப் புடைப்பு, the upper lateral region of the abdomen next below the lowest rib — Hypochondrium.

**பக்கவிழுப்பு,** கண்களை அல்லது தலையை ஒருபக்கமாக நிலையுறும்படி திருப்பச் செய்யும் மூளையைப்பற்றிய ஓர் இசிவு, conjugate deviation. It is the forced or persistent turning of the eyes or head to one side as observed in certain lesion of the brain.

**பக்கவீக்கம்,** வயிற்றுப்பிசம், மகோதரம் முதலிய நோய்களில் காணப்படும் விலாப்பக்கத்து வீக்கம், swelling of the hypochondric region observed in cases of tympanitis abdominal dropsy.

**பக்கவீச்சு,** See பக்கவீக்கம்.

**பக்கவெலும்பு,** விலாவெலும்பு, rib bone.

**பக்கவேர்,** மரம், செடிகளின் ஆணிவேரின் இருபுறமும் ஓடும் வேர்கள், the side roots found on both sides of the tap root in trees, plants, creepers etc.

**பக்கறை,** பல்லில் உண்டாகும் கருப்புக்கறை' blackness of the teeth due to accumulation of tartar and incustation formed in the neglected tooth — Black tooth.

**பக்காசயம்,** இறைக்குடர், a receptacle for receiving food — Stomach, belly.

**பக்கான்னம்,** சமைத்த உணவு, cooked food.

**பக்கி,** பறவை, bird; 2. பிள்ளை, child.

**பக்கிடுதல்,** ஆறிவரும் புண்களின் மேல் வடுவுண்டாதல், formation of scab on the healing wound.

**பக்கிலி,** ஒன்றரைநாள், a day and a half.

**பக்கித்தல்,** உண்டல், eating; 2 புசித்தல், taking food.

**பக்கிநேத்திரம்,** ஒரு நோய், a disease.

**பக்கிரம்,** இரசம், mercury.

**பக்கிராசன்,** பறவைகளுக்கரசன், அதாவது கருடன், king of birds — Brahmini kite.

**பக்கு,** ஊத்தை, dirt as on teeth; 2. பிளவு, fissure; 3. முறிவு, fracture; 4 மரப்பட்டை, bark of a tree; 5. பற்காரை, incrustation that forms in the neglected teeth, tartar; 6. புண்ணின் பக்கு; புண்ணசறு, the crust of a sore, Scab; 7. கண்ணிலும், காதிலும் உள்ள காய்ந்த மலம், the dried mucopurulence of the eye and the cerumen of the ear; 8 மூக்குப்பீ அல்லது காய்ந்த மூக்குச்சளி, the dried mucous of the nose; 9 பற்கறை, stain on the teeth.

**பக்குகட்டல்,** ஆறிவரும் புண்மேலுண்டாகும் அசறு, formation of a scab over a healing ulcer.

**பக்குண்டாதல்,** பக்குபற்றல், forming of a scab.

**பக்குபக்கெனல்,** நெஞ்சு திடுக்கிடல், the throbbing of the heart as in fear.

**பக்குபற்றல்,** புண்ணின் அசடுண்டாதல், formation of a scab as in healing ulcers — incrustation.

**பக்குவகாலம்,** தகுதியான காலம், appropriate time or season; 2. பெண் ருதுவாகும் காலம், suitable period of a girl's maturity; 3. பிரசவகாலம், time of delivery, full term delivery.

**பக்குவசாலை,** விஞ்ஞானிகள் பௌதிகம் முதலிய நூல்களிற் சொல்லியுள்ள விஷயங்களை ஆராய்ச்சி செய்து அதன் உண்மை கண்டு பிடிப்பதற்கும் மேற்கொண்டு அது விஷயமாக தொழில் வியற்றுமுறைமையை ஏற்பாடு செய்வதற்காகவும் அமைக்கப்பட்ட ஓர் கட்டடம் அல்லது அறை, a building or room intended for scientists and research scholars for purpose of investigating and conducting experiments relating to chemistry, physics etc., Laboratory.

**பக்குவசுரம்,** முதிர்ந்த சுரம், அதாவது பூரண நிலையையடைந்த சுரம், a fever which had reached its matured or acute state.

2. வாதாதி தோஷங்களினால் ஏற்பட்ட சுரம், ஆரம்பித்த எட்டாவது நாள் மிகக் கடுமையாகி மேற்படி தோஷம் உடம்பினுள் முழுவதும் பரவி நிற்கும் ஓர் வகை சுரம், fever which had reached its acute stage after eight days thereby showing assimilation of the deranged doshas ( humours ) which caused that stage.

3. கடுமைநிலை நீங்கிய சுரம், fever which has passed its acute stage.

**பக்குவநிலைமை,** பக்குவபதம், which see.

**பக்குவபதம்,** முதிர்ந்தபதம், matured or ripened state; 2. இருதுவாகக்கூடிய நிலைமை, the fully matured state of a girl to attain puberty; 3. ஏற்றநிலை, required stage in the course of preparation of any thing.

**பக்குவபாகம்,** செய்யுமுறை, methodical treatment, radical or fundamental treatment.

**பக்குவப்படாமை,** முதிராமை, absence of maturity.

**பக்குவப்படுத்தல்,** உடம்பிலுள்ள நோயை சிகிச்சை செய்து ஆரோக்கிய நிலைக்குக் கொண்டு வருவதற்குமுன் உடம்பில் தங்கி நிற்கும் கடின கோளாறுகளை மருந்திற்கு வயப்படும்படி அல்லது வசப்படும்படி இணங்கச்செய்தல், the act of bringing or causing the symptoms amenable to treatment through medicines before adopting the general method by which recovery could be effected and health restored.

**பக்குவமடைதல்,** குருவண்டை சீஷன் அடையும் பூர்த்தி நிலை, the spiritual advancement to perfection attained by a disciple while under the inspiration and instructions of a Guru.

**பக்குவமாதல்,** பிரவிடையாதல், arriving at purberty; 2. பழமாதல், ripening of a fruit; 3 பூரண நிலையடைதல், reaching the stage of perfection; 4. ஆன்மாபரிபாகமடைதல், (in Philosophy) emancipation of the soul, liberation from servitude or bondage of the soul; 5. மருந்து ஏற்ற நிலையடைதல், (in Medicine) that which reached its completion in the course of its preparation.

**பக்குவமாய்க்காய்ச்சல்,** பக்குவமாய்க் காய்ச்சுதல், heating in a suitable way to reach the required stage.

**பக்குவம்,** முதிர்வு, maturity; 2. ஆத்தும பரிபாகம், matured state of the soul for emancipation; 3. பிரிவிடை, maturity as of girls; 4. தகுதி, fitness suitability 5. பருவம், period, season; 6. கனிந்தது, ripeness as of a fruit; 7. பதம், required stage in the course of preparation of anything.

**பக்குவம் பண்ணுதல்,** தகுதியானபடி அல்லது ஏற்றபடி செய்தல், doing or preparing anything in a suitable manner to obtain the required stage; 2. கெடுதியானதைச் சீர்திருத்தல், repairing or restoring to a sound or good state after decay, injury or partial destruction.

**பக்குவரசம்,** சாராயம், arrack or any liquor; 2. கொங்கணவன் வாத காவியத்திற் சொல்லியுள்ள எட்டுவகையான தயாரித்த ரசம், the eight kinds of prepared mercury or described in Konganavar's work on Alchemy see இரசம்.

**பக்குவவானி,** வைத்தியன், physician.

**பக்குவன்,** வைத்தியன், physician.

**பக்குவாசயம்,** அன்னமயகோசம், digestive organ; 2. அக்கினியாசயத்தின் கீழாகவுள்ள சிறிய குடல், upper part or portion of small intestine so called from the food stuffs which are digested and dissolved in it; 3. நாபித்தானம், navel region; 4. இரைப்பை, stomach; 5. சீரணப்பை, colon.

**பக்குவாதிசாரம்,** அசீரணக் கழிச்சலின் வேகம் குறைந்து நாளாவட்டத்தில் உடம்பு லேசாகவும், மற்றும் கழிச்சலின் குறிகள் குறைந்தும் மறைந்தும் காணப்படும் கிராணிக் கழிச்சல், chronic diarrhoea — a disease in which the diarrhoea had passed the acute stage thereby indicating a sense of lightness of the body and other symptoms not found in the acute stage.

**பக்தி,** கடவுளினிடத்துக் காட்டுமன்பு, devotion and love to God.

NOTE— One remarkable feature of the religious history of South India is that it gets associated with the cult of Bhakthi very early in that history. We find later the Bhakthi is specially associated with S. India as its home. Bhakthi involves selfless devotion amounting to self surrender and the resignation of the individual to the supreme Being who is looked upon as one exercising active qualities of Merey etc without limit. Bhakthi is gradually developed according to the language and customs of the place. So S. India is known to be he home of Bahakthi.

**பக்திநூல்,** கடவுளிடத்துண்டான 'அன்பு, போற்றல், தயை, பக்தி, தியானம் முதலிய வற்றால் ஆன்மா பாசத்தினின்று விடுதலை பெற்றுப் பரிசுத்த நிலையால் விதேக முத்தியடைவதைப் பற்றிக் கூறும் நூல், book of science and philosophy of piety that liberate the soul from sins and reveals the truths of perfection through devotion, prayer, piety, reverence and meditation.

**பக்தியோகம்,** பக்தி முறையால் அடையும் யோகநிலை; the state of yoga or yoga practice attained through devotion; 2. வீட்டு நெறிக்குறிய நிட்டை, contemplation in conjunction with the religious rites in household or domestic practice.

**பங்கக்கிரீடம்,** பன்றி, hog; pig.

**பங்கசம்,** தாமரை, lotus flowers. Flower of Nelumbium speciosum.

**பங்கசாகிதம்,** குளிர்தாமரை, sky lotus — Pistia stratiotes.

**பங்கசாதமம்,** } see பங்கசம்.
**பங்கசாதம்,** }

**பங்கசூரணம்,** தாமரைவேர்ச்சூரணம், powder of lotus root; 2. தாமரை வேர், lotus root.

**பங்கனி,** பங்கம்பாளை, worm killer — Aristolochia indica.

**பங்கதாசி,** கவிழ்த்தும்பை, stooping leucas — Leucas procumbeens alias Nepata indica.

**பங்கதாவிகம்,** see பங்கதாசி.

**பங்கத்திசூலை,** see பக்க சூலை.

**பங்கப்பாடு,** பின்னமாகல், deformity; 2. ஈனப்படுகை, mutilation; 3. பழுதுறல், becoming defective.

**பங்கம்,** நோய், disease; 2. குறைவு, defect; 3. துண்டு, piece; 4. கெடுதி, evil; 5. பலணடுறுக பாஷாணம், a kind of native arsenic; 6. பிளவு, fissure; 7. அசைவு, movement, motion; 8. அச்சம், fear; 9. ஈனம், inferiority; 10. நீர்ப்பாய்ச்சல், an eye disease; 11. புழுதி, rubbish; 12. வெட்கம், disgrace; 13. கொலை, killing, murder; 14. அழிவு, destruction; 15. குளம், tank.

**பங்கம்பாலை,** } ஆடு தின்னுப்பாளை, see பங்கனி; 2. வட்டத்திருப்பி, wound plant — Sida acuta, 3. பொன்முசுட்டை, same as வட்டத்திருப்பி.
**பங்கம்பாளை,** }

**பங்கயம்,** தாமரை, lotus flower — Nelumbium speciosum; 2. சங்கிலை, four spined monetia — Azema tetracantha; 3. நாரை, stork.

**பங்கரம்,** அதிவிடயம், Indian atees — Aconitum heterophyllum.

**பங்கருகம்,** see பங்கயம்.

**பங்கவாசம்,** நண்டு, crab.

**பங்கவாயு,** கெட்டகாற்று, contaminated air, marsh gas.

**பங்கவிசர்ப்பி,** நுணுக்காய்க்கிரந்தி, a syphilitic tumour.

**பங்கறை,** அவலட்சணமான ரூபமுள்ளவன், an ugly faced man.

**பங்காதகம்,**

**பங்காரம்,** பொன், gold.

**பங்காரு,** கலப்புப் பொன், an alloyed gold.

**பங்காளசம்பா,** ஓர் வகைச் சம்பாநெல், a kind of samba paddy.

**பங்காளமுத்து,** போலிமுத்து, imitation or false pearl.

**பங்காளா,** ஓர்வகை வாழை, a kind of plantain.

**பங்கி,** மயிர், hair; 2. ஆண்மயிர், male's hair; 3. கஞ்சா, Indian hemp leaf; the dried leaves of the plant — Cannabis sativa; 4. பிரிவு, divison; 5. புறமயிர், external hair; 6. சடைக்கஞ்சா, இது சாதுக்கள் உபயோகிக்கும் ஓர் உயர்ந்த கஞ்சா, a superior ganjah or hemp leaf used by yogis for smoking; 7. சாதிலிங்கம், vermilion; 8. மகம்மதியர் உபயோகிக்கும் கஞ்சா சேர்ந்த ஓர் பானம், a drink prepared out of cannabis sativa and used mostly by Muslims known as bhang. It is an intoxicant.

**பங்கித்தல்,** பங்கிடுதல், apportioning; 2. பிளத்தல், splitting; 3. அரிதல், slicing; 4. வெட்டுதல், cutting.

**பங்கியிலை,** கஞ்சாயிலை, leaf of Cannabis sativa.

**பங்கில்லம்,** See நத்தைச்சூரி.

**பங்கிவித்து,** கஞ்சாவிதை, seed of Cannabis sativa.

**பங்கினி,** தண்ணீர் விட்டான், water root — Asparagus racemosa.

**பங்கு,** முடம், lameness; 2. இரண்டு கால் முடம், lame of two legs; 3. பாதி, half; 4 பாகம், a portion; 5. பால், milk; 6. முடவன், a lame man; 7. கூறுபாடு, division.

**பங்குபடுதல்,** பின்னப்படுதல், becoming defective or mutilated.

பங்குரை, see பங்கரம்.

பங்குவாதம், இடுப்பில் இரா நின்ற வாயு பிர கோபமடைவதினால் இரண்டு தொடை களின் நரம்புகளையிழுத்து முடமாக்கும் ஓர் வாதநோய், a kind of rheumatic affection in which the nerve trunks of both the legs are drawn up owing to the deranged Vayu lying about the region of the waist, thus rendering the patient completely lame; 2 உடம்பின் கீழ்ப்பாகத்தையாவது இடுப்பினின்று கால்வரை வாயுவினால் உணர்ணையற்றதாக அசைக்க முடியாததாகவும் செய்யுமோர் வாதம், paralysis of both the legs and lower part of the body with loss of both sensation and movement — Paraplegia. This condition may be caused by disease or injury to spine, locomotor ataxia mylitis, chronic alchoholism, malaria, anemia and lesion of the brain.

பங்குனிக்கதிர், பங்குனி மாதத்தில் உழமண் தரையில் கதிர்போல் வளரும் பூநீறு, a crop like growth of efflorescent salt said to be found on the soil of fuller's earth in the month of March.

பங்கூரம், மரமஞ்சள், tree turmeric — Coscinium fenestratum; 2. அதிவிடயம், See பங்கரம்.

பங்கேரம், } தாமரை, lotus.
பங்கேருகம், }

பங்கைபளுவான், பருந்து, kite.

பசக்கூடு, அன்னரசப் பையின் அறை, receptaculam chyle.

பசண்டை, ஈரம், moisture; 2. பசுமை, greenness.

பசதம், சிறுகுடலின் முதற்பகுதி, இது 12 அங்குல நீளமுள்ளது, the first portion of the small intestine. It is twelve inches long — Duodenum.

பசத்தல், நிறம்மாறுதல், change of colour; 2.பசுமையாதல், turning or becoming green; 3. மங்கல், darkening; 4. ஒளிமங்குதல், becoming dim, gloomy in lustre; 5.காமமேலீட்டினால் உடம்பின் நிறம் வேறுபட்டு பொன்னிறப் புள்ளியுண்டாதல், change of complexion by appearance of yellow dots or patches in the body said to due to excess of sexual passion or lone sickness. See தேமல்.

பசந்ததுவரை, பேய்த்துவரை, a bitter kind of dholl or red gram; 2. காட்டுத் துவரை, wild red gram.

பசபசத்தல், தினவெடுத்தல், itching, scratching sensation.

பசபசப்பு, see பசபசத்தல்.

பசபசெனவூரல், பசபசத்தல், which see.

பசப்பு, சாரம், essence; 2. பொன்மை, gold colour; 3. பச்சிலைநிறம், green colour; 4. பசலை, which see.

பசப்புதல், ஓயாமற் பேசுதல், talkativeness, loquacity; 2. மயக்குதல், alluring, tempting.

பசமநத்திரம், } மரமஞ்சள், tree turmeric.
பசமநததிரம், }

பசம், அன்னரசம், chyle, milky fluid of digested food.

பசம்பை, கழுத்து, neck.

பசரிகம், பூனைக்காஞ்சொறி, smalll climbing nettle — Tragia in volucrata.

பசலாத்தி, ஒதியமரம், Indian ash tree — Odina wodier; 2. இராப்பாலை, arcuate trumpet flower — Dolichandrone arcuate alias D. falcata; 3. கடலாத்தி, which see.

பசலை, ஓர்வகைத் தேமல், yellow coloured patches or dots on the surface of the skin; 2. அழகுதேமல், which see; 3. பொன்னிறம, golden colour; 4. இளமை, youth; பசளை, which see.

பசலைமண், மணலும், களிமண்ணும் சேர்ந்தது, இதன் பிசுபிசுப்பு மிகக்கொஞ்சம், sand mixed with clay, black mould. It is a common coarse earthy loam which has a very little tenacity.

பசவ்வியம், புளி.

பசளி, பசளை.

பசளை, பசளைக்கீரை, இதற்குப் பசலி, பசலை, பசரை, கொடி யைலைக் கீரை என்று பல விதப் பெயர், இது தொட்டிகளில் வைத்தும், தோட்டங்களிலும், பயிராக்கப்படும். இச் செடியின் இலைகள் கனதி, முக்கோணம், நீள இலைக்காம்பு, அடித்தண்டு சுமார் 2 அடி உயரம், ஆண் செடியின் பூக்கள் நீண்ட கதிர்மையுள்ள பச்சை நிறமுடையவை,

பெண் செடியில் கொத்துப்பூக்கள், இக் கீரை சமையல் பாகங்களில் சேர்ப்பதுண்டு, இச் செடியில் இரண்டு இனங்கள் உண்டு, ஒன்றில் விதை முட்கள் வாய்ந்தது, மற்றொன்று வழவழப்பாய் இருக்கும்; இக் கீரையை அதிகமாகச்சாப்பிட பெண்களுக்கு முகத்தில் தேஜசையும் நிறத்ததையும் கொடுக்கும், இது ஓர் சிறந்த பலவிருத்தி மருந்தாகவும் உபயோகப்படும், உணவுப் பொருள்களில் அதிக சிறந்ததாகக் கொள்ளப்படும், இதனால் மூத்திரக் கடுப்பு, மூத்திரக் கிரிச்சரம், ஒழுக்கு வெள்ளை, அருசி, வாந்தி இவைகள் நீங்கும், நல்லஇரத்தத்தையுண்டாக்கும், உடம்பின் வெப்பத்தைத் தணிக்கும், நீர்ச் சுருக்கு நீர்க்கட்டு இலைகளுக்குக் கஷாயமாகக் கொடுக்க நீங்கும், மலத்தை இளகச் செய்யும், கபதேகிகளுக்கு உதவாது, இக் கீரையை விக்கம், கட்டி இவைகளுக்கு வதக்கி கட்டலாம், பருப்புடன் சேர்த்துண்ண ருசியாயிருக்கும்.

இதில் கரும்பசளை என்று ஓர் இனமுண்டு, அது அகப்படுவதரிது. இது ஓர் காயகற்ப மூலிகை இதை நிழலில் உலர்த்தி, தாளிச பத்திரியுடன் சேர்த்தரைத்துண்ண உடம்பு கல்தூணாகும்.

1. கொடிப் பசளை, 2. ஆற்றுப் பசளை, 3 வெள்ளைப் பசளை, 4. கரும் பசளை, 5. சிவப்புப் பசளை, 6. துலுக்கப் பசளை, 7. பேய்ப் பசளை, 8. வறுக்கைப் பசளை, 9. கொத்துப் பசளை, 10. நற்பசளை, 11. குத்துப் பசளை, 12. தாரைப் பசளை, 13. கசப்பு பசளை, என பலவகைகள் உண்டு. Indian spikenard — Spinacea olerscea alias S. tetvandra. It known by different names viz common spin ache, Indian spinach, Basilla rubra, garden spinach, Newzealand spinach, spinage etc It is a pot herb and is also cultivated in gardens as a vegetable green. The plant has large thick, succulent, deep green leaves, some what triangular in form produced on long foot stalks, stem two feet high. The male plants are distinguished by their long terminal spekes of green flowers while those of the females, sessile and clustered. It is used as a culinary vegetable (greens). The plant consists of two varieties viz- prickly seeded and smooth seeded. When much used by females, it is said to improve their complexion and lend lustre to their bodies. It is much esteemed as a tonic and is highly praised as a valuable greens in food. It forms a useful remedy in cases of dysurea, stricture urethra, gonorrhoea, loss of appetite, vomitting etc. It purifices the blood and subsides the bodily heat and is given as decoction in urinary complaints It is a laxative but cannot be used by person with phlegmatic tendencies. Heated leaves are externally applied to swellings and abcesses. It forms a good dish if cooked with dholl.

There seems to be a black variety which is said to be found very rarely. It is used by Siddhars as a rejuvenating drug. The dried leaves are reduced to powder which if taken with country cinnamon strengthens the body by rendering it as hard as a stone pillar.

In catarrhal affections of the children juice or decoction of the leaves are said to be effective. It is demulcent and diuretic and proves useful in gonorrhoea and balanites.

பசளை, எருமுதலிய உரம், a manure, 2. பப்பாளி, common papaw — Carica papaya; 3. காட்டு மஞ்சரி, hill olive — Linocera purpurea; 4. குழந்தை, child, baby; 5. பசளைக்கொடி., creeper spinach; 6. பச்சை யெரு, moist dung.

பசளை, கொடிப்பசலை, கொத்துப்பசளை, இதன் தண்டு பச்சையும் ஊதாநிறமும் கலந்தது, இலைகள் இருதய வடிவம், பூங்கதிர் இலையைவிட மட்டமானது பூக்கள் ஊதா நிறம், காய்கள் கருப்பு ஊதா நிறம் இதையும் தொட்டியில் வைத்துப் பயிராக்கலாம், இலையையும் கொழுந்தையும் கீரையாகக் கொள்ளப்படும், இதில் ஊதா சாயம் எடுக்கலாம், small malabar nightshade — Basella cordifolia. It is a climbing plant; stem veriegated green and purple; leaves cordate; flowers purplish; berries dark purple; cultivated as pot herb. Succulent leaves and shoots are eaten like spinach; yields purple dye; 2. சிவப்புக் கொடிப்பசளை இது சாதாரணமாய் எங்கும் கிடைக்கக்கூடிய இனம், அடித்தண்டு 3 - 4 அடி சிவப்பு ஊதா நிறம், இலைகள் அண்ட வடிவம், நீண்ட காம்பு, பூக்கள் ஊதா நிறம், காய்கள் கருப்பு, ஊதா நிறம், இதன் இலைச்சாற்றை குழந்தைகள் நீரேற்றத்திற்கு கொடுப்பதுண்டு, கீரையைத்தின்பது உண்டு, இலைக்

கஷாயம் தேயிலை நீராகக் கொள்ளப்படும். இதினின்றும் ஊதாசாயம் எடுக்கப்படும். red Malabar nightshade, common spinach — Spinacea oleracea alias Basella rubra. This is common and available almost every where. Stem 3 - 4ft, brownish purple, leaves ovate, long peduncled, flowers purple, berries dark purple. The juice of the leaves is used in catarrh of children, leaves dressed and eaten like spinnach, infusion of leaves is used as tea, yields a very rich purple dye; 3. வெண்பசளைக் கொடி, இதன் கீரை தின்ன வுதவும், white malabar night shade creeper — Busilla alba. Succulent leaves are dressed and eaten.

**பசளைமண்**, உரமுள்ள மண், loam. see பசலைமண்.

**பசளைவகை,** அனேக வித பசளைக் கீரைகள், the different varieties of Basella genus including oleracea and portuluca; 2. எரு வகை; the different kinds of manure.

**பசன்,** பலாமரம், jack fruit tree — Artocarpus integrifolia.

**பசறு,** பச்சிலைச்சாறு, juice of green leaves of herbs.

**பசறை,** சிறு பசளைக்கீரை, small Malabar night shade —Basella cordifolia; 2. கோழிக் கீரை. Indian purs'ane — Portuluca quadrifide.

**பசற்றனம்,** பாலிய குணம், qualities of a juvenile, qualities of youth.

**பசனமாகல்,** சீரணித்தல், being digested.

**பசனம,** சமைத்தல், cooking; 2. சிற்றின் பம், sexual pleasure or happiness; 3. சீர ணசத்து, a digestive principle secreted by the stomach of some animals as pig etc — Pepsin; 4. சீரணம், digestion.

**பசனித்தல்,** see பசனமாகல்.

**பசாசு,** கண்ணின் கருவிழியிலுண்டாகும் படலம், a spreading coat or film over the pupil of the eye; தொடரிப்பூடு a thorny shrub — Ramnus circumcissus.

**பசாடு,** கண்ணின் சவ்வு, a film in the eye; 2. மாசு, dirt

**பசாடுபிடித்தல்,** கண்ணில் சவ்வுண்டாதல், formation of film over the black of the eye.

**பசாடை,** sec பசாடு.

**பசாந்திரியம்,** ஒதிய மரம், Indian ash tree— Odina wodier.

**பசாமி,** ஞாழல், which see.

**பசாயனி,** அன்னரசத்தைக் கொண்டு செல் லும் குழாய், thin vessels or tubes absorbing and conveying chyle from the alimentary canal — Lacteals.

**பசார்,** சாரமற்றது, that which is without juice.

**பசானம்,** } கோடைச் சம்பா, chamba paddy harvested in April or May.
**பசான்,** }

**பசி,** உதரக்கனல், gastric fire; 2. உணவு வேட்கை, hunger; 3. சமைத்தல், cooking; 4. புசித்தல், eating.

**பசிகிடத்தல்,** பட்டினியாயிருத்தல், starving.

**பசிகொள்ளல்,** பசியெடுத்தல், getting hunger or appetite.

**பசிக்குறைவு,** பசியீனம், loss of appetite or poor appetite.

**பசிக்கொடுமை,** பசியினுல் ஏற்படும் குரூரம், severity hunger.

**பசிசி,** பசிலி, see பசளை.

**பசிதகினி,** சோறு, cooked rice; 2. உணவு food.

**பசிதமத்தல்,** பசியாறுதல், appearing hunger.

**பசிதாகம்,** சோறும் தண்ணீரும் வேண்டல், hunger and thirst; a craving for food and water.

**பசிதாளல்,** பசிபொறுத்தல், to endure or put up with hunger, to tolerate hunger, keeping wolf from the door.

**பசிதீபனமின்மை,** பசியில்லாமை, loss of hunger or appetite — Anypithymia.

**பசிதீபனம்,** பசிவருத்தம், craving appetite.

பசிதாண்டி, பசியைத் துரிதப்படுத்துவது. பசியெழுப்பி, drug that stimulates hunger — Stomachic.

பசித்தல், பசியெடுத்தல், getting hungry.

பசித்தல், பசியெடுத்தல், to be hungry; feeling the pain occasioned by abstinence from food; 2. உதரக்கனல் எழும்பல் rising of gastric fire.

பசிந்தி, ஓர் வகை கடல் மீன், a kind of sea fish.

பசிபட்டினி, உண்ணுமல் வருந்துகை, suffering from hunger and starvation.

பசிப்பாழி, உடம்பு, body which is the seat of hunger.

பசிப்பு, பசி, hunger; 2. பசித்தல், being hungry.

பசிமந்தித்தல், பசி குறைவுபடல், dulness of appetite; 2. பசியெடா திருத்தல், loss of appetite.

பசிமான், சிங்கம், lion.

பசிமூட்டல், பசியெழுப்பல், kindling of appetite.

பசியமரம், பச்சென்றிருக்கும் மரம், green tree; 2. எக்காலத்தும் பச்சென்றிருக்கும் மரம், ever green tree.

பசியாட்டி, பசித்திருப்பவள், starving woman.

பசியாமை, பசியெடுக்கா திருத்தல், absence of appetite, non rising of gastric fire.

பசியாற்றல், பசிதீர்தல், appearing hunger.

பசியிலைக்கறி, பச்சிலைக்கறி, dish of greens.

பசியிழத்தல், பசியிழந்து போதல், loss of natural appetite.

பசியின்மை, பசியில்லாதிருத்தல், absence of appetite — Anorexia; 2. பசிமந்தம், dulness of appetite; 3. கணையத்தில் இருந்து வாதநீர் இரைப்பைக்குச் செல்லுவதற்குத் தடைபடுவதினுல் ஏற்படும் பசியெடுக்காமை, loss of appetite arising from obstruction to the free flow of Vatha fluid from the pancreas to the duodenum.

பசியெடாமை, பசியெடுக்கா திருத்தல், non-rising of gastricfire.

பசியெடுத்தல், பசியுண்டாதல், raising of gastrifire or hunger.

பசியெழுப்பி, தீபனத்தை யுண்டாக்கும் மருந்து, drug that kindles the gastricfire — Stomachic.

பசியெழும்பல், பசியேற்படல், feeling hungry, appearance of hunger.

பசியேப்பம், பசிமிகுதியால் உண்டாகும் ஏப்பம், belching due to excessive hunger. It is opposed to புளியேப்பம், sour eructation or belching due to excessive food or over feeding.

பசிரி,
பசிலி, } See பசளை .

பசிவேளை, வழக்கமாக வுண்டாகும் பசி நேரம், the usual period of hunger; 2, சாப்பாட்டு நேரம், meal's time.

பசினசாதி, ஆண்சாதி, நான்கு வகையிலொன்ருகிய சாமசாதி, one of the four classes of men divided according to their lust

பசு, கோ, cow; 2. உயிர், life; 3. ஆன்மா, the soul; 4. உயிர்ப்பிராணி, living creature; 5. கடவுள், God; 6 வெள்ளாடு, goat; 7. மிருகம், any animal; 8 எருது, bull; 9. யாகத்துக்குரிய ஆடு, sacrificial sheep; 10. சாது, mild quality.

NOTE by C D. அரளை நோய், தாரா நோய் மிகவுஞ் சுற்றுதலோடு வெண்மை புள்ளி உடையனவும், தூங்கி திரிந்து மலம், சுடு காட்டு எலும்பு தின்னும் இக்குணங்களுள்ள பசுக்களின் பால் அருந்த உதவாது. அப்பசுக்கள் ஆகா பசுக்களாகும், milk of the cows that eat faeces, bones and those suffering from contagious diseases is not fit for use, so these cows are called ( ஆகா பசுக்கள் ) for bidden or prohibited cows. See பசும் பால்

பசுகரணம், கொக்கோகத்திற் சொல்லியுள்ள 64 லீலைகளுள் ஒன்று, அதாவது பெண்ணைக் குனியவைத்துப் புணருதல், one of the 64 postures in cohabitation or embracing a woman as described in the erotic science compiled by Kokkoga muni i. e. it is a posture in which the woman stands on her hands and feet like a quadruped ( cow ) while the man mounts upon her back from behind taking a standing posture. This is the usual attitude adopted in the West; 2. தற்போதச் செயல், அதாவது இயற்கையிலேயேயுள்ள மூன்றுணர்வினுல் தன்னையும் கடவுளையும் அறியும் அறிவு, self knowledge of the soul and the diety.

பச்சை வெட்டு வேதை, கட்டுவகையில்லா மலே நெருப்புக் கோடும் சரக்குகளைக் கொண்டு செய்யும் வேதை முறை. (in Alchemy) the process of transmutation without consolidation or fixticn of volatile substances.

பச்சைவெட்டை, ஓர் வகைச் சந்தனம், a kind of sandal tree.

பச்சை வெண்ணெய், உருக்காத வெண்ணெய், butter not clarified.

பச்சைவெயில், மாலைகாலத்து வெயில், evening sun shine.

பச்சை வேல், பச்சைநிற வேல், green vale — Acacia genus. It is so called from its green trunk see சீமைவேல், green babool — Parkinsonia aculeata.

பச்சோணுன், பச்சை நிற ஓணுன், green lizard. chameleon — Lacerta chamelon see காமரூபி.

பச்சோந்தி, பச்சை ஓணுன், இதற்கு கோம்பி தண்டு, காமரூபி என்று பல பெயர், இதன் தலை பெரிது, கூர்ச்சு அல்லது கோணமாயிருக்கும், உடல் சப்பை, தான்யம் போன்ற சிதல்களுண்டு, வால் நீளம், பிடிக்கக் கூடியது, மேற்பக்கம் கவர்ந்துள்ள சவ்வுக்கு நடுவே துவாரம் பொருந்தியது, காதின் உட்புற சவ்வு மறைந்திருக்கும், கால்கள் நீளம். நகம் 5, மரங்களில் வாழும், வால் பிடிப்புள்ளதாயிருந்தாலும் தரையிலும் தண்ணீலும் இது உபயோகப்படாது, அதிக நடை இராமலிருந்தாலும் பூச்சிகளைத் தின்று வாழும், கழுத்து விரைத்தப்படி நிற்கும். கண்ணமைப்பு அதிசயிக்கத் தக்கது, இது தன் னிறத்தை மாற்றுவதில் அதிக சக்திவாய்ந்தது, இலையின் கீழாக, 10 - 12 முட்டைகள் இடும், ஓணுன்களுக்கு நிறத்தை மாற்றும் சக்தி பொதுவாயிருந்தாலும் தென் இந்தியாவில் காணப்படும் இவ்வினத்திற் குரிய மேன்மையாகவே சொல்லலாம், ஏனெனில் இருபக்கத்திலே பல நிறங்களாகக் காட்டும் தன்மையது, இதன் கழுத்து வளைக்க முடியாது, நிமிர்ந்தயிருப்பதினுல் உண்டாகும் கெடுதல்களை அதன் கண்களின் அமைப்பு தீர்த்து விடுகிறது, கண் விழிகள் பாதிக்கு மேல் வெளியில் துருத்திக்கொண்டுள்ளது, நன்ருக நாலு பக்கமும் சுழல முடியும், ஒவ்வொன்றும் தனியாக செயல்படும், அதாவது, இரண்டும் ஒன்றுக்கொன்று செயலி யற்றுவதில் சம்பந்தமேயிராது, இதை தென் இந்தியாவில் எங்கும் காணலாம், தமிழ் வைத்தியத்தில் இதைச் சிறப்பாக சொல்லப் பட்டிருக்கிறது, இதினின்று இலேகியம் செய்து காம விருத்தி, நபும்சகம் முதலிய வைகளுக்குபயோகிப்பார்கள், இது மாந்திரீகத்திலும் வசியம் செய்ய மெத்த உபயோகமாகும். இதன் நெய் பின் இசிவு, நரம்புவலி, சிரநோய் முதலிய ரோகங்களையும் போக்கும். (Lit) green lizard but generally known as chameleon. It is also known by different names as Pachondy, Kamaroopi etc.—Chamaeliovulgaris reptilia. It has a large head, angular body compressed, covered with granular scales above and below; long and prehensible tail tail; exceedingly long, wormlike, very mobile, covered with a circular membrane which is pierced with a small central hole, tympanum hidden, legs thin each with five nails and toes, live trees, on the ground and in water it is helpless. Although extremely slow in locomotion, it feeds on insects, In flexibility of the neck, wonderful structure of the eyes, faculty of changing colour much developed deposited its eggs under the leaves from ten to twelve. The representative species of Southern India is the common chamelan — Chamaetes vulgaries alias C. ceyonicus alias Lacerta chamelus. Most specimens are of a green colour, and the faculty of changing colour possessed by the chameleons. although common to numerous other lizards has become proverbial in this species and the faculty here is so much developed that one side may assume a colour different from that of the other. The inflexibility of the neck is compensaled by the structure of the eyes, which is so prominent that more than half of the ball stands out of the head. Not only they can be moved in any di rection but each has an action independent of the other. The species will be found all over S. India. It is lughly spoken of in Tamil Medicine. It is useful in many ways in medicine and electuaries prepared from it are aphrosiac and as such capable of removing impotency. It is useful in magic especially for facinating and charming purposes. Its fat is highly efficacious as an external application in the sprain in the nape of the neck, opisthotomis neuralgiac pains diseases of the heads etc.

**பஸ்பம்**, சாம்பல், உலோக வெள்ளை, see பஸ்மம்.

**பஸ்பவிதி**, see பஸ்மவிதி, rules of calcification.

**பஸ்பித்தல்**, தூரணமாக்கல், calcification.

**பஸ்மம்**, பஸ்பம், calcified substance or powder.

**பஸ்மவிதி**, உலோகத்தைக் கொண்டு பற்பம் செய்யும் முறைகள், rules of clacification.

**பஞ்சகஷாயம்**, ஐந்துவகைச் சரக்குகள், அதாவது தேன், நெய், பால், வாழை, சர்க்கரை இவைகளைக் கொண்டு ஆயுள்வேத முறையில் வடிக்கும் ஓர்வகைக் கஷாயம், (in Ayurveda) a decoction extracted by boiling a mixture of substances viz - honey, ghee, milk, plantain and sugar; 2. நெல்லி, தும்பை, கடுக்காய், வெள்ளி லோத்திரம், மஞ்சிட்டி ஆகிய இவ்வைந்து சரக்குகளையும் கொண்டு தமிழ் முறைப்படி இறக்கும் கஷாயம், (in Tamil Medicine) a kind of decoction extracted from five drugs viz - goose-bery leucas flower, gall nut, wood apple fruit shell, Indian madder; 3. ஐந்து வகைக் கஷாய தினுசுகள், five varieties of decoction seperately or as a whole.

**பஞ்சகத்திலொன்று**, அத்தி, fig tree — Ficus indicus.

**பஞ்சகந்தம்**, ஐந்துவகை வாசனைகள், அவையாவன, ஏலம், இலவங்கம், கற்பூரம், சாதிக்காய், தக்கோலம், five auromatics viz — Cardamom, cloves camphor, nut meg, china pepper.

**பஞ்சகமம்**, ஐந்து வகையான மருந்து மூலிகைச் செடிகள், அவை ஆடாதோடை, சீந்தில், கண்டங்கத்திரி, கையாந்தகரை, பெரும்பலா என்பன, the five medical plants viz - Malabar wintercherry, moon creeper, prickly night shade, eclipse plant.

**பஞ்சகம்**, ஐந்தின் கூட்டு, a mixture or compound of five drugs or any aggregate of five substances.

**பஞ்சகரணுதிப்பால்**, தில்லைப்பால், tiger milk tree.

**பஞ்சகர்த்தர்கள்**, அயன், அரி, உருத்திரன், மகேஷ்வரன், சதாசிவன், the five Gods or deities viz- Brahma, Vishnu, Rudra, Maheswaran and Sadasivan; 2, பஞ்சபூதம், five elements, earth, water, fire, (vayu) alias air & ether.

**பஞ்சகரு**, மாந்திரீக நூலில் சொல்லிய ஐந்துவித கருக்கள், the five elementary substances described in the science of magic.

**பஞ்ச கருமம்**, உடம்பைச் சுத்தி செய்வதற்காக வேண்டி, ஆயுள் வேதத்தில் சொல்லியுள்ள ஐந்துவகைச் சிகிச்சைக் கிரமங்கள் அவையாவன, வாந்தி, பேதி, நீர்ப்போக்கு, வியர்வை, தும்மல் இவைகளை உண்டாக்குவது, a technical term for the application of five medical measures or process for purifying the body viz- emetics, purgatives, errhines, diuretics and diaphoretics.

**பஞ்சகலை**, சந்திரகலை, the vital air passing through the left nostril; 2. ஆத்தும விருத்தி, அவையாவன, நிவிர்த்தி, பிரதிஷ்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதம், the five developments of soul in its beatification viz- renunciation, performance, art, quiescence (motion less or dormant) and sacrificial offer.

**பஞ்சகவ்வியம்**, பசுவினிடமாய்ப் பிறந்த ஐந்துவகை வஸ்துக்கள், அவையாவன, கோமயம், சாணம், பால், தயிர், நெய், the five substances derived or obtained from the cow viz- urine, dung, milk, curd, clarified butter.

**பஞ்சகற்பமாத்திரை**, சந்தனம், மஞ்சள், கடுக்காய், நெல்லி, தான்றிக்காய் இவைகளை சமனிடை கொண்டு, ஆடாதோடைச் சாற்றினலரைத்துத் திரட்டி உலர்த்திய மாத்திரை, இதனால் மலச்சிக்கல், வெள்ளை, இரத்தக்கொதிப்பு, தாது துர்ப்பலம்போம், pill or tablet containing sandal, turmeric and the three myrobalans. It is said to cure constipation, white discharge, blood pressure and weakness.

**பஞ்சகற்பம்**, கடுக்காய்த் தோல், கஸ்தூரி மஞ்சள், நெல்லிப் பருப்பு, மிளகு, வேப்பம் வித்து, pancha karpam pericarp of gall nut i. e gall nut without the stone, musk turmeric, goose berry, kernels pepper and margosa seeds.

**பஞ்சகற்பவிதி**, கஸ்தூரி மஞ்சள், மிளகு, வேப்பம் வித்து, கடுக்காய்த் தோல், நெல்லிப் பருப்பு ஆகிய இவைகளை கிரமப் பிரகாரம் காராம் பசுவின் பாலில் அரைத்துக் கொதிக்க வைத்து தலையில் தேய்த்துக் கொள்ளல், இதனால் நோய் ஒன்றும் அணுகாதெனக் கருதப்படும், rules of using pancha Karpam bathing after applying to the head the paste of and boiled the five substances ref: பஞ்சகற்பம், ground with the milk of the black cow with black udder and nipples. It is said to prevent diseases.

**பஞ்சகாசம்,** ஐந்து வகையான காசரோகங்கள், அவையாவன: வாதகாசம், பித்தகாசம் சிலேட்டும காசம், இரத்த காசம், தொந்த காசம், five kinds of bronchities — Vatha (wind humour) bronchities, Pitha (fire humour) bronchities, kapa (phlegm humour) bronchities, Raktha (blood) bronchities and thontha (combined) bronchities.

**பஞ்சகாயம்,** ஐந்து வகை மருந்து சரக்குகள். சுக்கு, மிளகு, திப்பிலி, பெருங்காயம், வெங்காயம், five kinds of drugs viz. dried ginger, black pepper, long peper, asafoetida and onion.

**பஞ்சகாரகம்,** கடுகு, வெந்தயம், பெருங்காயம், வெள்ளுள்ளி, வெங்காயம்; ஆக ஐந்து வகைக் காரச் சரக்குகள், five kinds of pungent substances viz—mustard, fenugreek, asafoetida, garlic and onion.

**பஞ்சகாரம்,** ஐந்து வகையான காரச் சரக்குகள், அவையாவன: சீனக்காரம், அல்லது படிகாரம், வெண்காரம், பூங்காரம், காடிக் காரம், சவர்க்காரம், five kinds of alkaline salts, alum, borax, soda, lunar caustic (silver nitrate) and soap.

**பஞ்சகாவிய கிருதம்,** காக்கை வலிப்புக்காக தயாரித்துக் கொடுக்கும் ஓர் ஆயுள்வேத மருந்து நெய், medicinal ghee preparation used in Ayurveda for epilepsy.

**பஞ்ச காவிய நிகண்டு,** அகஸ்தியரால் செய்த ஐந்து பாகங்களடங்கிய வைத்திய நூல், a medical vocabulary complied by Agastiya consisting of five chapters.

**பஞ்ச காவியம்,** வாதம், வைத்தியம் இலட்சணம், மாந்திரிகம், ஞானம் ஆகிய இந்த ஐந்து விஷயங்களைப் பற்றிய காவியங்கள் அடங்கிய ஓர் நிகண்டு, இது அகஸ்தியரால் செய்யப்பட்டதெனச் சொல்லப்படும், a Tamil vocabulary composed in verses on five different subjects viz—Alchemy, Medicine, Yoga philosophy; Spiritual philosophy, and general subjects. It is said to be compiled by the celebrated sage Agastiar (the founder of the Tamil grammer).

**பஞ்சகுத்தம்,** see பஞ்சகூடம்.

**பஞ்ச குன்மம,** ஐந்து வகை குன்ம நோய்கள் five varieties of gunmam (dyspepsia — Vatha (wind humour) gunmam, Pitha (fire humour) gunmum. Kapha (phlegm humour) gunmam, 'Thonthagunmam — Combination of any two humours and Janni gunmam compination of all three humours. Generally eight are mentioned and is known as Asta gunmams.

**பஞ்சகூடம்,** ஆமை, tortoise. turtle.

**பஞ்சகோசம்,** உயிர் நிலைக்கு ஆதாரமாக வியங்கும் ஐந்து வகை கோசங்கள், அவையாவன: அன்னமயகோசம்; 2. பிராணமய கோசம்; 3. மனோமய கோசம்; 4. விஞ்ஞானமய கோசம்; 5. ஆனந்தமயகோசம் என்பனவையாம்; in philosophy sheaths (investitures) to the soul viz. 1. that supported by food — gross form, 2. organs of action; 3. organs of perception with the mind; 4. the same with intellect; 5. the elements of identity and wisdom.

NOTE—1. Mukthi or Moksham consists in freedom from the five shackles and liberation from those doctrines or natural restrictions.

NOTE—2. Those koshams (கோசங்கள்) represented in the term of body or in triple investures are as follows. No. 1 above mentioned refers to or agree with sthoolam or physical body, No. 2, 3 and 4 correspond to sookkumam or subtle or astral body.

2. அன்னம், நீர், காற்று, அக்கினி, ஆகாசம் இவைகளினால் ஆக்கப்பட்ட மானிடச்சரீரம்; (in physiology) the human physical body made up of five elements viz—food (earth), water, fire, air and ether (sky).

**பஞ்ச கோலகிருதம்,** குன்மம், பச்சை நோய், மண்ணீரல், விருத்தி, இருமல், சுரம் இவைகளுக்கு ஆ. வேத முறைப்படி தயாரித்துக் கொடுக்கும் ஓர் மருந்து, an Ayurvedic medicinal ghee phlegm, dyspepsia, chlorosis, enlarged spleen, cough and fevers.

**பஞ்ச கோலம்,** சுக்கு, திப்பிலி, திப்பிலிமூலம், செவ்வியம், சித்திர மூலம், ஆக ஐந்துவித கோலச் சரக்குகள், the five characteristic officinal drugs viz, dried ginger, long pepper. long pepper root, black pepper creeper (stem) Ceylon red wort (plumbago root). This compound increases the digestive function and excites bile and checks both the wind and phlegm humours.

**பஞ்சகௌவியம்,** see பஞ்சகவ்வியம்.

**பஞ்ச சுத்தி,** தமிழ் வைத்தியத்திற் சொல்லியுள்ள ஐந்துவித சுத்தி முறைகள்: 1. மண்ணிற்குள் புதைத்து வைத்தல்; 2. தண்ணீர், கஷாயம், திராவகம், செயநீர், காடி முதலியவைகளால் கழுவுதல்; 3. அவித்

தல், புடமிடல், எரித்தல் முதலியவை; 4. காற்றில் உலரவைத்தல்; 5. சூரியவெயில் அல்லது வெளிச்சத்திலிடல், ( in Medicine ) the five kinds of cleaning or purifying process adopted in Tamil Medicine viz- 1. burying under the earth, ( mud, paddy, or other grains ); 2. washing or soaking or boiling in water, milk, decoction tender cocoanut water acid pungent water, fermented liquids etc, 3. baking, calcining, burning or heating in fire; 4. drying or evaporating; 5. exposing to sun's rays or heat.

2, சைவசமயத்தைத் தழுவியவர்கள் கைக் கொள்ளும் சுத்தி முறைகள், அவை யாவன: 1. குளியல், 2, தியானம், 3. பாத்திரங்கள் சுத்தி, 4. இலிங்கசுத்தி, இலிங்க ஆராதனை, 5. மந்திர உச்சரிப்பு; பஞ்சாட்சரம் ஓதல், வணக்கம், ஐவகை சுத்தி, ஆத்துமசுத்தி, இலிங்கசுத்தி, திரவியசுத்தி, பூதசுத்தி, மந்திரசுத்தி, ( in Agama philosophy ) the five kinds of purification practised among Saivites viz- 1. bathing or washing the body and clothes, 2. purification of the soul by prayer; 3. cerimonial purification of sacred vessels ( used for worship ); 4. purification and adorning of lingam; 5. final purification by mental repitition of the mystic letters ' Om ' and five lettered Panchaksharam.

**பஞ்ச சத்தி**, உலக சிருஷ்டி சம்மார கிருத்தியங்கள் நடைபெறுவதற்காக சிவசொரூபமாகிய ஐந்துவகைச் சத்திகள். அவையாவன: the five operative female energies of Siva by which the creations and evolution of the Universe are effected.

1. இச்சாசத்தி, the powers of affection which is friendly to life or benevolent to the soul.
2. கிரியாசத்தி, power of creating words.
3. சிற்சத்தி or ஞானசத்தி, knowledge of illuminating the soul.
4. பராசத்தி, the power of manifestations or of doing a thing.
5. ஆதிசத்தி, the power of vital operation. see ஐஞ்சத்தி.

**பஞ்ச சத்து செந்தூரம்**, கௌரி, கந்தகம், வெள்ளை பாஷாணம், மனோசிலை, தாளகம் ஆக இவை ஐந்தையும் இரசத்தாளிப் பழத்தால் அரைத்துப் புடமிட்ட செந்தூரம், இது வாதப்பிடிப்பு, சன்னி, சுரம் முதலிய வைகளுக்கு உபயோகமாகும், a kind of red oxide prepared by calcining the product derived by grinding together the five drugs viz- yellow arsenic, sulpher, white arsenic, red arsenic and yellow orpiment with plantain fruit. It is prescribed for rheumatic affections, epilepsy, fever etc.

**பஞ்ச சயனம்**, ஐந்தடுக்கு மெத்தை; 2. திருமாலின் ஐவகைச்சயனங்கள், five fold bed, the five varieties of God Vishnu's bed; 3. ஐந்தாலாய மெத்தை, அவையாவன, அன்னத்தூவி, இலவம்பஞ்சு, செம்பஞ்சு, மயில் தூவி, வெள்ளைபஞ்சு, bed mattress filled with feathers of swan, silk cotton, cotton of red cotton plant, peacock feathers and cotton of ordinary (white ) cotton plant.

**பஞ்சம்**, ஐந்து, five; 2. ஓர் சிறந்த எண், a sacred number; 3. பூண்டின் முதற்பெயர், plants first term பஞ்சமூலம், five herbaceous roots; 4 பஞ்சரசம், gall nut.

**பஞ்ச சரக்கு**, வீரம், கவுரி, இலிங்கம், அரிதாரம், பூரம் ஆகிய இவ்வைந்துவித சரக்குகள், the five kinds of minerals, corrosive sublimate, yellow arsenic, vermilion, orpiment and subchloride of mercury.

**பஞ்சசரலவணம்**, கடுக்காய், gall nut — Terminalia chebula.

**பஞ்ச சருக்கரை**, சிந்தில்துண்டு, நீர்வள்ளிக் கிழங்கு, நிலப்பனைக் கிழங்கு, நிலக்குமிழ் வேர், கற்கோவைத்தண்டு; இவைகள் ஒவ்வொன்றிலு மிருந்து காய்ச்சி தனித்தனி வாங்கிய 5 வகை சருக்கரை, இந்த வங்க பற்பத்தில் கலந்து கொடுக்க நீரழிவு போம், calcified tin given with the five salts extracted from each of the above drugs separately.

**பஞ்ச சர்கம்**, முன்னங்கை, the fore hand.

**பஞ்ச சன்னியம்**, குதிரை, horse.

**பஞ்ச சாரம்**, ஐந்துவகை சாரங்கள், நவச்சாரம், சத்திசாரம், சிவசாரம், எவட்சாரம், கதலிச்சாரம், the five kinds of acid salts viz salt petre or nitrate of potash, salammoniac, sakthi salt, Siva salt and plantain salt; 2. ஐந்துவித சத்துக்கள, அவையாவன, காய்ச்சியபால், சருக்கரை, தேன், திப்பிலி, நெய் ஆகிய இவைகளை நன்குகக் கலக்கி உபயோகிக்கும் ஓர் ஆயுள்வேத மருந்து, இதை சன்னிபாதசுரம், சயம், காசம், இருதயவலி முதலிய நோய்களுக்குக் கொடுப்பதுண்டு, an Ayurvedic compound consisting of boiled milk, sugar, honey piper longum and clarified butter well stirred up. It is employed in casses of typhoid fever, consumption, bronchities and heart affections.

பஞ்ச சிகை, தலையுச்சி, crown of head, vertex; 2. கண்புருவம், eye brow; 3. பஞ்சசர்கம், which see.

பஞ்ச சித்தர், ஐந்து சித்தர்கள், அசுவினி தேவர், அகஸ்தியர், புலஸ்தியர், இராம தேவர், யூகிமுனி, the five well Siddhars viz- Asavin kumar, Agastyar, Pulastyar, Rama Devar or Yacob and Ugimuni.

பஞ்ச சிலேத்துமம், ஐந்து சிலேத்தும வகைகள், அவலம்பகம், கிலேதம், போதகம், தற்பகம், சந்திகம், the five phlegms' humours viz- Avalampagam, Kiletham, Pothagam, Tharpagam and Santhigam.

பஞ்சசீத எண்ணெய், இதுவே பொன்னாங்காணித் தைலம், வரட்சிமேகம், மூலம், காலெரிவு, கண்ணெரிவு போம், bathing oil prepared out of Illecebrum sessile. It cures neurities, piles etc

பஞ்ச சீதம், பொன்னாங்காணி, சிறுகீரை ஆவாரை, வல்லாரை, சிந்தில் எனும் ஐந்தின் பொதுப் பெயர், five plants or herbs that cause cold.

பஞ்சசுண்ணக்குகை, பஞ்சசுன்னக்குகை, ஐந்து சுண்ணம்பினுற் செய்த மூசை, crucible made out of the five calciums.

பஞ்ச சுண்ணம், ஐந்துவகைச் சுண்ணம், குக்கிடத்தின் சுண்ணம், காரக் கிளிஞ்சில் சுண்ணம், வெள்ளைக்கல் சுண்ணம், கடல் நுரை சுண்ணம், வலம்புரிச் சங்கின் சுண்ணம், the five calciums or slaked limes viz- fowls' excreta (white portion), bivale shell calcium, lime stone calcium, cutle fish calcium and right twisted conch shell calcium.

பஞ்ச சூதமெழுகு, சாதிலிங்கம், பூரம், வீரம், சூதம், செந்தூரம் இவைகளைக் கொண்டு காசிபமுனிசூத்திரத்தில் சொல்லியபடி தயாரிக்கும் ஓர் வித மெழுகு, a calloid or waxlike preparation made as per process laid down in Kasila Muni Sutram from the followings five drugs viz: Virmilion, subchloride of mercury, corrosive sublimate, mercury and mercuric oxide.

பஞ்ச தூளை, அம்மி, உரல், உலக்கை, துடைப்பம், அடுப்பு, நீர்க்குடம், ஆகிய ஐந்து மடைப்பள்ளி சாமான்கள், the five required articles of kitchen viz- grind stone, pestle and mortar, broom stick, oven, and waterpot.

பஞ்சடைதல், கண்துலக்கமறல் ஓர் மரணக் குறி, dimness of the eyes - a symptom of death: (உ-ம்) "காலன் வருமுன்னே கண் பஞ்சடைக்கு முன்னே" பஞ்சதசி ஐந்தெழுத்து மந்திரம், the most important Mantram recited for rousing the kundalin with cosmic power.

பஞ்சடைப்பு, கண்பஞ்சடைந்த நிலை, the state where in the eye looks grim, dim, and dark losing its reflex action.

பஞ்சட்டை, ஓர் பூடு, common Ceylon laurel — Litseae.

பஞ்சணிப்படலம், பீளை சேர்ந்து பார்வை புகைச்சல் கண் உறுத்தல் ஒருபுற பார்வை see பஞ்சு நீர்ப்படலம் an eye disease characterised by irritation, discharge from the eye squint eye etc.

பஞ்சதம், சாவு, death; 2. ஐம்பூதம், உடலினின்று பிரிதல், the dissolution of the five elements which composed the body.

பஞ்சதரு, ஓர் கற்ப மூலிகை, rejuvenating herb unknown.

பஞ்சதன் மாத்திரை, பஞ்சபூத மூலம், the subtle rudiments of the five elementary matter; 2. அறிவு மூலம், the five grounds of knowledge by senses.

பஞ்ச தாது, பஞ்ச பூதம், the five elements being the component parts of the body; 2. பஞ்சபட்சி பாஷாணம் a kind of prepared arsenic; பொன்னுதி ஐந்து, பஞ்சலோகம், பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, காந்தம், the five metals viz- gold, silver, copper, iron and magnet.

பஞ்சதாரை, நாட்டுச் சருக்கரை, unrefined country sugar coarse or red sugar.

பஞ்சதிரவியம், கோசலம், தயிர், நெய், பால், சாணம், see பஞ்ச கவ்வியம்; 2. ஐந்து கடைச் சரக்குகள், மிளகு, கோஷ்டம்; அகில், தக்கோலம், குங்குமம், five bazaar drugs viz- black pepper, Arabian costus, agil wood, saffron powder.

பஞ்ச தீக்கிகம், உதரம், கண், கை; மார்பு, மூக்கு ஆகிய உடம்பின் ஐந்து உறுப்புகள், five parts of the body viz- abdomen, eye, arms, chest and nose.

பஞ்ச தீபாக்கினி, சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், ஏலம் ஆகிய பசியை எழுப்பும் ஐந்துவித சரக்குகள், the five drugs that stimulate hunger, fire in the stomach viz· dried ginger, black pepper, long pepper, cumin-seeds and cardomum.

பஞ்சதீபாக்கினி சூரணம், திரிகடுகு, சீரகம், ஏலரிசி, இவை சம எடை சீனி 5 பங்கு சேர்ந்த சூரணம், the powder mixture prepared out of the drugs of Pancha deepagni. See பஞ்சதீபாக்கினி. Each drug one part and sugar five parts is the composition of the mixture powder.

பஞ்ச தீபாக்கினி லேகியம், சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், ஏலம் ஆகிய ஐந்து சரக்குகளைச் சூரணித்து சீனி, தேன் கூட்டிக் காய்ச்சிப் பதப்படுத்தலேகியம், இது அசீரணத்திற்குக் கொடுப்பதுண்டு, an electuary prepared out of the five pancha deepagni drug and sugar and honey.

பஞ்சதீபிகா, see உகாய்.

பஞ்சதீர்க்கம், உதரம், கண், மார்பு, மூக்கு, கை ஆகிய ஐந்து உறுப்புகள் see பஞ்ச தீக்கிரகம்.

பஞ்சது, குயில், Indian cuckoo.

பஞ்சதூபம், ஐந்துவகை வாசனைத் தூபம், அகில், சாம்பிராணி, குந்துருக்கம், குக்குலு, சூடன், the five kinds of inceuses or auromatifumes viz· agil or eagle wood, franckincense, ¦ Indian olibanum, bdellium and camphor.

பஞ்சத்துவ கிரகணம், ஐம்பூதங்களின் நிலைமை அல்லது தன்மை உடன்பாடு, the acceptance of a state or condition of the five elements.

பஞ்சத்துவம், மரணம், death.

பஞ்சதை, பஞ்சபூதம், the five elements; 2. சாவு, death.

பஞ்ச நகக்கூர்மையோன், ஆமை, tortoise, turtile.

பஞ்ச நகம், ஆமை, tortoise; 2. புலி, tiger; 3. யானை, elephant; 4. நகங்கள் ஐந்து பிரிவினைப்பட்ட மிருகங்கள், animals in general with claws having five nails as tiger, lion etc.

பஞ்ச நகி, இரட்டை நாக்குள்ள உடும்பு, double tongue lizard or guanana — Lacerta iguana.

பஞ்ச நாடி, பஞ்சேந்திரியம், the five senses of the body; 2. உடம்பிலுள்ள ஐந்துவகை நாடிகள், அவையாவன, the five kinds of pulsations in the body viz:

1. வாத நாடி, pulse indicating wind humour ( Vatha nadi ).
2. பித்த நாடி, pulse indicating bile humour ( Pitha nadi ).
3. ஐய நாடி, pulse indicating phlegm humour ( Kapha nadi ).
4. பூத நாடி, bootha nadi.
5. குரு நாடி, gurunadi.

பஞ்சநாமம், நாய், dog.

பஞ்ச நிதானம், நோயாளிகளினிடத்தில் பார்க்கக்கூடிய ஐந்துவித காரணக் குறிகள் அல்லது சோதனைகள், அவையாவன, the five observations or examinations to be made in a patient viz:

1. கண், the two eyes.
2. வாய் ( நாக்கு, பல் ), mouth i. e. tongue and teeth.
3. கை ( நாடி ), hand ( pulse ).
4. மூத்திரம், urine.
5. மலம், faeces.

பஞ்ச நிமிளை, திருமூலர் திருமந்திரத்திற் சொல்லியுள்ள ஐந்துவகை நிமிளைச் சரக்கு, அதாவது பொன்நிமிளை, வெள்ளிநிமிளை, செம்புநிமிளை, வெங்கலநிமிளை, காகநிமிளை, gold pyrites, silver pyrites, copper pyrites, Bismuth ( bellmetal pyrites ) and iron pyrites or antimony referred to in Thirumoolar Thirumandiram.

பஞ்ச நிம்பம், வேப்ப மரத்தின் ஐந்துவகை உறுப்புக்கள், இலை, பட்டை, பூ, பழம், வேர், மேற்கண்ட நிம்பத்தின் உறுப்புகளையும் ஆதியாகக் கொண்டு இடித்து, தூள் செய்து ஆயுள்வேத முறைப்படி நெய்யும், தேனும் கலந்து தயாரித்து கொடுக்க, மஞ்சட் காமாலை, இரத்த பித்த கபம் இவைகளைப் போக்கும், the five parts of the neem or margosa tree viz· leaf, bark, flowers, fruit and root; an Ayurvedic preparation of the said five parts of the margosa tree powered and mixed with ghee and honey and made into a tincture. It is prescribed for jaundice, piles excited blood, bile, phlegm and skin diseases; 2. ஐந்துவகை வேம்பு, the five kinds of neem plants; they are :

1. நல்வேம்பு, margosa tree.
2. மலைவேம்பு, hill neem.

3. நிலவேம்பு, french chiretta.
4. கறிவேம்பு, black neem ( curry leaves tree).
5. சிவனார்வேம்பு, Shiva's neem.

பஞ்சநிறக்கல், சிலாநகம்.

பஞ்ச நீர், உடம்பினின்று கழியும் ஐந்து வகைத் துர்நீர், அதாவது மூத்திரம், விந்து, வியர்வை, வாய்நீர், கண்ணீர், the five kinds of excretions from the body viz. urine, semon, perspiration, saliva and tears; 2. ஐந்துவகைத் தண்ணீர், கடல் நீர், ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர், சுனை நீர், the five sources from which water is obtained, 1. sea, 2. river, 3. spring, 4. rain, 5. mountain.

பஞ்சந்தாங்கி, கேழ்வரகு, ragi as famine food. It is so called as unlike paddy, it can be cultivated, even in drought condition and used.

பஞ்சந்தாளி,

பஞ்சபசு, ஐந்துவகை பசு, நந்தை, பத்திகை, சுரபி, சுசீலை, சுமனை, the five kinds of cows viz- as described above.

பஞ்ச பஞ்சமூலம், இலகு, பிருக்தம், புனர் நவம், சீவகாதி திருணம், ஆக ஐந்துவித பஞ்ச மூலங்களோடு கூடிய 5 x 5 அல்லது 25 வேர்கள், the five sub divisions as described above of each of the five roots mentioned under பஞ்சமூலம், which see.

பஞ்ச படலம், கருவிழியில் ஏற்படும் ஐந்துவித படலங்கள், தசை, நீர், இரத்தம், வரி, வெண்சதை, a spreading growth (as the name indicates) in the black of the eye which is divided into five varieties viz- fleshy, vesicular, bloody, streaky and white fleshy.

பஞ்சபட்சி, ஓர் வைப்புப் பாஷாணம், a kind of prepared arsenic; 2 ஐந்துவகைப் பறவைகள், காகம், வல்லூறு, மயில், ஆந்தை, கோழி, ( in Astrology ) the five kinds of birds selected in Astrology with reference to human body and they are crow, kite, owl, peacock and fowl cock.

பஞ்சபட்சி பாஷாணம், மச்சமுனி, 800-ல் சொல்லியபடி பூரசம், அப்புரசம், மகாரசம், பச்சை, வெள்ளை, மனோசிலை, வீரம், இலிங்கம் இவைகளைப் பொடித்து குப்பியிலடைத்து சீலைமண் 7 செய்து தாழியில் மணவிட்டு வைத்து குறுகத்தீயிட்டு 6 சாமம் எரித்து தணல் ஆறியபின் குப்பியை உடைத்துப் பார்க்க பாஷாணமாம், this arsenic is prepared as per text mentioned in Macha Muni-800.

பஞ்சபத்திர கஷாயம், பற்பாடகம், கோரைக் கிழங்கு, சீந்தில் கொடி, அதிவிடயம், நிலவேம்பு, இவைகள் சேர்ந்த கஷாயம், இதனால் வாதபித்த சுரம் நீங்கும், decoction prepared out of fever plant (Mollugo cerviana) root of Indian papryus, stem moon creeper, Indian atees and ground neem (french chiretta) It is indicated for all fevers.

பஞ்சபட்சிவாசி, வெள்ளைக் கிலு கிலுப்பை, white flowered rattle wort — Crotolaria laburnifolia.

பஞ்ச பத்திரம், ஐந்துவித இலைகள், ஆடாதோடை, கரிசலை, நொச்சி, அழவணை, கண்டங் கத்திரி, the herbacous leaves of Malabar winter cherry, eclipse plant five leaved notchy and nail dye.

பஞ்சபலோதகம், ஐந்துவித பழச்சாறு, எலுமிச்சை, கமுஞ்சி, தமரத்தை, நாரத்தை, மாதுளை, juices of five fruits viz- lime, orange, sweet blimbing, bitter orange and pomegranate.

பஞ்சபாண செந்தூரம், சூரத்து கற்பூரம், சாதிலிங்கம், மனோசிலை, தாளகம், கந்தகம், இரசம், சங்குபாஷாணம், இவைகளை வகைக்கு 1 பலம் எடுத்துக் கொண்டு, மேனிச்சாற்றால் அரைத்து நிழலில் உலர்த்தி, மறுநாள் கறுப்பு வெற்றிலை ( கம்மாறு வெற்றிலை ) சாற்றாலரைத்து கடைசியாக கறுப்பு வெற்றிலைமீது பில்லை தட்டிவைத்து சீலைமண் செய்து ஒருசாதி விறகால் 4 சாமம் எரித்து வாங்கவும், இஞ்சி அல்லது தேனில் 2 அரிசி எடை கொள்ள சன்னி சுரம், குட்டம், கிரந்தி, வாதம், குன்மம், சூலை, அரையாப்பு, பிளவை முதலியவைகள் போம், ஒருவாரம் கொடுக்கவும், இச்சாபத்தியம், மறுபத்தியம் உண்டு, surat camphor, vermilion, red arsenic, yellow orpiment, sulphur, mercury, sanku pazhanam ( white arsenic ) are taken in equal quantities after purification and grinded with the juice of Acalpia indica for a day and then dried. The next day it is grinded with the juice of betel ( black ) leaf. Then it is made into a disc and dried. It is placed over the betel leaf and packed and sealed well as usual. It is then burnt with one kind of fuel for twelve hours and taken for use. Dose two rice weight with honey or ginger juice. It is said to cure, delerious fever, skin diseases, syphilis, dyspepsia, rheumatism, bubo and carbuncle.Diet must be observed.

**பஞ்ச பாணப்பூ**, காமத்தை உண்டாக்கும் ஐந்துவகைப்பூ, five kinds of flower for promoting lust.

1. தாமரை, lotus.
2. அசோகு, asoka.
3. மாமலர், mango flower.
4. கருங்குவளை, black Indian water lily.
5. முல்லை, small jasmine.

**பஞ்சபாண்ட செந்தூரம்**, பிரமமுனி வைத்திய நூலிற் சொல்லியுள்ள வோர்வகை செந்தூரம், a red oxide prepared by process of calcination according to the principles laid down in Brahma Muni work in Medicine.

**பஞ்சபாண்டவர் முல்லை**, ஓர்வகை முல்லை, ஐந்திதழ் உடையதுபோலும், five petalled mullai jasmine.

**பஞ்ச பாஷாணம்**, ஐந்துவகை பாஷாணங்கள், five kinds of poisonous drugs.

1. தாளகம், yellow orpiment.
2. கௌரி, yellow oxide of arsenic.
3. இலிங்கம், cinnabar.
4. வெள்ளை, white arsenic.
5. வீரம், corrosive sublimate.

**பஞ்ச பாண்டுரோகம்**, ஐவகை பாண்டுரோகம், five varieties of anaemia.

**பஞ்ச பித்தம்**, ஐந்து மிருகங்களின் பித்துக்குள், கரடி, வெள்ளாடு, எருமை, வரால்மீன், மயில், bile of bear bile of goat, bile of buffalo, bile of peacock and bile of viral fish (fresh water fish).

**பஞ்ச பிராணன்**, மிக்க பிரியம், most beloved or affectionate; 2. தசவாயுவினுள்ளைந்து, அதாவது, five of the ten vital airs supposed to operate in the human body viz :—

1. அபானன், ( Apanan ) wind from the anus.
2. உதானன், ( Udanan ) vital air promoting digestion.
3. சமானன், ( Samanan ) that which is essential for digestion.
4. பிராணன், ( Pranan ) that which essential for breathing.
5. வியானன், ( Vyanan ) vital air prevailing all over the body.

**பஞ்ச பிராணுவஸ்தை**, மனிதருக்குக் காமத்தினுலேற்படும் ஐந்துவித வேதனைகள், நேசிக்கின்றவரைப்பற்றி சதா நினைப்பதும், பேசுவதும்; 2. பெருமூச்செறிதலும், அழுதலும்; 3 அருவருத்தல்; 4. அனத்துதல்; 5. ஓலமிட்டு அலரல், effects of love on men and women, thinking and talking of the person loved; 2. sighing and tamenting for the person loved; 3 no appetite and blis like for everything; 4. languishing; 5. crying and sheding tiars.

**பஞ்ச பீசம்**, உலோகங்களின் தன்மையைப் போக்கித் தங்கச் செம்பாக மாற்றிப் பொன்னின் குணத்தை உண்டாக்கும், 5 வகை செம்பு, இது சித்தர் பொடியாலாகும், the alchemical substance known as Philosopher's powder used for converting the following metals into alchemical copper before they are transmuted into gold viz. தங்கசெம்பு, gold copper; 2. வெள்ளிச் செம்பு, silver copper; 3. அப்பிரகச் செம்பு, mica copper; 4. காந்தச்செம்பு, magnetic copper; 5. அயச்செம்பு, ferrous copper.

**பஞ்சபுலன்**, ஐம்புலன் அதாவது:- மெய், வாய், கண், மூக்கு, செவி, the five sense organs viz- skin, mouth, (tongue) eye, nose and ear.

**பஞ்ச பூத காரசாரம்**, பஞ்சபூதபிரிவினைப்படி ஐந்து வகையாக பிரித்த காரமும் சாரமும். alkalies and acids divided according to the five elements viz:

| | | காரம் - alkali | சாரம் - acid |
|---|---|---|---|
| 1. | பிருதிவு Earth | கல்லுப்பு — sea salt | இந்துப்பு. — rock salt. |
| 2. | அப்பு Water | சத்தி — sathi salt | நவாச்சாரம். — sal ammoniac. |
| 3. | தேயு Fire | சவுட்டுப்பு — dhody earth | வெடியுப்பு. — nitre. |
| 4. | வாயு Air | வெண்காரம் — borax | துரிசு. — blue vitriol. |
| 5. | ஆகாயம் Sky | பூரம் — subchlorid of mercury. | வழலை. — efflorescence |

**பஞ்ச பூதக்கரு**, ஐந்து பூதக்கரு, அதாவது, (1) மலம்—பிருதிவி, (2) சிறுநீர்—அப்பு,(3) உதிரம்—தேயு, (4) வாய் நீர்— வாயு, (5) விந்து—ஆகாயம், the five body excretions viz. 1. feaces; 2. urine; 3. blood, 4. saliva; 5. semen; representing the five elements earth, water, fire, air and sky.

2. செவி நஞ்சு, ear wax or cerumen, உர வண்டு-fiery beetle, சவ்வாது-zibet, புனுகு

civet, கருவண்டு, canthalides, இவ்வைந்தும் பஞ்சபூத கருவாக கருதப்படுகின்றன, these five are considered to be panch boothakaru.

**பஞ்சபூஷண தைலம்,** அதிமதுரம், இலவங்கம் பட்டை, நன்னாரி, கருஞ்சீரகம், முத்தக்காசு, ஆகிய இவ்வைந்தும் சேர்த்து தயாரித்த ஓர் தலை முழுக்கு தைலம், a bathing medicated oil prepared with the following drugs; liquorice root or root of honey creeper, cinnamon bark, sarsaparilla, black cumin seeds and coray root (cyperus pertenuis root of).

**பஞ்சபூதக்குகை,** கடல் நுரை, கற்சுண்ணம் சாரம், கல்லுப்பு, சீனம், ஆகிய ஐந்து சரக்கினால் செய்த மூசை, இது வாதமுறைக்குப யோகப்படும், a crucible made out of the following five drugs viz- cutile fish (sea froth) lime stone, salammoniac, sea salt and alum. This is used for Alchemic purposes.

NOTE— According to Konganar work on Alchemy nitre and camphor are used instead of lime stone and salammoniac.

**பஞ்சபூதக்கூறு,** உடம்பினுள் அமைந்துள்ள பஞ்ச பூதத்தின் ஒவ்வொரு பகுதியிலும் பொருந்திய ஐந்துவகைப் பொருள் வகுப்புகள், ஆகவே இவ்வகுப்புகள் முழுவதற்கும் 5 x 5 அல்லது 25 பிரிவுகள் ஆகும், the 25 constitutional parts of the human body which are proportioned as five substances to each of the five lements composing the body viz:—

1. பிருதிவு வகுப்பு — 5 . மயிர், எலும்பு, தோல, சதை, நரம்பு, earth — hair, bone, skin, flesh, and nerve.
2. அப்பு வகுப்பு — 5. நீர், இரத்தம், மச்சை, வெண்ணீர், கொழுப்பு, water — lymph, blood, marrow, semon and fat.
3. தேயு வகுப்பு — 5. ஆகாரம், துஞ்சல், பயம், சோம்பல், போகம், fires— food, sleep, fear, laziness and sexuality.
4. வாயு வகுப்பு. 5. உடலோடு கிடத்தல், இருக்கை, நடத்தல்; இருத்தல், நிற்றல், air — lying, simply remaining walking, sitting and standing.
5. ஆகாய வகுப்பு -5. காமம், குரோதம், கோபம், மதம். மாச்சரியம், sky— evil passions lust' anger, desire. infatuation and envy,

**பஞ்சபூதசெந்தூரம்,** வாதவித்தைக் கடுத்த ஓர் வகை செந்தூரம், இது தங்கம், வங்கம், செம்பு, இரும்பு, நாகம், வாதம் போம், an alchemical preparation of red oxide from gold, lead, copper, iron and zinc which are added in due proportion and calcined.

**பஞ்சபூதசெயநீர்,** ஐந்து வகை நீர், அதாவது பஞ்சபூத சரக்குகளைச் கொண்டு தயாரிக்கும் செய நீர், an alchemical pungent fluid prepared from five elementary drugs.

**பஞ்சபூததாது பொருள்கள்,** சட்டைமுனி நிகண்டில் சொல்லிய ஐந்து பூதங்களையும் குறிக்கும் தாது சரக்குகள், five minerals referring the five elements. They are yellow orpiment, corrosive sublimate, yellow arsenic and vermilion.

**பஞ்சபூத நாடி,** வாத நாடி, பித்த நாடி, சிலேட்டும நாடி, குரு நாடி, பூத நாடி, vatha pulse; Potha pulse, Kapha pulse, Guru pulse. and Bhutha pulse.

**பஞ்சபூத நாடி,** See பஞ்சநாடி.

**பஞ்சபூதநிறம்,** பஞ்சபூதங்களின் வர்ணம், colour of the five elements.

| | | | |
|---|---|---|---|
| 1. | பிருதிவி—மண் | | பொன்னிறம் . |
| | earth | — | golden colour. |
| 2. | அப்பு — நீர் | | பளிங்குநிறம். |
| | water | — | crystal colour. |
| 3. | தேயு — நெருப்பு | | செம்பு நிறம் |
| | fire | — | copper colour. |
| 4. | வாயு — காற்று | | கருப்பு நிறம் |
| | air | — | black colour. |
| 5. | ஆகாயம் — விண் | | புகை நிறம். |
| | sky | — | smoke colour. |

**பஞ்சபூதபதங்கம்,** அண்டவாதம் போம்.

**பஞ்சபூத பாஷாணம்,** பஞ்சபூத பிரிவின்படி ஐந்து வகை பாஷாணங்கள், the five poisons divided according to the five elements.

| | | |
|---|---|---|
| பிருதிவி — | கெந்தி — | தாளகம் |
| earth — | sulphur — | yellow orpiment. |
| அப்பு — | வீரம் — | வீரம் |
| water — | corrosive sublimate — | corrosive sublimate |
| தேயு — | கௌரி — | இலிங்கம் |
| fire — | yellow arsenic — | cinnabar |
| வாயு — | துரிசு — | வெள்ளை |
| air — | copper sulphate — | white arsenic |
| ஆகாயம்— | இலிங்கம்— | கெந்தகம் |
| sky — | vermilion— | sulphur |

**பஞ்சபூதப்பிரிவு**, பஞ்சபூதங்களாகப் பிரிக்கப்பட்ட வகைகள், class of substances divided according to the five elements:

1. இலவணம், salts.
2. உலோகம், metals.
3. பாஷாணம், poisons.
4. உபரசம், natural substances.
5. தழை, herbs.

**பஞ்சபூதமூலம்**, see பஞ்சதன்மாத்திரை.

**பஞ்சபூத மூலி**, ஐம்பூதங்களையும் குறிக்கும் மருந்து மூலிகைகள், வெள்ளெருக்கு, மாவிலிங்கம், கொடி வேலி, புனல் முருங்கை, பீர்க்கு, the five kinds of medicinal plants referring to the five elements viz- white madar, lingam tree, ceylon lead wort, wild morunga and luffa ( ribbed gourd ).

NOTE :— பீர்க்குக்குப் பதிலாக வாலுளுவைச் சேர்க்கலாம், instead of luffa seeds of Spindle tree can be taken.

**பஞ்சபூதம்**, ஐந்து பூதங்கள், அதாவது மண், நீர், நெருப்பு, காற்று, விண், the five elements viz- earth, water, fire, air and sky.

**பஞ்சபூத வமிசம்**, உடம்பினுறுப்புகளில் தங்கியுள்ள பஞ்சபூத விவரங்கள், the five elements found in the organs of the human system viz- 1. மூக்கில் பிருதிவி - earth in nostrils; 2. நாக்கில் நீர், water in the tongue; 3. கண்ணில அக்கினி, fire in the eyes; 4. உடம்பில் வாயு, wind in the akin; 5. காதில் ஆகாயம், sky in the ears.

**பஞ்சபூதவுபரசம்**, பஞ்சபூதப் பிரிவின்படி ஐந்துவகையாகப் பிரிக்கப்பட்டுள்ள உபரசச் சரக்குகள், the natural substances divided according to the principles of five elements.

1. பிருதிவி - earth: சிலாசத்து - bitumen; அப்பிரகம் - mica; காந்தகம் - magnet; பூநாகம் - earth worm; இராசவர்த்தக்கல் - lapis lazuli.
2. அப்பு - water, சங்கு - conch; கோழி முட்டை - fowl's egg; நாகரவண்டு- cantharides; கிளிஞ்சில் - bivalve shell; நண்டு - crab, sea crab.
3. தேயு - fire: எலும்பு - bone; இந்திரகோபம் - lady's fly; மயிலிறகு - peacocks feather; நிமிளை - bismuth; வெண்கலம் - bronze or bell metal.
4. வாயு - air: சுகஸ்திரபேதி - universal solvant; கல்நார் - asbestos; கல்மதம் - bitumen; அன்னபேதி - green vitriol; உரோமம் - hair.
5. ஆகாயம் - Sky: துத்தம் - white vitriol; மலைகுது - fluid exudation from rock; சுக்கான் - lime stone; வைக்கிராந்தம் - a kind of arsenic; இரத்த பாஷாணம் - red poison.

**பஞ்சபூதவுப்பு**, பஞ்சபூத வகைப்படி ஐந்து விதவுப்புகள், the five kinds of salts according to the five elements:

1. கம்பியுப்பு, nitre.
2. பாறையுப்பு, rock salt.
3. கல்லுப்பு, sea salt.
4. இந்துப்பு, sindh salt.
5. வளையலுப்பு, glass gall — Fel vitrl.

வேறு - another version:

கம்பியுப்பு, nitre; கல்லுப்பு, sea salt; வளையலுப்பு, glass gall; சீனகாரம், alum; பூநீர், efflorессence.

**பஞ்சபூதவெழுத்து**, பஞ்சபூத வகுப்பின்படி பிரித்த மந்திர எழுத்துக்கள்:

1. பிருதிவி, அ—A ந—Na ஐயும், Iyn.
2. அப்பு, இ—I ம—Ma கிலியும், Kiliyu.
3. தேயு, உ—U சி—Si சவ்வும், Cavvu.
4. வாயு, எ—E வ—Va றீயும், Ree.
5. ஆகாயம், ஒ—O ய—Ya ஸ்ரீயும், Sree.

**பஞ்சபூதியம்**.

**பஞ்சபேதமூலி**, see பஞ்சபேத மூலி.

**பஞ்சபேதி**, ஐந்து வகை பேதி, அன்னபேதி மாங்கிஷ பேதி, சுகஸ்திர பேதி, சொர்ண பேதி அல்லது பரிச பேதி, தூம பேதி, the five kinds of solvents viz - green vitriol, flesh solvent, universal solvent, aqua regia and fume solvent.

**பஞ்சபேதமூலிகஷாயம்**,

**பஞ்சமகா பாவங்கள்**, கொலை, களவு, காமம், கள்ளுண்டல், பொய், the five capital vices viz—murder, theft, lust, intoxicating drink and lie.

NOTE— Instead of lust, some add குருநிந்தை, to speak ill of tne guru; teacher.

**பஞ்சமயகோசம்**, see பஞ்சகோசம்.

**பஞ்சமலம்**, ஆணவ மலம், சன்மம், மாயை, மாயேயம், திரோதானம், அதாவது காமம், குரோதம், லோபம், மதம், மாச்சரியம், the five kinds of evil passions of the soul viz, lust, anger, desire, infatuation anvy.

**பஞ்சமாசியம்**, குயில், Indian cuckoo — noted for its melodious voice.

**பஞ்சமாவாரை**, see ஆவாரை பஞ்சாங்கம்

**பஞ்சமித்திரம்**, நல்லெண்ணெய், தேங்காய்ப் பால், இலுப்பைப் பூச்சாறு, பசு நெய், தேன் ஆகிய இவ்வைந்தும் கலந்த கூட்டு, a mixture of five liquid substances viz, gingelly oil, cocoanut milk, juice of mowah flower, cow's ghee and honey; 2. உலோ கங்களை உருக்கும் போது அதைப் பேதிக் கச் செய்யும்படி சேர்க்கும் ஐந்துவித மித் துருச் சரக்குகள், அவை: குன்றி, நெய், வெல்லம், காரம், தேன், (in Alchemy) the five friendly drugs capable of effecting a change in metals viz—jeweller's bead, ghee, jaggery, alkaline substatance like Borax, honey, 3. உயர்ந்த செம்பு கிடைக்கவேண்டி இச்சரக்குகளை இட்டு உருக்க உபயோகப் படும், to obtain superior or high class copper these are used when melting it.

**பஞ்சமிலேவவாதம்**, சிற்றாமணக்கு, castor plant (minor) - Ricinus communis (fructibus minoribus).

**பஞ்சமுகக்குரு**,

**பஞ்சமுகச்செடி**, எலியாமணக்கு, adul oil plant—jatropha glandulifera.

**பஞ்சமுகச்செந்தூரம்**, தாரம், இலிங்கம், இர சம், கெந்தி, வீரம், ஆகிய இவ்வைந்து சரக் குகளைக் கொண்டு தயாரிக்கும் ஓர் வகைச் செந்தூரம், a red oxide prepared by process of calcination from a mixture of orpiment, vermilion, mercury, sulphur and corossive sublimate

**பஞ்சமுகச் செப்புச்சலாகை**, ஐந்து முகம் வாய்ந்த செம்பினாற் செய்த ஓர் கருவி, இது சத்திரக்கருவி 26 - ல் ஒன்று, five faced copper probe, this is one of the 26 surgical instruments.

**பஞ்சமுகருத்திரன்**, எலியாமணக்கு, See பஞ்சமுகச்செடி.

**பஞ்சமுகருத்திரி**, காட்டாமணக்கு, wild castor plant — Jatropha curcas, Croton polyandrum.

**பஞ்சமுர்தம்**, See பஞ்சாமுர்தம்.

**பஞ்சமுஷ்டிக்கஞ்சி**, துவரை, கடலை, உளு ந்து, சிறுபயறு, பச்சரிசி இவ்வைந்தும் வகைக்கு ஒருபிடி யெடுத்து, தனித்தனியே மெல்லிய சீலைகளில் முடிந்து ஒரு பாத்திரத் திற் போட்டு அதில் ஆற்றுசலம் ஊற்றி எட்டிலொரு பங்காய்க் காய்ச்சும் கஞ்சி, இது நோயாளிக்குக் கொடுப்பது, இதனால் பித்தம், இளைப்பு, கபம், வாய்வு தீரும், a kind of conjee - porridge prepared with the following five substances viz- red gram, black gram, green gram and raw rice. It is useful for emaciated patients. It cures biliousness, phlegm and wind humours. Tie each substance in a muslin cloth and put them in a vessel containing river water which is boiled down to one eighth.

**பஞ்சமுட்டிதாரகம்**, பந்தியத்திற் குதவும்படி ஐந்துவகை தானியங்களைக் கொண்டு தயா ரித்த கஞ்சி, See பஞ்சமுஷ்டிக்கஞ்சி.

**பஞ்சமுத்திரை**, சைவ தவத்தோருக்குரிய அடையாளங்கள் அல்லது சின்னங்கள், 1. உருத்திராட்சம், 2. கமண்டலம், 3. காவி வேட்டி, 4. சடைமுடி, 5. யோக தண்டு, the five distinguishing marks of the Siva mendicants viz— holy beads, (Eleocarpus), dried shell of bottle gouard. reddish brown cloth, tursted tuft of hairs of the head and yoga rod or stick. 2. யோக சாதனைக்காக ஏற்பட்ட ஐந்துவித ஆசனங் கள், the five different postures of a practising yogi.

**பஞ்சமூர்த்தி**, பிரமா, விஷ்ணு, ருத்திரன், மகேசுவரன், சதாசிவன், See பஞ்சகர்த் தாக்கள்.

**பஞ்சமூர்த்திரசம்**, அஸ்திசுரத்துக்குக் கொடுக் கப்படும் ஓர் ஆயுள்வேத மருந்து, an Ayurvedic medicine given for rickets.

**பஞ்சமூர்த்திதானம்**, உடம்பினுள் மூலாதா ரத்தில் கணபதி, இதற்கு மேலுள்ள சுவாதி, மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை ஆகிய ஐந்து ஆதாரதானங்களில் முறையே பிரம்மா, விஷ்ணு ருத்திரன், மகேசுவரன், சதாசிவன் ஆகிய ஐவரும் பஞ்சபூதாஸ்வரர் களாய் விளங்கி நான்குவகை தோற்ற வடி வங்களுக்கு ஆதாரமாக இருந்து வருகிறார் கள். Ganapathi is the God that is supposed to occupy or govern the Moolaatharam. Brhama, Vishnu, Rudran, Mahaeswaran and Sadasivan are the five Gods representing the five elements earth, water, fire, air and sky respectively who govern the five atharams situated above the moolaatharam namely :— Swathi, Manipurakam, Anagatham Vizhuthi and Aginai.

**பஞ்சமூலம்**, ஐந்துவகை மூலிகை வேர்கள், 1. சுக்கு, 2. செவ்வியம், 3. சிற்றரத்தை, 4. பேரரத்தை, 5. கண்டு பாரங்கி, roots of the following five plants, dried ginger, black pepper plant, small galangal, large galangal and knot plant; 2. சிறுபஞ்சமூலம், which see; 3. பெரும் பஞ்சமூலம், which see; 4. திரணபஞ்சமூலம், which see; 5. தசமூலத்திலிருந்து பிரித்தெடுத்த ஐந்து வகை மூலிகைகள்.

NOTE:— There seems to be some confusion in the recital of five roots as different authors chose differen roots to constitute

the five roots. Moreover the druggists or bazaar men are also seen to substitute other drugs in the place of regular ones and sell them clandestinely. But the following seem to be the proper roots :— 1. குமிழ், Gmelina arborea; 2. பூதபுட்பம், Oroxylum indicum; 3. முன்னை, Premina integrifolia; 4. பாதிரி, Stereospermum suaveolens; 5. வில்வம், Aegle marmelos (2.) the five kinds of medicinal drugs taken out from the Dasamoolam is known as சிறு பஞ்சமூலம், minor panchamoolam while the other five is known as பெருபஞ்ச மூலம், major panchamoolam.

The minor panchamoolam are the following: 1. கண்டங்கத்திரி, Solanum jacquini; 2. சிறுவழுதுணை, Solanum indicum; 3. சிறுமல்லி, Jasminum angustifolium; 4. பெருமல்லி, Jasminum undulatum; 5. சிறு நெருஞ்சி, Tribulus terrestris. The major are 1. பெருங்குமிழ், Gmelina arborea; 2. தழுதாழை, Clerodendron phlomoides; 3. வாகை, Albizzia lebbek; 4. பாதிரி, Stereospermum suaveolens; 5. வில்வம், Aegle marmelos.

பஞ்சமூலவேர், ஐந்துவித மூலிகை வேர்கள்.

1. குமிழ், Cashmere tree — Gmelina arborea.
2. பூதபுஷ்பம், Indian trumpet flower — Oroxylum indicum.
3. முன்னை, Indian headache tree — Premna integrifolia.
4. பாதிரி, Trumpet flower — Stereospermum chelonoides.
5. வில்வம், bael tree — Aegle marmelos.

பஞ்சமூலிகற்பம், கற்பத்திற்குதவும் ஐந்துவித மூலிகைகள், ஏலம், பத்திரி, தக்கோலம், சாதிக்காய், கோலவித்து, (திருமூ — 600) the five drugs useful in rejuvenation viz — cardamon, mace, cubeb pepper, nutmeg and root of long pepper.

பஞ்சமூலிகை, See பஞ்சமூலிகற்பம்.

பஞ்சமூலிக் கஷாயம், ஐந்துவகை மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கும் கஷாயம். அதாவது வெள்ளை எருக்கு, மாவிலிங்கம், சித்திரமூலம், வாலுளுவை, புனல் முருங்கை, decoction prepared with five drugs of பஞ்சப்பூதமூலி, which see.

பஞ்சமூலித்தைலம், பொடுதலை, தக்காளி, முசுமுசுக்கை, மயிற்பீலி ஆகியவிவ்வைந்து மூலிகைகளையும் சேர்த்து இறக்கிய மூழ்கும் தைலம், (தன்வந்தர் தைலம் 500), a medicated bathing oil prepared from the five drugs viz- wild long pepper tomato (country) bristly rough bryony, peacock tail. Ref. Dhanvanthri Thailam 500; 2. பொன்னு வரை, தசபலம், முதியார் கூந்தல், நெய்ச் சிட்டி, வல்லாரை ஆகவிவ்வைந்தும் சேர்த்து வடித்த தைலம், a herbacious oil prepared from the following five herbs viz- tanner's casia, thasapalam, virginian silria, ash coloured fleabane and Indian pennywort.

பஞ்சம், ஐந்து, five; 2. துளசி, holy basil — Ocimum sanctum.

பஞ்சம்பசி, சாப்பாடில்லாமல் வருந்தும் பசி; scarcity and hunger.

பஞ்சயாகம், ஐந்து வகை யாகம், கன்மயாகம், செபயாகம், ஞானயாகம், தபோயாகம், தியானயாகம், the five kinds of religious sacrificial offerings or oblations relating to actions, chanting of mantrams, wisdom, penance and contemplation.

பஞ்சரசச்சரக்குகள், ஐந்துவகை ரசம் சேர்ந்த சரக்குகள், இரசசெந்தூரம், வீரம், இலிங்கம், இரசகர்ப்பூரம், இரசகெந்தி, five mercurial compounds viz. subchloride of mercury, corrosive sublimate, virmilion, red oxide of mercury and mercury sulphur mixture.

பஞ்சரச்செடி, புளியாரை, sour sorrel — Oxalis corniculata.

பஞ்சரத்தினம், ஐந்துவகை ரத்தினங்கள், முத்து, மரகதம், மாணிக்கம், வைரம், கோமேதகம், the five kinds of gems viz- pearl, emerald, ruby, diamond and cinnamon stone or sardonyx; 2. திருவள்ளுவர் செய்த ஓர்நூல், a treatise compiled by Thiruvalluvar.

பஞ்சரம், கழுகு, eagle; 2. உடல், body; 3. செருந்தி மரம், golden champak; 4. பருத்தி, cotton; 5. இடம், place; 6. கூடு, cage.

பஞ்சரி, அவரை, bean, country bean — Dolichos albus; 2. ஒருவிசை யளவு — one viss weight.

பஞ்சரூபம், கஞ்சாகுடுக்கை, ganjah smoaking pipe; 2. பஞ்சமூர்த்திகளின் வடிவம், the shape of the five Gods.

**பஞ்சரோகணி**, முகபாகங்களில் (வாய்) வரும் ஐந்துவித ரோகங்கள், five important diseases affecting face.

**பஞ்சலட்சணம்**, நோய்களைப் பகுத்தறிவதற்காக வேண்டி ஏற்பட்ட ஐந்து கிரமங்கள் — the systems or principles adopted for diagnosing diseases.

**பஞ்சலவணம்**, ஐந்துவகை உப்புகள்—இந்துப்பு, கல்லுப்பு, கறியுப்பு, வளையலுப்பு, வெடியுப்பு, Sindh salt, rock salt, common salt, glass gall and nitre. See பஞ்சபூதவுப்பு.

**பஞ்சலவணசுண்ணம்**, பஞ்சலவணங்களைக் கொண்டு செய்யும் சுண்ணம், calcium prepared out of the five salts.

**பஞ்சலவணபற்பம்**, ஐந்துவகை உப்புகளைக் கொண்டு செய்யும் உப்பு பற்பம், இது அசிரணத்திற்குக் கொடுக்கப்படும் — the calcified powder prepared out of the five salts. It is given for indigestion.

**பஞ்சலிங்கக்கல்**, படிகம் கணநாதம், சாலிக்கிராமம், அம்பிகை, பானம் என ஐந்துவகை கல்லுகள், இவைகளினுல் லிங்கம் செய்யப்படும், the five kinds of stones from which phallus is generally made viz- 1. Padigam — Crystal quartz found in Vallum. (Tanjore;) 2. a species of ammonite of a red colour found in Sonapatri river a tributory of Ganges; 3. a fossil with impressions of ammonites found in Gandaka river (Himalayas) 4 a kind of natural stone found in Swarnamuki river near Kalastri, (Chittoor Dist;) 5. a kind of stone found in Narbada river.

NOTE— These are the five kinds of stone representing the five elements. Hence the name பஞ்சலிங்கக்கல்.

**பஞ்சலிங்கம்**, ஐந்துவித லிங்கங்கள் இவை சிவனைக் குறிக்கும், அவையாவன: பிருதிவி லிங்கம், அப்பு லிங்கம், தேயு லிங்கம், வாயு லிங்கம், ஆகாய லிங்கம், ஆகவே பஞ்சபூதங்களையும் கொண்டவை, இந்த லிங்கங்கள் ஐந்து இடங்களில் தாபிக்கப்பட்டிருக்கின்றன. the five kinds of lingam (phallus) referring to emblem of Siva and they are: Prithivi lingam; 2. Appu lingam; 3. Theyu lingam; 4. Vayu lingam; 5. Aukasa lingam. representing the five elements the following are the five places in South India where they established.

1. காஞ்சிபுரம் — Conjeevaram where there is the Prithivi lingam made of earth.
2. சம்புகேசுவரம் — Jambukeswaram (Thiruvanaikaval) near Trichy where Appulingam is established. Water exudes perpetually under it.
3. திருவண்ணுமலை — Thiruvanamalai where the Tejolingam sparkles with light.
4. காளத்தி — Kallahti where Vayu lingam is established A lamp near the lingam constantly flickers showing that the wind or air is blowing. The other lamps there do not flicker.
5. சிதம்பரம்—Chidambaram where Akasa lingam or etheral lingam is kept in the temple (சிதம்பர ரகசியம்).

**பஞ்சலோகச்சாயம்**, திப்பிலி, திப்பிலிமூலம், செவ்வியம், சுக்கு, கண்டுபாறங்கி, long pepper, root of long pepper. pepper creeper, dried ginger, and knot plant root.

**பஞ்சலோகசிந்தூரம்**, ஐந்து வகை உலோகங்களைக் கொண்டுதயாரித்த சிவப்புப் பொடி பஞ்சலோகங்களாவன, பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, காந்தம், red oxide by calcinning the five metals viz—Gold silver, copper, iron and magnet.

Note— instead of magnet lead is used by some.

**பஞ்சலோக செந்தூரம்**, see பஞ்சலோக சிந்தூரம்.

**பஞ்சலோகப்புரவி**, ஐந்தவித உலோகங்களைக் கொண்டு சீன தேசத்தாரால் உண்டாக்கிய சூட்சமான ஓர் ஆகாய விமானம், a kind of aeroplane in the shape of horse constructed by the ancient Chinese out of five metals see பஞ்சலோகம், for purposes of travelling in the aerial regions.

**பஞ்சலோகம்**, ஐந்து வகை உலோகங்கள், பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, காந்தம், five metals corresponding to the five elements viz - gold, silver, copper, magnet and iron.

NOTE — in some books instead of silver and magnet, துத்தநாகம் zinc and காரீயம் lead are substituted.

**பஞ்சவமுது**, see பஞ்சாமிர்தம்.

**பஞ்சவர்ண அந்திமல்லி**, ஐந்து வர்ணங்களையுடைய அந்திமல்லி, four o'clock plant with five coloured petals.

**பதனிழிவு**, ஊழ்ப்பு, sphacelus; decay; 2. உருசியறல், losing taste; 3. பதக்கேடு, loss of vitality.

**பதனுர்**, முசுமுசுக்கை, bristly or rough bryony — Bryonia scabra alias Mukia scabrella.

**பதனுறுவி**, அழுகண்ணி, Indian weeping plant -- Drosera indica.

**பதனி**, பதநீர், பனஞ்சாறு; sweet drink extracted from palmyra; palmyra juice. See பதநீர்.

**பதன்**, பக்குவம், see பதம்.

**பதாசி**, சாம்பற்சாரம், potash.

**பதாதிகேசம்**, see பாதாதிகேசம்.

**பதார்த்த குண சிந்தாமணி**, பதார்த்தங்களின் குணங்களைப்பற்றி விவரிக்குமோர் நூல், that branch of medical science which treats about the drugs etc employed in medicine — Materia Medica. It is a science in which are fully described the properties of drugs belonging to the animal, vegetable and mineral kingdoms and of the articles of food, essentials to the maintance of health and strength.

**பதார்த்தகுண பாடம்**, சிகிச்சையைப்பற்றிய மருந்துகளின் குணம் மூலிகை மர்மம், சரக்குகளின் குணகுணம் முதலியவைகளைப்பற்றிக் கூறும் நூல், science book relating the qualities of curative medicines secrets of herbaceous plants, properties of medicinal drugs etc.

**பதார்த்தகுணம்**, பதார்த்தத்தின் குணகுணங்கள், மருந்துகள் சேர்க்கும்போது கிரமம் அறிந்து சேர்ப்பதற்கு இது அவசியம், அப்படித் தெரியாவிட்டால் நோய் நீங்காது, நோயாளிக்கும் அபாயம் நேரிடும், action and qualities of medicinal drugs. They must be properly understood. If in compatables are added danger may occur to the patient.

**பதார்த்தக் கூட்டுமுறை**, பொருள்களைச் சேர்க்கும் வகை, method of combining various drugs to prepare medicines.

**பதார்த்தசார நூல்**, மருந்துகளின் சிகிச்சையும், ரோக நிவாரணங்களைப் பற்றியும் விவரிக்கும் வைத்திய நூல், a branch of medicine dealing with the application and operation of remedies, art of healing and scientific account of the treatment of diseases. It also treats of regulation of diet—Therapeutics.

**பதார்த்தம்**, வஸ்துவினால் ஆக்கப்பட்ட பொருள், (in Metaphysics) all substances made up of mater, material substance that which underlies all phenomena; 2. கண்களால் பார்க்கப்பட்ட வஸ்து (lit) any visible thing; 3. உடம்பு அல்லது அவயவத்திற்கு அடிப்படை அல்லது காரணமான வஸ்து; (in Anatomy) the material of which an organ or body is made up; 4. தெய்வ சக்தி பொருந்தியுள்ள வஸ்து, (in theology) that in which the divine attributes inhere or exist; 5. தின்பண்டம், eatables; 6. மூலிகை, drug; 7. கறி, vegetable; 8. போசன வஸ்து, food stuff; 9. வஸ்து, substance; 10. மூவகை மூலப்பொருள்கள், the three elementary substances; 11. உணவோடு கூடிய வஸ்து, accompainments for relish of food.

**பதி**, வேர், root; 2. நாள், day, time; 3. இடம், place; 4. குதிரை, horse; 5. உறைவிடம், abode; 6. நாற்று, seedlings, cuttings.

**பதிகம்**, பாசி, cryptoganic plants of small size floating on water such as algae, moss etc; 2. நீர்ப்பூடு, aquatic plants.

**பதிகரம்**, நீர்ப்பாசி, water moss, duckweed

**பதிச்சம்**, வாலுளுவை, spindle tree — Celastrus paniculata.

**பதிச்சியம்**, கருங்குவளை, black Indian water lily — Pontederia vaginalis.

**பதிஞானம்**, தேவ அறிவு, knowledge of God; 2. துறவி, hermit, குறிப்பு- தானே........ பிரகாசமும் தன்னையும் விளக்கி ஆன்மாவையும் விளக்கி, பரப்பிரமமாய் நின்று எல்லாப் பொருளையும் இனிது விளக்குவது, அந்த ஞானமாகிய பிரகாசத்தைப் பெற்றவர் அப்பதிப் பொருளை ஞான திருஷ்டியால் காண்பார்கள், இதையே முத்தியென்று சொல்வது, the wisdom which reveals the truth about one self, soul and other subs tances. One who possesses this faculity will see the God. This is called salvation.

**பதிதல்,** பள்ளமாதல், forming depression; 2. ஆழ்தல், deepening as sunken eyes.

**பதித்தல்,** அடுத்துதல், setting as setting false eyes or teeth; 2. வைத்தல், placing, putting; 3. பதிய வைத்தல், fixing.

**பதித்திரி,** உலைத் துருத்தி, smith's bellows.

**பதிநாராயணம்,** வாத நாராயணம், which see.

**பதியரம்,** சத்திசாரம், alkaline salt.

**பதியம்,** பாசிப்பூடு, moss. alge etc; 2. இலைப் பாசி, large leaved moss — Lemna obcordata; 3. பாசி, moss — Lemna.

**பதிரன்,** செவிடன், the deaf.

**பதில்சரக்கு,** See பதிற்சரக்கு.

**பதிவாகமூடல்,** காற்றுப் புகாத படிக்கும் ஆவி போகாதபடிக்கும் பொருந்தும்படி மூடுதல், covering with a vessel closely so that air may not enter into or vapour cannot escape out through the opening between the lids.

**பதிவிளக்கு,** சுடர் தைலம் தயாரிப்பதற்குப யோகிக்கும் விளக்கு, a lamp used in the preparation of medicated oils.

**பதிவு,** குனிவு, bent posture; 2. சாய்வு, slanting position; 3. அழுந்துகை, pressure; 4. பள்ளம், depression; 5. மனம் ஊன்றுகை, setting mind

**பதிற்சரக்கு,** ஒரு மருந்திற்குப் பதிலாக உபயோகிக்கும் அல்லது பிரயோகப்படுத்தும் அதே குணமுள்ள பிறிதொரு சரக்கு, the drug which takes the place of some other drug because of its kindered properties, substitute — Succedanum, what supplies the place of or is used for something else.

**பதினாலுவேகமறித்தல்,** அடியிற்கூறிய 14 வேகத்தைத் தடுத்தல்.

**பதினாலுவேகம்:** உடம்பில் இயற்கையாகவே ஏற்பட்டுள்ள பசி, தாகம், மலம், சலம், தும்மல், இருமல், விக்கல், கொட்டாவி, ஏப்பம், காற்று, சிரிப்பு, அழுகை, சந்தோஷம், துக்கம் முதலியவைகள். இவைகளை அடக்குவதால் பலநோய்கள் உண்டாகுமெனக் கருதப்படும், the fourteen involuntary actions — urgings — naturally attributed to the human body viz- hunger, thirst, defecation, urine, sneeze, cough, hiccup, yawning, belching, wind (passing out through anus) sleep vomitting, tears and semen. It is considered that suppression or obstruction of any of these natural urgings will boiing about diseases in the human system.

**பதினாருங்குட்டம்,** உடம்பழிந்து சீழ் கொண்டு தினவுமிகுந்து கை கால் விரல்கள் கழன்றுவிழும் ஓர்வகைப் பெருவியாதி, a kind of leprosy associated with constitutional disorder and marked by atrophy of the skin suppuration of the lesions, itching sensation, mutilation of the degits etc.

**பதினான்காம்குட்டம்,** உடம்பு வீங்கி கறுத்து, கண்ணும் மூக்கும் வெளுத்து, இருமலையுண்டாக்கு மோர்வகைக் குட்டம், a stage of leprosy characterised by swelling of the whole body, discolouration of the skin, paleness of the eyes and nose, cough etc.

**பதினி,** பதநீர், அதாவது பனைமரத்தின் பாளையினின்று ஒழுகுஞ்சாற்றை, புளிப்பேறு வண்ணம் சுண்ணும்பு தடவி மண் ருடுவையில் வாங்கும் ஓர்வகை தித்திப்பான நீர், the sweet juice serving as drink extracted from the spathes of the palmyra tree and drawn into a mud pot, the inner side of which is smeared or coated with chunam to prevent formentation. See பனஞ்சாறு, பதனி.

**பதினைந்தாங்குட்டம்,** கண் சிவந்து, உடம்பு நாற்றமெடுத்துப் புண்ணுகி, புழுக்கள் ஏற்பட்டு, கழுத்துக்கோணி, கால் விரல்கள் கழலும் ஓர்வகைக் குட்டம், a form of leprosy marked by inflammation of the eyes, strong offensive smell of the body from ulceration, microbes in the lesions distortion of the neck and mutilation of the digits.

**பதினெண்குட்டம்,** பதினெட்டுவகைக் குட்டங்கள், the eighteen kinds of skin affections.

**பதினெண் சித்தர்,** மூலவர்க்கப் பதினெட்டு சித்தர்கள். அவர்களாவார், முறையே; போகர், நந்தி, திருமூலர், புலஸ்தியர், இடைக்காடர், அகஸ்தியர், புண்ணுக்கீசர், பூனைக் கண்ணர், புலிக்கீசர், கொங்கணவர், அழுகண்ணி, பாம்பாட்டி, குதம்பை, கருரார், காலாங்கி, அகப்பேய், தேரையர், சட்டைநாதர்.

2. கக்கேயர், அதாவது புசுண்டர், கோரக்கர், போகர், மச்சமுனி, தன்வந்திரி, இராமதேவர், உரோமரிஷி சுந்தரானந்தர், சிவவாக்கியர், கடைப்பிள்ளை, புலிப்பாணி, பிலஸ்தியர், பவந்தர், கமலமுனி, கலசமுனி, பிரமரிசி, கருணாநந்தர்; the eighteen members of the original Siddhar's school viz- Bogar, Nandi, Thirumoolar, Pulasthiyar, Idaikkauder, Agastya, Punnakkisar, Poonai kannar, Pulikkeesar, Konganavar, Kaulangi, Agappei, Terayar and Sattanather.

NOTE: the names of the said eighteen member svary according to different writers who lived at different times, For full details see introduction Vol — I.

பதினெண்பாஷை, கடவுளால் ஆக்கப்பட்டது பதினெண் பாஷையெனத் தமிழர்கள் சொல்வது, அவையாவன: The Tamlians say that the following (18) eighteen languages were granted by the Diety.

1. திராவிடம், Tamil and its cognate Languages in South India.
2. அங்கம், Bengal proper.
3. வங்கம், Bengal province as a whole.
4. அருணம், Agra.
5. சீனம், North of India as China.
6. கொங்கணம், Konkon.
7. கோசலம், N. W. Provinces and Oudh
8. கௌசிகம், Cutch proper,
9. மருட்டம், Maharatta.
10. பாப்பாரம், Guzeratty.
11. சவ்வகம், Javanese.
12. மகதம், Bihar.
13. சிம்மளம், Singhalese.
14. சிந்து, Sindh.
15. சோனகம், Hindustani.
16. துளுவம், Tulu between konkan and canara.
17. கலிங்கம், தெலிங்கம், Northern circurs
18. காம்போஜம், Cumboge.

பதினெண்மூலம், பதினெட்டு வகை வேர்கள், அவையாவன: the eighteen kinds of roots viz:—

1. சித்திர மூலம், Plumbago zeylanica.
2. எருக்கு, Madar—Calotropis gigantea.
3. நெருஞ்சி, cowthorn — Tribulus terrestris.
4. முருங்கை, moringa drumstick tree—Moringa ptery gosperma.
5. முள்ளி, Indian night shade — Solanum indicum.
6. மாவிலங்கு, lingam tree — Crataeva religiosa.
7. சங்கங்குப்பி, sangu plant — Cleodendron inerme.
8. தழுதாழை, wind killer — Cleodendron phdomoides.
9. குவளை, water lily — Pontederia.
10. கண்டங்கத்திரி, yellow berried night shade — Solanum jacquini.
11. பாதிரி, trumpet flower tree — Bignonia chelanoides.
12. வில்வம், india bael tree — Aegle marmelos.
13. தூதுவளை, three lobed night shade—
14. சிற்றுமல்லி, Jasminum angustifolia.
15. சுக்கு, dried ginger — Zingiber officinalis.
16. கரந்தை, sweet basil —Ocimum basilicum.
17. பேராமல்லி, long tubed Arabian jasmine —Jasminum sambac alias J.undulatum.
18. இராகவேகமுத்து (ஆமணக்கு) castor plant — Ricinus communis.

பதினேழாங்குட்டம், உடம்பு முழுவதும் வெளுத்துக் காட்டும் வெண்குட்டம், white leprosy in which several white patches will be found in several parts of the body.

பதின்மூன்றுங் குட்டம், உடம்பு சிவந்து உதடு வீங்கி, தொண்டை கட்டி, புண்ணில் சீழ் கோத்துப் புழு நெளியும் ஓர் வகைக் குட்டம், a form of leprosy marked by copper colour of the skin, swelling of the lips affection of the larynx and the pharyx, ulceration with supuration attended with microbes.

பதுகரம், see பதுகரை.

பதுகரை, பதமுண்ணிப்பாலை.

பதுகளா, பழமுண்ணிப்பாலை, Adam's apple of the granese — Mimusops kanki.

பதுக்காயன், குள்ளன், dwarf — Short man.

பதுக்காய், உள்ளான் குருவி, snipes; 2. கூழை, shortness; 3. பருத்துக் குள்ளமாயுள்ளது, வளர்ச்சியற்றது; stunted growth.

பதுக்காரம், ஓர் வகைக்கும்மட்டி, a kind of bitter apple — Citrus colocynthis.

பதுக்கை, சிறு தூறு, small growths or off shoots of plants; 2. பாறை, rock; 3. பாலைமரம், trees of desert; 4. மாரியுள்ளான், a kind of snipe much frequenting in the rainy season, common snipe.

பதுபரணி, பெருங்குமிழ், coom teak — Gmelina arborea.

பதுமகம், தாமரை, lotus flower.

**பதுமகண்டக ரோகம்,** (பதுமம்+கண்டகம்= தாமரை+முள்) தவளைச் சொறி, பிரம்ம தண்டு சமூல சாறு. மேலே பூச இது தீரும். a kind of skin disease where the skin is like that of frog or sand paper toad skin — Phrynoderma This is cured by applying the juice of mexican poppy and administering vitamin A or codliver oil. see பத்மினி கண்டகம்.

**பதுமகாஷ்டம்,** தூணி மரத்தைப்போன்ற ஓர் வாசனைக் கட்டை. இது தென்னிந்தியா மாளவம் முதலிய இடங்களில் கிடைக்கும், a fragrant wood resembling toon grown in South India and Malwa.

**பதுமகெந்தகம்.** தாமரைக் கிழங்கு, lotus root.

**பதுமகுல்கந்து,** வெண்டாமரைப் பூவினிதழ் உலர்ந்ததைக் கொண்டு தயாரிக்கும் ஓர் யுனானிச் சர்க்கரைப் பாகுமருந்து, a confection of dried white lotus petals prepared in sugar or honey, candied white lotus prepared by Unani physicians.

**பதுமகெந்தி,** see பதுமகெந்தகம்.

**பதுமகேசரம்,** புன்னை மரம், poon tree —Alexandria laurel

**பதுமக்காழ்,** தாமரை விதை, lotus seeds.

**பதுமசாரிணி,** ஓர் தாமரை, a kind of lotus; 2. வெளித் தாமரை, sky lotus — Plantago aquatica.

**பதுமசோமாசீடம்,** தாமரைத்தாது, filaments, of lotus flower.

**பதுமதந்து,** தாமரை நாளம், the hallow stalk of lotus plant.

**பதுமநாளம்,** தாமரைக்கொடி, lotus creeper 2. தாமரைத் தண்டு அல்லது தாமரை வளையம், lotus stalk.

**பதும நிதி,** தாமரையுருவாய்க் கிடக்கும் பொன், gold ores found in oval masses.

**பதும நோய்,** ஓர் வகைக் கண்பில்லம், இதில் கண்ணின் மேலிமையைப் புரட்டிப் பார்க்க சிவப்பாய் சதை வளர்ந்திருக்கும்; சதை பில்லம், an eye disease of the eye lids marked by growth inside — Trochoma.

**பதுமபத்திரம்** தாமரையிலை, lotus leaf.

**பதுமபத்திரி,** வெளித்தாமரை, see பதுமசாரணி.

**பதுமபந்து,** சூரியன், the sun; 2. தேனீ, honey bee.

**பதுமபர்ணம்,** see பதுமபத்திரி.

**பதுமமணி,** தாமரைக்கொட்டை, lotus nut.

**பதுமமூலம்,** தாமரைக் கிழங்கு, bulbous root of lotus.

**பதுமம்,** ஈயம், lead; 2. ஓர் குளிகை, lotus pill; 3. தாமரை, lotus plant — Nilumbium speciosium; 4. பதுமாகனம், which see; 5. (in palmistry) See பதுமரேகை; 6. ஓர் வகை மாணிக்கம், a kind of ruby; 7. (in Anatomy) முடியுறுப்பைந் தினொன்று; one of the five organs of the head resembling lotus (oval) in shape; 8. (in ophthalmology) கண்ணிமையின் ரோகத்து ஓர் வகை பேதம், an eye disease of eye lid. See பதுமநோய்; 9. ஓர் வகை யோக நிலை, (in yoga philosophy) a posture in the practice of yoga.

**பதுமரசாதி,** அத்தினி சாதியாகிய பெண் சாதி நால்வகைகளி லொன்று, (in Erotic science) one of the four class i. e. last class of women divided according to their lust. see பதுமினி.

**பதுமராகம,** கெம்பு, ruby one of the nine gems.

**பதுமரேகை,** கைரேகையிலொன்று, one of the lines in the palm.

**பதுமரோகம்,** கண்ணிரப்பைக்குள் சிவப்பாய் சதை வளரும் ஓர் நோய், See பதும நோய்.

**பதுமலச்சி,** கடலை, Bengal gram.

**பதுமாதீதம்,** மூன்றெழுத்தி லொன்றாகிய சவ்வு, (in Magic) one of the three mystic letters 'Cawvic'.

**பதுமவீசம்,**
**பதுமாக்கம்,** } See பதும மணி.

**பதுமாசனம்**, ஓர் வித யோகாசனம்; See பதுமம்; 2. கோக்கோகத்தில சொல்லியுள்ள ஓர் வித காம லீலை; இதில் சம்போகத்தில் பெண் மல்லாந்தபம படுத்து தன் தொடைகளை மேல் தூக்கி முழங்காலை படித்தும் கால்களை குறுக்காகவும் வைத்திருப்பது, (in Sexual science). It is a posture in which the woman lying on her back raises her thighs upwards and flexes the knees with legs crossed horizontally in the air — Lotus posture. It falls under loose fit union.

NOTE — This should not be confounded with the sitting posture adopted by a yogi. In his yoga practice according to yoga Philosophy. Ordinarly Hindus in their religious practice adopt this attitude while in prayers.

**பதுமாடம்**, கடுகுரோகணி, black hele bore — Helleborus niger.

**பதுமாதனம்**, பதுமாசனம், which see.

**பதுமாந்தரம்**, தாமரையிதழ், petals of lotus flower.

**பதுமார்க்கம்**, கவிழ்தும்பை, stooping leucus flower — Leucus procumbens alias Nepata indica.

**பதுமார்க்கியம்**, see பதுமார்க்கம்.

**பதுமாலயம்**, சிதேவி செங்கழுநீர், purple fleabane — Vernonia anthelmintica; 2. பொன்னுங்கண்ணி, sessile plant — Illecebrum sessile.

**பதுமினி**, பெண்சாதி நால்வகையுள் முதல் சாதி; Padmini is the first of the four classes of women classified according to their lust.

NOTE: (பதுமினி) She is the woman of the first or most excellent of the four classes into which the sex is distinguished. second being சித்தினி (chittny) wounderful one endowed with various talents and excellences; the third being சங்கினி (sanghini) resembling conch is of the middle class; the fourth (அத்தினி) resembling elephant is the lowest class; 2. உத்தம சாதிப் பெண்; a chaste woman of sterling character.

**பதுமுகம்**, ஒரிருக்கை, a seat.

**பதுமை**, ஒரிதழ்த் தாமரை, one petal lotus — Iodinium suffruticosum.

**பதுராந்தமாது**, பத்மினி சாதிப் பெண் see பதுமினி.

**பதுலிகம்**, பெருங்குரும்பை, aloe — Aloe hyacinthoides; 2. பனங்கொட்டை, palmyra nut.

**பதுவை**, வலம்புரிக்காய், fruit of twisting stick — Helicteres isora.

**பதை**, கடுகு, mustard; 2, see பதைத்தல்.

**பதைத்தல்**, அவத்தைப்படல், suffering; 2. நடுங்குதல், trembling.

**பதோற்பாலம்**, வெடியுப்பு, nitre — Potassium nitrate.

**பத்தகேசரி**, கற்பூரம், camphor — Camphora officinalum.

**பத்தங்கம்**, செஞ்சந்தனம், red sandal; 2. தசாங்கம், anything consisting of ten parts or organs.

**பத்தங்கி**, சப்பங்கி, red wood tree — Caesalpinia sappan.

**பத்தசந்தம்**, போசனப்பிரியன், one who indulges in the luxuries of the table.

**பத்தசாரம்**, உணவின் சாரம், essence of food; 2. காடி நீர், fermented rice water; 3. தானிய சாரம், malt; 4. அன்னநீர், boiled rice water.

**பத்தம்**, உணவு, food, 2. உண்மை, truth as opposed to அபத்தம் false hood.

**பத்தரா**, முசுமுசுக்கை, rough bryony — Mukia scabrilla alias Bryonia scabra.

**பத்தராசு**, அந்தியந்தாரை, 4 o'clock plant which flowers at 4 p. m. — Mirabilis jalappa. see பத்திராட்சி.

**பத்தரிதருதம்**, இலவங்கப்பத்திரி, the cinnamon leaf.

**பத்தருபி**, கற்பூரம், camphor, see பத்தகேசரி.

**பத்தர்**, வெள்ளி, silver; 2. தொட்டி, tub; 3. இருவினைபந்தமுள்ள ஆன்மாக்கள், (in Philosophy) souls responsible for both virtue and vice.

**பத்தல்**, தொட்டி, tub; 2. நீர்ச்சால், water jar.

**பத்தாங்குட்டம்**, உடம்பு முழுவதும் கடுகைப் போல் வெள்ளை பற்றி நிற்கும் ஓர் குட்ட நோய், a form of leprosy marked by small white dots of the size of the mustard seeds all over the body.

**பத்தாசி**, சர்க்கரைப் பாகினுல் தயாரித்த மிட்டாய், a kind of sweet prepared from syrup.

**பத்தாமிடம்**, பூநீறு, efflorescent salt found deposited on the soil of fuller's earth.

**பத்தாம்பிறப்பு**, பத்தாவது குழந்தை, the tenth child born to a woman; 2. பத்து முறை புடம் போடுவதால் உண்டாகும் மருந்து, calx or the product derived or obtained after a mineral has been subjected to violent heat or calcination ten times over.

**பத்தாயி**, கொழும்பு சாராயம், columbo arrack; 2. ஓர்வகைக் கற்கண்டு, a kind of sugar candy; 3. ஓர்வகைக் கற்பூரம், a kind of camphor.

**பத்தாயிகற்பூரம்**, see பத்தாயி.

**பத்தாலகம்**, நரிவழுக்கை, diabetes plant — Gratiola monnieria alias Herpestes monnieria.

**பத்தானதூபம்**, தசாங்கப்பொடி, அதாவது பத்துவகைச் சரக்குகள் சேர்ந்த பொடி, any fum gation powder composed of ten drugs.

**பத்தி**, இந்திரபாஷாணம், ( in Chinese medicine ) one of the 32 kinds of arsenics.

**பத்திசூலம்**, ஓர்வகை சூலை நோய், disease attended with pin prick pain.

**பத்திடை**, ஆயிரப்பலம் கொண்ட நிறுத்தல் அளவு, weighing measure of 1000 pallams.

**பத்திநெறி**, பத்திமார்க்கம், path of devotion; 2. கடவுளிடத்துள்ள அன்பொழுக்கம், religions observences in the love of God.

**பத்திமம்**, தாமரைத்தாது, filaments of lotus flower.

**பத்தியக்கடுமை**, பத்தியக் கொடுமை, rigidity of diet.

**பத்தியக்கட்டுப்பாடு**, பத்தியபந்தம், restriction of diet N. B. diet includes actions too.

**பத்தியக்கறி**, பத்தியத்திற்கு பயன்படும் காய் கனிகள், vegetables and fruit useful for those on diet.

**பத்தியக்காரி**, சிறுகீரை, pig's greens — Amaranthus campistris.

**பத்தியக்குறைவு**, பத்திய முறைக்கு விரோதமாக பல பண்டங்களைச் சாப்பிடுவது, improper diet acting against or contrary to principles of diet non -observance of diet.

**பத்தியக்குற்றம்**, அபத்திய தோஷம், faults or disorders arising from non - observance of diet.

**பத்தியக்கேடு**, பத்தியத் தவறுதலில் ஏற்படும் நோய்கள், diseases that crop up due to non observance of diet.

**பத்தியங்காத்தல்**, பத்திய முறைப்படி யிருத்தல், adhering to the restrictions of diet, obstenious living; 2. பத்தியங் கெடாதபடி யிருத்தல், guarding against the violation of dietetic principles.

**பத்தியசிகிச்சை**, பத்தியங் காத்தலினுல் நோயைக் குணப்படுத்திக் கொள்ளும் ஓர் வைத்தியமுறை, treatment of diseases by dietetic measures only — Trophotherapy.

**பத்தியத்தவறு**, See பத்தியக்கேடு.

**பத்தியத்தாழ்வு**, See பத்தியக்குறைவு.

**பத்தியநிபந்தனை**, See பத்தியவிதி.

**பத்திய நிர்ணயம்**, பிணியின் வன்மையும் நோயாளியின் உடம்பினிலைமையும் அறிந்து பத்தியத்தை நிச்சயித்தல், determining, the regimen in diet, taking into account or consistant with the virulence of the disease and the bodily nature of the patient at that time. see பத்தியம்.

**பத்தியநூல்**, பத்தியங்காத்தலைக் கூறும் நூல், a treatice of book on dietary — Bromatology

**பத்தியபதார்த்தம்**, பத்தியத்திற்குதவும் உணவுப் பொருள்கள், article used for those on diet. see பத்தியா பத்தியம்.

**பத்தியபாகநூல்**, பத்தியவுணவைக் குறித்த நூல், book on the preparation of food for those on diet.

**பத்தியமாயிருத்தல்**, see பத்தியங்காத்தல், observance of regimen of diet.

**பத்தியபேதம்,** இரண்டு விதமான பத்திய வகைகள் அவையாவன: 1. இச்சாப்பத்தியம்; 2. கடும்பத்தியம், while taking medicine two kinds of diet are observed 1. Itchpathiyam, 2. Kadumpathiyam or salt free diet.

**பத்தியப்பெருமை,** பத்தியம் இருப்பதின் சிறப்பு அல்லது மேன்மை மருத்துவர் விதித்த பத்தியம் மாறினுல் மருந்துகளின் பயனும் வீணுயொழியும், அஃதன்றியும் உடம்பிலுள்ள தாதுக்களில் எலும்புவரை முன்னுள்ள நோய்கள் முன்னேயிலும் மிகுதியாகவே தோன்றி வருத்தும், பத்திய முறை தவருதாயின் மருந்துபயோகம் உடற்குறுதியாவதுடன் அவ்விதழ்ங்கட்கும் நன்மதிப்புண்டாம், greatness and usefulness of observing diet: if one doesnot observe the diet prescribed by the physician, the medicine will not act, not only that the disease in the body will be increased and aggravated and cause more suffering, on the other hand if strictly observed not only the disease will disappear the body gets strengthened but the physician and medicine will get good name and be held in high estimation.

" பத்தியத்தா லுண்டாகும் பண்டிதற்குப் பேராண்மை
பத்தியத்தா லுண்டாகும் பாண்டிதங்கள்—பத்தியத்தை
விட்டார் பிணிவலககள வித்தரிககும் விட்டிடலே
விட்டாற் பறக்தும் வினை "

- தேரன் வெண்பா செய்- 600.

**பத்திய முரிச்சான்,** அகத்தி, sesbane — Sesbania grandiflora.

**பத்திய முரித்தல்,** பத்திய முறை அனுசரிப்பதைவிடல், breaking off or discontinuing the observance of diet.

**பத்தியமுறிவு,** see பத்தியக்கேடு.

**பத்தியமுறை,** see பத்திய விதி, rules and principles of diet.

**பத்திய மூலிகை,** காய கற்ப சிகிச்சை காலத்தில் கற்ப மருந்து சாப்பிடும்போது உதவும் பத்திய மூலிகைகள், அவையாவன: 1. கோரக்கர்மூலி; அதாவது கஞ்சா; 2. கஞ்சாங்கோரை; 3. விடத்தாரி, 4. கருஞ்சூலி, 5. கடுக்காய்; 6. வெண்காரை, 7. எட்டி; 8. துவரை; 9. பொன்னுவிரை, 10. ஏறழிஞ்சில்; 11. கரும்பசளை; 12. குட்டித்தக்காளி, 13. கருந்துளசி, 14. பேராமுட்டி, 15. ஆடையொட்டி, 16. பாவட்டை, 17. கையாந்தகரை, 18. நெல்லி, 19. கருணைக்கிழங்கு, 20. புளியரணை; The following herbs can be used in diet by those who take medicine for rejuvenation; Indian hemp; Ocimum alba Mimosa cineria, Karunsooli, gallnut, Vensarai, ruxvomica red gram, tanners cassia, erazinil, Indian spinach (black) kuttithakalli, black Ocimum sanctum, Pavonia odarata, sand binder, pavetta indica, eclipse plant, Indian gooseberry, yam and Indian sorrel.

**பத்தியம்,** மருந்திற்கிசைந்தவுணவு, regimen or regulation of diet. see பத்திய நிர்ணயம்; 2. கடுக்காய் மரம், gall nut tree; 3. போசனம், food; 4. பூவாது காய்க்குமரம், bearing fruit without flowering e g. fig.

**பத்தியம்,** இதில் தேகபலம், மருந்து பலம், பிணியின் வன்மை, தேக நிலைமை, தேக சுபாவம், கால பலம், சீதோஷண நிலை முதலியவைகளை அனுசரித்து அதற்கு தக்கப்படி இலகு பத்தியம், கடும் பத்தியம், நிர்ணயிக்க வேண்டும், தெரியாவிடில் தெரிந்தவர்களிடமாவது கேட்டு அதன்படி நடக்க வேண்டும், the sort of diet to be observed either simple or rigourous depends on various factors such as patient's strength and nature, nature of the disease, quality of medicine, time, climate etc. If one cannot come to a conclusion he must consult experienced men and observe diet to get rid of the disease.

**பத்தியம் பிடித்தல்,** see பத்தியமாயிருத்தல்.

**பத்தியவிதி,** பத்தியம் இருக்கும்போது அனுசரிக்க வேண்டியவிதிகள் — பத்திய முறை,

1. இச்சாப்பத்திய விதி.

" உலகிலிச்சாப் பத்தியங்கள் ரேர்கூர மாங்கா
பலகினமைக காய்கொத்தவரை - கலகமுனி
மற்றவகை கூங்மாண்ட மாகடுகெள் ளெனரேது
மிந்தவகை நீத்துண்பதே "

- தேரன் தைலவர்க்கச் சருக்கம்.

இச்சாப்பத்தியம் என்பது முள்ளுள்ள பாகல், மா, கத்தரி, கொத்தவரை, வெள்ளைப் பூசனி என்னும் இவற்றின் காய்கள், அகத்திக்கீரை, மந்தவகைப் பதார்த்தங்கள், கடுகு, எள்ளு இவைகளை நீக்கியுண்பதாம், போகத்தையும் நீக்க வேண்டும் என்ற விதியுமுண்டு. See பத்தியாபத்தியம்.

2. உப்பில்லாப் பத்திய விதி:

" உப்பினு ளப்பானு ளோட்டுப்பண் பிண்போம
வப்பினு டப்பானு ளாம்பிரமேற் - றுப்பினு
டொப்பிராப் பாரதம் துற்றதை லாதிகளுக்
குப்பிராப் பத்தியமி தோர் "

- தேரன் தைலவர்க்கச் சுருக்கம்.

தனக்கு உவமையில்லாத பாதரசத்திற்கும் இது சொந்த தைலாதிகளுக்கும் உப்பில்லா பத்தியம் வைத்த நாளளவும் மறுபத்திய மிருந்து, பின்னுளில் உப்பு வறுத்துக்கூட்டி அதற்குப் பின்னுல பின்னுட்களில் முறையே ஓமப்பாலிட்டு மூழ்கி, புளி சேர்த்து, பசுநெய் தேயத்து ஸ்நாநம் செய்யவும், rules and regulations to be observed while taking medicine.

1. Itchapathiyam avoid taking bitter gourd, mango, brinjal, cluster beans, ash pumpkin, sesbania (agathi), articles that do not easily digest but cause flatulence and loss of appetite, mustard, gingelly. See பத்தியாபத்தியம்.

2. Salt free diet (Kadum pathiyam) for all medicines containing mercury salt must be avoided as long as the medicine is consumed and for the same number of days after stoping the medicine. Then bath must be taken smaring the head and body with the paste of omum and cow's milk, fried salt can be used in diet. After three days bath must be taken with cow's ghee. Then tamarind can be used in diet.

NOTE :— For medicines containing iron itchpathiyam must be observed, for those containing mercury and allied salts, salt free diet and for those containing copper tamarind free diet must be observed.

**பத்தியவுப்பு,** கட்டுப்பு, இந்துப்பை பொற்றிலையின் சாற்றினுல் இரண்டு சாமம் அரைத்து வில்லை செய்து உலர்த்தி சீலை மண் செய்து உலர்த்திப் புடமிட கட்டும். இந்த பத்திய காலங்களில் கறிவகைகளில் சிறுகப்போடவுதவும், consolidated salt used while observing diet, consoliation is done in the following manner. A sufficient quantity of Sindh salt ground with juice of Bee plant (eclipse plant) for 6 hours (six hours) is made into several discs dried luted and subjected to fire as is done in the case of calcination. These discs will be found to be a compact mass, when they can be used in the preparations of diet for patients.

**பத்தியாபத்தியம்,** நோயாளிக்கு உதவும், உதவாத பண்டங்கள்; உதவும் அல்லது ஆகும் பொருள்கள்: அவரைப்பிஞ்சு, முருங்கை பிஞ்சு, தூதுளங்காய், மணத்தக்காளி வற்றல், கண்டைக்காய் வற்றல், பொன்னுங்கண்ணி, சிறுகீரை, கருவேப்பிலை, துவரை, வயற்பயறு, சிறுபயறு, மிளகு, சீரகம், வெந்தயம், லவங்கம், லவங்கப்பட்டை, ஏலம், சாதிக்காய், சருக்கரை, பசுபால், பசுநெய், கவுதாரி, காடை, உடும்பு என்பனவாம். அல்லாமலும், பீர்க்கு, புடல், கத்தரி பிஞ்சு, மாவடு, நெல்லிக்காய், முயல், ஏரி மீன், அயிரை, தேன், சுறு, காட்டெலி, வெள்ளாடு, முளைக்கீரை, காயம், உப்பு வறுத்துக் கொட்டிவிட்டு அச்சட்டியில் முறித்தமோர், சிறுபுளி, தாம்பூலம் ( புகையிலை நிங்கிய ) இவைகளும் ஆகும் என சிலர் சொல்வார்கள்.

2. பத்தியவிலக்கான பொருள்கள் அல்லது உப பொருள்கள்:

" இலவணம் புளிகடுவெண் ணெறு முதலாக
வொவொரு குணமா மொழிவாய - நவிலிறைச்சி
கூழ்ப்பாண்ட மச்சம்பெண கோத்திரங்கொள் பிரமபத்திரி
கீழ்ப்பாகு மெத்விது சீ "

- தேரன் வெண்பா, 601.

உப்பு, புளி, கடுகு, எள் என்னுமிந் நான்கு முதலாக மருந்து முறைக்கேற்ப ஒவ்வொன்ருக நீக்கத் தகுந்தவைகளை நீக்கவும்; மேலும் இறைச்சி வகை, பூசணிக்காய், மீன்வகை பெண்போகம், வரகு, கொள்ளு, புகையிலை இவைகளை நீக்க வேண்டும். See பத்திய நிர்ணயம், பத்தியம், பத்தியவிதி.

Substances that can be used for those on diet and substances that should not be used for those on diet.

Substances that can be used are: tender kitchen garden lablab or country bean tender drumstick, fruit of three lobed night shade ( solanum trilobatum ) dried fruit of Solanum nigrum, dried fruits of ( Solanum verbacifolium ) Chundai, sessile ( Alternanthera or Illecebium sessile ) pigs green ( Amaranthus campestris ) leaves of black neem ( Garuga pinnata ), red gram ( Cajanus cajan ) seeds of Phaseolus trilobus and Phaseolus aureus, Phaseolus mungo, black pepper ( Piper nigrum ) cumin ( Cuminum cyminum ) seeds, fenugreek seeds, ( Trigonella foenum graecum ), clove ( flower bud of Jussiaea suffruticosa ) bark of cinnamon ( Cinnamomum zeylanicum ) fruit or seeds of cardamom ( Elletaria cardamomum ) nut meg ( Myristia fragrans ), cane sugar, cow's milk and ghee, Indian partridge ( Perdix orientalis ), quail ( coturnix ) and

guanu ( Sacerta iquana ). Some advocate the use of ridged gourd, snake gourd, tender brinjal and mango, Indian gooseberry, rabbit, fresh water fish as herring fish ( Cobitio thermalis ) etc, shark, wild rat goat. Ammaranthus ( young green ), asafoetida, heated butter milk, tamarind and betel ( without tobacco ).

Substances that sohuld not be used are:

Salt, tamarind, mustard and gingelly, any of them should be prohibited as warantted by the medicine taken. Further flesh, fish ash pumpkin, sexual intercourse, kodo millet ( Paspalum scrobiculatum ) horse gram ( Dolichos biflorus ) and tobacco. See பத்தியவிதி பத்தியம் and பத்திய நிர்ணயம.

**பத்திரகம்,** இலை, leaf; 2. சந்தனம், sandal; 3. இறகு, feather; 4. விழி, which see.

**பத்திரகாளி,** இராசபலை, king's tonic — Paederea foetida.

**பத்திரகாளிரசம்,** சகல சுரங்களுக்குமாக பத்திர காளியால் கூறப்பட்ட ஓர் ஆயுர்வேத மருந்து, an Ayurvedic medecine for fevers which is supposed to be told by Goddess Badirakalli.

**பத்திரகெந்தம்,** தாளிசபத்திரி, East Indian plum — Flacourtia cataphracta.

**பத்திரங்கம்,** செஞ்சந்தனம், red sandal wood — Pterocarpus santalinus.

**பத்திரசந்தனி,** நன்னாரி, Indian sarsaparilla — Hemidesmus indicus.

**பத்திரசியம்,** சந்தனம், sandal.

**பத்திரசிரேட்டம்,** வில்வம், Indian bael — Aegle murmelos.

**பத்திரசுரம்,** எழுத்தானிப்பூடு, style plant — Microrhynens sarmentosus.

**பத்திரசூசி,** முள்ளு, thorn; 2. இலைமுள், leaf thorn.

**பத்திரதருணி,** செவ்வந்தி, chemomile flower — Chrysanthemum roxburghii.

**பத்திரதாருகம்,** தேவதாரு, deccany deodar, bastard sandal — Erythroxylon monogynum.

**பத்திரதாலி,** சாதிமல்லிகை, Arabian jasmine — Jasminum sambac; 2. சாதிப்பூ, spanist jasmine — Jasminum grandiflorum.

**பத்திரதாளம்.**

**பத்திரதானம்,** இலைக்கட்டு, application of leaves on an ulcer or boil, abscess etc.

**பத்திரபதி,** சிற்றுமுட்டி, ceylon sticky mallow — Pavonica zeylanica.

**பத்திரபரணி,** பெருங்குமிழ், cashmere tree — Gmelina arborea.

**பத்திரபலா,** / **பத்திரபாலா,** } பலத்தைக் கொடுக்கு மூலிகை.

**பத்திரபாணி,** பூசிணி, ash pumpkin.

**பத்திரமஞ்சம்,** ஓர் நாரப்பூடு, a variety of saccharum — Saccharum munja.

**பத்திரமடந்தை,** நாய்ப்பாகல், buffalo carolah — Momordica hispida, alias Bryonia mysorensis.

**பத்திரமுத்தக்காசு,** கோரைக் கிழங்கு, nut grass root - tuber cyprus rotundus

**பத்திரமுஸ்தை,** நாகமுத்தக் காசு, அதாவது நீண்டகோரை, straignt sedge — Cyprus pertinus.

**பத்திரம்,** இரும்பு, iron; 2. பொன், gold; 3. இலை, leaf; 4. அழகு, beauty; 5. இறகு, feather; 6. எருது, buffalo, ox; 7. பூவிதழ், flower petal; 8. மலை, mountain; 9 மெல்லியதகடு, thin metal foil; 10. சௌக்கியம், health; 11. யானை, elephant.

**பத்திரயௌவனம்,** இலைக்கொழுந்து, tender leaf; 2. இளந்தளிர், young shoots.

**பத்திரவாகம்,** பட்சி, bird.

**பத்திரவிரியகம்,** பிரம்புசெடி, rattan plant; 2. கோணமூங்கில், straight bamboo.

**பத்திரா,** குமிழ், coomb teak — Gmelina arborea.

**பத்திராக்கியம்,** தாளிசபத்திரி, see பத்திரகெந்தம.

**பத்திராங்கம்,** ஊமத்தை, datura — Datura stramonium; 2. செஞ்சந்தனம், red sandal wood — Pterocarpus santalinus; 3. இலவங்கப்பட்டை, Cinnamonbark — Cinnamomum zeylonicum.

**பத்திராசம்,** நாவல், Jamoon tree — Eugenia jambolina.

**பத்திராசனம்,** கருங்காலி, ebony — Acacia sundra; 2. ஓர்வித யோக நிலை, one of the postures in the yoga practice.

**பத்திராசியம்,** சந்தனம், sandal wood.

**பத்திராசிரம்,** கொடிச் சண்பகம், creeper champak — Pergularia minor.

**பத்திராசிரயம்,** see பத்திராசியம்.

**பத்திராசிலியம்,** see பத்திராக்கியம்.

**பத்திராஞ்சனம்,** மை, collyrium, black paint.

**பத்திராட்சம்,** பத்திராட்சக் கொட்டை, nut of the 4 o'clock plant.

**பத்திராட்சி,** அந்திமந்தாரை, அல்லது அந்தி மல்லிகை, அதாவது சாயுங்காலத்தில் பூக்கும் செடி, இது ஓர் மூலிகைச் செடி, மஞ்சட் பூ ஓர் இனம், சிவப்பு மற்றொரு வகை, அன்றியும் சிவப்பில் மஞ்சள், வரி வாய்ந்த வேறு இனமும் உண்டு, வெள்ளைப் பூ மற்றொரு இனம், இப்படி பல உண்டு, இதன் வேர் அடியில் கிழங்கு முண்டு, இது மேற்புறம் கருப்பாயும், வளையமிட்டவரி படர்ந்துமிருக்கும், உட்புறம் சிறிய வெண்மை அல்லது சாம்பல் நிறம், முதிர்ந்த கிழங்கு கடினமாயும், இளங் கிழங்கு தோலைப் போல் மிருதுவாயு மிருக்கும், சிறிது குமட்டும் வாசனை, ருசிக்க சிறிது தித்திப்பாயும் விருவிருப்பாயுமிருக்கும், இக் கிழங்குக்கு விரேசன குணமுண்டு, இதன் இலைகள் கட்டி, கொப்புளம் இவைகளுக்கு வெதுப்பி வைத்துக் கட்டப் பழுத்துடையும், சீழ் கொள்ளாவிடின் அமுந்தி விடும், இக் கிழங்கைச் சமையல் பாகப்படி செய்து சாப்பிட மூலம் போம், evening jasmine, four o'clock plant — Mirabotis jalappa alias M. dichotoma. It is a herbecious plant with flowers of varied colours — white yellow crimson and various double colours, root underneath is cylindrical above, and tapering below, aged ones ie roots of aged plants are hard and those of young plants are of leathery consistence, root purgative like jalap, leaves used as a poultice in abscess and boils which subsides if not supurrates quickly. The root when cooked and eaten as curry proves a good remedy for piles.

**பத்திராதி,** ஆகாச கருடன், sky root — Bryonia epigea.

**பத்திராத்தியம்,** திப்பிலி மூலம், root of long pepper.

**பத்திராபகுலம்,** } **பத்திராபருவம்,** } பூசபத்திரி, an unknown plant.

**பத்திராவதி,** பெருங்குமிழ், comb teak — Gmelina arborea.

**பத்திரி,** இலை, leaf; 2. குதிரை, horse; 3. பறவை, bird; 4. சாதிப்பத்திரி, mace; 5. தாளிசபத்திரி. see பத்திராக்கியம், 6. வில்வம், bael tree — Aegle marmelos.

**பத்திரிகம்,** சீரகம், cumin seed — Cuminum cyminum.

**பத்திரிகா,** வெள்ளை நாகணம், white croton plant; 2. இருள்விடுசெடி, an unknown plant.

**பத்திரை,** நற்பசு, gentle cow; 2. அவுரி, indigo plant — Indigofera tinctoria; 3. மஞ்சள், turmeric — Curcuma longa; 4. கீரிபுரண்டான் செடி, mungoose plant — Indian snake root — Ophiorrhiza mungos.

**பத்திரோல்லாசம்,** இலைத்தளிர், tender leaf, young shoot.

**பத்தினி,** பதிவிரதை, chaste woman.

**பத்தினிமாது,** சீவகமூலி, அதாவது சீந்தில், moon creeper — Menispermum cordifolium.

**பத்தினியாள் அளித்தபிள்ளை,** பத்தினிக்கு பிறந்த குழந்தை, child born to a chaste woman.

**பத்து,** பற்று, medicinal coating.

**பத்துக்காலோன்,** நண்டு, crab ( ten legged).

**பத்துக்கால்மன்னன்,** See பத்துக்காலோன்.

**பத்துமகெந்தஞ்சம்,** See பத்மகெந்தஞ்சம்.

**பத்துநாடி,** உடம்பினுள் பிராணனுக்கு ஆதாரமாயுள்ள பத்து நாடிகள், the ten vital nerves or arteries in the body essential for existence, See தசநாடி.

**பத்துமலரிக்கேசாசம்,** தாமரைத்தாது, filaments of lotus.

**பத்துமேகம்,** சிலேட்டுமத்தால் உடம்பில் ஏற்படும் பத்துவகை மூத்திரமேக நோய்கள், அவையாவன; the ten kinds of urinary diseases arising from the aggravated phelgm humour in the system viz :—

1. உத்தமன், Uthaman.
2. வித்தகன், Vithagan.
3. மயில்நாகு, Mayilnagu.
4. சுக்கிலன், Sukilan.
5. பிராட்டி, Piratti.
6. பேயன், Peyan.
7. சித்தன், Sithan.
8. குடோரன், Kudoran.
9. அகோரன், Akoran.
10. இலவணன், Ellavanan.

**பத்துரோசனம்,** நாரத்தை, citron, bitter orange — Citrus aurantium bigaradia.

**பத்துவண்ணம்,** பத்துதடவை, tentimes; 2. பத்துநிறம், ten colours.

**பத்துவயது,** வாலை, the Gooddess Sakthi appearing like a girl of ten years

**பத்துவர்ணம்,** பத்து மாற்றுப் பொன், அதாவது தங்கம், pure gold of ten mattru or 24 carats.

**பத்துவனேஷ்டம்,** மிளகு, pepper.

**பத்தூரம்,** பொன்னுங்கணணி, sessile plant —Illecebrum sessile.

**பத்தெரு,** பத்து எரு முட்டை, ten cow dung cakes.

**பத்தெருபுடம்,** பத்து எரு முட்டையைக் கொண்டு போடும் மருந்துப்புடம், calcination effected with the aid of ten cow dung cakes.

**பத்தை,** வெங்தோன்றி, white November plant — Gloriosa suberba; 2. மூங்கிற் பத்தை, bamboo splint.

**பத்தைகட்டல்,** முறிந்த எலும்புக்கு மூங்கிற் பத்தை வைத்துக்கட்டுதல், bandaging with bamboo splints for broken or fractured bone.

**பத்தொடுஎட்டுக் கொள்ளல்,** பத்துடன் எட்டு சேர்த்தல், இது வாசிப்பழக்கத்தைக் குறிக்கிறது போலும், (உ - ம்.)

> "நேசமுடன் பத்தோடு எட்டுங்கொண்டு
> நெடுங்காலம் வாழ்ந்திருப்பான புவியின் மீதில்"

adding eight to ten, probably referring to the scientific breathing of yogis.

**பத்மகம்,** ஓர் வகைமரம், a kind of tree.

**பத்மகெந்தஞ்சம்,** தாமரைக்கிழங்கு, lotus root.

**பத்மகேசரம்,** தாமரைதாது, filaments of lotus flower.

**பத்மம்,** பத்துமம், தாமரை, lotus.

**பத்மபத்திரம்,** பொன்வண்ணச்சாலி, an unknown plant.

**பத்மாசனம்,** ஒரு யோகநிலை, a posture in yoga practice.

**பத்மாட்சம்,** தாமரைமணி, lotus beads or seeds.

**பத்மினி,** see பதுமினி; 2. 9 அல்லது 10 மாதத்திய கருப்பிண்டம், foetus of 9 or 10 months old; 3. வழலை, mystic salt of alchemist.

**பத்மினிகண்டகம்,** தாமரைச் செடியின் முட்களைப்போல் உடம்பின் தோலைப்பற்றி உண்டாகும் ஓர் நோய், தவளைச்சொறி, a skin disease marked by thickening and keratinisation of the skin, follicular and papular eruptions and degeneration of sebaceous and sweet glands toad skin — Phrynoderma See பதுமகண்டகரோகம்.

**பத்மினிசாதிப் பெண்,** நால்வகைச் சாதிப் பெண்களில் முதல்சாதி, உத்தம சாதிப் பெண், See பதுமினி.

**பத்மினிசியா,** See பத்மாட்சம்.

**பத்மினிசெயநீர்,** 9 அல்லது 10 மாதத்திய கருப்பிண்டக் கருவினின்று தயாரிக்கும் செயநீர், a pungent liquid extracted from a foetus of 9 or 10 months old.

பநசம், பலாமரம், jack tree — Artocarpus integrifolia.

பந்தகம், பந்தம், கட்டு, bandage; tie.

பந்தக்கினம், கண்டில் வெண்ணெய், which see.

பந்துசாரம், ஓர் வகை வைரம், a species of diamond.

பந்தநாடி, இழுத்துப் பிடித்தநாடி, strained pulse.

பந்தம், அழகு, beauty; 2. கட்டு, bandage; ligature; 2. பாசம், attachment to worldly objects; 4. திரட்சி, lump — mass; 5. மயிர் முடி, hair lock; 6. முடிச்சு, knot; 7. சம்பந்தம், relation: 8. பொன், gold; 9, பெருந்துத்தி, large bellows; 10. மலம், faeces; 11. மலக்கட்டு, obstruction to the free passage of stool; 12. சம்பந்தம், connection of the soul with matter; 13. ஆத்ம சம்பந்தம், spiretual bandage.

பந்தரம், காண்டக பாஷாணம், an unknown mineral poison; 2. கற்கடக பாஷாணம், one of the 32 kinds of native arsenic.

பந்தரி, பிடா லவணம், a prepared salt.

பந்தல், பிடிப்பு, catching as in வாதப்பிடிப்பு, rheumatism.

பந்தல்கத்திரி, வெள்ளரிக்காய், cucumber.

பந்தவரிசை, குதிரைப்பல் பாஷாணம், red-orpiment — Arsenicum rubrum.

பந்தற்பூ, இலுப்பைப்பூ, mowah flower — Bassia longiflora.

பந்தனம், கட்டு, tie; 2. தடை, obstruction: 3. மறியல், suppression as urine or stool; 4. விசி, ligature; 5. வளையக்கூடிய இழுவற்ற தடிப்பான சவ்வுக்கயிறு, any flexible in elastic tough fibrous band; 6. எலும்புகளை பிணைக்கும் கடினமான கயிறு போன்ற வஸ்து, a strong compact substance serving to bind one bone to another — Ligament; 7. அரைஞாண்; waist string; 8. கட்டு, fastening binding; 9, சிறைப்படுத்துகை, restricting or rest raining the actions or movements as of davils, spirits, dieties etc; 10. தினை, millet.

பந்தன், சிர்பந்த பாஷாணம், a kind of prepared arsenic.

பந்தாதி, கத்தரிக்காய், brinjal — Solanum melongena.

பந்திபந்தனு, ஆத்தி மல்லிகை, an unknown plant said to be useful in rejuvenation.

பந்திடலின்பழம், எலுமிச்சம்பழம், lime fruit — Citrus aurantifolia.

பந்தித்தல், கட்டுதல், binding; 2. ஆன்மாவை பந்தத்திற் குள்ளாக்குதல், connecting the soul with matter.

பந்தியம்கூறுவாள், கொசு, mosquito.

பந்திவிட்டோடல், நோய் நீங்கல், getting rid of the disease.

பந்துகம், ஓர்பூடு, Penta peles phoenicea.

பந்துபந்தாய்விழல், கூட்டோடே விழல், falling in lumps as round worm from the intestines.

பந்துமுஉல,

பப்படாம், see பற்பாடகம்.

பப்பரப்புளி, பெருக்கமரம், பார்ப்பாரப்புளி, brahmin tamarind — Adansonia digitata see பொந்தம்புளி.

பப்பரமுள்ளி, குத்துச்செடி, கண்டங்கத்திரி, brahmin mully, Indian night shade — Solanum indicum.

பப்பரம், பூர்வக்கூச்சரம், ancient Guzerat.

பப்பளி, See பப்பாளி.

பப்பாளிப்பால், See பப்பாளி.

பப்பளிமாசு, பம்பளிமாசு, which see.

பப்பாயி, பப்பாளி, which see.

பப்பாளி, பப்பாளி மரம், இதற்குப் பப்பாயி என்றும் பெயர்; இது 20 — 30 அடி உயரம், கிளைகள் கிடையாது, இலைகள் மாறி மாறியிருக்கும், காய்கள் நீளம்: ஐந்து பற்கள்; பூவினுட்பச்சம் ஐந்து பிரிவினை யுடையது, மஞ்சள் நிறம், காயினின்று பிசுபிசுப்பான பால் போன்ற ரசம் வரும்; காய் பழுக்கப்பழுக்க பால் குறைந்து போகும், 3 வருஷத்திற்குள் காய்க்கும், இது ஒழுங்காக வளர்ந்து பனை முதலியவை களைப் போல் மட்டைகள் விடும், இலைகள் ஏழு பிரிவினையுள்ளதால் இம்மரத்தை எளிதில் அறியலாம், இதன் இலை ஆமணக்குச் செடியின் இலையைப்போலிருப்பதால் இதற்குப் பறங்கி ஆமணக்கு என்றும் பெயர், காய் பலாக்காயைப்போல் தொங்கும், தேங்காயைப் பார்க்கிலும், பருமனுடையது, காயை மாமிசங்களை மிருதுப்படுத்துவதற்காக உபயோகப்படுத்துவார்கள், குழந்தைகளுக்கு இதன் பாலை எடுத்தும் உபயோகிக்கலாம், சிலர் ஊறுகாயும் போடுவார்கள், பால் வயிற்றுக்கிருமிகளை வெளிப்படுத்தும்.

இதன் பழம் வெயிற்காலத்தில் சாப்பிட உருசியாயிருக்கும், காயைக் கறியோடு

சமைப்பார்கள், இதைப் பச்சடியாகவும் காடி சேர்த்துச் செய்வார்கள், காய், பழம் கருவைக் கரைக்குந் தன்மையது. ஆகவே கருப்பனிகளுக்குதவாது, இதன் பாலைக் கருப்பைக்குள் நுழைத்துத் தடவலால் கருக் கரையும்; இதன் பாலை சர்க்கரையில் கலந்து கொடுக்க; குன்மம், வயிற்றுவலி, சொறிஇவைகள் போம்; பழத்தை மேகப் படை, வண்டுகடி, படர்தாமரை இவைகளிற் பூசக் குணமுண்டாகும், காயினுல் உடம்பின் வாதவலி நீங்கும், பெண்களுக்குப்பால் சுரப் புண்டாகும், சூதகச் சிக்கல் ஒழுங்குபடும், வயிற்றுக்கிருமிச் சாகும், காய்ப் பாலைத் தேனோடு கூட்டி வெந்நீரும் கலந்து சாப்பிட மலக்கிருமி வெளியாகும், பாலை தேள் கொட்டின விடத்தில் தடவ விஷ மிறங்கும், இலையை வதக்கி நரம்புவலியுள்ள இடங் களிற்போட வலி நீங்கும், காயைக் கடலைப் பருப்புடன் சேர்த்து சமைத்து சாப்பட உடம்புவலி போம், —Papaw mango Papaya — Carica papaya. The tree is 20—30 ft. high without branches, leaves alternate, fruits long, oblong, calyx five toothed, corolla divided into five segments yellowish. The fruit secretes a milky, viscid juice which gradually found decreased as fruit gets ripened. The tree is fast growing and bears fruit in three years. It grows straight and erect, leaves like palmyra are seven partite and palmate and so it can be easily recognised and resemble those of castor plant the tree is known as foreign castor oil plant. The fruit is found suspended like the jack fruit and is much larger than a cocoanut, it is used for making meat tender and soft, its fresh milk may also be given to children and the fruit itself is pickled. The riped fruit is best for eating during the summer, when green it is used by natives for curry, it is cut into small pieces and served by mixing it with vinegar salt and pepper. It is a palatable dish. It has a tendency to cause abortion and as such should not be taken pregnant woman. The milky juice of the plant is applied locally to the osuteri with the view of inducing abortion, mixed with sugar, it forms a useful remedy in cases of dyspepsia, colic, scabies etc. The milk from the fruit is anthelmintic. The fruit or the juice is applied externally for ringworm, eczema and other cutaneous affections. The green fruit is a good lactagogue and is used with great advantage in rheumatic affections and amenorrhoea. The juice of the fruit mixed with honey and a little water. when taken internally is said to kill worms in the intestines. The milky juice is an antitode to scorpion sting, the leaves gently heated and applied locally is said to cure neuralgic pain. The green fruit mixed with the pulse of bengal gram boiled and used as curry is supposed to remove bodily pain.

NOTE— This remarkable plant was first introduced from America but is now found all over India. The fruit has the extraordinary power of hastening the decay of muscular fibre, when the latter is exposed to its influence, the juice is also found to have similar properties. In a tropical climate like India, there should be at least one tree in the backyard of each house. The leaves are employed by negroes to wash linen instead of soap. Anthelmintic virtues have also been attributed to its seeds which have a pungent taste. It is beliefed to have emmenagogue.

பப்பிலி, சுருள் பட்டைக்கொடி, a creeper — Ventiligo Madras patanam.

பமரம், வண்டு, beetle.

பம்படாயம், மூன்றெழுத்திலொன்ருகிய கிலி, (in Magic) one of the three mystic syllables 'kili'.

பம்பந்திராய், திராய், இதன் இலை பிரசவ அழுக்கு மாதாந்தர உதிரச்சிக்கல், உதிரக் கட்டை வெளிப்படுத்தும், spreading chick wood — Mollinga parriflora.

பம்பம், see பம்பந்திராய்.

பம்பரத்தி, காமாதுரமுள்ளவள், a passionate woman; 2. ஆடுமாலை, one who does not stay at one place.

பம்பரை, ஓர்பலா, a kind of tree.

பம்பவெட்டி, ஓர்வகை மரம், a kind of tree.

பம்பளிமாசு, பெருநாரத்தை, batavian orange — Citrus decimana ( typica ), in taste some what resembles sweet orange, the juice of this fruit cures thirst biliousness and nausea. Their flesh clour is white or of various grades of pink.

**பம்பாய்வாத்து,** உணவுக்கு முக்கியமான ஓர் கடல்மீன், இது தட்டையாயிருக்கும், a sea fish called Bombay duck. It is flat and is much relished in food.

**பம்பாரி,** see பத்திராவதி.

**பம்பிகை,** பீர்க்கு, luffa — Luffa acutangularis.

**பம்பிளிமாசு,** பம்பளிமாசு, which see.

**பம்புதல்,** பரவுதல், spreading; 2. பரந்த வடிவு, broad figure.

**பம்பேயம்,** நொச்சி மரம்.

**பம்பை,** சுருட்டைமயிர், curly hair; 2. பறட்டைமயிர், bushy hair; 3. பறவைப் பொது, birds in common.

**பம்பைத்தலை,** பறட்டைத்தலை, which see.

**பம்மணி,** ஓர்வகைக் குதிரைநோய், a kind of disease in horse.

**பம்மவிடல்.**

**பம்மல்,** மூடுதல், covering; 2. மந்தாரம், cloudness.

**பம்மாரி,** பெருங்குமிழ், See பத்திராவதி.

**பய,** நீர்முள்ளியிலை, leaf of water thorn — Hygrophila spinosa; 2. பைய, மெல்ல, slowly.

**பயக,** முலைப்பால், breast milk.

**பயகை,**
**பயரை,** } ஓர்மரம், a tree not known.

**பயகர்ப்பதம்,**
**பயகற்பதம்,** } ஒரு கற்பமிருக்க மற்றொரு கற்பந் தரித்தல், a pregnant lady concewing again super imposed pregnancy.

**பயங்கரநோய்,** அச்சத்தை விளைவிக்கும் கொடிய நோய், dreadful disease, terrible disease.

**பயங்கரம்,** அச்சம், fear; 2. நடுக்கம், terror.

**பயசம்,** See பயசி; 2. தண்ணீர், water; 3. பால், milk; 4. முலைப்பால், breast milk; 5. பயம், fright.

**பயசா,** மான் செவிக்கள்ளி அல்லது இலைக் கள்ளி, leafy milk spurge; deer's ear spurge — Eurphorbia nerifolia.

**பயசி,** திருநாமப்பாலை, wild sarsaparilla — Smilax macrophylla alias Artanesia vulgaris.

**பயசு,** See பயசம்.

**பயசுவனி,** பாலிருள்செடி, an unknown plant.

**பயச்சுரம்,** பயத்தினால் ஏற்படும் நரம்பைப் பற்றிய சுரம், இது நடுக்கம், வியர்வை, பலவீனம், நித்திரைப் பங்கம், மயக்கம் முதலிய குணங்களைக் காட்டும், fever due to fear or shock. It is marked by shivering, perspiration, weakness, sleeplessness, giddiness etc.

**பயடுதி,** பயதி, பயசி, which see.

**பயணம்,** மரணம், death.

**பயணம் வைத்தல்,** சாதல், dying.

**பயணவிரோதி,** பூனை, cat, the crossing of which is most inauspicious for starting.

**பயதம்,** வண்டு, beetle.

**பயதிரா,** சுழல் வண்டு, whirling bettle.

**பயத்தல்,** உண்டாதல், deriving; 2. பிறப்பித்தல், begetting; 3. நிறம் வேறுபடுதல், undergoing change of colour or complexion.

**பயந்தவர்,** தாய், தந்தையர், parents.

**பயந்தாள்,** தாய், mother.

**பயப்படல்,** அஞ்சுதல், fearing, being afraid; 2. பயன்படல்.

**பயப்பு,** நிறம், colour; 2. பசப்பு, gold colour; 3. தேமல், yellow spots on the skin.

**பயம்,** பால், milk; 2. நீர், water; 3. அச்சம், fear; 4. குளம், tank; 5. சதை, nectar; 6. பழம், ripe fruit; 7. இன்பம், pleasure; 8. பயன், use.

**பயலை,** ஓர் நோய், an unknown disease.

**பயளை,** See பசலைக்கீரை; 2. சிற்றுமுட்டிவேர், root of Ceylon sticky mallow — Pavonia zeylanica.

பயறம்மை, see பயறி; 2. சிச்சிலுப்பை, whice see.

பயறி, ஓர் குருநோய், an eruption disease; 2. பயறம்மை, small pox with small vesiclour eruptions of the size of green gram.

பயறு, தானியப் பருப்பு, pulse, lentil; 2 காய் தானியம், seeds of leguminous plants; 3. பாசிப்பயிறு, green gram — Phaselous aurcus.

பயறு, பருப்பு, காய் தானியப் பொதுப்பெயர், இத்தானிய வகைகளை நெல் முதலிய தானியங்கள் பயிரிடும்போது இறுதியில் சேர்த்து பயிரிடுவார்கள், இது உடம்புக்கு வலிவைத் தரும் உணவுமன்றி ஆரோக்கியத்தைத் தரும், இதை வறுத்தாவது அவித்தாவது சாப்பிடலாம், இதன் பருப்பு கறியோடு சேர்த்துச் சமையல் செய்வதுண்டு, மாவு பலகாரம் செய்யப்படும், இது அடியிற் கண்டபடி பல விதமுண்டு, pulse grain. It is a common name for the seeds of leguminous plants It is grown generally as a subordinate crop with other cereal grains as maize, ragi etc. It is wholesome and nutritious — chief source of protein for vegetarians. It is eaten either boiled or roasted. It is broken, husk is removed, and cooked with vegetabiles as curry. It is flour is used for preparing cakes. It consists of the following varieties viz:

1. பாசிப்பயறு, green gram — Phaseolus.
2. உளுத்தம்பயறு, black gram — Phaseolus. mungo.
3. தட்டைப்பயறு, cow pea — Vigna unguiclata.
4. வயப்பயறு, a species of No. 8 dry pulse — Phaseolus trilobius.
5. காராமணிப்பயறு, same as No 3.
6. மொச்சைப்பயறு, Dolichos lablab var typicus.
7. கொள்ளுப்பயறு, horse gram — Dolichos biflorus.
8. சிறுபயறு, field gram — Phaseolus trilobus.
9. பீனிசப்பயறு,
10. மின்னிப்பயறு, same as No 13.
11. சடைப்பயறு, thickear tufted green gram—Phaseolus.
12. நாய்ப்பயறு, dog green gram
13. நரிப்பயறு, fox or jackal green gram — Phaseolus aonitifolius.
14. காட்டுப்பயறு, wild gram.
15. எலிப்பயறு,
16. துலுக்கப்பயறு, same as No 13.
17. பனிப்பயறு, dew gram as No 13.
18. கொல்லைப்பயறு, garden gram — Phaseolus trilobus.
19. கற்கடகப்பயறு,
20. நீர்ப்பயறு,
21. பிச்சிப்பயறு, same as No 16.
22. கொடிப்பயறு,

பயறுமுந்திய, கொட்டையுண்டான்.

பயற்றுங்கள்ளி, கள்ளிமரம், tursted spurge tree — Euphorbia tortilis.

பயற்றங்கன்னி, காராமணி, cow pea — Vigna unguiculata.

பயற்றங்காய், ஓர் கறிக்காய், இது மருந்தை முறிக்கும், ஆயினும் கபாதிக்கம், இரத்த வாத குன்மம், அருசி இவைகள் போம், பசி தீபன முண்டாகும், kidney bean — Dolichos tranquebaricus. It destroys the effect of medicines but is calculated to be a remedy in cases of expectoration, retained menstruation loss of appetite. 2. தட்டைப் பயறு, which see.

பயற்றங்கு, காடைக்கண்ணி வரகு, Indian oats — Panicum miliaceum.

பயற்றம்பருப்பு, ஓர் வகைப் பச்சைப்பருப்பு, split green gram.

பயற்றம்மை, See பயறம்மை.

பயற்றும்பருப்பு, ஓர் வகைப் பருப்பு, a kind of split gram.

பயனீகரி, செந்தாழை, red fragrant screw pine — Pandanus odoratissimus.

பயன், அகலம், breath; 2. நீர், water; 3. பால், milk; 4. சாறு, juice; 5 பசு, cow.

பயன்மரம், இனிய பழந்தரும் மரம், any tree yielding sweet fruit.

பயாசுமிருதா, செம்பை, common sesbane— Sesbania aegyptiaca; 2. சீமைச் செம்பை, foreign sesbane — Parkinsomia aculeata.

பயானகம், புலி, tiger; 2. அச்சம், fear.

**ப‌லையுறு**, சிற்றுமுட்டி, which see.

**ப‌லையுறுதைலம்**, சிற்றுமுட்டித் தைலம், பலா தைலம், which see.

**ப‌லோத்தமை**, கொடிமுந்திரி அல்லது திரா ட்சைப்பழம், grapes — Vitis vinifera.

**ப‌லோருகம்**, பாதிரி, trumpet flower tree — Bignonia chelonoides.

**ப‌லோற்கரம்**, நாரத்தை, bitter orange.

**ப‌லோற்பதி** / **ப‌லோற்பத்தி** } மாமரம், mango tree.

**ப‌லோனி**, பெண்குறி, female genital organ.

**ப‌ல்**, தந்தம், tooth; 2. பல, many, numberous; 3. துளசி, holy basil — Ocimum sanctum; 4. உருத்திரசடை, sweet basil Ocimum basilicum; 5. பூண்டுப்பல், a tooth of garlic; 6. மகோதரம், ascites; 7. முத்து, pearl; 8. பவளம், coral.

**ப‌ல்கட்டல்**, பழைய பல் இருந்த இடத்தில் புதிதாக ஓர் பல்லை வைத்தல், setting a new tooth in the place of old one, transplanting tooth of one person to another — Allotriodonti.

**ப‌ல்கடித்தல்**, பற்களை நறுநறுவென்று கடித்தல், grinding the teeth — Odonterism.

**ப‌ல்கல்**, பெருகுதல், increasing; multiplying.

**ப‌ல்கடுப்பு**, பல்வலி, tooth ache, pain in the tooth Odontalgia; 2. பல் எடுத்ததினால் ஏற்பட்டவலி, pain due to the extraction of the tooth — Phantom odontalgia.

**ப‌ல்காரை**, பற்களின் பின்புறத்தில் காரையைப் போல் கட்டிய கரடு, tartar on the teeth — Sordes; 2. பல்லீறுவின் சாந்து, cement of the tooth — Cementum.

**ப‌ல்காரைப்பிளவு**, பல்காரை பிளந்து உதிரல், the accumulated tartar breaks — Hard adherent sordes on the teeth cracks and fall off.

**ப‌ல்குணம்**, பலவிதமான தன்மை, different qualities.

**ப‌ல்காற்செந்து**, பல கால்களுள்ள செந்து, அட்டை முதலியன, creatures with numerous feet Myriapods.

**பல்காற்பறவை**, வண்டு, beetle.

**பல்காற்பிராணி**, பல்காற்செந்து, which see.

**பல்கிட்டுதல்**, பல் வரிசை மேல் கீழ் ஒன்று சேர்ந்து திறக்க முடியாது கெட்டியாதல்; இதற்கு அக்கிராகாரம் தூள் செய்து நாசித் துவாரத்தில் ஊத போம், jaws remain rigidly closed trismus — Lock jaw, blowing of the powder of Pellitory root into the nostril helps to open the lockjaw.

**பல்குச்சி**, பல் துலக்கவுதவும் மரக்குச்சி, ஆல், வேல், வேம்பு, நாயுருவி முதலியன, green sticks to clean the teeth. They are the sticks of babul, and margosa root of Indian burr — Achyranthus and that of banyan.

**பல்குடைச்சல்**, பல்குத்தல், neuralgia of the gum — Gingivalgia.

**பல்குறி**, பற்குறி, which see.

**பல்கூசல்**, பற்கூச்சம், great sensitiveness of the teeth — Odonthemodia; 2. புளிப்பினால் கூசுதல், teeth setting on edges — an unpleasant sensation of the teeth from contact of sour substances like tamarind, raw mango etc.

**பல்கேசரம்**, தென்னை, cocoanut tree.

**பல்கொப்புளம்**, பல்லீறு கொப்புளம், gum boil.

**பல்கோளாறு**, பல்லுக்குண்டான கெடுதியால் ஏற்படும் குற்றங்கள், உணவைச் சரிவர மெல்ல முடியாது, அதனால் செரிமானக் குறைவுண்டாகி குன்மம் ஏற்படும், சொத்தை அல்லது சீழ் கொண்ட பற்களினால் உடம் பிற்குள் விஷம் சேர்ந்து ஆரோக்கியத்தைக் கெடுக்கும்; பற்களிலும் நாவிலும் அழுக்கு சேர்ந்து வாய் நாறும், இதனால் வாதம், பிடிப்பு முதலிய மூட்டுநோய்கள் ஏற்படுவதுமன்றி இருதயத்தைத் தாக்கி, கண்ணொளியை மழுங்கச் செய்யும், இரண்டொரு சொத்தை அல்லது கெட்ட பற்களால் கழுத்து, முதுகு, மூட்டு இவ்விடங்களில் பிடிப்புண்டாகித் துன்புறுத்தும், several disorders arising from the affection of teeth. With bad or missing teeth food cannot be masticated and hence no proper digestion and this eventually leads to chronic dyspepsia. From decaying teeth poison is absorbed slowly into the system resulting in impaired health and dirty tongue. Foul mouth is due to bad teeth The poison from decaying teeth and pyorrhoea often sets up rheumatic and other joint troubles. It may even affect the heart and the eyes. One or two decaying teeth are quite enough to setup stiff neck, stiff back and stiff joints.

**பல்சிமிட்டி**, பல்லீறுவின் சாந்து, cement of the tooth — Cementum.

**பல்சிலந்தி**, பல்லீறுபுண், inflammation of the gum — Gingivitis.

**பல்சிலுசிலுப்பு**, see பல் கூச்சல்.

**பல்சீழ்**, வெட்டைச் சூட்டின் மிகுதியால் பல்லில் ஈறு கரைந்து இரத்தம் வடிந்து சீழ் உண்டாகி வாய்நாற்றந் தோன்றிப் பல்லிடுக்கில் காரையுண்டாகித் துன்புறுத்தும் ஓர் பல்நோய், Pyorrhoea. It is a dischrage of pus due to the inflammation of the gums arising from venereal heat and is marked by bleeding gums foetid smell of the breath and formation of tartar.

**பல்சுத்தி**, பல்லின் ஊத்தையை நீக்குதல், cleaning of teeth.

**பல்சொத்தை**, பல்லில் புழு துளைத்தல், worm eaten or dacayed tooth. Caries in which black holes appear in the teeth.

**பல்துலக்கல்**, பல்விளக்கல், cleaning or brushing the teeth; 2. வைத்திய முறைப்படி பல் அழுக்கு முதலியவைகளை நீக்கிச் சுத்திசெய்து கொள்ளல், the cleaning, the scraping and polishing of the teeth — Odontexesis.

**பல்தூள்**, பல்விளக்க வுபயோகிக்கும் பொடி, tooth powder for cleaning the teeth — Dentrifice.

**பல்தெரித்தல்**, பல்லொடிதல், fracture or breaking of tooth — Odontoclasis.

**பல்தேய்தல்**, நாளடைவில் பல் தேய்ந்து போதல், see பல்தேய்வு.

**பல்தேய்த்தல்**, see பல்துலக்கல்.

**பல்தேய்வு**, பல் நாளாவட்டத்தில் தேய்ந்து சிறுத்துப் போதல், attrition or wearing away of the teeth and consequent dimunition in size — Odontotripsis.

**பல்தைத்துவம்**, ஆதொண்டை, which see.

**பல்நெருடல்** பல்லை நருநருவென்று சப்தமுறக் கடித்தல், chattering of teeth — Odonterism.

**பல்நோய்**, பொதுவாக பல்லுக்கேற்படும் நோய், any disease of the tooth — Odontopathy. This is of 23 varieties; 2. பற்பல நோய்கள், various diseases; 3. பல்வலி, tooth ache.

**பல்நோவு**, பல்வலி, tooth ache.

**பல்பக்கல்**, மாக்கல், flour stone, pot stone, see பற்பகல். It is a sort of soap stone out of which, cup kitchen untensils ( மாச்சட்டி ) are generally made.

**பல்பசை**, tooth paste.

**பல்பம்**, பல்பக்கல், which see.

**பல்பல**, பற்பல, several numerous, many.

**பல்பாசி**, ஊத்தை, dirt of the teeth — Sordes.

**பல்புழு**, பல்லிறிலுண்டாகும் புழு, dental germ or microbe.

**பல்பூச்சி**, See பல்புழு.

**பல்மொடி**, பல்தூள், tooth powder.

**பல்மாணிக்கம்**, பல்மினுக்கி, which see.

**பல்மினுக்கி**, ஒருவகை செடி, Myristica baurifolia.

**பல்முரசு**, See தந்தவேட்டம், inflammation of the dental socket. This affects the root of the tooth due to vititotion of blood.

**பல்முளைவு**, See பல்முளைத்தல்.

**பல்முளைத்தல்**, பல்லுண்டாதல், பல் முளைக்கும் இழுப்பு, cutting of the teeth in infancy — Dentition.

**பல்ரோகம்**, பல்நோய் ( 23 வகை ), which see.

**பல்லகண்ணி**, ஒருவகைமரம், child's amulet tree — Hemicyclie vemista.

**பல்லகம்**, கரடி, bear.

**பல்லகி**, See பல்லாதகி.

**பல்லசைவு,** பல்லாட்டம், shaking of the tooth; 2. பல்லினின்று சீழ் இரத்தம் வருவதால் ஏற்படும் பல்லாட்டம், இதற்கு ஆலம்பாலும் காட்டாமணுக்குப்பாலும் பூசி வரவும், due to discharge of blood and pus as in pyorrhoea, the tooth becomes shaky; milk of banyan tree and milk of physic nut plant (Jatropha curcus) can be applied.

**பல்லடிகி,** செம்மரம், அழிஞ்சில் மரம், red wood — Alangium decapitalum.

**பல்லடிசவ்வு,** பல்லின் அடிபாகத்திலிருக்கும் சவ்வு.

**பல்லடிப்புண்,** பல்லிறிலுண்டாகும் புண், gangrenous inflammation of the gum. It is a disease in which the teeth become loose and the gums, palate and lips become rotten.

**பல்லம்,** கரடி, bear; 2. சேராங் மரம், marking nut tree—Semicarpus anacordium; 3. செம்மரம், see பல்லடிகி, 4. சரகண்ட பாஷாணம், a kind of arsenic.

**பல்லரணை, பல்லரனை,** ஓர் வகைப் பல்நோய், gum abscess. It is a disease in which the roots of 2 or 3 teeth are affected at a time and is marked by violent pain and swelling. see தந்தபிரஹானம் and தந்த வித்திரதி.

**பல்லரம்,** பல்லை சுரண்டுவதற்கு பயன்படும் கருவி — surgeons's file for rubbing or scraping the teeth — xyster, raspatory.

**பல்லவத்தி,** அசோக மரம், asoka tree — Uvaria longifolia.

**பல்லவத்திரு,** see பல்லவத்தி.

**பல்லவபரணி,** புளிப்பிலந்தை, sour jujuba.

**பல்லவம்,** இலை leaf; 2. தளிர், sprout or shoot; 3. புளியம்பிரண்டை, sour adamant creeper — Vitex genus.

**பல்லவாதம்,** மான், deer.

**பல்லவை,** பல பொருள்கள், different things.

**பல்லழகி,** அழகிய பல்லையுடையவள், a woman having a fine set of teeth; 2. சாதிக்காய், nut meg so called from its lending beauty to the teeth; 3. வெற்றிலை, betel leaf.

**பல்லழுக்கு,** பல்ஊத்தை, tooth dirt, dirt collecting on the teeth — Sordes.

**பல்லாடகம், பல்லாடம்,** சேராங், see பல்லம்.

**பல்லாட்டம்,** பல்லசைவு, which see

**பல்லாண்டு,** பலவருடம், many or several years.

**பல்லாதகம்,** see பல்லாதி.

**பல்லாதகி,** see பல்லாதி.

**பல்லாதகிகிருதம்,** சேராங்கொட்டை நெய், a medicinal ghee the chief ingrident of which is marking nut.

**பல்லாதாரினி,** நாறுகரந்தை, which see.

**பல்லாத்தி, பல்லாதி,** சேராங், see பல்லம்.

**பல்லாயிரக் கணக்கு,** பெருவாரி, epidemic.

**பல்லாவு,** புனல் முருங்கை, Indian coral plant.

**பல்லி,** வீட்டுப்பல்லி, இது எல்லோருக்கும் தெரிந்த பிராணி, அகன்ற தலை, ஆழ்ந்த கண், நீண்ட வால் உள்ளது, வால் துண்டித்து விழக்கூடியது, நான்கு கால், இப் பல்லி சொல்லுக்குப் பலன் கூறும் ஓர் நூலும் உண்டு, குஷ்டத்திற்கு இதை உபயோகிப்பதுண்டு, house lizard, wall lizard—Geckotidae sawvia. It is a well known creature frequenting mostly houses. It is a reptile with broad head, depressed eyes, tapering tail which easily breaks off and easily renewed, has four legs. A small book known as lizard science (பல்லி சாஸ்திரம்) contains information regarding its chirping and it is ascertained by formula whether the omen is auspicious or not. Its fall on the various parts of the body implies various consequences or happenings eg. its fall on the crown of the head forebodes or predicts death. This is also contained in the book. As an electuary it is used for leprous affections.

பல்லிகா, see பல்லாதி.

பல்லிகி, see பல்லாதி.

பல்லிகை, பல்லிக்கை, } பல்லி, lizard; 2. சேங்கொட்டை, which see.

பல்லிக்காற்பூடு, பல்லிக்காலைப் போன்றபூடு, lizard foot — Sauropus albicans.

பல்லிசிவு, ஓர் பல்நோய், tooth ache — Dentalgia.

பல்லிடுக்கு, பற்சந்து, tooth gap, interstices between the teeth aerola of the teeth.

பல்லிடை, பல்லின் இடைவழி, betwixt the teeth; 2. இரண்டு பற்களின் இடையேயுள்ள வெளி, the space between the two contiguous teeth — Interdentium.

பல்லிப்பூடு, கொல்லைப்பல்லி, இதனால் பாம்பு விஷம் போம், பாஷாணம் தாளகம் சுத்தியாகும், lizard plant — Buchnara asiatica. It purifies arsenic, and orpiment, and is useful in snake poisoning. c.f நின்றிடம் தீய்ஞ்சான்.

பல்லிப்பூண்டு, பல்லிப்பூடு, which see.

பல்லியம், தீபக மருந்து, tonic which increase the appetite; 2. எலும்பு, bone.

பல்லிரத்தம், பற்களினின்று ஒழுகும் இரத்தம், bleeding from gums.

பல்லிறுகல், பல் அசையாது கெட்டிப்படல் teeth getting firm.

பல்லிருள், இரும்பிலி, cochin china ebony tree — Maba buxifolia.

பல்லில்லா,

பல்லிறுக்கி, வெண்குந்திரிக் கற்பம், Powder of purified white dammer; 2. முத்துபற்பம், calcined pearl which hardens the teeth; 3. மலைவேம்பு, bastard cedar — Chukrussia tabularis.

பல்லினர், சதுரக்கள்ளி, square spurge — Euphorbia antiquorum.

பல்வினர்குழவி, மலைப்பச்சை, painter's gamboge — Garcinia xanthochymus.

பல்லினுர், கிலுகிலுப்பை, rattle wort — Crotolaria laburnifolia.

பல்லினுர்மரம் ஆத்திமரம், common mountain ebony — Bauhinia racemosa.

பல்லினுற்குழவி, சவுரிக்கொடி, which see.

பல்லீறு, பல்லிடையின் முரசு, gum of the teeth, termination of the teeth — Gingiva.

பல்லீறுஎரிச்சல், பல்லினீறு எரிவுகண்டு, சீழொழுகிப் பல்விழும், a disease of the teeth marked by burning sensation of the gums, sappuralion and falling of the teeth.

பல்லீறுப்புண், பல்லீறில் காணும் அழற்சியாலேற்பட்ட புண், inflammation of the gum — Gingivitis, Odontitis; 2 பல்லீறில் காணும் கொப்புளம், gum boil.

பல்லு, பல், which see.

பல்லுகம், கரடி, bear; 2. பெருவாகை, big sirissa — Albizzia lebbek.

பல்லுக்கடித்தல், பற்கடித்தல், grawing the teeth.

பல்லுக்கடுங்கூத்தன், துரிசு, blue vitriol.

பல்லுக்கழுகு, வெற்றிலை, betel leaf.

பல்லுக்கழலை, பற்கழலை, a tumour composed of tooth substance — Odontinoid.

பல்லுக்கிட்டுதல், அலகு பூட்டுதல், lock jaw.

பல்லுக்கிளிஞ்சில், ஓர் கிளிஞ்சில், இது பல்லைப் போலுருவமுடையதா யிருப்பதாலிப் பெயர், dentate shell.

பல்லுக்குத்தல், பல்வலி, shooting or acute pain in the teeth — Toothache; 2. பற்சந்திலிருக்கும் அழுக்கைக் குத்தியெடுத்தல், picking the teeth for removing any substance sticking.

பல்லுக்குத்தி, பல்குத்தும்கருவி, tooth picker.

பல்லுக்குரிய, பல்சம்பந்தமான, pertaining to teeth.

பல்லுக்குவெளி, பாக்கு, arecanut.

பல்லுக்கூச்சம், see பல்கூச்சம்.

பல்லுக்கொரிக்கல், பல் ஓசைபட அரைத்தல், grinding or chattering the teeth.

பல்லுங்கம், மூங்கில், bamboo tree.

பல்லடிச்சதை, பல்லுக்கும் தாடை உட்குழிக்கும் இடையேயுள்ள சவ்வு சதைபாகம், membrane or tissue which occupies the space between the root of the tooth and the alveolus of the jaw.

பல்லுத்தீட்டுதல், see பல் விளக்கல்.

பல்லுநோவு, see பல்நோய்.

பல்லுவிளக்குதல், பல்லை மினுக்குதல், clearing the teeth.

பல்லுஊச்சல், பல்லீறில் ஏற்படும் குத்தல் நோய், neuralgia of the gums — Gingivalgia.

பல்லுளுத்தல், பல் பொடி பொடியாக உதிர்தல், necrosis of the tooth as a consequence of vitiated blood and bile humour. The tooth turns dark in colour.

பல்லுஊவு, see பல்லுஊச்சல்.

பல்லுறச்சி, சாதிக்காய், nutmeg.

பல்லுறுசெங்கஊ, குதிரைப்பல் பாஷாணம், red orpiment or realgar — Arsenicum rubrum.

பல்லூகம், கரடி, bear; 2. குரங்கு, monkey.

பல்லூத்தை, பல்லழுக்கு, incrustation that forms in the neglected teeth; 2. பற்பாசி, Scrumal tartar, See பற்காரை.

பல்லூழி, பலவருடம், many or several years — several ages.

பல்லூற்றை, see பல்லூத்தை.

பல்லூன்றல், உதட்டில் பல் பதியும்படி மெல்லக் கடித்தல், biting the lip of the loved, see பல்வடுவழுத்தல்.

பல்வடுவழுத்தல், உதட்டின் மேல்பல் பதியும்படி மெல்லெனக் கடிக்கும் ஓர் காம விளையாட்டு, this is a love play wherein one sucks and slightly bites the lip of the other.

பல்வதிந்தன், பஞ்சொட்டு, tooth pulp.

பல்வலி, பல்நோய், which see.

பல்வலாவாசம், ஆமை, tortoise, turtle.

பல்வழுக்கை, see பல்லடிசவ்வு; 2. See பல்லடிச்சதை.

பல்வாதம், பல்லின் வாதம், tooth pain — Odontodynia; 2. பல்லின் வாதவலி, a disease in which the teeth seem as if being cleft as under with a violent pain. See பல்லாட்டம்.

பல்விழல், பல்லறல், sheding of the teeth the fall or loss of tooth — Dedentitism.

பல்விளக்கல், பல்லைத் தேய்த்து சுத்தி செய்தல், cleansing the teeth.

பல்விளக்கி, பற்குச்சி, tooth twig, tooth brush; 2. செந்நாயுருவி, which see.

பல்விளக்கு மூலிகை, பல் துலக்கவுதவும், ஆல், வேல், பூலா, வேம்பு, நாயுருவி முதலியவற்றின் குச்சிகள், the green twigs of various plants — Banian, babul, poolahl margosa, Indian burr — for brushing and cleaning the teeth.

பல்வைரம், பல்லின் மேல் அமைந்துள்ள பளபளப்பான பளிங்கு போன்ற வெண்ணிற வஸ்து, the white hard substance covering the crown of the tooth — enamel of the tooth.

பல்வேர், பல்லடி, root of the tooth.

பவணம், கழுகு, eagle.

பவணை, see பவணம்.

பவமானம், }
பவமானன், } தீ, fire; 2. வாயு, wind.

பவம், காற்று, wind; 2. பிறப்பு, birth.

பவர், கொடி, creeper.

பவலம், சாதி லிங்கம், vermilion.

பவலாயம், ஐகாரம், the mystic letter 'I'(ஐ)

பவழக்காலி, see பவளக்காலி.

பவழங்கசாதி, அஸ்தசுக சாதியாகிய ஆண் சாதி நான்கு வகையில் ஒன்று, one of the four classes of men divided according to lust.

பவழநிறச்சாத்தி, நாகதாளி; which see.

பவழபற்பம், பற்பமாக்கிய பவழம், calcined coral. It is soaked for one night in the juice of lime fruit, then washed. Then covered with the paste of the leaves of jujuba, luted and calcined as usual. It cures, cough, dysentery etc. see பவளம்.

பவழம், see பவளம், coral.

பவள அகத்தி, செவ்வகத்தி, sesbania grandiflora (rubrm).

பவளக்கல், கானகக்கல், a stone with black dors.

பவளக்காலி, சிவந்த காலுள்ள ஓர் பறவை, a kind of bird with red legs — Erythropess longipus corollanius; 2. பேருமரி, coral paint — Salicornia brachiata.

பவளக்காய் மல்லிகை. see பவள மல்லிகை.

பவளக் குண்டு, கடுக்காய், gall nut; 2. சாதிக் காய். nut meg.

பவளக் குருந்தம், பவளக்குருந்து, } செங்குருந்து, Atlantia genus.

பவளக்குறிஞ்சா, செந்நிறக்குறிஞ்சா. unarmed orange nail dye — Crossandra undulaefolia.

பவளக்குறிஞ்சி, சிறுப்பு செங்குறிஞ்சி' Indian lilac — Lagerstroemia indica (typica).

பவளக்குற்றம், பவளத்திலுள்ள குற்றம் — blemishes in the coral.

பவளக்குன்றி, குண்டுமணி, இதனுல் வெள்ளை, இரத்த பித்தம், சயம், கரப்பான் போம், jewelle'r bead.

பவளக்கொடி, கொடிப்பவளம்; coral creeper.

பவளசயிண்டு, செவ்விண்டு, a red variety of இண்டு, Mimosa genus.

பவளச் சத்து, இரசத்தை பொன்முக்கு மருந்து. (in Alchemy) essence or active principle in coral, it is capable of transmuting mercury into gold.

பவளச் சர்க்கரைவள்ளி, சிவப்பு சர்க்கரை வள்ளி, red variety of sweet potato — Ipemoea balatas (ruburm).

பவளச்சேர்க்கை, முருங்கைக்கல். coral polyps or other zoophytes — Coralline.

பவளச்சோளம், சிவப்புச் சோளம். red maize.

பவளத்தீவு, பவளக்கொடி படர்ந்த தீவுகள், islands as Laccadives and Maldives containing low coral reefs — Atoll.

பவளத்துத்தி, சிவப்புத் துத்தி, ஓர் கற்ப மூலி, red and pink abutilon — A rejuvenating drug — Abutilon indicum.

பவளத்துவம், புனல் முருங்கை, Indian coral tree — Erythrina indica.

பவளநிறம், பவளத்தின் 6 வகை நிறம், six different colours or coral.

பவளநெய்ச்சிட்டி, சிவப்பு நெய்ச் சிட்டி, a red variety of நெய்ச் சிட்டி, which see.

பவளபாதத்தோன், சவர்க்காரம், soap.

பவளப்பற்பம், see பவழப்பற்பம், calcined oxide of coral.

பவளப்பிச்சி, see பவளக்கொடி; 2. பவள மல்லிகை; coral jasmine — Nyctanthes arbortristis.

பவளப்புற்றுப்பாஷாணம், இது ஓர் வைப்புச் சரக்கு, மச்சமுனி -800ல், சொல்லியபடி கெந்தி, மனோசிலே, அரிதாரம், பச்சை, ரசம், நாகம், வீரம், லிங்கம், நவாச்சாரம் இவை களை நன்ருய்ப் பொடித்துக் காசிக்குப்பியில் அடைத்து முறைப்படி மணல்பரப்பிய தாழி யில் வைத்து மவுனக்கடுவாய் எரித்திடு, குளிர்ந்தபின் உடைத்துப் பார்க்கப் பவளம் போலிருக்கும், it is artificially prepared as per the process laid out in Machamuni 800. It is as red as coral.

பவளப்பூச்சி, ஓர் வகை கடல் மீன், a kind of sea fish.

**பவளப்பூண்டு,** see பவளப் பூலா, இது கீழ்க் கடலோரங்களில் காணப்படும், பழம் சிவப்பு, பூ சிறிது பச்சை நிறம், இதன் இலையைப் பிளவை, கழலை இவைகளுக்கு விளக்கெண்ணெயில் வதக்கிக்கட்ட உபயோகப்படும், இதன் வேர்ப்பட்டையுடன் திப்பிலி இஞ்சி சேர்த்துக் கஷாயமிட்டு பலவிருத்தி மருந்தாக கொள்ளலாம்; காய்ந்த இலையை புகையிலைச் சுருட்டு மாதிரி உபயோகிக்க சயித்தியக் கட்டு குணமாகும், அழகுக்காக இச் செடியை வேலிகளில் வைத்துப் பயிராக்கப்படும், red poolah, poolah coral tree--Breynia rhamnoides alias Phyllanthus rhamnoides. The plant is common in coromandal coast. Fruit bright red flowers small greenish; leaves are used to reduce tumours especially, carbuncles. They are applied warm with castor oil. Decoction of the bark of the root mixed with long pepper and ginger is drunk as a tonic. Dried leaves smoked like tobacco relieves swollen tonsils. Planted for ornamental hedges.

**பவளப்பூல்,** ஒருவகைச் செம்பூலா, See பவளப்பூலா.

**பவளமல்லிகை,** பவளக்கால் மல்லிகை, இச் செடி அல்லது மரம் எல்லாத் தோட்டங்களிலும் காணலாம், மரம் 15-20 அடி உயரம், இலைகள் சொரசொரப்பு, இதழ்கள் வெண்மை, சிறுசிறு சிவப்பு காம்பு, பூ வாசனையுள்ளது, மாலையில் பூத்துக் காலையில் உதிர்ந்துவிடும், இதன் இலை தலைப் பிடிப்பு, சுரம் இவைகளுக்கும், இலைக்கஷாயம் வாத நோய்க்கும் கொடுக்கலாம், இலை ரசத்தைக் குழந்தைகளுக்குக் கொடுக்கப் பேதியாகும், இதன் பட்டையை வெற்றிலை பாக்கோடு சேர்த்து மெல்ல மார்பிலுள்ள கபத்தைக் கரைக்கும், இதன் விதையை சூரணித்து, தலையில் உண்டாகும் சொறி, சிரங்குக்குப் போடவுதவும், இலைக் கொழுந்துடன் இஞ்சியைச் சேர்த்து அரைத்து உட்கொள்ள தீராத முறைக் காய்ச்சல் தீரும், coral jasmine — Nyetanthes arbor tristis — tree of sadness, weeping Nyetanthes. Tree is 15-20 ft. high found common in all gardens. Leaves scabrous, short petioled, flowers very fragrant, petals white, stalk red (hence the name பவளக்கால் மல்லிகை), blossoms in the evenings and drops in the mornings. Leaves are useful in gout and fever, decoction of leaves is given in rheumatic complaints, juice of the leaves is given to children as a purgative. The bark mixed with betel and nut and chewed as usual is said to remove the phlegm of the chest, powdered seeds form an useful remedy in scabies and scurfs in the head Young leaves mixed with ginger and made into a bolus is an efficacious remedy in chronic alternative fevers.

**பவளமனச்சிலை,**<br>**பவளமனோசிலை,** } இலிங்கம், vermilion; 2. உலாந்தா லிங்கம், Holland vermilion — Cinnabar — Red mercuric sulphide.

**பவளமுத்து,** சிவப்புமுத்து, pink pearl.

**பவளமூக்கரைச்சாரணை,** சிவப்பு மூக்கரைச் சாரணை, red shaurany — Orygia deccumbens.

**பவளமொத்த,** பவளம்போன்ற, coralline, resembling coral — Coralloid.

**பவளம்,** நவரத்தினங்களி லொன்று பவளம், இதில் சுண்ணாம்பு சத்து சேர்ந்திருக்கும், சாதாரணமாய்ச் சமுத்திரத்தின் அடியில் வசிக்கும் சில பிராணிகளின் எலும்புச் சத்துகள் சதா சேர்ந்து கொண்டிருப்பதால் அப்பிராணிகளுக்கு அது வசிக்குமிடமாகும், இது பார்ப்பதற்குச் செடிகள் போல் காணப்படும், இதற்குத்தான் பவளக்கொடி என்று சொல்வது, இது ஜப்பான், சுமித்திரா, மால்டிவ் தீவுகளில் கடலோரங்களில் செழுமையாய் வளரும், நமது தேசத்தில் ஆபரணமாக அணிந்து கொள்வார்கள், சில பூச்சி அரித்த பவளங்களை மிக்க சிலாக்கியமாகக் கொண்டாடுவார்கள், ஏனெனில் அதில் தெய்வ சக்தியுண்டு என்ற அபிப்பிராயந் தான், ஐரோப்பிய தேசத்தில் மருந்தில் உபயோகப் படுத்துவார்கள், தமிழ்நாட்டு வைத்தியர்கள் இதினின்று பற்பம் செந்தூரம் செய்து நீரழிவு, மூலக்கிராணி, இருமல், கபம், அரோசிகம், நாவறட்சி இவைகளுக்குக் கொடுப்பார்கள், தேனில் கொடுக்க சுரம், குளிர், வயிற்றுளைவு, கண்புகைச்சல் இவைகள்போம், coral — Corallium. It is a hard calcareous substance found in the ocean secreted by *marine polyps* for their common support and habitation. The stony skeleton secreted by them continuously grow like plants which are called coral reefs. It is commonly found near the

island of Japan, Sumatra, Maldives etc. It is used as personal ornaments as necklace, bracelets rings etc. It is of one of the nine gems. Indians have a preference to the worm eaten beads from a belief that Gods dwell in the recesses. In Europe it is used in medicine; Vaidyans in Tamilnad calcify it and use it in cases of diabetes, bleeding piles, consumption etc., red calcined powder is used for cough, phlegm, nausea, parched tongue etc. With honey it is given for fever, cold dullness of vision. see பவழபற்பம்.

**பவளம்,** பூவழலை, menstrual blood.

**பவளவகத்தி,** செவ்வகத்தி, west india sesbane — Sesbania grandiflora (coccinea)

**பவளவங்கசெந்தூரம்,** பவழமும் வங்கமும் சேர்ந்து செய்யப்பட்ட செந்தூரம், calcined red of coral and tin.

**பவளவங்கார வாச்சி,** ஓர் மைக்கீரை, a kind of pot herb used as edible greens — Sesudium portulacastrum.

**பவளவல்லி,** செவ்வல்லி, red Indian water-lily — Nymphae odorata.

**பவளவறுகு,** சுவாசத்தைப் போக்கும் செவ்வறுகு, a species of red couch grass used for respiratory disorders.

**பவளவாருதி,** சிறுசண்பகம், cananga flower tree — Canangium odaratum.

**பவனம்,** காற்று, air; wind; 2. பூமி, earth; 3. பூனை, cat; 4. காடு, forest; 5. பனைவாய், anus; 6. பொழுது, time; 7. பேரரத்தை, greater galangal — Alpinia galanga (major).

**பவனதுமாப்பூடு,** திமுறிப்பூடு, an unknown plant.

**பவனவாசல்,** ஆசனவாய், anal orifice.

**பவனவாயு,** கீழ் நோக்கும் வாயு, அபான வாயு, wind from anus.

**பவனவெளிச்செவி,** சிவப்பு எலிச்செவிக் கீரை, a red variety of, rat ear plant.

**பவனன்,** காற்று, air, wind.

**பவனுசனம், பவனுசனன்,** பாம்பு snake; 2. வாயு வால் சீவிப்பவை, that which feed on air.

**பவனுதமாது,** பசளை. spinach — Portulaca quadrifolia.

**பவனுதி,** பசளைக்கொடி, creeper of Indian spinach.

**பவனிவாருடம்,** தேவாங்கு, Indian sloth, slendor oris — Lemur.

**பவனீதம்,** தண்ணீர், water.

**பவனேந்திரியன்,** இந்திரிய சத்து இல்லாதவன், one whose vital seed has been dried up or who is bereft from birth of vital power.

**பவாசிவித்து,** ஓர் மரத்தின் விதை, the seed of an unknown tree used for leucoderma; 2, கார்போகவரிசி; scurfy pea, psoralla— Psoralea corylifolia.

**பவி,** நீர், water; 2. தண்ணீர், cold water.

**பவிதம்,** மிளகு, black pepper; 2. சுத்தம் cleanliness.

**பவித்திரகம்,** அத்திமரம், fig tree — Ficus indicus; 2. அரசமரம், peepul tree — Ficus religiosa; 3. நெய், ghee; 4. தர்ப்பை; sacrifical grass — Cynodon dactylon.

**பவித்திரம், பவித்திரி,** பவித்திரி, தர்ப்பை, see பவித்திரிகம்.

**பவித்திரியம்,** see பவித்திரம்.

**பத்திரீகணம், பத்திரீகரணம்,** நெய், ghee.

**பவினி,** நாணல், reed.

**பவுண்டிறகம்,** கரும்பு, sugar cane — Saccharum officinarum.

**பவியம்,** உகர மரம், which see.

**பவீகயம்,** நிலவிளா, ground wood apple tree — Ferodium elephantum.

**பவுதிகம்,** இரசாயன நூல், chemistry see பௌதிகம்.

பவுதிகன், இரசாயனன், chemist.

பவுதிகாம்பரியம், மின்தாதுவாதம், galvanism.

பவுந்திரப்புரை, பவுத்திரப் புண்ணில் காணும் துளை, sinus in fistula.

பவுத்திரம், யானையேற்றம், குதிரையேற்றம், சதாகுந்தியிருத்தல், அளவு கடந்த பெண் போகம் முதலிய காரணங்களினால் ஆசன வாயிலண்டை துவாரத்தை யுண்டாக்கி அதன் வழியாய் மலஜலம் வெளிப்படச் செய்யும் ஓர் புண், இது எண் வகை; fistula in ano or anal fistulla. It results usually from the formation of an abscess in the anus due to excess of heat of the part arising from several causes as riding on an elephant, horse etc sendantary habits, excessive sexual intercourse etc. Not healing properly, it leaves an opening in the rectal region through which foecal matter is issued out.

NOTE:— It is sinus like sore occuring in the side of the anus at a distance of about an inch inwards from the opening. Discharge of pus and red froth takes place. If the sore is developed, sinus is formed and through it stools, urine and semen will usually pass. It is difficult for ordinary cure and the only course left open is by operation.

பவுத்திரவிரல், மோதிரவிரல், ring finger.

பவுத்திரம்வைத்தல், துவாரம் உண்டாதல், formation of sinus which burrows under the skin or any membrane.

பவுத்துவம், மரகதம், emerald.

பவுந்திரம், பகந்திரம், urinary fistula.

பவுரகம், நொச்சில், five leaved chaste tree — Vitex negundo.

பவுரிக்காய், சவுரிக்காய், which see.

பவுருசத்துவம், ஆண்தன்மை, virility.

பவுரோவம், நறும்பிசின், a kind of fragrant resin.

பவுரைக்கல், கற்சிட்டம், over burnt light brick.

பவேசம், மோவாய்க்கட்டை, jaw, chin.

பவ்வதேமல்.

பவ்வம், நுரை, froth; 2. நீர்க்குமிழி, water bubble.

பவ்வியை, யானைத்திப்பிலி, elephant long pepper — Scnidapsis officinalis.

பவ்விருஷியம், நீர்க்கடம்பு, water cadamba — Nanclea purpurea alias N. parvifloris.

பழகல், பழகுதல், practising, becoming accustomed.

பழகாதபழக்கம், கெட்டபழக்கம், bad habits.

பழகியகுடுவை, கையாண்டபாத்திரம், used mud pot.

பழகியசட்டி, see பழகிய குடுவை, 2. நெய்ச் சத்து முதலியவைகளை குடிக்க வொட்டாத டிப உபயோகித்துக் கையாண்ட மண்பாத்திரம், mud pot is used and prepared in such away that it is incapable of absorling oil ghee etc.

பழக்கம், சாதனை, habit, practice.

பழக்கம்பண்ணல், சாதித்தல், practising.

பழக்கம்பாதிசுபாவம், பழக்கம் இயற்கையாதல், practice becoming habitual — second nature.

பழக்கவழக்கம், நாட்பட்ட பழக்கம், continued practice in life, habit in life.

பழக்காடி, பழச்சாற்றிலிறக்கிய காடி, fermented fruit juice like wine.

பழக்காய்ச்சல், பழையசுரம், chronic fever.

பழக்காய், செங்காய், half ripe fruit.

பழங்கஞ்சி, ஆறியகஞ்சி, cold rice water; 2. புளித்தகஞ்சி, sour conjee.

பழங்கண், இளைப்பு, weariness; 2. பலக் குறைவு, weakness; 3. மெலிவு, emaciation.

பழங்கடுரோலரி.

பழங்கறி, சுண்டக்கறி, curry prepared on the previous day and boiled to lessen the quantity and keep off staling.

பழங்காடி, பழச்சாற்றினின்று இறக்கிய காடி, vinegar from fruit juices such as lime, graps etc; 2. புளித்தகாடி, any fermented liquid; 3. புளித்தபழச்சாறு, vinegar; 4. ஆறுமாதத்திய காடி, vinegar six months old.

பழங்காய், வேம்பு, margosa fruit.

பழங்கூரை வைக்கோல், பழங்குடிசையிலிருந்து பிரித்தெடுத்த வைக்கோல்; old straw removed from a thached hut.

பழசு, சாரமற்றது, that which has lost its essence due to long standing or keeping.

பழசுபடுதல், சத்து அறுதல், losing in essence, becoming stale; 2. பழையதாதல், becoming old by losing its freshness.

பழச்சாறு, ஆறுமாதத்திய காடி, vinegar six months old; 2. பழத்தின்சாறு, juice of fruit; 3. தலைப்பிண்டத்தின் மூளை, the brain of the first foetus in woman; 4. தலைப்பிண்ட செயநீர், an alchemical preparation obtained from the first foetus of a woman; 5. எலுமிச்சம்பழச்சாறு, juice of lime fruit; 6. யூகிமுனி பரிபாஷைப்படி கறியுப்பும், பொட்டிலுப்பும் சேர்ந்த திராவகம், according to yugi acid extracted from common salt and nitre.

பழச்சாற்றில் அயமும்செம்பாம், செங்கத்தாரி, which see

பழஞ்சரக்கு, சாரமற்ற சரக்கு, any old drug which had lost its potency.

பழஞ்சாதம், இரவில் நீர்பூட்டிய சோறு, cold cooked rice preserved in water for use in the next morning.

பழஞ்சிட்டம், பழய சிட்டக்கல், old over burnt brick,

பழஞ்சீலை, பழையதுணி, old cloth.

பழஞ்சுரத்துக்கட்டி, மண்ணீரல் வீக்கம், spleen enlarged due to fever.

பழஞ்சுரம், நாட்பட்டசுரம், chronic fever.

பழஞ்சோறு, பழஞ்சாதம், which see.

பழந்தண்டுலம், பழய அரிசி, old rice, stocked rice.

பழந்தண்ணீர், நீரகாரம், cold rice and its water; 2. நாட்பட்டதண்ணீர், reserved water; 3. காடிநீர், fermented liquid.

பழந்தின்னி, பழந்தின்று சீவிக்கும் பறவை, birds living purely on fruits.

பழந்தின்னி வௌவால், இது ஒரு பெரிய வௌவால், மரங்களில் தலை கீழாகத் தொங்குவதைப் பார்க்கலாம், இதன் பிடரி தலைப்பக்கம் கருப்பாயிருக்கும், கழுத்து, புயம், மஞ்சள் நிறம், இதற்கு வால் கிடையாது, இறக்கை 4½ அடி நீளமாயிருக்கும், இது விசேஷமாய் நாட்டு வாதுமையைத்தின்னும், பகலில் வெளிப் புறப்படாது, இறவில்தான் வெளிக் கிளம்பும், இதைப்பற்றி வைத்தியத்தில் வெகு சிலாக்கியமாய்க் கூறப்படும், கை கால் பிடிப்பு சூலை முதலிய ரோகங்களுக்கு நல்ல தெனக் கொள்வதால் இதைச் சுட்டு ஆகாரத்தோடு உட்கொள்வார்கள், a kind of fox bat—Pteropus edwardsi. It is so called because it lives on fruits. They are found in clusters roosting in the branches of trees with their heads hanging down. Hence it is also called Rishi bird.[1] Nape and head black, neck and shoulder yellow; from wing to wing it will be 4½ ft. They live generally upon country or wild almond which is their favourite food. It medicine it is highly esteemed because of its being eaten in casee of rheumatism, gout etc. for which they are shooted at.

பழந்தேன், நாட்பட்ட தேன், old and long kept honey.

பழபடையாதி, எட்டிமரம், vomica tree — Strychnine nuxvomica.

பழபட்சணி, பழத்தைத் தின்று சீவிப்பது, that which lives on fruits — Frugivorous.

பழப்பாசம், கருஞ்சீரகம், black cumin seed — Nigella sativa.

பழப்புளி, பழைய புளியம்பழம், old tamarind fruit that has turned black.

பழப்பேசி, செப்பு நெரிஞ்சில், red caltrops — Indigofera enmeaphylla alias I. pulchella.

பழமலம், குடலில் தங்கி நிற்கும் நாட்பட்ட மலம், old foecal matter in deposit in the large intestines.

பழமறை, பூர்வ வேதம், இது நான்கு வகையாம், the four vedas.

பழமுண்ணாிப்பாலை, ஓர் வகைப் பாலை, மணிலாக் காரை என்றும் பெயர், இது ஓர் மரம், இலைகள் மாறி மாறி இருக்கும், அடிப்புறம் வெள்ளையாயிருக்கும், கிளைகளின் நுனியில் கொத்தாகத் தொங்கும், பூக்கள் வெளிர் மஞ்சள் நிறம், ஓரம் செந்நிறம், இது மலையாளத்தில் பழத்திற்காக வேண்டி மிகுதியாகப் பயிரிடுவார்கள், பட்டை துவர்ப்பு; மருந்திலுபயோகப்படும், இலையை இஞ்சி மஞ்சளோடு சேர்த்து அரைத்து கழலைக்கு வைத்துக் கட்டுவதுண்டு. இலைகளை நல்லெண்ணெயில் வேக வைத்து பட்டைத் தூளோடு சேர்த்து பெரிபெரி சுரத்திற்குக் கொடுப்பதுண்டு, இப்பழம் அதிகப்பசியையுண்டாக்கும், a kind of edible paulay, it is also known as Manilla caurai — Mimusops karai tree; leaves alternate, silvery beneath clusters at the end of branches, flowers pale yellow with red or rosy margins. The tree is extensively cultivated in China and Malabar on account of its acid and esculent fruit. The bark is astringent and yield's a gummy fluid and is used largely in medicine. The leaves ground, along with turmeric and ginger are used as cataplasm for tumours. The leaves boiled in gingelly oil and mixed with the pulverised bark forms a good remedy for beriberi fever. The fruit is said to increase the appetite. Seeds yield oil which can be applied to the eyes in ophthalmia.

பழமுண்ணாியாிசி, மாதளை விதை, seeds of pomegranate.

பழமை, சாரமின்மை, devoid of essence potency; 2. பூர்வம், oldness, antiquity.

பழமைபாராட்டல், அன்னியோன்னியத்தைக் கொண்டாடல், breeding familiarity.

பழம், கனி, fruit; 2. எலுமிச்சை, lime fruit; 3. வழலை, quint essence salt; 4. வயது முதிர்ந்தோன், un epithet for very old man; 5. தின் பழம், edible fruit.

பழம் பஞ்சு, உருளைக்கிழங்கு, common potato — Solanum esculantum alias S. tuberosum.

பழம்பலா, பலாமரம், jack tree.

பழம்பாசகம், கருஞ்சீரகம், black cumin.

பழம்பாசி, கொடிப்பாசி, moss creeper — Hydrilla verlicillata; 2. see கொட்டைப் பாசி; 3. வேலிப்பாசி, இது குளிர்ச்சிக்காகத் தலைக்குத் தேய்த்து முழுகவுதவும், fruit moss — Sida hnmilis. It is used as cooling application to the head before bathing.

பழம்பாண்டம், பழகிய பாண்டம், used or handled vessel or pot as opposed to புதுப் பாண்டம், new vessel. see பழகிய சட்டி.

பழம்பிசின், சாலாம்பிசின், oriental salep.

பழம்புண், நாட்பட்ட ஆறாத புண்; an old chronic ulcer.

பழம்புளி, see கொறுக்காய்ப்புளி; 2. பழய புளி, இது பத்தியத்திற்குதவும், old tamarind, useful in diet; 3. தலைப்பிண்டத்து மூளை; referring to the brain of the first born foetus — a technical term used in Alchemy.

பழையஅரைப்பு, பழைய இலுப்பைக்கட்டி, oil cake of bassia fruit which has gone old.

பழயகிட்டான்.

பழையகிராணி, அசாத்தியகிராணி, an incurable chronic diarrhoea.

பழையசாதம், பழஞ்சோறு, cold rice.

பழையபுண்ணாளி, நாட்பட்ட நோயாளி, chronic patient; 2. பலரிடம் மருந்துண்டு நோய் தீராதவன், an ailing patient who had undergone treatment under various physicians.

பழையவெதுப்பு, நாட்பட்டசுரம், chronic fever.

பழரசம், பழங்களினின்று பிழிந்தெடுத்த சாறு, the juice extracted from fruits; 2. எலுமிச்சம்பழச்சாறு, juice of lime fruit.

பழிதீதம், மகாரம், the mystic letter 'Ma'

பழு, விலா, rib; 2. விலாவெலும்பு, rib bone.

பழுக்கச்சுடுதல், பொன்னை பழுப்பு நிறமாகும் படி ஊதுதல், heating gold to attain yellow colour.

பழுக்கல், பழுத்துவருதல், getting ripened.

பழுக்கவூதல், see பழுக்கச்சுடுதல்.

பழுக்கா, பொன்னிறம், gold colour.

பழுக்காய், பொன்னிறம், gold colour; 2. தேங்காய், cocoanut; 3. பாக்கு, arecanut.

பழுதயம், ஓர்வகை மருந்து தயாரிப்பு, a medicinal preparation as கொச்சிப்பழுதயம்.

பழுதாயிரும்பு.

பழுதுடை நாயகம், தாமரை, lotus flower.

பழுதுடை நெட்டி, பேராமுட்டி, Ceylon stick mallow — Pavonia odorata.

பழுத்தகட்டி, அறுப்பதற்குப் பக்குவப்பட்ட கட்டி, ripened or fully matured abscess fit for operation.

பழுத்த பழம், கனிந்தபழம், fully riped fruit; 2. வயதினால் மிகவும் தளர்ந்த ஆண் அல்லது பெண், a male or female much broken down by age, a very old person.

பழுத்த மண், செம்மண், red earth — red ochre.

பழுத்தல், பொன்னிறமாதல், being turned yellow, becoming yellow in colour; 2. முதிர்தல், ripening; 3. பொன்னாதல், being transmuted into gold.

பழுபடுவன், வித்திரதிக்கட்டி, carbuncle.

பழுபாகல், இலையைக் கருதி இதில் அனேக விதங்களுண்டு, இதன் காய்களை சமைத்துண்பதுண்டு, இவ்விலையுடன் தேங்காய், மிளகு வைத்து அரைத்துதலைக்குப் பற்றுப் போட தலைவலி நீங்கும், வேர் இலேகியமாகச் செய்து இரத்த மூலத்திற்குக் கொடுக்கலாம், buffalo carolah — Momordica hispida. The young green fruits are used as vegetable and they are very whole some when cooked and eaten with food. The juice of the leaves mixed with cocoanut, pepper, red sandalwood etc. and applied in the form of liniment to relieve pain in the head. The root tuber is prescribed by Vaidyans in the form of electuary in cases of bleedings piles and bowel affections. The plant is a creeper. They are several varieties differing chiefly in the form of the leaves.

பழுபாகல் கிழங்கு, கூட்டுப்பாகலின் கிழங்கு, இக்கிழங்கிலிருந்தே காட்டுப்பாகல் பயிராக்கப்படுகிறது, root tuber of buffalo carolah — Momordica dioica alias M. hispida.

பழுபாக்கு, கொட்டைப்பாக்கு, arecanut.

பழுப்படைதல், பொன்னிறமாதல், see பழுத்தல்.

பழுப்பிலை, மஞ்சள் நிறமாக மாறிய பழுத்த இலை, aged leaf turned yellow.

பழுப்பு, அரிதாரம், yellow orpiment; 2. இலைப்பழுப்பு, riped yellow leaf; 3. பொன், gold; 4. சீழ், pus.

பழுப்புக்கற்பூரம், மஞ்சள் கருப்பூரம், yellow camphor.

பழுப்புச்சருக்கரை, நாட்டுச்சருக்கரை, brown sugar, unrefined sugar.

பழுப்புச்சாறு, பழுத்த இலைகளின் சாறு, the juice of riped or aged leaves that have turned yellow.

பழுப்புச்சாற்று சத்துக்காதி, செவ்வகத்தி, red sesbane—Sesbania grandiflora (rubrum).

பழுப்பேறல், பழுப்படைதல், becoming aged and yellow.

பழுமரம், ஆலமரம், banyan tree; 2. பழுத்த மரம், tree bearing fruits.

பழுவக்கொடி, காட்டவரை, wild beans; 2. காட்டுக்கொடி, any forest or wild creeper.

பழுவம், காடு, forest, jungle.

பழுவறை,

பழுவனிலை.

பழுவிடை, பழுவெலும்புக் கிடையேயுள்ள பாகம், inter costal space.

பழுவெலும்பு, விலா வெலும்பு, நெஞ்சறைச் சுவரில் பக்கத்திற்கு பன்னிரண்டாக வளைந்து நீண்ட மெல்லிய விலாவெலும்புகள், the twenty four soft ribs — true 20 false 4 — binding the chest literally twelve on each side — Ribbone.

பழுவெட்டிசலம், வடபூமி நீர், water.

பழை, புளித்த பனங்கள், sour palmyra toddy.

பழையசீலை, பழஞ்சீலை, old cloth.

பழைய சுரம், வெகுநாட்களாக யிருக்கும் வெப்பு நோய், chronic fever.

பழைய சோறு, see பழையது.

பழையது, பழஞ்சோறு, cold rice; 2. நாட்பட்டது, that which is old by age; 3. பழைய சாதம், cooked rice in water and kept over night break fast.

பழையபேதி, பழய மலத்தைத்தள்ளும் பேதி மருந்து, a drastic purgative elimanating old stools; 2. நாட்பட்டபேதி, chronic dysentery or diarrhoea.

பழையவரிசி, பந்தியத்திற்கு வுதவும் நாட்பட்ட அரிசி, old stock rice useful in diet.

பழைய வன்னம், பழைய சோறு see பழையது.

பழைய விருமல், நாட்பட்டவிருமல், chronic cough.

பழைய வெல்லம், மருந்திற்காகவுதவும் நாட்பட்ட வெல்லம், old jaggery used in medicine and in diet.

பளகம், coral, see பவளம்.

பளக்கு, கொப்புளம், boil, ulcer.

பளிங்கம், கட்டுக்கொடை, Indian roller (a bird of large size), Coracias indicus: 2. கஞ்சாங்கோரை, white basil — Ocimum album.

பளிங்கறை, பளிங்குப்பாறை, rock crystal— Crystallised quartz.

பளிங்கீச்சான், ஓர் சிறு கடல் மீன், இது கொசுப் புழுக்களைத் தின்னும், a small sea fish — Therapon jarbua living on mosquito, worms in the sea.

பளிங்கு, படிகம், crystal; 2. கண்ணடி, glass; 3. கற்பூரம், camphor; 4. கற்கண்டு, sugar candy, sugar crystal; 5. விந்து, a secret term for semen; 6. வெள்ளைத் தேக்கல், crystal quartz.

பளிங்கு கற்பூரம், சுத்தி செய்த கற்பூரம், refined camphor which is translucent as opposed to crude camphor.

பளிங்குகுருவங்கம், பளிங்குருவங்கம், தொழில் முறையில் அல்லது வைத்தியத்தில் உபயோகிக்கும் ஓர் வகை வங்க பற்பம். an oxide of lead used in medicine — Litharge.

பளிங்குக்கல், படிகக்கல், crystal; 2. ஓர் வகைத் தாது உப்பு, a mineral salt having polyhedral structure; 3. வல்லத்துக்கல், crystallised quartz; 4. தாதுக்கல், any mineral crystal.

பளிங்கு சாம்பிராணி, பளிங்கு போன்ற வெண்மையான சாம்பிராணி, white crystals of frankincense.

பளிங்கு பாஷாணம், வெள்ளைப் பாஷாணம்; white arsenic.

பளிங்கு பாஷாண பற்பம், வெள்ளை பாஷாணத்தைக் கொண்டு ஞான வெட்டியில் சொல்லிய முறைப்படி தயாரித்த ஓர் வகைப் பற்பம், calcined oxide of white arsenic which is prepared as per the process laid down in Tamil Gnana vetti.

பளிங்குப் பாத்திரம், கண்ணடி பாத்திரங்கள், glassware.

பளிங்குப்பு, பாறையுப்பு, rock salt; 2. ஓர் வகைக் கல்லுப்பு, crystals of salt.

பளிங்குப் புட்டி, கண்ணடிக் குப்பி, glass bottle.

பளிங்குமத்து, கண்ணடியாற் செய்த மருந்தரைக்கு மத்து, a glass pestle for grinding or powdering and mixing up of medicines.

பளிங்குமாசிக் கட்டி, படிங்குருவான வங்கம், an oxide of lead iitharge.

பளிதம், கற்பூரம், camphor; 2. பச்சைக் கற்பூரம், Crude camphor; 3. பச்சடி, an adjunct for food, prepared with curd or jaggery and a vegetable like mango, cocoanut, onion etc; 4. கற்கண்டு, sugar candy

பளுப்பு, அரிதாரம், yellow orpiment; see பழுப்பு.

பளுவு, பாரம், heaviness; 2. கடுமை, seriousness.

பள்ளன், கடுகு, mustard — Brassica jancea.

பள்ளாடு, see பள்ளையாடு; 2. வெள்ளாடு, goat.

**பள்ளி,** நித்திரை, sleep; 2. மக்கட்படுக்கை, human bed; 3. முனிவர்வாசம், habiptation of holy sages.

**பள்ளிகொள்ளுதல்,** நித்திரை செய்தல், sleeping, retering to bed.

**பள்ளிப்பழக்கம்,** பள்ளிக்கூடத்தில் அல்லது மாணுக்கனுயிருக்கும் போது கைக்கொண்ட பழக்கம், habit acquired or contracted while studying; 2. நாட்கொண்ட பழக்கம், long habit, second nature.

**பள்ளியறை,** படுக்கையறை, bed room.

**பள்ளியெழுச்சி,** நித்திரை விட்டெழுதல், awakening or arising from sleep.

**பள்ளியெழுப்புதல்,** தூக்கத்தினின்றும் எழுப்புதல், waking one from sleep.

**பள்ளிவளர்தல்.** தூங்குதல், sleeping.

**பள்ளை,** வெள்ளாடு, goat; 2. வயிறு பருத்தது, that which is pot bellied; 3. குள்ளம், short.

**பள்ளிவானம்,** ஓர்வகை விஷப்பூச்சி, a venomous insect.

**பள்ளைச்சூடன்,** ஓர்வகைக் கற்பூரம், a variety of camphor.

**பள்ளையத்தாடு,** See பள்ளையாடு.

**பள்ளையம்,** உண்கலம், eating dish; 2. படையலிடும் சோற்றுக் குவியல், heap of cooked rice served on the leaf.

**பள்ளையாடு,** குள்ளவெள்ளாடு, short or dwarf goat.

**பறக்குறவை,** கருப்புக்குறவை மீன், a dark doke fish — Pariah doke — Ophioecephalus gachua.

**பறக்கத்தேய்த்தல்,** சூடுண்டாகும்படி தேய்க்குதல், rubbing so as to creat heat.

**பறக்கவிழித்தல்,** முழுமையாக கண்விழித்து எழுதல், waking fully from sleep; 2. ஏமாந்த பாாவை, look disappointedly.

**பறங்கி,** ஓர் மேக வியாதி, venereal disease; 2. பறங்கிக்காய், yellow pumpkin — Cucurbita maxima; 3. பறங்கிப்பாஷாணம், which see; 4. சீனதேசம், China; 5. அன்னிய தேசம், foreign country; 6. பூண்டின் முதற்பெயர், first term of a substance as பறங்கிப் பட்டை; 7. பிராஞ்சுக்காரர், French men.

**பறங்கிக்காடி,** பிராஞ்சு தேசத்திய காடி, French vinegar.

**பறங்கிக்காய்,** பூசனிக்காய், இது ஓர் படர்கொடி, நமது நாட்டில் புழக்கடை, கொல்லை, தோட்டம் இவ்விடங்களிலும் பயிராகும், இதன் இலைகள் பெரியவை, சொர சொரப்புள்ளவை, மேற்புறம் பச்சைநிறம், அடிப்பக்கம் சாம்பல் நிறம், கொடி, இலை, காம்பு இவைகள் சுணையுள்ளன, பூ மஞ்சள் நிறம், இலையையும் கொழுந்தையும் கீரையாக உபயோகிப்பார்கள், தழை கொடி ஆடுமாடுகளுக் குணவாகும், இளங்காய் மேற்புறம் பச்சையாயும் உட்பக்கம் வெண்மையாயும், முற்றியகாய் வெளிப்பக்கம் மஞ்சளாயும், உட்புறம் மஞ்சட் சிவப்பாயு மிருக்கும், கறிக்குதவும்.

இது உடம்பின் அழற்சியையும் பித்தத்தையும் போக்கும், கபத்தையும் பசியையுமுண்டாக்கும், இதன் விதையை யூனானி வைத்தியர்கள் இலேகியத்தில் உபயோகப் படுத்துவார்கள், உஷ்ணம், மேக நோய்களைக் கண்டித்து தாதுவிர்த்தியையும் தேக புஷ்டியையும் வீரிய விருத்தியையுமுண்டாக்கும், இவ்விதையைச் சூரணித்துத் தேனில் கொடுக்க மலக்கிருமி வெளிப்படும், பழத்தை வேக வைத்து கட்டி பிளவை முதலிய அழுகிய கிரணங்களுக்கு வைத்துக் கட்டக் குணமுண்டாகும், இவ்விதையினின்று எண்ணெய் எடுத்து நரம்புக்குப் பலமுண்டாக்க மேற்பூசுவதுண்டு, பூசினிக்காயின் காய்ந்த சதைப்பற்றை இரத்த வொழுக்கு இரத்தங்கக்கல் முதலிய நோய்களுக்கு உபயோகப்படுத்தலாம், இப்பழத்தின் காம்பைக் காய வைத்துப் பிறகு அதைத் தண்ணீரில் இழைத்து மேற்பூச விஷக்கடி, பூச்சிக்கடி அட்டைக்கடி முதலியவை போம்.

இக்காய் சாப்பிட உருசியாயினும் உடம்பிலுள்ள இரத்தத்தைக் குழம்புபோல் உரையச் செய்யும், எளிதில் சீரணமாகாது, வயிற்றில் வாயுவைப் பெருக்கிப் பொருமலையுண்டாக்கும், இதன் மேற்றோலைச் சீவியுலர்த்திச் சிறிது சீரகமும் கூட்டிச் சூரணம் செய்து சர்க்கரை கூட்டி உண்ண கோடை காலத்து அழற்சியை நீக்கும், இவ்விதையின் சூரணத்தைத் தேனில் குழைத்து உட்கொள்ள, குடலில் உள்ள நாக்குப்பூச்சி வெளிப்படும், pumpkin — Cucurbita maxima. It is a climber cultivated almost

in all backyards of houses, pastures, gardens etc., leaves large, rough, cordate and pubescent beneath, petioles hispid, leaves and young shoots are used as vegetable greens for making curry, creeper and leaf stalk serve as food for cattle. Young fruit is green outside and white inside and the ripe fruit which is reddish yellow outside is yellow inside, both are used as vegetable. Being tasteful form a sweet dish in food.

It not only eliminates bile from the body but also cools the system and increases appetite. The seeds are much employed by Unani Hakims in electuaries and prescribed for venereal complaints and as an aphrodisiac. They are also used as an anthelmintic, when the powdered seeds are given mixed up with honey. The boiled pulp of the fruit is often used as a poultice to boils, carbuncles and unhealthy sores etc. The seeds yield an oil which acts as an nervine-tonic, the dried pulp is a remedy in haemoptysis and haemorrhages from the pulmonary organs. The fruit stalk immediately on the top of the fruit is made into a paste by rubbing in water is a specific for stings and bites of poisonous insects and centipedes.

The fruit, though pleasant to taste is said to thicken the blood, it is not easily digestible and increases Vayu in the stomach thereby creating rumbling noise. The outer rind of the fruit dried and mixed up with cumin seeds and sugar is an excellent remedy for allaying the enervating heat of the summer. The powdered seed mixed with honey and given internally, brings out the worms in the intestines.

பறங்கிக்கிழங்கு, சீனக்கிழங்கு, China root.

பறங்கிக்குடிநீர்.

பறங்கிக்கூர்மை, காசிச்சாரம், a kind of prepared salt.

பறங்கிக்கொறுக்காய்ப்புளி, சீமைக்கொறுக் காய்ப்புளி, Manila tamarind — Pithecolobium dulce.

பறங்கிச்சக்கை, see பறங்கிப்பட்டை.

பறங்கிச்சலி, see பறங்கிப்பட்டை.

பறங்கிச்சாம்பிராணி, இதுவே பால் சாம்பி ராணி, இது ஓர் மரத்தின் பால், இது பள பளப்பாயும் சிறிது மஞ்சளாயும் இருக்கும், சிறிது கசப்பு, காரமும் வாசனையும் பொருந் தியது, இதைக் கொளுத்த மிக்க வாசனை யைத் தரும், ஆகவே இது புகை போடவுத வும், இதற்கு மருந்துக் குணமுண்டு, இது துவர்ப்பு, வியர்வையையும் உற்சாகத்தையு முண்டாக்கும், frankincense olibanum — Ooswellia serrata. It is a product of balsamiferous tree. The product is a gummi risina olibanum. Occurs in semi transparent tears of light yellow colour, bitter to taste and some what pungent and aromatic, when burnt very fragrant and as such is used as an incense. In medicine it astringent, diapharotic and stimulent.

பறங்கிச்சாம்பிராணி, பறங்கிச் சாம்பிராணி மரம், male frankincense tree — Boswellia carterii; 2. குந்துருக்கம், Indian frankincense, male oilbanum — Boswellia thurifera; 3. குங்கிலியப்பிசின், conkan resin — Boswellia glabra.

பயங்கிச் சாம்பிராணிக் களிம்பு, பறங்கிச் சாம்பிராணியால் செய்யப்படும் களிம்பு, an external ointment prepared with frankincense as chief ingrediant.

பறங்கிச்சாராயம், பிராஞ்சு சாராயம், இதுவே பிராந்தி எனப்படும், the french liquor — brandy.

பறங்கிச்சிறுக்கி, இரத்த பாஷாணம், a kind of prepared red arsenic.

பறங்கிச்செடி, பறங்கிப்பட்டைச் செடி, china root plant — Smilax China.

பறங்கித்தாழை, அன்னுசித் தாழை, pine apple plant.

பறங்கித்திராய், பம்பந்திராய், which see.

பறங்கிநோய், மேகநோய், Syphlis.

It is originated by sexual contact with the diseased person or neglect to wash the organ after sexual contact. Symptoms; To begin with small pimples appear on the head of the penis or on the covering skin - Prepuce. These pimples become hard, suppurate and burst with evantual discharge

of pus and other foetid matter. Subsequently other symptoms, bubo fever, nausea, loss of appetite, foulness of the tongue, pain and head ache appear.

If neglected ulcerations appear all over the body and pain appear in the joints. Muccous membrane of the nose is also affected with the loss of sense of smell. If advantageous it may take the form of leprosy infested with worms. Sometimes the entire penis begins to rot and it may drop off.

Bulo or inflammation of inguinal gland is very common. It is followed by fever etc. It is highly contagious. Every one in the family is exposed to danger. Children of the parents who suffer from this disease syphilis, dievery soon.

NOTE:— According to Tamil Medical Science, it is known as மேக நோய், generally mercury preparations are the effective remedies, if they are only properly finished Mercury not properly purified and prepared according to the rules may on the other hand, bring on complications and diverse diseases of severe types. Nose will be greatly affected and sometimes the teeth may fall off. Syphilitic poisons may run through several generations.

**பறங்கிப்பட்டை,** சீனப்பட்டை, பறங்குச் சக்கை; இது சீனம், ஜப்பான் இத்தேசங்களுக்கே உரியது, நமது நாட்டில் கிடையாது, ஆகவே இப்பெயர் பெற்றது; தமிழ் வைத்தியர்கள் இதை நாட்பட்ட மேக வியாதிக்குபயோகிப்பார்கள், அதனால் இது எல்லாக் கடைகளிலும் கிடைக்கும், இதன் கஷாயம் வாதரோகம், பிரமேகம் இவைகளைப் போக்கும், இதைச் சூரணத்து திரிபலையோடு கலந்து கொடுக்க வாதரோகம், மூலம், பவுத்திரம், பிளவை நீரழிவு சிரங்கு, குஷ்டம், விந்து நஷ்டம், கடி விஷம், முடவாதம் முதலியவைகள் போம்; இதை சுத்தி செய்து தான் உபயோகப்படுத்தப்படும், பாலில் சிறு துண்டுகளாக வெட்டிப்போட்டு காய்ச்சி ஒரு கொதி வந்தவுடன் இறக்கி, உலர்த்தி எடுத்துக் கொள்ளவும்; இதுவே சுத்தியாம், இதைச் சூரணஞ் செய்து திரு கடி பாலில் கொடுத்து உப்பில்லா பத்தியம் வைக்க தீராத சொறி சிரங்கு கட்டாயம் தீரும், China root — Smilax China. It is a large tuberous plant. It is peculiar to Japan and China. A preparation obtained by a prolonged boiling of the root in water is said to be useful not only as a tonic but as a cure in rheumatic and venereal complaints. It is procurable in all bazaars. The decoction is used with the three myrobalans (திரிபலை) in cases of piles, fistula seminal loss, carbuncle, diabetes, poisonous bites, scabbies, leprosy and other cutaneous affections. It should always be used after purification which is done by boiling small bits of it in milk, and then dried. The powder of the purified root, if given in milk twice a day in half teaspoon doses and kept on salt free diet cures obstinate scabbies.

**பறங்கிப் பாஷாணம்,** பதங்கித்த ஓர் இரச மருந்து a sublimate of mercury, mercurious sublimate.

**பறங்கிப்பிச்சி,** சீனப் பிச்சிக் கொடி, a china creeper.

**பறங்கிப்புண்,** ஓர் மேகப்புண், an infectious ore — Syphilitic sore - a disease imported by the French in olden days into India — Chancre.

**பறங்கிப்புண் கிரந்தி,** ஓர் வகை மேகக் கிரந்தி, இது பறங்கிக்காரர்களால் இத் தேசத்திற்குப் பரவிய நோய், இது கொருக் கைப்புண் இனத்தைச் சேர்ந்தது, syphilis which is a kind of venereal sore said to be imported to this country by the French.

**பறங்கிப் பூரகி,** ஓட்டுப் பலா, which see.

**பறங்கிப் பூசினி,** கோடை பூசினிக் கொடி, pumpkin chiefly cultivated in summer.

**பறங்கியணிநுறை,** இராம சீத்தா, Manilla custard apple tree — Anona reticulata.

**பறங்கியாதளை,** சிவப்பாதளை, red castor plant. see பறங்கியாமணக்கு.

**பறங்கியாதீதம்,** பறங்கிப்பாஷாணம், which see.

**பனிலம்**, வாதரோகம், rheumatic affections — Rheumatism.

**பனிவரகு**, பனிக்காலத்தில் முதிர்ந்த வரகு, common millet which matures and reaches perfection in the dew season — Panicum miliaceum.

**பனிவாடை**, பனிக்காற்று, dewy wind, north wind.

**பனிசோதம்**, தொட்டிபாஷாணம், red arsenic red orpiment.

**பனை**, பனைமரம், which see; 2. மூங்கில், bamboo; 3. பேரளவு, great height; 4. ஓர்வகை மீன், அதாவது பனையேறி, which see; 5. காலம், period, time; 6. புல், grass; 7. தாளிப்பனை, talipot tree; 8. அரசமரம், peepul tree — Ficus religiosa. பலவகை சொல்பனை, அவையாவன, the different ending with பனை.

1. ஆண்பனை, male palmyra tree.

2. பெண்பனை, female palmyra tree, toddy palm — Borassus flabellifer.

3. கூந்தற்பனை, Indian urine palm — Caryota urens.

4. தாளிப்பனை, talipot tree — Corypha umbraculifera.

5. குமிதிப்பனை, common sago palm — Borassus gomatus.

6. சாற்றுப்பனை.

7. ஈச்சம்பனை, wild date palm — Phoenix acaulis.

8. ஈழற்பனை, urine palm of ceylon — Arenga obtusifolia.

9. சீமைப்பனை.

10. ஆதம்பனை, sugar palm — Arenga wightii.

11. திப்பிலிப்பனை, palm — Caryota obtusa.

12. உடலற்பனை, fibre palm — same as No. 3.

13. கிச்சிலிப்பனை, Singapore sago palm — Arenga saccharifera.

14. குடைப்பனை, umbrella palm same as No. 4.

15. இளம்பனை, young palmyra.

16. கூறைபனை.

17. சீமைப்பனை, foreign palm — Latania commersonii.

18. இடுக்குப்பனை.

19 தாதப்பனை.

20. காந்தம் பககாண்டம் பனை, feather palm — Bentickia coddapanna.

21. பாக்குப்பனை, areca nut palm — Areca catechu.

22. ஈரம்பனை, Malabar sago palm same as No. 3.

23. சீனப்பனை, Chinese reclining sago-palm — Caryota mitis.

24. ஏறுபனை, variola pustules ascending from foot to head - a sort of pox.

25. இறங்குபனை, variola pustules, descending from head to foot — a sort of pox.

26. குண்டுபனை.

NOTE:- I. It will be found that second term of all the above mentioned words except the No. 24 and 25 refer not only to the. different varieties of palmyra tree but also to the different species of palms in general So, No. 12 and 10 refer to regular palmyra species and the remaining Nos. upto 23 ( inclusive of 23 ) refer to all kinds of palms; but No. 24 and 25 though termed as பனை refer to the two kinds of small pox (diseases).

NOTE:— II. There are also other kinds of doubtful nature which could not be identified viz—

1. அலாம்பனை; 2. கொண்டைப்பனை; 3. ஏரிலைப்பனை; 4. ஏசறுப்பனை; 5. காட்டுப்பனை; 6. கதலிப்பனை; 7. வலியப்பனை; 8. வரதப்பனை; 9. அலகுபனை; 10. நிலப்பனை; பனைசை; பனசை.

**பனைக்காரல்**, ஓர் வகைக் காரல் மீன், a kind of fish.

பனைக்குருவி, பனைமரத்துக் குருவி, இது 5 அங்குல நீளம், மேற்புறம் வழவழப்பும், சாம்பல் நிறமும், உள்ளது, வாலும் இறகு பக்கமும் கருப்பு, palmyra sparrow of five inches long, outside wholly glssy and ashy brown, darker on wings and tail. So called from its frequenting the palmyra trees.

பனைசதி, அரச மரம், peepul tree — Ficus religiosa.

பனைசருக்கரை, see பனஞ்சருக்கரை.

பனைசை, see பனிச்சை.

பனைச்சாரல், ஓர் சாரல் மீன்.

பனைச்சாறு, பனை மட்டையினின்று பிழிந்தெடுத்த சாறு, the juice of the palmyra leaf stalk; 2. பனஞ்சாறு அதாவது, பாளையினின்று வடித்த இனியச்சாறு the sweet juice extracted from the spadix of the palmyrapalm; 3. பனங்கள்ளு, palmyra toddy.

பனைச்சை, பனிச்சை.

பனைநார், பனை மட்டையினின்று கிழித்த நார், fibres separated from the leaf stalk-palmyra fibre. see பனைநார்.

பனைப்பதினி, தித்திப்பு பனஞ்சாறு, see பனஞ்சாறு.

பனைநீர்,

பனைநுங்கு, } பனநுங்கு, which see.
பனைநொங்கு. }

பனைப்பாஷாணம், வாதத்திற்கு உபயோகப் படும் ஓர் வகை பாஷாணம், an unknown poisonous compound used in Alchemy.

பனைப்பால், பனங்கள்ளு, palmyra toddy.

பனைப்புல்லுருவி, பனைமரத்து புல்லுருவி, a parasite of the palmyra palm.

பனைமடல், பனையோலை, palmyra leaf.

பனைமட்டை, பனைமரத்தின் கிளை, leaf stalk.

பனைமட்டைச்சாறு, பனைமட்டையில் பிழிந்த சாறு, the juice extracted from the stalk of palmyra leaf.

பனைமது, பனங்கள், இதில் பாஷாணம் சுத்தியாகும், palmyra toddy used for cleansing of purifying yellow orpiment and other poisonous compounds.

பனைமரம், மரங்களுக்குள் ஓர் உயர்ந்தமரம், இம்மரம் சாதாரணமாக எங்கும் விளையக் கூடியது; நமது தேசத்தில் மாத்திரமல்ல; உலக முழுவதும் ஆசியா, ஆப்பிரிக்கா, ஐரோப்பா, அமெரிக்கா, முதல் எல்லாவிடங்களிலும் உண்டு; அடிமரம் 30 முதல் 40 அடி உயரமும், சுற்றளவு அடிபாகம் 5½ அடியும், மேற்பாகம் 2½ அடியும் உண்டு; இது கடற்கரை ஓரங்களில் மணற்பாங்கான நிலங்களில் உற்பத்தியாகும், இது தானாகவும் வளரும்; பயிரிடவும் செய்யலாம், இது 15 வருஷ முதல் 25 வருஷத்திற்குள் பலன் கொடுக்கும், இது தென்னையைப் போல் வளைவாக வில்லாமல் செங்குத்தாய் நேராக வளரும்; இதில் ஆண்பனை பெண்பனை என இரண்டுவிதமுண்டு; அதில் பெண்பனைதான் பலன் கொடுக்கும்; ஆனால் இரண்டுவித மரமும் பங்குனியில் பூக்கும், பெண் பனையோ குலைக்கு 10-20 காய்களாக 10 குலைகளுக்கு மேலும் விடும்; ஆகவே சுமார் 200 காய்களுக்கு மேலும் ஒவ்வொரு மரமும் காய்க்கும், ஒவ்வொரு காய்க்குள்ளும் இரண்டு அல்லது மூன்று சுளைகள்உண்டு; பாளையில் சீவசாறு மிகுதியாகவரும்; குடிப்பதற்கு இன்பமாயும் களைப்பைத் தீர்க்கும் குணமுள்ளதாயுமிருக்கும், இச் சாற்றை சூரிய உதயத்திற்குப் பின் சிறிது நேரம் வைத்திருப்பின் புளிப்பேறி கள்ளாக மாறிப் போதையைக் கொடுக்கும், இதன் இலைகள் தான் ஓலை எனப்படும், இது கூரைகள் வேய்வதற்கும் சுவடிகள் எழுதுவதற்கும், விசிறி செய்யவும் உபயோகப்படும்.

அப்போது இறக்கிய இதன் புதிய சாறு மருந்திற்கு உபயோகப்படும், வெட்டைச்சூடு பாண்டு இவைகளுக்குக் கொடுக்கலாம். புளித்தசாறு நீரிழிவுக்குக் கொடுப்பதுண்டு, பாளையைச் சுட்டுச் சாம்பலாக்கிப் பித்த ரோகங்களுக்குபயோகிக்கலாம்.

புளிக்காத அதாவது புதிய சாறு, குளிர்ச்சியும் போஷிக்கும் தன்மையுடையது, அன்றியும் நீரைப் போக்கவும் சீரணசக்தியை யளிக்கவும், பலத்தையும் ஆரோக்கியத்தையும் தரக்கூடியதுமாகும், ஒரு செம்பளவு சாப்பிட மலத்தைக் கழிக்கும், பிரதி வருஷமும் வேனிற் காலத்தில் இதைச் சாப்பிட சயம், நாட்பட்ட குன்மம், கிரந்தி, தொண்டைரோகம், சரும நோய்கள் முதலியவை குணமாகும், இதன் கிழங்கு சாப்பிடவுதவும், மேலும் பனஞ்சாறு மலபந்தம், மேகம், சோகை, சூதக தோஷம் இவற்றை நீக்கும்

இதை பானங்களுக்கும், லேகியங்களுக்கும் மருந்துகளின் அனுபானங்களுக்கும் உபயோகப்படுத்தலாம், இதன் கற்கண்டு, தாகம், அம்மை உஷ்ணம், நீர்ச்சுருக்கு, மேகம் இவைகளைக் கண்டிக்கும், இதன் நுங்கு தேக அழற்சி, பிரமேகம், சீதபேதி இவைகளைப் போக்கும், நுங்குத் தண்ணீர் வேர்க்குருவை நீக்கும், பனங்கிழங்கு அஸ்தி வெப்பத்தையும், பித்த மேகத்தையும், பரிகரிக்கும், இதன் பூ குன்மம், மூத்திர நோய், பல்வலி, பழய சுரம் இவைகளுக்குபயோகமாதம், பனம் பஞ்சு காயங்களுக்குப் போட இரத்த ஒழுக்கை நிறுத்தும், கள்ளுடன் அரிசி மாவு கலந்து கிளறி, சீழ்க்கட்டி மேகக் கட்டிகளுக்கு, கட்டுக் கட்டவுதம், இதன் கற்கண்டோடு வாதுமைப் பருப்பையும் சேர்த்துச் சாப்பிட, சிறுவர்களுக்கு இருமல் சுவாச காசம் போம். இதன் பழம் கனிந்ததை ஏழை சனங்கள் பித்தத்தைத் தரக் கூடியதாயினும் சாப்பிடுவார்கள், palmyra palm or tree — Borassus flabelliformis alias Lonturus domestica. It is the tallest of the trees in our country. It is found grown everywhere not only in our country but all over the world, Asia, Africa, Europe, America etc. The trunk is 30 - 40 ft. in height and the girth 5½ ft. at the bottom and 2½ ft. at the top. It grows naturally and is also cultivated. in favourable soil and acircumstances it takes 15 to 25 years to yield fruits. Unlike the cocoanut; which is bent, it is straight and looks majestic. It consists of two kinds—male and female. The former bears only male flowers which do not possess pistil, and so does not yield fruits, the later bears only female flowers which contains pistil but no stamens and so yields fruits, but both flower in the same season once in a year in the month of pungunj (March — April). The female palm bears on each stalk ten to twenty fruits and bears ten such bunches in one season or year and thus yields about 200 fruits a year. In each fruit there are 2 or 3 seed pulp which will be eaten. The sap or juice is obtained by wounding the spathe, this fresh juice is a cool and refreshing beverage but soon after sunrise it undergoes vinous fermentation and becomes converted into an intoxicating drink. The leaves when dried are used for writing purposes and also thatching roofs and making fans. The fresh sweet juice is medicinally used in inflammatory affections and dropsy while fermented juice is used in diabetes, ash of spadix is given in bilious affections.

The unfermented or fresh juice is refrigerant, nutritious diuretic, stomachic and alterative, a tumblerful, of juice prooves a good laxative. If this is continued every year during the summer it proves useful in cases of tuberculosis, chronic dyspepsia, syphilis, soprosis, skin diseases etc. The juice is known to have cured constipation, venereal complaints, anemia, menstrual disorders etc., it is used in drinks, electuries and as vehicle in the administration of medicine. The sugar candy removes thirst, excessive heat of the system due to attack of small pox etc., urinary complaints arising from venereal causes. The seed pulp is a remedy for excessive heat of the system, venereal affections, dysentery and summer heat, the salt extracted from the ash of burnt male flowers is useful in cases of dyspepsia, urinary disorders, tooth ache and chronic fevers, the cotton is styptic and is used in bleeding injuries. The toody mixed with rice flour, is boiled and made into a poultice for ordinary and venereal abscesses The sugar candy mixed with almond is given to youngesters for cough and bronchitis. The ripened root though bilious is eaten by poorer classes. The first shoot from the seed called பனங்கிழங்கு in Tamil is also eaten.

பனைமீன், ஓர் நீளமான கடல்மீன், a long sea fish, See பனைக்காரல்.

பனைமுகரி, ஓர்வித சிறிய அம்மை, இதனுல் உடம்பு காய்ந்து, கறுத்து, உடம்பு, கழுத்து வீங்கி, பிதற்றலோடு சன்னிகாணும், a kind of small pox attended with moderate fever and swelling of the body and neck renders the body black and sometimes delirium follows.

பனைமுகிழ், பனங்காயின் மேற்பக்கத்து அரும்பு அல்லது காம்படி, the fold or close up of the fruit of palmyra, that portion which is closing up the fruit.

பனையன், ஓர்வித அம்மைநோய், a kind of variola or small pox, see பனைமுகரி; 2. ஓர் கடல் மீன், a kind of sea fish.

பனையேறி, ஓர்வகைக் கெண்டைமீன், இதன் சிலுவாய் விசித்திரமாய் அமைந்திருக்கும், ஆகவே இது தண்ணீருக்குள் இருப்பது போல வெளியில் பூமியிலும் உலாவும், ஆகவே செம்படவர்கள் இதைப் பானைக்குள்ளாவது, கூடைக்குள்ளாவது 5 - 6 நாள் வரையில் மூடி வைத்திருப்பார்கள், மூடாவிட்டால் வெளியில் வந்துவிடும், பூமியில் வெகுதூரம் செல்லக்கூடியது, குளத்தில் தண்ணீர் வற்றிவிட்டால் சேற்றுக்குள் புதைந்துவிடும், a fish called climbing perch — Pristipoma percidac. It is a small fish with a peculiar apparatus with which its gills are provided and it is this that enables it to breath out of the water as in it and so it can live both in water and on land. The fishermen keep this for 5 to 6 days in a covered, earthern pot or covered basket so as to keep it safe from escaping It is 8 or 9 inches long and can travel long distances with great ease. When water is dried up in tanks it remains buried in the mud undereath and it is eaten by poorer classes

2. ஓர் வகைப் பாம்பு, இதை கொம்பேறி மூக்கன் என்றும் சொல்வதுண்டு, இது பச்சை நிறம், மரங்களில் வசித்துக்கொண்டு பறவை பூச்சிகளைத் தின்று வாழும், இது மரத்தின் மேல் ஏறியவர்களைக் கடித்துவிட்டால் இறந்த பிறகு அவர்களைச் சுடுகாட்டில் வைத்துக் கொளுத்திய புகையைக் கண்டால் தான் மரத்தின் உச்சியில் ஏறிநின்று பார்க்கும், இப்பாம்பு விஷத்தை இறக்குமென ஓர் கதையுண்டு, ஆகவே மனிதர் இதனால் கடித்து இறந்துவிட்டால் சுடுகாட்டில் வெறும் வைக்கோலைப் போட்டுக் கொளுத்தினால் புகையைக் கண்டு பாம்பு விஷத்தை இறக்க மனிதன் பிழைத்துக் கொள்வான் என்றும் சொல்வதுண்டு. இதில் கிராம வாசிகளுக்கு மெத்த அனுபோகம் இருப்பதாகத் தெரிகிறது, a claimbing snake — Ophidii *colubriformes*. It has nocturnal habits and is known as tree snake, green in colour, lives on birds insects etc. There seems to a legend about it. When it bites a man who climbed the tree, this snake claimbs to the top of the tree to watch the man who is dead by its bite on the supposition that, after his death, he would be brought to the cremation ground for disposal. So persons who know all about this shake do not take the man who is dead after being bitten by the snake to the cremation ground but instead they simply burn some straw so as to raise sufficient smoke to reach the sight of the watching snake on the top of the tree. The snake on seeing this smoke is said to with draw its poison is the diseased, So much so, it is said that the man who died after its bite would regain his life. The villagers seem to have some knowledge and experience of such occurrences.

3. ஓர் வகைக்குருவி, இது 7 அங்குல நீளம், சாம்பல் வர்ணம், பூச்சிகளைத் தின்று பனைமரத்தில் வாழும், palmyra swallow, also known as Ashy swallow shrike — Ocypterus lenco hynchus alias Ariamun fuscus. It is about 7 inches long, ash colour. mostly lives on insects and frequents the palmyra tree.

4. ஓர் வகைப் பனையேறி, இதற்கு கல் கொறுக்கை என்றும் பெயர், இது வெண்ணிறம், 6 கருப்பு வரிகளை உடையது, a kind of fish known as eykeehy — Pristipema furcatum. It is a species of claimbing fish mentioned in No. 1.

5. வெள்ளை சாண்டுவாமீன், இது ஓர் வகைப் பனையேறி, இது நிறம் வெள்ளையாயும் சிறிய புள்ளிகள் பட்டையாயும், தலையும் கண்ணும் கருப்பாயுமிருக்கும், white chandwah — Ambassis dussumiere. It is a variety of climbing fish, Panayeri, silver white with small dots, head and eyes black 4 inches long found in back waters.

6. கொடுவாய், இது ஓர் வகைப் பனையேறி-மீன், முதுகு சாம்பல் நிறம், அடி வயிறு வெணமை, இது கடல், கழி, கடலையடுத்த ஆறு இவ்விடங்களில் காணலாம்,

உண்பதற்கு உருசியாயிருக்கும் இதற்கு, சிலுவாய்பக்கம் முள்ளிருப்பதால் இப்பெயர் Indian perch, Nayarfish — Lates culcuriper. It is a variety of climbing fish Pannyeri, back ash colour, abdomen white, common in sea, back waters, river's opening into the sea. It often goes long distances to prey upon other small fishes, excellent to eat.

NOTE:— It will be found as above mentioned that the term பனையேறி refers not only to several species of fish in No. 1, 5 and 6, but also to snake and sparrow in No. 2 and 4. So, the term literally means climbing the palmyra tree, probably it may also mean frequenting near it. They all refer to the creatures found in South India.

பனைவட்டு, பனைவெள்ளம், palmyra jaggery put in circular or cubic moulds.

பனைவாழை, அடுக்கு வாழை, the tallest among the plantain trees with bunches in ascending order. Common in Malabar.

பனைவிரியன், ஓர்வகை விரியன் பாம்பு, இதன் விஷம் கொடியது, இதை நாகப்பாம்புக்கு அடுத்தபடி சொல்லலாம், கடித்தால் மரணம் தான், சீண்டினால் நாகப்பாம்பைப் போல் சீறும், இது வயல், குடிசை, வீடு, சன்னல் ஓரம் இவ்விடங்களில் வசிக்கும், palmyra viper also known as white - arched bangaur —Bungarus arcuatus, two to four and a half feet in length. It is extremely venomous and next to cobra, most destructive to human life. When disturbed, it attacks and defends itself fiercely commonly found in fields, huts, houses, near venetians or windows.

பனைவெட்டு, see பனைவெல்லம்.

பனைவெல்லம், see பனைவெல்லம்.

பனைவேர், பனைமரத்தின் வேர், root of palmyra tree.

பன், ஓர்வகைப் புல், a species of grass — Bulrush.

பன்மயம், கருப்பு கரிசாலை, a black variety of eclipse plant — Eclipta prostata for details see கருங்கரிசாலை.

பன்றி, இது ஓர் இழிவான பிராணி, மலந் தின்று வாழும், இதை எங்கும் பார்க்கலாம், தொம்பசாதியார் மேய்ப்பார்கள், இறைச்சியும் தின்பார்கள், மற்ற சாதியார் இதை தீண்டமாட்டார்கள், இதன் பால் அகப்படுவது கஷ்டம், வைத்தியத்தில் இதன் பாலுக்கு அபூர்வ குணங்களிருப்பதாகச் சொல்லப்படும், ஆனால் பாலை கறக்க முடியாது, கறந்தாலும் பால் வராது, இதன் கொழுப்பு மருந்துகளில் உபயோகப்படும், மேற்பூச்சு மருந்தாகவும், சீலை மருந்தாகவும் உபயோகிக்கலாம், இதில் அனேக வகையுண்டு, அவையாவன; pig — Sus indicus. It is considered as inferior animal, lives on feaces; common every where. It is generally reared by low class people known as Thombars, who also eat its flesh. Others treat the animals and their flesh with great contempt. It is very difficult to even a drop of milk from it and it cannot be milched, when tried it may be drawn in. It is said that the milk is highly useful in Alchemy. In Medicine the lard is much useful for ointment and plasters. Lard is melted and is very useful in herpes and in the mouth and foot disease of cattle. Those suffering from piles can find relief by eating its flesh. The animal is of different kinds viz:—

1. ஊர்ப்பன்றி, domesticated pig — Sus indicus.
2. காட்டுப் பன்றி, Indian wild boar — Porcule sulvania.
3. நாட்டுப்பன்றி, country pig as opposed to No. 2.
4. முட்பன்றி, Bengal porcupine — Hystrix bengalenses.
5. கடற்பன்றி, sea hog or hog fish — Dolphinus perniger.
6. முள்ளம் பன்றி, porcupine — Hystrix hirsutirostria alias Crista indica.
7. சீனப்பன்றி, China hog.
8. சீமைப்பன்றி, Europe pig or German boar it is white colour — Sus scrofa.
9. அந்தமான் பன்றி, Andaman pig — Sus andamanensis.

10. மூக்கம்பன்றி,

11. பாஷைப்பன்றி,

NOTE:— No. 5 although termed sea hog, it is really a sea fish.

**பன்றிக்கறி**, பன்றி இறைச்சி, இது மூலத் திற்கு நன்று. pork, when eaten it gives relief to patients suffering from piles. It causes tapeworm.

**பன்றிக்கிளி**, ஓர் கடல் கிளி மீன், a kind of parrot fish.

**பன்றிக்கிழங்கு**, see பன்றி மோந்தான் கிழங்கு,

**பன்றிக்குட்டி**, பன்றியின் குட்டி, the young of a hog; 2. ஓர் மரம், cynad mangrove — Cericops candolleana.

**பன்றிக்குளி**, ஓர் வித மீன், a kind of fish.

**பன்றிக்குறிப்பு**, பன்றிக் குறும்பு, which see.

**பன்றிக்குறும்பு**, நிலப்பனைக்கிழங்கு. ground palm root — Curculigo orchi — Oides.

**பன்றிக்கொம்பு**. பன்றியின்கோரப்பல், canine tooth.

**பன்றிக்கொவ்வை**, சிறு குறட்டை, small coruttay gourd — Trichosanthes incisa.

**பன்றிக்கொழுப்பு**, பன்றியின் உடற் கொழுப்பு, இது மிகுதியாயும் வெள்ளையாயு மிருக்கும், மலத்தைக் கழிக்கும், கணச்சூடு, மூலம் போம், இரணங்களுக்கும், அம்மை அக்கிக்கும் பூசலாம்; களிம்பு செய்யவுதவும், தைலங்களுக்கும் பிளாஸ்திரிக்கும் உபயோ படும், hogs lard — Adeps suillus. It is soft and white, Laxative. It cures piles and constitutional heat and is a sure remedy for herpes and useful in mouth and foot disease of cattle. It is useful in preparing ointments and plasters. It must be melted and used; 2. ஓர் மூலிகை, an unknown drug.

**பன்றிக் கோவை**, கருங்கோவை, black caper — Karivia amplexi caulis alias coccinia indica.

**பன்றித்தகரை**, ஓர் தகரை, Decanny senna — Cassia montana see மலைக்கொன்றை.

**பன்றித்தாளி**, ஓர் வகைத் தாளி, இதற்கு மலையாளத்தில் மர வெட்டித் தாளியென்று பெயர், betel nut laurel — Litseac coriacea.

**பன்றித்தோண்டி**, see பன்றித் தோன்றி.

**பன்றித்தோண்டிப்பூடு**, கோரைக் கிழங்கு, which see.

**பன்றித்தோன்றி**, கோரைக் கிழங்கு, coray root — Cyperus pertinu is.

**பன்றிநெய்**, பன்றிக் கொழுப்பை உருக்கி வடித்த நெய், a fixed oil expressed from lard — Adepooieum. இதன் உபயோகத் திறகு — for its uses see பன்றிக்கொழுப்பு.

**பன்றி நெல்**, ஓர் தடித்த நெல், large variety of paddy.

**பன்றிப்பாகல்**, ஒரு வகை பாகல், a variety of bitter gourd.

**பன்றிப்பால்**, see பன்றி.

**பன்றிப்பிச்சு**, பன்றியின் பித்தப் பையி லிருக்கும் பித்தம், bile of pig.

**பன்றிப்பிடுக்கன்**, ஓர்மூலிகை, white climber, Indian linden — Grewia orientalis.

**பன்றிப்பிடுக்கொடி**, நீலகிரிப் பன்றிப் பிடுக் கன், Nilgiri honey suckle — Lonicera leschenaultil.

**பன்றிப்புடுக்கன்**, see பன்றிப் பிடுக்கன்.

**பன்றிப்புடம்**, வராகபுடம், 50—100 எரு கொண்டு போடும்புடம், calcination effected with the aid of 50 to 100 cowdung cakes 2. பன்றி உயரம் போடும் புடம், calcination effected with the aid of cowdung cakes piled upto the height of a pig for purposes of preparing metallic oxides.

**பன்றிப்புடலங்காய்**, **பன்றிப்புடலை**, **பன்றிப்புடோல்**, } ஓர் வகைத் தடித்த கொம்புப் புடலங் காய், இது பலவித நோய்க்குக் காரணமாதலால் அதிகமாக உணவில் சேர்க்கிறதில்லை, பன்றிப்புடலை, a thick skined snake gourd. It is not conductive to health, and so it is not much used in food.— Trichosanthes anguina.

**பன்றிப்புல்**, ஓர் வகை ஒட்டுப்புல், இதுவே வலம்புரிப்புல், இது நீளமாகவும் முறப்பாக வும் இருப்பதால் இப்பெயர், இதற்கு மிருது வான முடிச்சுகள் உள்ளன, ஆடுமாடுகள் தின்பதற்குதவும், புல் மைதானங்களில் விளை யு இது நாராகவும் உபயோகப்படும்

hygrometric grass, twist grass — Andropogon coptortus alias Heteropogon contortus, It is so called of its being long and stifft sheaths and nodes are smooth, leaves flat and is eaten by cattle when fresh. It is also used as a fibre; 2. ஓர் வகைப் பன்றிப் புல், இதில் அநேக முடிச்சிகள் உள்ளன, சாம்பல் வர்ணத்தோடு வெள்ளை, சிவப்பு, பச்சை நிறமும், கலந்த பூக்கள் இருக்கும், இதன் காய்ந்தவேருக்கு வலியைப் போக்கும் குணமுண்டு, விதைகள் வாந்தியையும் பேதியையும் உண்டாக்கும், swine grass — Polygonum aviculare. It is also known as knot grass or crab grass because of its numerous knots of joints flowers ash colour with variegated colours white, crimson and green. The dried root is anodyne and seeds are emetic and purgative.

**பன்றி மந்தாளி,**

**பன்றிமயிர்,** எய்ப்பன்றி பயிர், முள்ளம் பன்றி மயிர், porcupine's spine — quill, 2. பன்றியின் மயிர், hog's hair.

**பன்றிமயிர்,** முள்ளம் பன்றி மயிர், hair of porcupine, quill.

**பன்றிமீன்,** கொடுவாய் மீன், see பனையேறி.

**பன்றிமுடி,** பன்றி மயிரைக் கொண்டு திரட்டிய முடிச்சி, இது பதங்கத்தைத் திரட்டி எடுக்க உபயோகிப்பது, a brush made from a collection of hogs hairs. This is used in Tamil Medicine for removing the sublimed substances deposited in the process of sublimation as sublimed mercury.

**பன்றிமுள்,** முட் பன்றியின் முள், இது உபரசச் சரக்குகளில் ஒன்று, the spine of porcupine. In Tamil Medicine this is one of the 120 kinds of natural substances called Uparasas.

**பன்றிமொத்தை,** see பன்றி மோந்தான் கிழங்கு.

**பன்றிமோந்தான் கிழங்கு,** குளங்களில் முளைக்கும் ஓர் பூடு, இது மேகம், கபம், பித்தம், பைத்தியம், மந்தாக்கினிகளைப் போக்கும், வீரியத்தைக் கொடுக்கும், இதன் இலைகள் தண்ணீரில் மிதக்கும், கிழங்கு அடியில் நிற்கும், இதைப் பச்சையாகவும் சமைத்தும் தின்னலாம்; இதன் விதைகள் பித்தாதிக்கத்தை விலக்கும், அசீரணபேதிக்கும் கொடுக்கலாம், இதை அரைத்து கட்டிகளுக்கு வைத்துக் கட்டலாம், பூ, சாயம் ஏற்ற உதவும், water chestnut — Trapa bispinosa. It is an aquatic plant found grown in tanks, leaves floating on water and root at the bottom The root is eaten raw or cooked. Nuts are used in bilious affections and diarrhoea, also in the form of abscesses. Flowers give a dye.

**பன்றியிறைச்சி,** பன்றியின் மாமிசம் hog's flesh.

**பன்றியிறைச்சிவற்றல்,** பன்றிக்கறி காய்ந்து உலர்ந்தது, the dried flesh of pig, dried bacon.

**பன்றியீரல்,** பன்றியின் ஈரல், இதை வெட்டிக் கொத்தித் தின்பதுண்டு, the liver of a hog. This chopped and minced and used as a second preparation — Hashlet.

**பன்றிவாகை,** பச்சிலை மரம், bastard rose wood — Dalbergia paniculata see வரியாங்கம்.

**பன்றி வாழை,** ஆனை வாழை, அதாவது நீண்ட குலையுள்ள ஓர் வித வாழைமரம், a plantain tree with long and stooping bunches.

**பன்றுகம்,** அசம தாகம், Pimpinella involucrata alias Carum roxburghiana.

**பன்றை,** நெய்க்கொட்டான், soap nut tree — Hemigyrosa canescens.

**பன்னகந்தி,** கருவேம்பு, curry leaf tree— Murraya Koenigii.

**பன்னகம்,** சீதாங்கபாஷாணம், a kind of arsenic; 2. பாம்பு, snake.

**பன்னகவைரி,** பாம்புக்கு பகையான கருடன், enemy of snakes i. e. Brahmini kite.

**பன்னகாசபடலம்,** ஓர் வகைக் கண்படலநோய், a kind of eye disease attend with the growth of a film over the pupil of the eye.

**பன்னகாசம்,** see பன்னகாசப் படலம்.

**பன்னசி,** தாமரை, lotus flower.

**பன்னத்தை,** பனிநத்தை, a kind of snail.

பன்ன போசனம், இலையுணவு, அதாவது இலை, தழை சாப்பிட்டுச் சீவித்தல், living upon leaves and herbs; 2. இலையில் சாப்பிடல், eating in a leaf which serves a dish; 3. இலைக் கறியுணவு, food made of vegetable greens.

பன்னமாசாலம், பருத்திமரம், cotton tree; 2. சாலமரம், அதாவது ஆச்சா, Ceylon ebony — Diospyros ebenaster

பன்னமை, கபாதிக்கம், [excess of phlegm humour; 2. பலவிதமான தினவு அல்லது நமைச்சல், several kinds of itching sensation.

பன்னம், இலை, leaf; 2. வெற்றிலை, betel leaf; 3. பருத்தி, cotton; 4. இலைக்கறி curry made of greens; 5. சாதிபத்திரி, mace; 6. பலாசு, அதாவது முருக்கமரம் coral tree — Butea frondosa.

பன்னலகை, வெற்றிலைக்கொடி, betel creeper — Piper betel.

பன்னலதை, see பன்னலகை.

பன்னல், பருத்தி, cotton.

பன்னவல்லி, see பன்னலகை.

பன்னறுதி, நிலப்பனை, ground palmyra — Curculigo orchioides.

பன்னு, ஓர் கடல் மீன், a sea fish as புள்ளிப் பன்னு, முஞ்சிப்பன்னு.

பன்னுகம், துளசி, holy basil — Ocimum sanctum.

பன்னுசி, see பன்னுகம்.

பன்னுடை, பனைமரம் அல்லது தென்னை மரத்தின் அடி மட்டையின் இலையோரத்தில் இருக்கும் வலையைப் போன்ற நார்ப்பாகம், இது கள் வடிகட்டவுதவும், the fibrous web or net like covering about the base of palmyra or cocoanut leaf stalks. It is used for straining toddy sometimes.

பன்னி, சணல், hemp flex; 2. பத்தினி, a chaset woman; 3. பனிநீர், dew water; 4. குருவின் தேவி, the wife of a Guru (spiritual teacher).

பன்னி அப்சா, வாதத்திற்கு உபயோகிக்கும் பரிபாஷைப் பெயர், அதாவது வர்ணமேற்றல், மாற்றுயர்வு, in Alchemy a secret term used for increasing the quality or carat of gold.

பன்னியமேனி, இருப்பவல், indian cut weed — Gnaphalium indicum.

பன்னிரண்டாங் குட்டம், see பனிரெண்டாங்குட்டம்.

பன்னிரண்டுங் கடந்தபின், சாமங் கடந்தபின் பன்னிரண்டு வயதுங் கடந்தபின்.

பன்னிரண்டு, பகலுக்குரிய 8 யாமமும் இரவு சூரிய அஸ்தமான முதல் சூரிய உதய கால வரையிலுள்ள 4 யாமமும் ஆக 12 யாமத்தையும் குறிக்கும் சாமம், the numeral twelve refers to the twelve watches of the night and day — four of the night and night of the day Night is from sunset to surise; 2. பெண்ணின் 12 வயது, (உ-ம்)பன்னிரண்டும் கடந்த பின்பு, refers to the age 12 of a girl, the time of maturity.

NOTE:— According to sexual science the maturity of a girl in tropical climate as India is fixed as 12 years at the termination of which the female genitals and breasts are supposed to reach full development just sufficient enough for sexual intercourse.

பன்னீர், ரோசாப்பூவைக் கொண்டு செய்யும் ஓர் வாசனை நீர், rose water — a perfume — Aqua rosea; 2. பனிக் குடத்து நீர், liquor amnii amniotic fluid; 3. ஊனீர், அதாவது காயம், புண் இவைகளினின்று வடியும் நீர், fluid oozing from sores or wounds; 4. பன்னீர் மரம், which see.

பன்னீர்க்குடம், பெண்கள் கருப்பையில் பிண்டத்தைச் சூழ்ந்திருக்கும் சவ்வுப்பை, the amniotic sac in the womb of a female.

பன்னீர்க்குடம்பிய்தல், பன்னீர்க்குட முடைதல், பன்னிக்குடம், கிழிதல் அல்லது பிளவுபடல், rapture of the amniotic sac.

பன்னீர்பாய்தல், புண்ணினின்று ஊன் தண்ணீர் வடிதல், oozing of the fluid from sore or ulcer.

பன்னீர்ப்புட்பம், See பன்னீர்ப் பூ.

பன்னீர்ப் பூ, பன்னீர்மரத்தின் பூ, the flower of the Indian zebra wood — Guettarda speciosa; 2. ரோசாப்பூ, rose flower.

பன்னீர்ப்பூ மரம், See பன்னீர்மரம்.

பன்னீர் மரம், பனிகாலத்தில் பூக்கும் மரம், இது தோட்டங்களில் பயிராக்கப்படும், பூக்கள் வெண்மை, மிக்க வாசனையுள்ளவை, சாயுங்காலத்தில் பூத்து விடிவதற்குள் கொட்டிவிடும், இப்பூ சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் பூசைக்குரியது. இப்பூவினின்று ரோசாப்பூவைப் போல் பன்னீர் வாலையி லிட்டு இறக்கப்படும், இப்பூ வாந்தி, நா வறட்சி, சுக்கிலக்ஷீணம் இவைகளை நீக்கும், இலையை குழந்தைகளுக்கு காணும் கால் கடுவனுக்கு வைத்துக் கட்டலாம், dew flower tree; tree Jasmina, evening flower tree — Gardenia speciosa alias Guettarda speciosa. It is cultivated in gardens, flowers are white and fragrant, bloom in the evening and drop down by the morning. They are sacred to both Shiva and Vishnu. Odoriferous water is distilled from the corolla like rose water. They are said to posses the virtue of removing vomiting, parched tongue and lack of secretion of semen. Its leaves can be applied to the eczema found in the legs of the children at night and bandaged, next morning clean the surface, apply cocoanut oil, repeat for three days, the eczema will disappear; 2. ரோசாப்பூ மரம், இது சாதாரணமாக சுரத்தின் உஷ்ணத்தைத் தணிக்கவும், வாசனைக்காக மேலே தெளித்துக் கொள்ளவும் உதவும், Indian rose tree — Rosa indica. Flowers are used as a cooling medicine in fevers. Rose water and a confection ( குல்கந்து which see ) are prepared.

பன்னை, ஓர் செடி, a plant; 2. கருப்பூரம். camphor; 3. ஓர்வகைக் கடல் மீன், a kind of sea fish; 4. தண்ணீர்விட்டான் கிழங்கு, water root — Asparagus racemosus; 5. வெடியுப்பு, nitre or salt peter — Potassium nitrate.

பன்னைக்கீரை, See பண்ணைக்கீரை.

பன்னோய், பற்பல நோய்கள், several kinds of diseases.

பா, அழகு, beauty; 2. பாம்பு, snake; 3. பூனைக்காலி, cart's foot plant — Mucana pruriens; 4. பரப்புதல், spreading; 5. பாட்டு, poems, verses as வெண்பா; 6. பாவினைச்செய்தல், to compose or compile.

பாகம், ஓர்வகை உப்பு, a kind of salt.

பாகசாலை, மருந்து கலக்கும் ஓர் இடம், a place for mixing medicine — Pharmacy; 2. மருந்து முடிக்கும் இடம், place where medi cines are prepared — Pharmacuetical works.

பாகசிலைக்கல், சிலாநாகம், zine .spar; 2. நூடாலைக்கல், zinc stone; zinc ore.

பாகஞ்செய்வோன், நோயாளியிட மிருந்து கொண்டு மருந்து பாகஞ் செய்து கொடுத்துக் கவனிப்பவன், one attending on the patient to compound and administer medicine and also to give all comforts to him

பாகண்டை, சிவதை, turbith root, Indian jalap — Ipomea turpethum.

பாகபேதம், தயாரிப்பதில் ஏற்படும் வித்தியாசங்கள், changes or differences arising in the course of preparation; 2. கைபாகத்தவறு, deffects arising in compounding medicine.

பாகப்படவுருக்கல், பக்குவப்படும்படி உருக்குதல், melting to the required standard.

பாகப்படுத்தல், உபயோகப்படும்படி தகுதியாக்கல், making anything fit for use; 2. பதப்படுத்தல், to prepare anything suitable for adaptation; seasoning as pickles.

பாகமாக்கல், பண்படுத்தல், making fit for use.

பாகமாதல், பூர்த்தியாதல், to come to perfection; 2. பக்குவமடைதல், reaching a matured state as in preparation of medicine — medicated oil electuaries etc.

பாகம், அச்சம், fear; 2. முறை, process; 3. சமையல், cookery; 4. நான்குமுழம், four Cubits; 5. ஆந்தை, owl; 6. நரைமயிர், grey hairs; 7. பக்கம், side; 8. பகுதி, part. 9. பக்குவம், maturity; 10. கூட்டுமுறை, proportion; 11. புயம், arm, shoulder. 12. பதம் which see; 13. பலண்டுறுக பாஷாணம், a kind of arsenic.

செய்முறை: இது வைத்தியத்தில் பலவகைப்படும், அவையாவன; methods of preparation. They are various, they are:

1. கைபாகம், methods gained by experience.
2. செய்பாகம், methods as given in texts.
3. அரைப்புப்பாகம், methods in grinding.
4. கலப்புபாகம், process or mixing,
5. புடபாகம், methods of heating with cow dung cakes.
6. கொள்பாகம், methods of selecting drugs.
7. தைலபாகம், method of oils preparing various medicinal oils.
8. இலேகியபாகம், method of preparing electuaries and confections.
9. மதுபாகம், methods of preparing syrup.
10. கிருதபாகம், methods of preparing medicinal ghee.
11. இராசாயனபாகம், methods of preparing tonics.
12. கஷாயபாகம், methods of preparing various decoctions.
13. வடகபாகம், method of preparing vadggam.
14. சூரணபாகம், method of preparing powders.
15. சாசனபாகம்
16. உருசிபாகம்
17. கூந்தற்பாகம், a linear measure referring to a distance between the finger tips of both arms when extended i.e, about 6 ft. in length as in 60 பாகம் கூந்தல், (a proverbial expression)

18. உடம்பில் அமைப்பு பாகங்களிலும் சப்ததாதுவிலும் நோய்பாகம் இவை களின் மாறுபாடுகளின் பகுதி, the sum total of the biochemical changes that take place in a living cell, tissues and other structures of the body or reaction that takes place in diseases in the system.

19. ஓர் பைசாசம், a devil.

20. கற்கண்டு, sugar candy.

21. புசிப்பதற் குண்டான பாகங்கள் 4 அவையாவன; சித்தபாகம், விமபா கம், நளபாகம், தேவபாகம், the four kinds of preparations namely; 1. Siddha preparation, 2. Bhima preparation; 3. Nalla preparation and 4. Deva preparation.

**பாகம்செய்வான்,** வைத்தியர்களிடத்தில் மரு ந்துகளை தயாரிக்கவும், கலந்து கொடுக்க வும், நோயாளிக்கு உதவியாகவிருப்பதும் ஆகிய தொழில் புரிவோன், an attendant attached to a physician for preparing medicine, compounding for nursing the patient etc.

**பாகலட்சணம்,** பாகக்கிரமம், method or methods of preparation.

**பாகலம்,** யானைக்கு வரும் சுரம், fever in an elephant; 2. குதிரைக்கு வரும் நோய், a disease in a horse

**பாகலன்,** உன்மத்தன், lunatic.

**பாகலிலை,** பாகற்காயிலை, இதில் இரசம் முறி யும், the leaf of the bitter gourd ( carolah ). Mercury is acted upon by the juice of the leaves.

**பாகல்,** இதுவே பாகற்காய், இது இரண்டு வகைப்படும்: 1. மிதி பாகல், 2. கொம்பு பாகல், இதில் ஒன்று (மிதி பாகல்) கசப் பிராது. இரண்டாவதில் கசப்புண்டு, அன் றியும் பத்தியத்திற்கு முறிவான வஸ்து, இதற்கு வெல்லம் கூட்டிச் சமைப்பார்கள், இது சாதாரணமாய்த் தோட்டத்தில் விளை யக்கூடியது; இலை ரசத்தை வெந்நீரோடு கலந்து கொடுக்க வயிற்றுக் கிருமிகள் சாகும், இதன் காய் உண்ண, மூலம், காமாலை மண்ணீரல் கல்லீரல் தோஷம், பயத் தினால் வரும் சுரம், பிரமேகம், இருமல், இரைப்பு, முத்தோஷம், மலக்கிருமிபோம், இதன் இரத்த மூலத்திற்கு ஒரு சிறந்த அவிழ் தம், பழுக்காத பாகவிலை மிளகுடன் கூட்டி மடித்து விழுங்க இரத்தங் கசிவது நின்று கடுப்பு முதலான நோய் குணமாகும், கொம்பு பாகற்காய் அபத்தியமானதும் மருந்துகளை முறிக்கும் குணமுடையது மாகும், வாத பித்தாதிக்கம், வயிற்றுக் கிருமிகளைப் போக்கும், சில் விஷத்தையும் போக்கும், மிதி பாகற்காய், இது பித்தத் தையும் கரப்பானையும் உண்டாக்கும், இரசம் பாஷாண மருந்துகளை முறித்து தேகத்திற்கு கெடுதியையுமுண்டாக்கும், இதை மக்கள் சமையலிலிட்டும், வற்றலிட்டும் சாப்பிடு வார்கள், இது உருண்டையாயும் பச்சை நிறமாயும் கசப்பாயுமிருக்கும், இதன் விதை யினின்று தைலமிறக்கி மருந்துகளுக்கு உப யோகிப்பார்கள், இதன் இலையின் கஷா யத்தை இரசம், பாஷாணம் தோஷங்களுக்கு கொடுப்பதுண்டு, இது அடியிற் கண்டபடி பல வகைப்படும், அவையாவன: spiked bitter cucumber, carolah, balsam pear — Momodica genus. It consists of two kinds-ground creeper, with small variety of fruits — Momordica charantia alias M. humilis. It is not very bitter, the other bears big long fruits. They are very bitter — Momordica charantia. Both are used in diet. They are cultivated in the gardens. The juice of the leaves mixed with warm water is said to destroy the worms in the intestines. The fruit is prescribed in cases of piles, jaundice, liver and spleen affections, where as ripe fruit is given for fever, urinary complaints, cough, bronchitis, affections or derangement of the three humours and worms in the intestines. The ripe fruit is used to calcine or purify white arsenic. The decoction of the leaves is given as an antitode for the poisonous effects of mercury and arsenic.

**பாகல்,** பலாமரம், jack tree — Arto carpus integrifolia; 2. வெண்பாவட்டை, white pavettai — Pavetta indica.

**பாகல் வகை,** the varieties are:

1. கொம்பு பாகல் அல்லது கொம்பன் பாகல்,l ong balsam pear—Mimordica charantia.
2. மிதிபாகல், ground creeper Mimordica humilis.
3. சின்ன பாகல், the same as No. 2.
4. நிலப்பாகல், the same as No. 2.
5. காட்டுப் பாகல், forest carolah — Mimordica dioica.

6. நாய்ப் பாகல், same as No. 5.

7. பழுபாகல், buffalo carolah — Mimordica hispida.

8. பேய்ப் பாகல், same as No. 6.

9. முட்பாகல், bristly balsam apple — Mimordica misionis.

10. எருமைப் பாகல், same as No. S.

NOTE:— It appears that there are unknown varieties for which no corresponding botanical names could be traced as கொல்லம் பாகல், நரிப் பாகல், புனைப் பாகல், நீர் பாகல்.

பாகற்காய், பாகல்காய், see பாகல்.

பாகற்கொட்டை, பாகல் விதை, seeds of carolah

பாகற் கொட்டை, பாகல்விதை, seeds of carolah.

பாகற்பலா, பெருங்குமிழ், large goomiz — Gmelina arborea.

பாகற் பழம், பழுத்த பாகற்காய், இதனால் சுரம், பிரமேகம், இரைப்பு, மூலம், குட்டம், மலக்கிருமி இவைகள் போம், riped balsam pear. It is useful in cases of fever urinary diseases, bronchitis, piles, leprosy, and worms in the intestines.

பாகா, பனைசர்க்கரை, sugar obtained from palmyra juice.

பாகாசயம், சாப்பிட்ட உணவைப் பக்குவப் படுத்தும் சிறுகுடல், small intestines capable of digesting the food taken into the system.

பாகாட்சணம்,

பாகாதிசாரம், நாட்பட்ட அதிசாரபேதி, chronic diarrhoea.

பாகாரி, வெண்பொன், impure gold of a white colour.

பாகி, நாய், dog.

பாகிடசாரியம், ஓர் வடமொழி வைத்திய நூல், an Ayurvedic medical science in Sanskirt.

பாகியம், வெளிப்புறத்தை யடுத்தது, relat- to the external.

பாகியாரியாம வாதம், பாகிராயாம வாதம், } பின்னிசிவு அதாவது உடம்பையும், தலையையும் குதிக்காலையும் பின்புறமாக வளைத்தும், மார்பு உயர்ந்தும், கழுத்து இறுகி முகம் பல்லும் நிறமாறி, மலம் மூத்திரம் கட்டுண்டு, தாழ்வாய் பிடிப்பதுடன் மற்றும் வேறு குணங்களையு முண்டாக்கும் ஓர் வாதநோய், இவ்வாதம் பெண்களுக்கு சாதாரணமாய் பிரசவ காலத்திலும் அதற்குப் பிறகும் காணும், இதுவே தனுர் வாதமாக மாறும், a form of tetanic spasm in which the head and heels are bent backward, chest raised upwards, neck stiffened, face and teeth discoloured, natural urgings become fixed, the lower jaw locked up with other contiguous symptoms — Opisthotonos. Women are generally attacked by this nervous disease during delivery or subsequently.

NOTE:— This is one of the two distinct types of tetanic spasms in which the extremely enraged and powerful bodily vayu (nerve force) is centred or lodged in ligaments which transverse the posterior side of the body, when the body is naturally bent backwards The patient then experiences a sort of breaking pain at the chest; waist and thighs. The disease is looked upon as beyond the pale of all medical treatment especially when a woman is affected by this disease during her delivery or there after. See also தனுர்வாதம்.

பாகியிகவசோமம், உடம்பின் மீத்தோலில் காணும் வீக்கம் அல்லது கழலை, epithelial tumour.

பாகியேந்திரம், வெளியுறுப்பு, external organ.

பாகிரி, ஐங்காயக்கரு, அதாவது பிரமமுனி சூத்திரம் 300-ல் சொல்லியுள்ளபடி தலைப் பிள்ளைக் கருவைக்கொண்டு செய்யும் ஓர்வித மெழுகு, a wax like preparation derived by a secret process from the first foctus extracted from a women's womb as contemplated in work of Brahmamuni Sutram 300; 2. ஐங்காயம் அதாவது மஞ்சள், கடுகு, வெள்ளுள்ளி, காயம் சதகுப்பை சேர்ந்த பிரசவ மருந்து, a palverised medicinal powder consisting of five stimulants viz - tumeric, mustard, garlic asafoetida, and dill seed given to women after delivery.

NOTE: ஐங்காயத்தில் வெந்தயம் என்று தமிழிலும், dill seed என்று ஆங்கிலத்திலும் எழுதப்பட்டுள்ளது, வெந்தயம் குளிர்ச்சி செய்யும். பிரசவித்தவர்களுக்கு உகந்த தல்ல; ஆகையால் இது dill seed என்கிற சதகுப்பையாகவே யிருக்கவேண்டும்.

**பாகு,** குழம்பு, a liquid food; 2. சர்க்கரை sugar; 3. வெல்லப்பாகு, a thick consistence of boiled jaggery; 4. கருப்பட்டி, palm sugar; 5. களிப்பாக்கு, boild areca nut; 5. கற்கண்டு, sugar candy; 7. திரட்டுப்பால், boiled essence of milk; 8, புயம் shoulder; 9. சர்க்கரைப்பாகு, syrup; 10. இலேகியமாகக் கிளறிய பழவர்க்கத்துடன் சேர்ந்த சர்க்கரைக் குழம்பு, இது மேல்நாட்டிற்கு தயாரித்து அனுப்பப்படும், a thickened juice of fruits boiled with sugar to a thick consistency or electuary - fruit jelly as guava jelly much used and exported to Europe; 11. தயிர் அல்லது மோர்க் குழம்பு, a thick consistence of curd or butter milk mixed and warmed with spices,

**பாகு கூடல்,** see பாகு சேரல்.

**பாகு செய்தல்,** பாகு ஆகும்படி கொதிக்க வைத்தல், boiling anything to reach the stage of a syrup.

**பாகு சேரல்,** பாகுதிரளுதல், boiling anything to a thick consistence like syrup.

**பாகுதம்,** கருஞ்சீரகம், black cumin—Nigella sativa

**பாகு தேர்தல்,** பாகுபக்குவப்படுத்தல், see பாகு செய்தல்.

**பாகுதோஷம்,** கைகளைச் சூம்பச் செய்யு மோர்வித வாதநோய், a form in which the aggravated Vayu (wind humour) renders the arms atrophied.

**பாகுநாத மந்திரம்,**

**பாகுபடுதல்,** see பாகுபடுத்தல்,

**பாகுபடுத்தல்,** பாகு பதத்திற்கு கொண்டு வருதல், bringing anything to the stage of a thick consistence like a syrup; 2. பிரிவு படுத்தல் to analyse.

**பாகுபதம்,** பாகுபக்குவம், gummy state, a stage of thick consistence.

**பாகுபருவம்,** பாகாய்த் திரண்டுவரும் பக்குவநிலை, see பாகுபதம்.

**பாகுபாடு,** பகுப்பு, பிரிவு, division; 2. பிரிவு படுகை. becoming analytic.

**பாகுபிடித்தல்,** பாகு செய்து உண்டை பிடித்தல், to make a lump of jellied matter; 2. தேன் ஊற்றி இலேகியமாக செய்தல், making into an electuary by adding honey — a conserve.

**பாகுமுறிதல்,** பாகு பதம் தவறுதல், பாகு பதம் முதிர்ந்து போதல், failing in the preparation of a syrup by exceeding the stage.

**பாகையிடல்,** அளவிடல், to graduate,

**பாகையிட்ட பாத்திரம்,** அளவு குறித்த பாண்டம், graduated vessel, e-g. an ounce glass.

**பாகையெலும்பு,** ஓர் மூக்கெலும்பு, a nasal bone — turbinal bone.

**பாக்கடிக்கு நேரம்,** நிமிஷநேரம், in a moments time.

**பாக்கல்,** பரவுகல், a kind of flat marble stone.

**பாக்கல்லு,** பரவு கல், see பாக்கல்.

**பாக்கன்,** செம்படவன், fisherman; 2. பூனை cat.

**பாக்கியம்,** கஷாயம், decoction.

**பாக்கு,** துவர்க்காய், raw arecanut; 2. பால், milk; 3. கொட்டைப்பாக்கு, dried areca nut; 4. களிப்பாக்கு, boiled and cut or split areca nut; 5. சாயப்பாக்கு, sliced and dyed areca nut.

**பாக்கு,** கமுக மரத்தின் காய், இதற்கே கொட்டைப் பாக்கு என்று பெயர், இக் காயின் குணம் இதின் துவர்ப்புச் சத்தினின்று உயர்வு, தாழ்வு எனக்கொள்வதுண்டு, இதை வெட்டிப் பார்க்கத் தெரியும் நடுப்பாகம் குறுகியிருந்தால் உயர்வு என்றும், பருத்திருந்தால் தாழ்வு என்றும் கொள்ளப்படும், கடைகளில் இதை முழுசாகவும், வெட்டியும், சீவியும், விற்கப்படும், இதினின்று கத்தைக் காம்பும் காசுக் கட்டியும் தயாரிக்கப்படும், ஒன்று தாம்புலத்திற்கும், மற்றொன்று மருந்திற்கும் உபயோகப்படும், இந்தக் கொட்டைப் பாக்கினின்றே களிப்பாக்கு வெட்டுப்பாக்கு,

சாயப்பாக்கு, சுருள் பாக்கு, அலகு பாக்கு, சீவல் பாக்கு, தூள் பாக்கு முதலியவை தயாரிக்கப்படும், உலர்ந்த பாக்கு நரம்பு சுருசுருப்புண்டாக்கும், மாதவிடாய் போக்கும் குணமுண்டு, காசுக் கட்டி வாய் கொப்புளிக்கவுதவும், இப்பாக்கு தாம்பூலத்தில் அதிகமாக உபயோகப்படும், இது மலபந்தத்தையும் அசிரணத்தையும் போக்கும், பல்லிற்கு சாயமேற்றினது போலிருக்கும், சிலர் இதற்கு பலவிருத்தியும் உண்டு என்று எண்ணுகிறார்கள், இதை கருக்கிப் பல் தூளாகவும் உபயோகிக்கலாம், வெறும் பாக்கை அதிகமாக உபயோகித்தால் சோகை உண்டாகும், இதன் துவர்ப்புச் சத்து பலஹீனத்தால் உண்டாகும் பேதியை கட்டும், வெற்றிலை யோடு சேர்த்து தாம்பூலமாகவுபயோகிக்க உடம்புக்கு ஒரு தெம்பும் சுருசுருப்பும் உண்டாகும், வாய் நாற்றம் போகும், பல் உறுதிப்படும், இது. 1. வெற்றிலைப்பாக்கு; 2. சோலைப் பாக்கு; 3. கொட்டைப் பாக்கு; 4. களிப்பாக்கு; 5. அலகு பாக்கு; 6. சீவல் பாக்கு; 7. தூள் பாக்கு; 8. சொத்தைப் பாக்கு என்று பல வகைப்படும், the fruit of areca catechu tree, areca nut. The quality of the nut is judged by the amount of astringent matter contained in it, a point which is judged by cutting them. If the medullary portion be small and narrow the nut is of good quality, but when the portion is in large quantity it is esteemed as of less value. It is sold in the bazaars wholly, sliced, or pared. From the nuts are prepared two astringent kinds of cutch called cutta cambu for chewing with betel leaf and kasucutty for medicine. Different kinds of nuts are prepared from these nuts as — boiled nut, sliced nut, dyed, curled or rolled, pared and powdered ones. Dried nut is medicinally a nervine tonic and emmenagogue, the cutch is a powerful astringent and slightly antiperiodic useful in gargle, douche etc. The nut is the famous masticatory; the nut is much used with betel in the East. Though astringent. it removes constipation and improves digestion. So, it is suggested to use the nut in excess at night. It adds colour to the teeth, and improves or strengthens the body. It is burnt to ashes and used as tooth powder. Excessive eating of the nut without the betel leaf. is said to cause anaemia. It arrest the motion in diarrhoea owing to its astringent properties. When chewed with betel and chunam, It lends great exhilaration and also stimulation, sweetens the breath and strengthens gum.

NOTE:— The nuts are collected, the husks or outer fiber like pods are removed before using them. Hand-some beads are made by polishing them. In Europe several preparations are made from the nuts such as arecadin (an acid) arecalin (an crystaline alkaloid) arecalin (an oily alkaloid) arecane (a purgative) etc. It contains tannic acid as such can be used externally as an astringent, styptic and internally as an astringent in atonic diarrhoea.

பாக்குக்கல், காகைக்கல்.

பாக்குச் சத்து, பாக்கினின்று தயாரிக்கும் ஓர் சிவந்த வஸ்து, இதைக் காசுக்கட்டி என்னலாம், a brown red colouring matter obtained from areca nuts, known as areca red — Arecin.

பாக்குச்சாரம், பாக்கை வேகவைத்து அதனின்று வடிக்கும் சாரம், essence of areca nut derived by boiling it; 2. பாக்கினின்று வடித்த எண்ணெய்ச் சத்து, இது பேதியையும் வாய் நீரையும் வடிக்கும் தன்மையது, அன்றியும் நாடி நடையையும் மெதுவாக்கும், an oily and volatilebasic substance obtainable from areca nut. It is said to be a purgative, a sialogogue and to slow the pulse — Arecane; 3. வெற்றிலைச் சாரம் அதாவது தாம்பூலத்தின் சாரம், the juice of betel and nut by chewing them with chunam.

பாக்குச் சீவல், பாக்குச் சீவிய பொடி, the thin slices pared off from areca nut.

பாக்குணன், ஆற்று மருந்து, healing medicine.

பாக்குநாத மந்திரம், பாக்கை பெண்கள் நாதத்தில் ஊறவைத்து, புருடரை வசியத்திற்காக உபயோகிக்க உச்சரிக்கும் மந்திரம், a mystical formula chanted for purposes of fascinating males. Before doing so, the arecanut is soaked in the menses of the female and the same is taken out and used for magical purposes.

பாக்குப்பனை, பாக்குமரம், areca palm.

**பாக்குப்பாளை,** பாக்குமரத்தின் பாளை, the spadix of the areca nut tree.

**பாக்குப்போல் சீவல்,** பாக்கைச் சீவுமாறு போலச் சீவுதல், to slice the arecanut.

**பாக்குமட்டை,** பாகுமரத்தின் இலைத் தண்டு, the stalk of the leaf of areca palm.

**பாக்குமரபட்டை,** பாக்கு மரத்தின் அடிவேர் பட்டை, the root bark of arecanut tree.

**பாக்குமரப்பாளை,** பாக்குமரத்தின் பாளை, see பாக்குப்பாளை.

**பாக்குமரப்பூ,** பாக்மரத்தின் சிறிய வெள்ளை வாசனைப் பூக்கள், small white fragrant flowers of areca palm.

**பாக்குமரம்,** கமுகு, அதாவது கொட்டைப் பாக்கு காய்க்கு மரம், இம் மரத்தை எங்கும் பார்க்கலாம், தோட்டங்களில், வைத்துப் பயிராக்கப்படும், இது திருவாங்கூர் முதலிய மேற்குமலை மாகாணங்களிலும் வடக்கே வங்காளம் நேபாளம் முதலிய விடங்களிலும், தெற்கே இலங்கை அதை அடுத்த தீவுகளிலும் விசேஷமாய்ப் பயிரிடப்படும், இது மற்ற மரங்களைப்போலல்லாமல் பார்ப்பதற்கு வெகு அழகாக விருக்கும், செங்குத்தாய் நேராக வளரும், 10—30 அடிவரையில் வளரும், அடிமரம் வளையம் போட்டது போல் வட்டமாகக் காணப்படும், தென்னை மரத்தைப் போல் சின்ன மட்டைகள் உண்டு உச்சி மரத்தில் இலைகள் சிறகைப்போல் படர்ந்து நிற்கும், பூக்கள் சிறியன, வெண்மையாயும் வாசனையாயுமிருக்கும், ஆண் பூ மேலாகவும், பெண் பூ கிழாகவும் பூத்திருக்கும், இம் மரம் அனேக இலைகள் விடும், ஒரு மரத்திற்கு சுமார் 300 பாக்குகள் வீதம் பலன் தரும், இதன் பாக்கினின்று இரண்டு வஸ்துக்கள், கத்தைக் காம்பு, காசுக்கட்டி தயாரிக்கப்படும், கத்தைக் காம்பு வெற்றிலையோடு போட்டுக்கொள்ளவும், காசுக்கட்டி மருந்திற்கும் உபயோகப்படும், உலர்ந்த பாக்கு நரம்பிற்கு பலத்தைத்தரும், சூதகப் போக்கை குணமாக்கும், betel palm, catechu palm — Areca catechu alias Areca fanfel. The tree is common every where and it is cultivated in the gardens. It is grown in Travancore, Malabar, tne Western province. S. India, North Bengal Nepaul and other mountainous regions. The best palm is found in Ceylon and other adjacent islands and Maldives etc, in abundance. It is most graceful of all palms and best to look at and is of remarkably erect growth a slender cylinderical annuate stem. It is 10—30 ft. high, stem with ring like bands at a distance of a few inches, spadix much branched like cocoanut palm. It has a tuft of feathering leaves at the extreme top, flowers white, small and fragrant, male flowers numerous above the female. It yields several branches and in each bunch numerous nuts and so in a tree there may be about 300 nuts. From the nuts are prepared two astringent kind of cutch called katta cambu for chewing with the betel leaf and the kasukatti for medicine. Dried nuts are medicinally a nervine tonic and emmenagogue.

NOTE:— The tree is abundantly grown in the strait settlement. The nut fs the Arellana indica of old writers, the common name by which it is known in commerce is Kalippakk (களிப் பாக்கு), The ordinary nuts have a thin brown rind and in size are intermediate between walnut and hazed nut. The palm is cultivated in sandy clay, best on sides of hills and margin of rivers and with moist climate. The cutch is a powerful astringent and slightly antiperiodic useful in gargle and douche. The dry and expanded petioles serve as ready made splints for fractures. The decoction of the roots is used as an external application for lipsores. A handsome bead is made by polishig the nut, sometimes necklace and tops of walking sticks.

**பாக்குமுளை,** பாக்கு விதையின் முளை, the sprout of the areca nut seed; 2. பாக்கைப் போன்ற முளையுடைய மூலநோய், a vascular tumour of the rectal membrane of the size of an areca nut as in piles.

**பாக்கு வெட்டி,** பாக்கை வெட்டுவதற்காக உபயோகிக்கும் கருவி, an implement for crushing or cutting areca nut into thin slices.

**பாக்கு வெட்டிக் கீரை,** பாக்கு வெட்டியைப் போல் இலை பிரிந்த கீரை, a kind of greens the leaves of which is split into two parts just like the pincers.

**பாக்குறண்டி,** see பால் குறண்டி.

பிண்டம்விழுதல், கருப்பம் விழுதல், discharge of the foetus; 2. பிள்ளைபெறல், delivery of the foetus.

பிண்டயோனி, பெண்குறி, genital of a female.

பிண்டரசம், சவுக்காரவுண்டையோடு; பிண்ட சவுக்காரம், அமிர்தகாரம், ஐந்து சுண்ணம், முப்பு, முச்செயநீர், தைலம், பனிநீர் இவைகளைக் கலந்து அரைத்து அதினால் செய்யும் இந்திரகோப நிறமுடையதாய் சித்தர்கள் காய்ச்சி இறக்கும் ஓர்வகை ரசம், an essence prepared from the foetus and other medicines by Siddhars.

பிண்டரத்தசுழற்சி, கருவின் இரத்த ஓட்டம், foetal circulation.

பிண்டரோபணம், நாரத்தை, a tree citron.

பிண்டவண்டரசம், சுத்தரசம், a medicinal liquid extract.

பிண்டவமைப்பு, foetal structure.

பிண்டவல்லி.

பிண்டவாடை, பட்சணியில் சொல்லியுள்ள தலைப்பிண்டத்தைக் கொண்டு செய்யுமோர் வசியமருந்து, இதனால் பெண்கள், சத்துரு, பிசாசு, தேவதை முதல் எல்லாம் வசியமாம், a preparation from the first foetus of a woman prepared as laid down in பட்சணி which is capable of enchanting woman, enemies devil's etc.

பிண்டவாயு, பிறந்த குழந்தைக்குக் காணும் பாரிசவாயு, a paralytic affection to the child at birth due to injury — Birth palsy.

பிண்டபிட்பவசம், பிண்டத்தை உட்பக்கம் மூடியிருக்கும் சவ்வு, the inner membraneous covering of the foetus — Amnion.

பிண்டவுப்பு, கருப்பிண்டத்தினின்று எடுக்கும் ஓர்வகை உப்பு, a salt extracted from the foetus of a woman.

பிண்டவுப்பு செயநீர், கருப்பிண்டவுப்பினின்று வடிக்கும் ஓர்வகை செயநீர், a medicinal liquid or acid obtained by a process from the foetus salt, see பிண்டவுப்பு.

பிண்டவுருவாதி, கும்பகம், suppression of breath.

பிண்டவெரு, வயித்தியமுப்பு, universal salt described in the Tamil Siddhar's medical science for use in medicine.

பிண்டாகமூலம், தாமரை வளையம், the coil of the lotus stalk.

பிண்டாப்பிரம், ஆலங்கட்டி, hail stone.

பிண்டாயசம், உருக்கு.

பிண்டாரம், ஆற்றுப்பூவரசு, river portia tree — Trewia nudiflora; decoction of its root decreases the swelling of the body when given internally; an ointment made out of it is a applied externally in gout.

பிண்டாரிலிகம், மூலாதாரம், one of the six mystic centres of the human body.

பிண்டாலு, ஓர் வகைக் கிழங்கு, தின்ன உதவும், a species of yam. it is culivated for eating — Dioscorea globosa.

பிண்டி, அசோகு, asoka tree—Saraca,indica; 2. குந்திரிக்கம், gum olibanum; 3. தினைமா, millet flour; 4. பிண்ணாக்கு, oil cake; 4. மருது, which see; 5. மருந்தை மாவைப் போல் அரைத்துக் கண் வியாதிகளுக்குத் துணியில் வைத்துக் கட்டும் ஓர் சிகிச்சை, a treatment where by the medicine is ground into a paste and applied to the eyes in a lint.

பிண்டி, பிண்டிகை, பிண்டிதம், பிண்டிதகம், } மருக்காரை, mauritius plum.

பிண்டிதம், காரைச் செடி, see காரை, 2. தாளிக்கொடி, a climber; 3 மருக்கொழுந்து, fragrant plant — maids' love— Artmesia abrotanum.

பிண்டித்தல், பிண்டமாக்கல், ஒன்றுகத் திரட்டல், to collect.

பிண்டித்துருவம், குங்கிலியம், which see.

பிண்டிவாகனம், பிண்டிவாளகம், பிண்டிவாளம, } குந்துருக்கம், which see.

பிண்டிகர கவர்ச்சி, attraction of cohesion.

பிண்டிகரம், ஒட்டு சம்பந்தம், cohesion; ஒட்டுகை, cohere, adhere.

**பிண்டிதகம்,** மருக்கொழுந்து, maid's love — Artmesia abrotanum.

**பிண்டீரகம்,** மாதளை, ponegranate — Punica granatum.

**பிண்டீரம்,** சாரமின்மை, juiceless —deprived of essence; 2. மாதளை, see பிண்டீரகம்.

**பிண்டீகரணம்,** உண்டையாக்கல், to form into a lump or mass.

**பிண்டோற்பத்தி,** கருத்தரித்தல், conception.

**பிண்ணாக்கர்,** ஓர் சித்தர், மச்சமுனியின் குரு, a Siddhar — Guru of Machamuni.

**பிண்ணாக்கி வேர்,**

**பிண்ணாக்கு,** எள் முதலியவற்றின் அரைப்பு, oil cake from rape seed, cocoanut etc. see புண்ணாக்கு,

**பிண்ணாக்குக் கிழங்கு,**

**பிண்ணாக்குக் கீரை,** ஓர் வகைக் கீரை, மல மூத்திரம் சரிவரப் போகும்; மேகம் வெட்டைச் சூடு போம், good for venereal diseases, regulates passing of stools and urine see பிண்ணாக்குப்பூண்டு.

**பிண்ணாக்குச் செடி,**

**பிண்ணாக்குப்பூண்டு,** புண்ணாக்குப்பூண்டு, turtle net plant — Meloehia corchorifolia. see பிண்ணாக்குக் கீரை.

**பிஸ்லரியாக்கம்,** குந்துருக்கம், which see.

**பிதரண்டம்,** ஊமத்தை, a plant — Dhatura.

**பிதரம்,** பிளத்தல், splitting; 2. நாணல், a weed.

**பிதரிசனம்,** எட்டி, a tree — nuxvomica.

**பிதலாபம்.** சிவதை, turpeth root — Ipomea turpethum.

**பிதற்றல்,** / **பிதற்றுதல்,** } பொய்பிதற்றல், blabbering as a result of delirium. 2. புலம்பல், raving.

**பிதா,** பெருநாரை. a big stork or crane.

**பிதாபுட்பி,** பேராமுட்டி, Pavonia odorata.

**பிதாரி,** பேராமல்லி. a species of jasmine— Jasminum undulatum.

**பிதாரிகை,** see நிலப் பூசனிக் கிழங்குக் கட்டி. ஓர் வகை மேகக்கட்டி, a hard round abscess as large as a full grown gourd.

**பிதானம்.** அப்பளங்காய்.

**பிதானி,** செம்முள்ளி. red thorny herb. Amaranthus spinosus (rubrum).

**பிதிகம்,** / **பிதிரா,** } பெருங் குரும்பை. which see.

**பிதிரண்டம்,** ஊமத்தை, a plant —Dhatura.

**பிதிராதகம்,** சுண்டைக்காய், a plant — Solanum verbacifolium.

**பிதிர்கானனம்,** / **பிதிர்கிரகம்,** } இடுகாடு, grave yard — Cemetry.

**பிதுக்கம்,** நீர்ப்பைக் குடல் முதலியவற்றின் பிதுக்கம், Hernia. rapture.

**பிதுக்கல்,** அழுத்தி வெளிப்படுத்தல், to squeeze.

**பிதுங்கல்,** வெளிவரக் காணல், protruding or bulging as in swelling or abscess.

**பிதுங்கி,** that which protrudes.

**பிதுரோகமாசி,** நாரை, a bird — heron.

**பிதுர்க்கத்தரி,** முள்கத்தரி, thorny brinjal.

**பிதுர்ரோககணி,** ஓர் கடைச்சரக்கு, a bazaar drug.

**பித்,** பேதித்தல், discriminate between பகைத்தல், create enmity.

**பித்த அருசி ரோகம்,** see பித்த அரோசகம்.

**பித்த அரோசிகம்,** அருசி, Nausea.

**பித்த உக்கிலிட்டம்,** பித்தாதிக்கத்தினால் அழற்சிகண்டு சிவததல், inflammation of the stomach due to excessive bile humour.

**பித்த உபரி,** பித்தாதிக்கம், bilious distemper. 2. ஓர் நோய், a disease marked by excessive burning sensation in the heart, bitter taste in the mouth, thirst, fainting, fits and pain in the chest.

**பித்த எரிச்சல்,** பித்தாதிக்கத்தினுல் உடம்பில் பல விடங்களில் ஏற்படும் எரிவந்தம், burning sensation caused in several parts of the body due to excess of bile in the system.

**பித்த எரிவு,** see பித்த எரிச்சல்.

**பித்தகணம்,** பித்தத்தினுல் குழந்தைகளுக் கேற்படும் ஓர் வகைக் கணம், ஆமகணம், a children's disease characterised by heat in the body, but no rise of temperature due to congenital affection of the bile humour.

**பித்தகண்டகம்,** ஓர் வகை நாவட்சரம், a disease in which the tongue is coloured yellow and studded over with burred blood coloured papillae with burning sensation.

**பித்தகதிப்பு,** பித்தமிகுதி, excess of or profuse secretion of bile in the system — Cholorrhea.

**பித்தகபதொந்தம்,** பித்தம் இருபங்கும் கபம் ஒரு பங்கும் சேர்ந்து நோய் உண்டாகுதல், bile humour and phlegm humour joining together in the proportion of 2 : 1 and creating diseases.

**பித்தகபம்,** நெஞ்செல்லாம் புகைந்து தினமும் இருமலுண்டாகி நெஞ்சுலர்ந்து வறண்டு ஒக்காளமாகி இளைப்பும் ஈளையுமிகுந்து நாவறட்சி தோன்றும் நோய்; a disease marked by slight irritation of the throat, cough nausea, dryness of the tongue and throat, fatigue, and excess of phlegm.

**பித்தகரப்பன்,** குழந்தைகளுக்கு உடம்பு முழுமையும் நமைச்சலுடன் தலைவலி வாந்தி காணும் ஓர்வித கரப்பன் நோய், a skin disease of the children characterised by excessive itching of the skin, headache and vomiting.

**பித்தகரப்பான்,** நடுவுந்தி கரைத்து சுரந்து உடல் வெதும்பி துடையும் கனத்து உளைத்து உடல் கிறு கிறுத்து வரும் ஓர் நோய் (யூகி—1200) a disease marked by bloating of the abdomen, excessive heat in the body, heaviness and pain in the thighs.

**பித்தக்கரடு,** பித்தம் உறைந்து உண்டாகும் பல கற்கள், biliary calculus.

**பித்தகல்,** பித்த பையில் பித்தம் உறைந்து உண்டாகும் கல், gall stone.

**பித்தகாங்கை,** பித்தத்தினுல் உடம்பில் ஏற்படும் சூடு அல்லது அழற்சி, excessive warmth of the body caused by the aggravated condition of the bile humour.

**பித்தகாசம்,** பித்தாதிக்கத்தினுல் உண்டாகும் ஓர்வித காசநோய், a kind of asthma caused by excessive bile in the body. வெள்ளை விழியில் நீர் படர்ந்து மேகத்தைப் போல் நீல காந்தியை யுண்டாக்கி, கருவிழியில் உளுந்து பிரமாணம் வெண்மையாய்த் தோன்றிக் கருமணியிலிருந்து மஞ்சள் நிறமான சலம் வடியும் ஓர் வகைக் கண்ணோய் an eye disease marked by exudation of yellow fluid and white opaqueness of the pupil—Cataract.

**பித்தகாமாலை,** உடம்பு வறண்டு வெளுத்து முகம் கனத்து கைகால் தீப்போல் காய்ந்து விழிநீர் மஞ்சளித்து சாதம்செரியாமல் வயிறு பொருமி கழிந்து வாந்தியினுல் கிறுகிறுப்பும் அசதியும் உண்டாக்கும் ஓர் நோய், மஞ்சட் காமாலை, இது பித்தம் இரத்தத்தில் கலப்பதினுல் உண்டாகும், முகமும் கண்ணும் வெளுத்து உடம்பு கறுத்து வாய் கசந்து சாதம் வெறுத்து இளைப்புண்டாய், நாவறண்டு மலம் வெளுத்து மூத்திரம் சிவந்து காணும் (யூகி — 1200) a disease marked by fever, indigestion. white stools red urine yellow coloured tears, dryness of the skin fatigue etc — Jaundice.

**பித்தகாலம்,** பித்தத்தின் அதிகார காலம்; the time when bile humour. predominates.

**பித்த காய்ச்சல்,** see பித்த சுரம், fever caused by bile humour — bilious fever.

**பித்தகாரகம்,** பித்த காங்கை, பித்தச்சூடு, warmth or heat due to excessive bile humour in the system.

**பித்தகாரி,** பித்த நீரை விருத்தி செய்யும் மருந்து; பித்தநீர் பெருக்கி, drug promoting the secretion or excretion of bile -- Chologogue.

**பித்தகுணம்,** பித்த நாடியின் குணம்.

**பித்த குன்மம்,** வயிறு மந்தித்து வலித்து நெஞ்செரிச்சல், வாய் நீரூறல், ஒக்காளம், கிறுகிறுப்பு இவைகளுடன் வாய் கசப்பும் வியர்வையும் காணும் ஓர் வகைக் குன்ம நோய், an ailment called Pithgunmam marked by excessive perspiration, bitter taste reeling of the head, nausea, excessive salyvation, burning of the chest and dullness of appetite.

**பித்தக் கோளாறு,** bilious trouble or disorder.

**பித்தகேடாரித் தைலம்**, நல்லெண்ணெய் பசும்பால் இளநீர் சமன் கொண்டு கடைச் சரக்கு சேர்த்து வடித்த தைலம்; இதனுல் கண் ரோகம் வாந்தி மயக்கம் நெஞ்செரிவு தேக காந்தல் போம், a medicated oil prepared with gingelly oil, cow's milk; tender cocoanut water and with some bazaar drugs. It cures eye diseases, vomiting, giddiness, burning in the chest, and dryness of the body.

**பித்த கோபம்**, பித்த கொதிப்பு, excitement and increase of bile humour.

**பித்தகோரி**, புகையிலை, tobacco.

**பித்தக்கல்**, see பித்தகல்.

**பித்தக்கழலை**, பித்தாதிக்கத்தாலேற்படும் கழலைக்கட்டி, cyst or tumour caused by bile humour.

**பித்தக்கழிவு**, excretion of bile by the liver — Cholerisis.

**பித்தக்கனல்**, பித்தக் கொதிப்பு, see பித்த கோபம்.

**பித்தக்கிராணி**, பித்தாதிக்கத்தினுல் உண்டாகும் ஓர் வகைக் கிராணிக் கழிச்சல்; வயிறிரைந்து தொப்புள் கடுத்து நொந்து சிவப்பாய்க் கழிந்து வாய் கசந்து காணும் நோய்; (யூகிமுனி-1200) Chronic diarrhoea caused by vitiation of bile humour with the following symptoms — gurgling sound in the abdomen pain in the navel region accompanied by red watery motions.

**பித்தக் கிறுகிறுப்பு**, பித்தத்தினுல் வரும் சுழற்சி, giddiness due to excessive bile humour in the system — see பித்த மயக்கம்.

**பித்தக் கிறுப்பு**, see பித்தக் கிறுகிறுப்பு.

**பித்தக்கிலரி**, கடுகு ரோகணி, Helleborus niger.

**பித்தக்குடல் வாதம்**, hernia.

**பித்தக் குழலழற்சி**, inflammation of the bile duct.

**பித்தக்குழல்**, bile duct.

**பித்தக்குழல் தாபிதம்**, see பித்தக் குழலழற்சி.

**பித்தக்கழிச்சல்**, உள் சுரங்காய்ந்து தாகமெடுத்து வாய்நீர் சுரந்து உள்ளே கொடுத்த மருந்து தங்காது வயிறு பொருமி நானுவிதமாய் மலங்கழியுமோர் நோய்; (யூ—1200) a disease characterised by different kinds of motion with bloated abdomen, vomiting, salivation, thirst and fever.

**பித்தக்குறைவு**, lack of deficiency of bile— Oligocholia.

**பித்தங்கழட்டி**, அதிக பித்தத்தை வெளிப்படுத்து மருந்து, see பித்தகாரி.

**பித்தசத்து**, அழிஞ்சில், a tree — Alangium decapitulum.

**பித்தசமனுக்கி**, சிற்றீஞ்சு, a small species of palm — Phoenix farmfera.

**பித்தசமனி**, மாஞ்ச ரோகணி, pimpernal — Anagallis arvensis.

**பித்தசம்**, பித்த சம்பந்தமானது, that which is due to deranged bile humour; 2. நவ மணிக் குற்றத்தொன்று, a flaw in the nine gems,

**பித்தசயம்**, பித்தாதிக்கத்தினுல் உடம்பு சூடு கொண்டு உடல் கைகால் எரிச்சலுடன் கடுத்து நெஞ்சில் கபங்கட்டி, நீர் கடுத்து அன்னதுவேஷி முண்டாகி இருமல் இளைப் புண்டாதம் ஓர் க்ஷயம், bilious consumption marked by temperature burning of hands and feet, burning during micturation, nausea, fatigue, cough with expectoration.

**பித்தசரீரம்**, பித்தாதிகாரமான உடம்பு, a body in which bile humour in the system supervenes.

**பித்தசலவை**, உடம்பில் எப்பொழுதும் வியர்வை கசிதல், perpetual sweating in the body.

**பித்தசன்னி**, உடம்பு நொந்து, புருவம் நெளிந்து, கண்ணும் வாயுங் கோணி பெண்களின் மேலிச்சையுண்டாகி புலம்பி நகைக்கும் ஓர் வகை சன்னி நோய், a kind of delirium attended with nervous affections and marked by pain in the body, paralysis of the face, desire for woman, raving and laughing.

**பித்தசாந்தி**, பொன்னுங்கன்னி, a creeping plant sessile plant — Alternanthera sessile alias Ikecebrum sessile. This name is given because it allays excessive bilious humour in the system.

**பித்தசிராவம்,** கண் சந்துகளில் மஞ்சள் நிற மாயும் உஷ்ணமாயும் நீர் வடிந்து கொண்டிருக்கும் ஓர் கண்ணோய், a warm water like yellowish blue discharge from the eyes is the symptom of this eye disease.

**பித்தசிலேட்டுமம்,**
**பித்தசிலேற்பனம்,** } பித்தத்தோடு கலந்த சிலேஷ்மம் see பித்த கபம்.

**பித்த சிலேட்டும வக்கினி,** ஆடா தோடை— a plant malabar winter cherry — Adhatoda vesica alias A pubescens.

**பித்த சிலேட்டுமம் சுரம்,** பித்தத்தினால் உண்டான சுரம், fever caused by the combination of bile and phlegm humours marked by sticky salivation, sleepiness, cough, thirst, burning sensation and digust in food.

**பித்தசிலேட்டுமாதிசாரம்,** பித்தத்தினால் தோன்றும் பேதி, diarrhoea caused by vitiated by combination of bile and phlegm humours.

**பித்தசிலேட்டுவிசர்ப்பி,** நுணுக்காய்க் கிரந்தி இதற்குப் பங்கவிசர்ப்பி என்றும் பெயர், a skin disease.

**பித்தசீதளம்,** see பித்த கபம்.

**பித்தசுபாவம்.** பித்தத்திற்கு இயற்கையாகவே அமைந்த குணங்கள், ஆகாரத்தை தனித்து சுத்திசெய்தல், இரத்தத்தை இளக்கி நுண்மையாகிய பாகங்களிற் செலுத்தல், நுரையீரல் முதலிய சில உறுப்புகளுக்கு ஆகாரமாதல், குடல்களில் தங்கும் கபம் முதலியவைகளை நீக்கிச் சுத்தி செய்தல், மலத்தை வெளிப்படுத்தல் போலவன வாம். The character of bile phlegm when normal — digestion of food, making blood thin and supplying it to minute parts, supplying to lungs etc., removing the phlegm humour from the intertines and helping the evacuation of faeces.

**பித்தசுரநாசினி,** கோரைக் கிழங்கு, பித்த சுரத்தைப் போக்குவதால் இப்பெயர் - coray root — Cyperus pertenuis (root of). It destroys the pitha fever hence the name.

**பித்தசுரசமனி,** பெருங்காஞ்சொறி, a twiner large climbing nettle பித்த சுரத்தைத் தணிப்பதால் இப்பெயர். It alleviates the pitha fever.

**பித்தசுரம்,** ஓர் வகைக் கொடூரமான சுரம், a virulent fever caused by exitement of bile humour characterised by the following symptoms - high tempetrature, quickness of the pulse, yellow or red urine, watery stools, reeling of the head, vomiting, bitterness of taste scanty sleep, burning sensation of the body and frequent perspiration.

**பித்தசுழற்சி,** தலை கிறுகிறுப்பு, a form of vertigo associated with the disease or disorder of the stomach — Gastric vertigo.

**பித்தசூடு,** see பித்த காரகம், heat caused in the body by deranged bile humour.

**பித்தசூலை,** உடம்பில் வாயு தங்குவதினால் உஷ்ணங்கொண்டு தலைவலித்து, நாக்கு வறண்டு, நீர் மஞ்சளித்து அசதி கண்டு பொருத்துகள் மோதுகட்டி அசைய வொட்டாதபடி துன்புறுத்துமோர் வகைச் சூலை நோய், thirst and burning sensation in the body attended with an excruciating pain, giddiness loss of consciousness, desire for cold things and ameliorates on application of cooling measures — Colic.

NOTE.— If the colic is of bilious nature, it is accompanied by headache faintness, nausea. or vomiting of billious matters with constipation. The bilious variety of colic is often connected with or caused by a gall stone passing from the gall bladder into the bowels c. f வாயு சூலை.

**பித்தசூலைக்கட்டு,** see பித்த சூலை.

**பித்தசோகை,** உடம்பு வெளுத்து தடித்து, முகம் கண் வெளுத்துத், நெஞ்சு பதைத்து அடிவயிறு கனத்து. விம்மி, நாக்கு ருசியற்று, உதடு மஞ்சளித்து, கை கால் ஓய்ந்து, மூத்திரம் மிக்க வெளுத்திறங்கும் ஓர்வித சோகை நோய், a disease — a kind of anaemia in which the body and eyes are rendered pale, abdomen body swollen, tongue tasteless, lips yellow and limbs weak.

**பித்தசோகைக் காமாலை,** குழந்தைகளுக்கு பித்தநீர் அதிகரித்து, கண் வெளுத்து, உடம்பு முழுவதிலும் அசதிகண்டு, துன்புறுத்தும் ஓர்வகைக் காமாலை, a kind of jaundice due to excess of bilious secretions in the system mixing up in the circulation of blood.

**பித்தச்சுவரி,**

**பித்தட்சயம்,** See பித்தசயம்.

**பித்ததடிப்பு,** பித்தா திக்கத்தினால் உடம்பில் பலவிடங்களில் சதை தடித்து தழும்புகள் ஏற்படும் ஓர் சரும நோய், Urticaria — Nettle rash.

**பித்ததழும்பு,** See பித்தத்தடிப்பு.

**பித்ததாகம்,** பித்தத்தின் கூறினால் தாகவிடாய் உண்டாதல், thirst due to bilious affections.

**பித்ததாகை விரணம்,** அரையாப்புப் புண், அதாவது அரையில் எழும்பும் கட்டியுடைந்து விரணங்கண்டு சீலை நீரும் இரத்தமும் சதா ஒழுகி வலி, அன்னத்துவேஷம, தூக்கமின்மை முதலிய குணங்களையுண்டாக்கும், bubo marked by exudation of blood and pus, pain, nausea loss of sleep etc.

**பித்ததாரை,** see பித்தக்குழல்.

**பித்ததாரை தாபிதம்,** பித்தக்குழல் தாபிதம், which see.

**பித்ததாரைப்புற்று,** cancer of bile duct.

**பித்ததிஞ்சம்,** சுண்டைக்காய், fruit of — Solanum torvum.

**பித்ததிமிரம்,** ஓர் கண்ணோய், an eye disease in which all external objects appear to be invested with different colours of the spectrum or of the rainbow of the glow worm, of the flash of lighting or of the feathers of peacock, or with a dark blue tint bordering in black.

**பித்ததேகக்கூறு,** பித்தாதி காரமான உடம்பின் கோட்பாடுகள், bilious temperament.

**பித்ததேகம்,** பித்தவுடம்பு, bilious body; 2. பித்தநாடி அதிகரிக்கும் உடம்பு, body in which the bile humour supervenes.

**பித்ததோஷம்,** பித்தத்தினால் உடம்பிலுண்டாகும் குற்றங்கள், deffects caused by biliousness in the system

**பித்தத் தடைநோய்,** பித்தம் தடைபடுவதினாலுண்டாகும் ஈரல் நோய், a disease of the liver due to retention of the bile duct from obstruction — biliary cirrhosis.

**பித்தத்தலைவலி,** பித்த கோபத்தினால் உண்டாகும் தலைநோய், a violent and aching pain in the head, accompanied by a sense of scorching vapour being emitted from the nostrils and which ameliorates in the night or on the application of cold.

**பித்தஸ்தானம்,** **பித்தத்தானம்,** நாபி முதல் கண்டம் வரை, the region of bilious humour in the body - from navel to neck.

**பித்தநரை,** இளம்வயதிலேயே வெளுத்தமுடி, premature grayness of the hair caused by excess of heat.

**பித்த நாசம்,** முள்வெள்ளரி, a fruit, a variety of cucumber. See பித்தமகம்.

**பித்த நாசினி,** சீரகம், cumin seed; 2. கோரோசனை, Bezoar.

**பித்த நாடி,** நடுவிரல் நாடி, pulse felt by the middle finger.

**பித்தநிவாரணி,** பித்தத்தை வெளிப்படுத்தும் மருந்து, medicine or drug which increases the flow of bile — Cholagogue.

**பித்தநிறம்,** biliary pigment — Cholochrome.

**பித்தநீர்,** பித்தத்தினாலேற்பட்ட நீர், fluid secreted owing to bilious affections; 2. பித்தத்தின் நீர், gastric juice.

**பித்தநீர்ப்பணைப்பு.**

**பித்தநோய்,** பித்தாதிக்கத்தினாலே உடம்பிற்கு ஏற்படும் நோய், bilious disease.

**பித்தபத்திரம்,** சீரகம், cumin seed.

**பித்தபரணி,** இடவகம். which see.

**பித்தபாண்டு,** பித்தத்தினால் உடம்பு மஞ்சள் நிறமாய் அல்லது இரத்தம் முறிந்து வெளுத்து நெஞ்சில் துடித்து வலித்து பெருமூச்சு காணும் ஓர்வகைப் பாண்டு நோய், இருமலோடு இளைப்பு, கிறுகிறுப்பு உண்டாகும், an anaemic disease attended with paleness or yellowness of the eye and body, throbing of the heart and heavy breathing.

**பித்தபாண்டுசூலை,** வயிறும் துடையும் வீங்கி, பொருத்துகளில் குத்தலுண்டாகி, கண் முகம் மூத்திரம் மலம் கறுத்து மஞ்சள் நிறமாகும் ஓர்வித சூலைநோய், a kind of rheumatic pain due to bilious affection.

**பித்தபாண்டுரு,** See பித்தபாண்டு; 2. செவ்வள்ளி, ஓர் கிழங்கு, red sweet potato — Ipomoea batatas.

**பித்தப்பிரமியமேகம்,** மூத்திரமானது கற்றுருஞ் சாறு நிறமும் நாற்றமும் உள்ளதாய் ஒரு நாழிகைக்கு இரண்டுபடி அளவாக இறங்கும் ஓர்வகை மூத்திரவியாதி, a kind of diabetes with copious discharge of urine.

**பித்தப்பிரமேகம்,** உடம்பு கறுத்து கீல், கை கால்களில் வலி குத்தல் கண்டு குதம் சுய் யம் கடுத்து மஞ்சளாக சீழ் வடிவதுடன் மய க்கம், கிறுகிறுப்பு முதலிய குணங்களையுண் டாக்குமோர் நோய், a disease marked by discharge of yellow pus with irritation from the rectum and penis accompanied by faintness, realing of the head, pricking pain in the joints, arms and legs while the body slowly turns black.

NOTE :— The types which are produced through an exuberance of the deranged Pitham ( bile humour ) as நீல megam, அரித் திரா megam, ஆமில megam, மஞ்சிட்ட megam and சோணித megam, Palliation is all that can be effected in these types as the medicines fail to effect a radical cure as they generally operate on the deranged organ principly affected.

**பித்தப்பிளப்பு,** see பித்தவெடிப்பு.

**பித்தப்பீனிசம்,** மூக்கின் வழியாய் மஞ்சளாக சளி வடிந்து புலால் நாறும் ஓர்வகைப் பீன சம், a type of catarrh marked by a hot, yellowish secretion with rotten smell from the nostrils.

**பித்தப்பை,** பித்தநீர் தங்குவதற்கான நீண்ட சவ்வுப்பை, இது ஈரலின் வலது இதழின் கீழ்ப்பக்கத்திலுள்ள பள்ளத்துள் 4-அங்குல நீளமாகவும், 1-அங்குல அகலமாகவு முள் ளது, Gall bladder — Vesica fellea.

**பித்தப்பைக்கல்,** gall stone.

**பித்தப்பைத்தியம்,** பித்தாதிக்கத்தினுலேற் படும் பைத்திய நோய், lunacy or insanity caused by excitement of bilious humour.

**பித்தப்பை யழற்சி,** inflammation of gall bladder — Cholecystitis.

**பித்தமகம்,** முள்வெள்ளரி. a climber — Cucumis sativus.

**பித்தமதரோகம்,** மதத்தினுல் உடம்பு மஞ்சள் அல்லது சிவப்பு நிறமடைந்து கோப குணத்தை யுண்டாக்கும் ஓர் நோய், a disease marked by excessive anger accompanied by yellow or red colour of the body due to excess of fat caused by bilious derangement.

**பித்தமயக்கம்,** மூளையில் வியாபிக்கிற இரத்த வோட்டமானது, வியாதி, பலவீனம் ஸ்திரீ சங்கை, பெரும்பாடு முதலிய காரணங்களி னுல் விகற்பமடைந்து அதினுலேற்படும் மயக்கம், giddiness caused by bilious affections due to diseases, weakness, menorrhaegia, sexual intercourse and other causes.

**பித்தமருந்து,** medicine effective against bilious diseases — Antibilious medicine.

**பித்தமலடு,** மூத்திரம் மஞ்சளாய் இறங்கும் ஓர் வகை மலட்டு ரோகம், sterility in women marked by yellow urine caused by vitiation of bile humour.

**பித்தமலபேதி மருந்து,** மலத்தோடு பித்தத் தையும் வெளியாக்கு மருந்து, Cholagogue purgative e-g. பித்த கஷாயம்.

**பித்தமாந்தம்,** ஓர் வகை மாந்த நோய், a kind of indigestion due to excess of bile.

**பித்தமாலை,** ஓர் வியாதி, a disease.

**பித்தமுறிமாதர்,** எலுமிச்சம்பழம், lime fruit.

**பித்தமூத்திரம்,** dark yellow or reddish urine indicating the excitement of bilious humour and heat in the system.

**பித்த மூர்ச்சை.** பித்தாதிக்கத்தினுல் உண் டாகும் மூர்ச்சை, swooning arising from bilious causes.

**பித்தமேலீடு,** பித்தாதிக்கம், see பித்த கோபம்.

**பித்தம்,** அதியுஷ்ண ரூபமாக நாபி முதல் கண்டம் வரையில் வியாபித்து உடம்பைக் காப்பாற்றி, சுவாப ரூபமாய் இருப்பதாம், இது இரத்தத்தை யிளக்கி நுண்ணிய நரம்புகளில் செலுத்துவதற்குக் காரணமான வஸ்து, மற்றும் இது உஷ்ண வீரியமும் மஞ்சள் அல்லது இலைப் பசுமை நிறமும் கசப்புடன் கூடியதும் எரிக்கப்பட்ட பின்பு புளிப்பு இரசத்தைப் பெறக்கூடியதாகவும் அன்னரசத்தை இரத்தமாக மாறச் செய்ய வும், கண்களுக்குப் பார்வையும் அறிவை யும் புத்தியையும் கொடுக்கக்கூடிய வஸ்து; இது மூத்திரத்தைப் பற்றிய நோயையுண் டாக்கும். எந்நேரமும் மயக்கத்தையுண் டாக்கிக்கொண்டு கபாலத்தைப் பற்றி நிற் கும், இது சுபாவத்தால் 5 விதமாகும். அதி பித்தம், பீதபித்தம், கடாரபித்தம், சாமள பித்தம், கரிபித்தம் என்பனவாகும்; (உருசி

யைப் பற்றியது). It extends from navel to neck to protect the body. It is green or yellow as the case may be with bitter pungent taste and sometimes sour. It converts chyle into blood and rendering it watery and fit to enter the minutest blood vessels. It lends sight to the eyes and sense and knowledge to the brain. The functions of Pitham consists in metamorphosing the chyle to a protoplamic substance like sperm in men and the ovum in women. It corresponds to metabolism. It generally means both bile and metabolism of tissues as well as the bodily heat which is the product of the latter. It is also viewed by some that Pitham is the heat in carcerated in the bile and the principle agent in performing digestion. Its source is liver. It is a keen, sharp, warm liquid of a blue colour in its normal state and yellowish in its deranged condition. It is transformed into an acid when vitiated or deranged. It is called the internal fire as it forms the heat making factor in the human body. It is secreted into the alimentary canal, and turns all fatty matter into fatty acids. It cures catarrhs, rheumatism, dropsy and urinary diseases. According to the function it is of five kinds:

1. அனற் பித்தம்; 2. இரஞ்சக பித்தம்; 3. சாதக பித்தம்; 4. ஆலோசக பித்தம்; 5. பிராசக பித்தம்.

**பித்தம்கட்டியம்சம்,** உடம்பில் இரத்தத்திலும், பித்தத்திலும் நரம்புச் சத்துகளிலும் இருக்குமோர் வகை கட்டியான கொழுப்புச் சத்து; cholestrin.

**பித்தம்பிடித்தல்,** பைத்தியங் கொள்ளல், to become mad.

**பித்தம்போக்கி,** பித்தமகற்றி, பித்தத்தை வெளிப்படுத்திச் சமப்படுத்து மருந்து, medicine or drug that expels bile — Chologague.

**பித்தம் வெடுவெடுத்தல்.**

**பித்தயஞுசி,** இதிரக் கிழங்கு, which see.

**பித்துயெரிவு,** see பித்த எரிவு.

**பித்தரசரோகணி,**
**பித்தரோகணி,** } கடுகுரோகணி, a purgative drug — Helleborus niger.

**பித்தரத்தம்,** ஓர் நோய், a disease brought about by the excited bile in conjection with the vitiated or agitated blood. The legs become red, swollen and hot with burning sensation — presence of bile pigments in the blood — Cholemia.

**பித்தருட்சை,** ஓர்வகை பித்துநோய், a kind of Pitha disease.

**பித்தரோகம்,** பித்தநோய், biliousness; 2. மயக்கம், giddiness, vertigo.

**பித்தரோசனம்,** பூவரசமரம், Portia tree.

**பித்தர்வாசம்,** பைத்தியக்கார ஆஸ்பத்திரி, bedlam - lunatic asylum.

**பித்தலம்,** பித்தளை, brass; 2. அரசு, Ficus religiosa.

**பித்தலை,** ஓர் யோனி ரோகம், இதனால் பெண்களுக்கு யோனியில் விரணமுண்டாகி, எரிச்சலுடன் மாதவிடாய் வெளிப்படும், a vaginal disease marked by ulcer in the vagina and the menses flows with burnings sensation.

**பித்தல்,** வாய்பிதற்றல், to blabber — raving.

**பித்தவயிற்றுவலி,** biliary colic.

**பித்தவரட்சி,**
**பித்தவறட்சி,** } ஓர்வகைப் பித்த நோய், தலை கனத்து, தாது கெட்டு, தீப்போல் அபான யெரிச்சலுண்டாகி உடம்பை உலர்த்தும் ஓர் நோய், a bilious disease marked by heaviness of the head, burning of sensation of the whole body specially anus, aversion to food, bitter taste in the mouth, delirium and epileptical fits.

**பித்தவரம்,** பலாவிளி, which see.

**பித்தவறட்சிக் கரப்பான்,** உடம்பு முழுவதும் சிறு சிரங்குகள் கண்டு, வெடித்து தினவுடன் சொறியுண்டாகி, தலை கிறுகிறுத்து மூக்கு கரகரத்துக் காணும், a skin disease with itching eruptions and marked by swimming of the head.

**பித்தவாதசுரம்,** fever born of excited wind and bile humours with the symptoms of thirst swimming of the head, burning of the skin, vomiting, pain in all joints, nausea and sleepless ness.

**பித்தவாதபாண்டு**, மலம், மூத்திரம் நிறம் கெட்டுப் புத்தி குறைவுபட்டு வயிறு விங்கி, கால் ஓய்ச்சல் காணும் நோய், a disease marked by swelling of the abdomen loss of intelligence, fatigue and tiresomeness of the limbs and change in the colour of faeces and urine.

**பித்தவாதம்**, உடம்புருகி, தலைவலித்து, மேனி வெளுத்து, கிறுகிறுத்து, கண்ணெரிச்சலுண்டாய், கை கால் திமிர்ந்து உளைந்து வற்றி, கண்ணு முகமும் சன்னிகட்டுமோர் நோய், (யூகி — 1200), a disease caused by combination of bile and wind humours, It is marked by emaciation, headache, paleness of the body, realing of the head, burning sensation of the eyes and numbness of the limbs with boring pain.

**பித்தவாந்தி**, பித்தாதிக்கத்தினுல் உண்டாகும் வாந்தி, vomiting due to biliousness characterised by vomiting of yellow greenish bitter or sour or blood stained matter excessively acid, pungent or bitter taste in the mouth, attended with such complications as fever, burning sensation of the body, thirst parched tongue etc.

**பித்தநீர் வாந்தி**, See பித்தவாந்தி.

**பித்தவாயு**, உஷ்ணவாயு, indigestion.

**பித்தவிக்கல்**, hiccup due to dryness.

**பித்துவித்திருதி**, abscess due to bile humour.

**பித்தவியாதி**, பித்தநோய், disease to biliousness.

**பித்தவிரணம்**, an ulcer bluish yellow in colour and rapid in its growth. It will exude a hot secrection. It is painful and is attended with burring sensation and suppuration. It is surrounded with eruptions of small yellow coloured postules.

**பித்தவிரத்தம்**, See பித்தரத்தம்.

**பித்தவுபரி**, excess formation of bile — Hyper cholia.

**பித்துவூறல்**, itching caused by bile.

**பித்தவெடிப்பு**, பித்தத்தினுல் கை, கால், உடம்பு, உதடு முதலிய உறுப்புகளில் வெடிப்புண்டாகுதல், fissures in the feet, hands, anus etc, due to excess of heat or excitment of bile humour; 2. மருதம் இலையை அரைத்து பசும்பாலில் கலக்கி, சோறுண்டபின் குடிக்கப்போம், leaves of the Terminalia arjuna ground into a paste and taken after food mixed with cow's milk is a good — remedy.

**பித்தவெட்டை**, gleet.

**பித்தவெண்குட்டம்**, செந்தாமரைப் பூவிதழ் போல் சிவந்த வெளுப்பாகவும் பரவி எரிச்சலுண்டாகி மயிர்கள் உதிரும் ஓர் வகைக் குட்டம், a skin disease marked by rosy white patches accompanied by burning sensation and hairs fall out.

**பித்தவெரிச்சல்**, burning sensation.

**பித்தவெள்ளம்**, see பித்தாதிக்கம்.

**பித்தவெறி**, பைத்தியம், madness; ஓர் மயக்கம், delirium.

**பித்தவேகம்**, see பித்தவொழுக்கு.

**பித்தவொழுக்கு**, flow of bile — Cholerrhagia.

**பித்தளம்**, சுண்டைக்காய், a shrub — Solanum pubescens.

**பித்தளை**, ஓர் லோகம்; செம்பும் நாகமும் சேர்ந்தது, an alloy of copper and zinc — Brass.

**பித்தளை**, மலை.

**பித்தளையின் ஊறல்போக்கி**, நிலக்குறோசினை, (notididentified.)

**பித்தளையை யேமமாக்கி**, ஆமிறம், (notknown.)

**பித்தனுசனி**, முசுமுசுக்கை, a climber bristly bryonia — Mukia scabrella alias Bryonia scabra.

**பித்தன்**, பைத்தியக்காரன், lunatic, bedlamite; 2. சிவன், God Shiva.

**பித்தாக்கினி**, சர்க்கரை, sugar.

பித்தாசயப்பை, பித்தாசயம், } பித்துப்பை, gall bladder.

பித்தாசய இரத்தப் பெருக்கு, congestion of liver.

பித்தாசயவலி, hepatic colic.

பித்தாசயவழற்சி, hepatitis.

பித்தாதிகம், பித்தாதிக்கம் } பித்த மிகுதி, excess of bile — excessive secrettion of bile — Cholorrhea; 2. மயக்கல், giddiness, biliousness.

பித்தாதிகரோகம், மயக்கம், Giddiness, delirium; 2. தலை இருப்பு, vertigo.

பித்தாதிசாரம், வாந்தி மயக்கம், வயிற்றினடுவே வலித்து மிக மலம்கழிந்து, அன்னம் செல்லாது வயிற்றெரிச்சலும், தாகமும் உண்டாகும் நோய்; (யூகி — 1200) a disease caused by excited bile characterised by diarrhoea with foetid stools resembling the washings of meat, sometimes red or yellow coloured, thirst pain and burning sensation in the stomache, vomiting, giddiness etc.

பித்தாதிகாசம், பித்த மேலீடு, excess of secrtion of bile in the system.

பித்தாதி மந்தம், கண்கலைக் கருங்காலிக் கட்டையின் நெருப்பைப் போலும் காய்ந்து சிவந்த இரும்புக்கட்டியைப் போலும் சிவக்கச் செய்யுமோர் கண்ணோய், an eye disease in which the blood streaked eye is attended with secretion and a sensation there in of being burnt with fire as well as swelling, suppuration in the affected organ and general perspiration. The eyes become liver coloured and appear as if ulcerated or rubbed with an alkali.

பித்தாந்தம், பெரும் பித்தம், too much of bile.

பித்தாந்தலைக் கொட்டி, ஓர் நீலப்பூஞ் செடி, a flowering plant — Crotolaria verricosa.

பித்தாரி, இதிரக் கிழங்கு, which see.

பித்தாவரணம், (பித்தம்+ஆவரணம்).

பிஸ்தா பருப்பு, சம்போக இச்சை, தாதுபுஷ்டியுமுண்டாம், பெண்களுக்கு பால் சுரக்கும், Pistha. it is aphrodisiac and lactogogue— fruit of the tree Pistacia vera:

NOTE:— This tree is found grown in the forest of Syria, Persia, and the nuts are imported into India by the Kabul traders. The nuts are said to be very nourishing and used in food by rich classes in India. It serves as a tonic and is useful in cases of diabetic The galls are used as an astringent; 2. பேய்க்கொம்மட்டி, a creeper — Cucumis colocynthis.

பித்தி, உடம்பிலிருக்கும் குழாயான பகுதியினது அல்லது உறுப்பினது பக்கம், wall of the tube or other organs of the body; 2. அறுகு, a grass — Cynodon dactylon.

பித்திகம், பிச்சிப்பூ, flower of பிச்சி, which see; 2. சண்பகப்பூ, a very fragrant yellow flower of the tree — Michelia champaca.

பித்திகை, சிறு சண்பகம், a small variety of சண்பகம், which see; 2. இருவாட்சி, a variety of Jasmine; 3. கருமுகை, a shrub with small flowers — Champaka; 4. உடம்பின் உறுப்பினது சுவர் or பக்கம், pertaining to the wall of a cavity — Parietal.

பித்திகைமேடு, பித்திகையெலும்பின் மேற்புறத்தில் குவிப்பாயிருக்கு மோர் பாகம். parietal eminence.

பித்திகையென்பு, கபாலத்தின் இருபக்கத்து எலும்பு, parietal bone of the cranium.

பித்திக்காயம், சுவர்க்காயம், wound of parietes.

பித்திப்பழம். வெண்காரவுள்ளி, which see.

பித்திரா, வன்னிமரம், a tree, Arjuna penance tree — Prosopis spicigera.

பித்து, ஈரற்பித்து, a bitter fluid secreted from the liver of animals; 2. பைத்தியம், madness; 3. மூளைக் கலக்கம், derangement of brain delirium as in cholera etc; 4. பித்தம், bile.

பித்துக்கொள்ளல், பித்துப்பிடித்தல், } பைத்தியம் பிடித்தல் to become mad.

பித்துக்கொள்ளி, பயந்த சுபாவம் உள்ளவர், faint hearted or pusillanimous person.

பித்துப்பை, பித்தமிருக்கும் குடற்பை, gall bladder.

பித்துரியானம், இடகலை நாடி, இடது நாசி வழியாய் ஓடும் மூச்சு, left nostril through which vital air passes.

பித்தெறிவு, பித்தத்திஞல் உடம்பில் ஏற்படும் எரிச்சல், burning sensation due to biliousness.

பித்தேறல், பைத்தியங்கொள்ளல், to get, mad.

பித்தை, ஆண் மயிர், a man's hair.

பித்தோன்மத்தம், கடும் பைத்தியம், devil madness.

பிநாக அப்பிரகம், ஓர் வகை அப்பிரகம், a kind of mica.

பிந்ததாரு, தேவ தாரு, a kind of pine tree—Pinus deodara.

பிந்தியகாலம், சாயுங்காலம், afternoon, 2. பிற்காலம் after ages; 3. கிழத்தன்மை யான காலம். old age.

பிந்து, விந்து, semen.

பிந்துகு, (யூனனி) ஓர்வித பருப்பு, a nut Unani drug.

பிந்துசாரம், ஓர் வடமொழி விஷவைத்திய நூல், a Sanskrit treatise regarding poisons.

பிபாசிதன், பிபாசு, } தாகவிடாய் கொண்டவன், thirsty person.

பிபாசை, தாகம், thirst.

பிபாலிகை, அரசமரம். a tree — Ficus religiosa.

பிபீலவாதம், பீலுவாதம், a system like Epicurian philosophy.

பிபீலிகை ,எறும்பு, ant, emmet, pismire,

பிபீலு, எலம், cardamon.

பிபேரிப்பட்டை, நெக்தண்ட மரம், green heart tree.

பிப்பலகம், முலைக்கண். pores of the nipple.

பிப்பலம், ஓர்வகைப்புல். a kind of grass; 2. அரசமரம், a tree - peepul tree — Ficus religiosa.

பிப்பலி, திப்பிலி, long pepper; 2. ஆனை நெருஞ்சில், thorny shrub—Pedalium murex.

பிப்பலிகை, அரசமரம், a tree, peepul tree — Ficus religiosa.

பிப்பலை, திப்பிலிச்செடி, a plant — Piper longum.

பிப்பல்யாதி சூரணம், திப்புலியை ஆதியாக கொண்ட சூரணம், medicinal powder with long pepper as chief ingredient.

பிப்பாலசம், யானையறுகு.

பிப்பிகை, பல்லழுக்கு, filth in the tooth.

பிப்பிசநாடி, See புப்புச நாடி.

பிப்பிரியம், நீர்க்கடம்பு, a tree - water cadamba — Nanclea purpurea alias Stephegyne parviflora.

பிப்பிலம், பிப்பிலிகை, } அரசமரம், see பிப்பலிகை.

பிப்பிலி, See பிப்பலி.

பிப்பிலிசிகரி, நாயுருவி, a herb — Achyranthes aspera.

பிப்பிலிமூலம், திப்பிலிமூலம், which see.

பிப்பிலியத்தி, பெருநெருஞ்சில், which see.

பிப்பிலியத்தி, நெருஞ்சில், a creeper small caltrops — Tribulus terrestris.

பிப்பீலிகம், பொன், gold.

பிம்பகம், கோவை, a climber — Bryonia grandis.

பிம்பம், கோவை, see பிம்பகம்; 2. யோணி, female genital; 3. ஓணன், lizard,

பிம்பி, பிம்பிகை, } கோவை, see பிம்பம்; 2. தித்திப்புக்கோவை, a sweet variety of கோவை used as vegetable.

பிம்பிகா, ஒரு செடி, a plant — Coccinia indica.

பியாசுகம், வேம்பு, margosa tree — Azadirachta indica.

பியாமகா, பிரண்டை, a climber — Vitis quadrangularis.

பியாரம், ஆடுதின்னாப்பாளை, a bitter creeper —Aristolochia bracteata.

பியாலிகை, அரசு, see பிப்பலிகை.

பியூடம், அமிர்தம், elixir; 2. சீம்பால், the milk of a cow during the first five days after calving.

பியூஷமிர்தம், வசநாவி, Aconite root.

பிய்வேலம், பீவேல், a tree — Acacia farniciania; 2. பீக்கருவேல், same as பீவேல்.

பிரகசனம், பிரகசிதம், } பெருஞ்சிரிப்பு, loud laughter.

பிரகணம், இருப்புத்தண்டம், iron rod; 2, செப்புப்பாத்திரம், copper vessel.

பிரகண்டம், புயவெலும்பு, shoulder bone — Scapula.

பிரகஸ்தகி, காட்டுமா, a tree — Sponolias mangifera.

பிரகதவாதம், பிரகதவாயு, } ஓர் வாயு, a disease.

பிரகதி, கத்தரிச்செடி, brinjal plant.

பிரகத்தி, மகாமேதை, a plant.

பிரகரபுஸ்பி, செவ்வந்தி, a flowering plant — Chrysanthemum indicum.

பிரகரஞ்சம், புங்க மரம்; which see.

பிரகரம், ஓர் வாசனை மரம், a fragrant tree; 2. அகில், which see.

பிரகரி, புன்கு. a tree.

பிரகரிகம், அகில், which see.

பிரகாசகமாது, புங்க மரம், a tree — Indian beech — Pongamia glabra.

பிரகாசத்தி, அப்பிரகம், mica.

பிரகாசம், ஒளி, brightness, lustre; 2. சோதிப் புல், which see; 3. வெயில், sun shine; 4. வெண்கலம், bell metal.

பிரகாசனம், see பிரகாசம்,

பிரகாசாதம், திமிர் பாஷாணம், phosphorus.

பிரகாண்டம், பூமிக்கு மேல் வளரும் அடிமரம் stem of a tree; 2. மரத்தினோர் உறுப்பு, a portion of a tree.

பிரகாரி, நீர்முள்ளி, a thorny herb — Hygrophila spinosa alias Astercantha longifolia.

பிரகாரம், வேங்கை மரம், the kino tree — Perocarpus bilobus; 2. தன்மை, quality, property; 3. விதம், as per according to; 4. காயப்படுத்தல், cauterise, making a wound.

பிரகிருதி, சுபாவம், natural constitution or temperament (in Sankhya Philosophy) the primeval physical principle by whose evolution all things — mental and material — have come to existence.

பிரகிருதி, இயல்பு, nature, natural; the latent or unmanifest supreme nature; 2. சடம், matter; 3. பகுதி, root; 4. பஞ்சபூதம், five elements; 5. பெண், woman; 6. யோனி, female genital; 7. மிருகம். animal; 8. ஆதாரம், root cause; 9. காரணம், cause.

பிரகிருதி குணம், natural qualites or birth or constitutional excellence that one derives from the parents; the inherited state of mental constitution and resistance.

பிரகிருதி சக்தி, primordial power.

பிரகிருதி சுபாவம், Idiosyncrasy.

பிரகிருதிதா, நீர்க்கடம்பு, see பிப்பிரியம்; 2. தேக்கு, teak wood; 3. காகோளி, a plant (not identified.)

பிரகிருதிநூல், இயற் பொருள் நூல், physics.

பிரகுஞ்சம். ஒருபலம், one palam weight.

பிரகுடி, காட்டுமல்லிகை, wild jasmine flower.

பிரகுத்தம், மான்கொம்பு, horn of the deer.

பிரகேலகம், தித்திப்புப் பண்டம், sweet preparations.

பிரகொண்டி, see பிரமி.

பிரகோட்டம், தோள் மூலம், shoulder.

பிரகோபமடைதல், getting excited.

பிரகோபம், கடுங்கோபம், vehement wrath; excitement excitation of doshas.

பிரகோபித்தல், excited as in blood or bile.

பிரக்கணம், குழந்தைகளுக்கு வயிறு பொருமி குடல் புரட்டி வலித்து ஏப்பம் மேல் மூச்சு இளைப்பு ஆகியவிக் குணம் காணும் ஓர் நோய், a children's disease marked by bloated painful abdomen with erutations, heavy breathing and emaciation.

பிரக்கதம், வலம்புரிக்காய், which see.

பிரக்கியம்,
பிரக்கியாதம், } அறிவு, sense, knowledge.

பிரக்கியாணம்,
பிரக்கினை, } உணர்வு, consciousness, sense sound understanding.

பிரக்கிரமம், புயம், shoulder.

பிரக்கினைக்கேடு, மூர்ச்சை, unconsciousness; 2. அறிவு மயக்கம், trance.

பிரக்கினைதப்பல், பிரக்கினை யற்றுப்போதல், losing consciousness.

பிரக்செந்தம், ஆடுதின்னும்பாளை, a bitter creeper — Aristolochia bracteata.

பிரங்காமலகத்தைலம், கரிசாலை, நெல்லி கனி இவைகளின் சாறை முதன்மையாகக் கொண்டு செய்யப்படும் எண்ணெய், medicated bathing oil prepared with the juices of eclipta plant and Indian gooseberry (fruit) as chief ingredients.

பிரங்காமலகம், (பிரங்கராசம் + ஆமலகம்) கரிசாலையும் (eclipta plant) and நெல்லிக்காயும் (fruit of Indian gooseberry.

பிரங்கிரோகம், see பறங்கி ரோகம், ஓர் மேக வியாதி, a disease — Syphilis; பிரங்கிக்காரர்களின் மூலமாய், இவ்விந்தியாவில் தொத்து வியாதியாகப் பரவின ஓர் வித மேக நோய், a venereal disease or syphilis said to have been imported by the French into India.

பிரங்கினி, மலையிலுப்பை, mountain bassia.

பிரசகந்தனம்,
பிரசகந்திகை, } பேதியாதல், purging வயிற்றுளைவு, diarrhoea, dysentery.

பிரசண்ட மாருதம், பலத்தக் காற்று, a dreadful tempest.

பிரசதானம், கொக்கு, stork.

பிரசத்தன், பாலாடை, feeding conch.

பிரசத்தி, சுத்தம், cleanliness.

பிரசந்தன், வேங்கை, a tree. The Indian kino — Pterocarpus marsupium.

பிரசபத்திரிகம், சிறு நீலி, a shrub, dog bite shrub — Indigofera tinctoria.

பிரசபம், see பிரசவம்.

பிரசபோடனம், வீங்குதல், swelling.

பிரசம், கள், toddy; 2. தேனீ, bee; 3. தேன், honey; 4. தேன் கூடு, beehive; 5. வண்டு, beetle.

பிரசரம், infiltration.

பிரசலாகம், பாம்பு, snake. மயிற்றோகை, peaccok's tail.

பிரசவ, பிள்ளைபெறுவதற்குரிய, parturient.

பிரசவ அழுக்கு, பிள்ளை பிறந்த பிறகு கருப்பையிலிருந்து சிலநாட்களுக்கு வெளிப்படும் அழுக்கு, lochia.

பிரசவ அழுக்குச் சிக்கல், பிரசவ அழுக்கு வெளிபடாமலிருந்தல் அல்லது கருப்பையில் தங்குதல், obstruction of lochia or untimely ceasing of lochia.

பிரசவ ஆயுதம், obstetric or mid wifery instrument.

**பிரசவகாரி**, பிரசவ வலியை அதிகப்படுத்திக் குழந்தையைச் சீக்கிரம் வெளிப்படுத்துகின்ற மருந்து, that which promotes the delivery of child — Parturifacient.

**பிரசவகாலம்**, போழ்ந்து காலம், the time of parturition,

**பிரசவக்கழிச்சல்**, கிராணி, puerperal diarrhoea.

**பிரசவக்காய்ச்சல்**. puerperal fever.

**பிரசவக்கால் வீக்கம்**, பிரசவித்த சிலநாள் பொறுத்து மினுமினுத்துக் காணும் கால் வீக்கம், puerperal tumid leg — Phlegmasia doleus.

**பிரசவக்கிராணி** see பிரசவகழிச்சல்.

**பிரசவக்கோளாறு**, labour troubles.

**பிரசவசன்னி**, பெண்களுக்கு குழந்தை பிறந்த பிறகு காணும் சன்னிபாத சுரம், puerperal delivious fever.

**பிரசவ சாதனம்**,

**பிரசவ சிகிச்சை**, பிள்ளை பெறுவதற்காக வேண்டி கருப்பிணிக்குச் செய்யும் சிகிச்சை, midwifery.

**பிரசவசுரம்**, see பிரசவக்காய்ச்சல்.

**பிரசவதாபிதம்**. puerperal inflammation.

**பிரசவத்தடை**, obstructed labour.

**பிரசவத்தாலுண்டான**, **பிரசவத்திற்கடுத்த**, } puerperal.

**பிரசவநடுக்கம்**, பிரசவ காலத்தில் கருப்பையின் வாய் முற்றும் அகலும் சமயத்தில் காணும் நடுக்கம், rigors - most commonly occurring when the mouth of the womb is approaching to its full degree of dilatation during parturition.

**பிரசவநோய்**, puerperal disease.

**பிரசவபந்தனம்**, பூந்தண்டு, a plant.

**பிரசவப்பைத்தியம்**. puerperal insanity

**பிரசவப்பரிகாரம்**, see பிரசவ சிகிச்சை.

**பிரசவப்பின்வலி**, after pain.

**பிரசவப்புரட்டு**, perverse labour.

**பிரசவப்பெரும்பாடு**, சிசு பிறந்த பிறகு அதிகமாக காணும் இரத்தப் பெருக்கு, the great flow of blood after child's birth.

**பிரசவமலினம்**, பிள்ளை பெற்ற வழுக்கு, see பிரசவ அழுக்கு.

**பிரசவமறைத்தல்**, பிள்ளைப்பேறு ஒளித்தல், concealment of birth.

**பிரசவமாக்கல்**, பிள்ளை பெறச் செய்தல், to cause child birth.

**பிரசவமாதல்**, பிள்ளை பெறுதல், to bring forth child - to be in labour.

**பிரசவமுகம்**; பிரசவத்தின் போது முதலில் தோன்றும் சிசுவின் அங்கம் அல்லது பாகம், in midwifery -presentation - the part of the foetus that presents first during labour.

**பிரசவ முக்கல்**, பிண்டத்தை வெளித்தள்ளத்தக்க முக்கல், parturient exertion.

**பிரசவம்**, பிள்ளை பெறுதல், பிள்ளைப்பேறு, கருத்தரித்து 39-ஆம் வாரத்தில் கருப்பையானது தன்னகத்திலிருந்த குழந்தையை வெளிக்குத்தள்ளிவிட்டு. கருத்தரிப்பதற்கு முன்னேயிருந்த நிலைமைக்குப் பழையபடி வந்து நிற்றலாகிய செய்கை. delivery, confinement. accouchment. Parturition - is that process occuring at the expiration of 39 - weeks from conception by which the womb detaches and expels its contents and returns nearly to the condition in which it was previous to impregnation.

**பிரசவமூட்டல்**, to induce labour.

**பிரசவமலினம்**, see பிரசவ அழுக்கு.

**பிரசவவலிப்பு** பிரசவ காலத்தில் அல்லது கர்ப்ப காலத்தில் காணும் இழுப்பு நோய், attack of convulsions occuring late in pregnancy or during labour — Eclampsia.

**பிரசவவலி**, இடுப்பு வலி, அகற்றுவதும் தள்ளுவதுமான வலி, labour pains before delivery.

**பிரசவ வலிப்பு**, puerperal convulsions.

**பிரசவவிசிகம்**, lying in Hospital.

பிரசவவேதனை, See பிரசவவலி.

பிரசவ வைத்தியசாலை, lying in hospital.

பிரசவப்பிரமை, puerperal mania.

பிரசவ வழுக்கு, பிள்ளை பிறந்த 10—15 நாள் வரை யோனித்தாரை வழியாய்க் கொட்டு மழுக்கு, See பிரசவ அழுக்கு.

பிரசவாந்தியநோய், பிரசவ+அந்திய நோய், after pains.

பிரசவித்தல், பிள்ளை பெறல், delivering child.

பிரசவிகம், மருத்துவம், midwifery.

பிரசனம், கருப்பந்தரித்தல், to conceive.

பிரசனு, தேன், honey.

பிரசனிகை, சிசுவின் தாய், mother of the child.

பிரசன்னதரிசனம், பிரசவமுகம் காணுதல், appearance of the presentation part in the vagina.

பிரசன்னமுகம், அலர்ந்த முகம், bright face; 2. see பிரசவமுகம்.

பிரசன்னம், பெண் குறி. genital of a female; 2. பெருவயிறுக்குக் கொடுக்கும் ஒரு ஆயுள் வேத அரிஷ்டம் அல்லது மது, a wine given for dropsy and assimilation of food. It is an Ayurvedic preparation; 3. தோற்றப் படுதல், to make appearance; 4. பிறப்பு, birth.

பிரசா, காய்ப்பாகல், a climbing plant — Momordica charantia.

பிரசாகரணம், புணர்ச்சி, sexual intercourse.

பிரசாகிதம், நீர். water.

பிரசாதம், கர்ப்பமுண்டாக்கு மருந்து, medicine for conception; 2. பிள்ளைப்பேறு, delivery of the child,

பிரசாதருமம், புத்திரதருமம், gift of begetting children.

பிரசாதனம், வெள்ளி, silver.

பிரசாதி, புணர்ச்சி, copulation.

பிரசாதினி, சீதேவி செங்கழுநீர், a plant — Vernonia cencerea.

பிரசாபதி, ஆண்குறி, penis; 2. நெருப்பு, fire; 3. பிதா, father.

பிரசாரம், வேங்கை மரம், Indian kino tree — Pterocarpus bilobus; 2. பிராய்க் கிழங்கு, 3 expansion or excess as bile: extension of doshas.

பிரசாரனம், as in law of Prasaranam an expansion and change of place by a deranged organic principle.

பிரசாரனி, See, கந்தபாதுலியம்.

பிரசாரிணி, முதியார் கூந்தல், which see.

பிரசாலம், வீணுதண்டு, vertebral column.

பிரசாவிருத்தி, புத்திரவிருத்தி, increase of children gift of begetting more children.

பிரசித்தன்.

பிரசிந்து, பேரிலாழம், which see.

பிரசிரங்கிசினி, a disease in which uterus and vagina fall away in a downward direction from their natural position.

பிரசிபரணி, } See பிரஸ்பரணி.
பிரசினிபரணி, }

பிரசிரவணம், மூத்திரம், urine; 2. வியர்வை, sweat.

பிரசினம், சிற்றுடை, a tree — Uraria lagopodioide alias Doodia lagopodioide.

பிரசுபதிரோகம், திமிர்வாதம், numbness; 2. மேகப்புடை, ringworm.

பிரசுப்பிரியம், பூனைக்காஞ்சொறி, a plant — Tragia cannabina.

பிரது, ஓர் கொடி. a creeper; 2. வாழை, plantain.

**பிரசூதம்,** பிள்ளை பெறுதல், delivering the child bringing forth a child — Parturition Accouchement.

**பிரசூத வாயு,** கருப்ப வாயு, a disease of the uterus due to wind humour; 2. see பிரசோத வாயு.

**பிரசூதவைத்தியன்,** மருத்துவன், accoucheur.

**பிரசூதி,**
**பிரசூதிகை,** } பிரசூதம், which see.

**பிரசூதிகழிச்சல்,** see பிரசவக்கழிச்சல்.

**பிரசூதிகாலம்,** பேறுகாலம், time of delivery.

**பிரசூதிகாவாயு,** see பிரசோதவாயு.

**பிரசூதியாதல்,** பிள்ளை பெறல், to deliver child.

**பிரசூதிவேதை,** கருப்பவேதனை, pain of child birth — Labour pains.

**பிரசூனம்,** புட்பம், flower; 2. கனி, fruit.

**பிரசோதவாயு,** பிள்ளைப் பெறுவதைத் தூண்டும் வாயு, இது கருப்பையைச் சுருங்கச் செய்யும், one of the ten vital that induces labour pain and contraction of uterus.

**பிரசோதினி,** கண்டங்கத்திரி, which see.

**பிரச்சனம்,** sacrification.

**பிரச்சி,** மரஞ்சில், a kind of grass — Indian spikenard — Cyperus stoloniferus.

**பிரஸ்தம்,** பதினாறு பலம், a weight of sixteen palams

**பிரஸ்பரணி,** காசத்தைப் போக்கும் ஓர் மூலிகை, a herb that cures asthma and bronchitis.

**பிரஞ்சி காடி,** பறங்கிச் சாராயம், wine; 2. சீமைக்காடி, vinegar.

**பிரஞ்ஞை,**
**பிரஞ்ஞத்துவம்,** } அறிவு, knowledge; 2. உணர்ச்சி, consciousness.

**பிரட்சாளகம்,** கழுவுதல், washing — Cleaning.

**பிரட்சாளனம்,** புண்களைக் கழுவுதல், cleaning the ulcers; 2. பேய்ப்புடல், இலை, வேப்பம் இலை கஷாயத்தினால் செய்யவும், ulcer can be cleaned with the decoction of Neem leaves.

**பிரட்டம்,** பொரித்தது, fried.

**பிரட்டல்,** as in வயிறு பிரட்டல்; ஓர் உணர்ச்சி, a sensation felt in the abdomen as in vomiting

**பிரஷ்டமேகம்,** மூத்திரம் அரிசிக் கஞ்சியைப் போல் இறங்குதல், an urinary disease where in the urine resembles rice porridge or conji.

**பிரட்டிக்கீரை,** a leaf used for dysenteric complaints — Corclorus olitorius.

**பிரட்டுக்கல்,** இராச வர்த்தக்கல், which see.

**பிரட்டுங்கல்,** பேரோசனை, a mineral.

**பிரட்டை,** ஓர் செடி, a plant; 2. மாதவிடாய், menses.

**பிரட்டைக்கீரை,** இதுவே எலிச்செவி, which see.

**பிரணயம்,** புணர்ச்சி, copulation.

**பிரணவத்தாதி,** 1. ஓங்கார மந்திரத்தின் உட்பொருளான இறைவன்; 2. கடவுள்; விநாயக்கடவுள்; 4. முருகக் கடவுள்.

**பிரணவம்,** ஓங்காரம், the mystic letter 'Om'.

**பிரணவமூலி,** கருப்பிண்டம், foetus.

**பிரணூதம்,** ஓர் வித காது நோய், a kind of ear diseases.

**பிரண்டரசம்,** சுத்தரசம், சளி, கோழையை அகற்றும் பிரண்டைச்சாறு, the juice of the adament creeper phlegm in the chest.

**பிரண்டை,** பரண்டை, a climber — Vitis guadrangularis; இதை நெய் விட்டு வறுத்து 8 நாள் 2 வேளை சாப்பிட ஆசனத்தினவு ரத்த மூலம் போம், It relieves irritation in the anus and piles, if fried in ghee, and taken twice a day for eight days:

1. பிரண்டை, adament creeper.
2. நான்முகப் பிரண்டை, bone setter. square stalked wild grape — Vitis quadrangularis.

3. முப்பிரண்டை, vitis with three sided stem.

4. கோப்பிரண்டை, vitis with round stem.

5. களிப்பிரண்டை, சிலந்தி விஷம் காணுக்கடி போம் விரிய விருத்தியாம், good for urticaria.

6. காட்டுப் பிரண்டை, wild variety, seven leaved vine — Vitis sedata.

7. செம்பிரண்டை, small lobed vine — Vitis leunnace.

8. தீம்பிரண்டை, செரியா மாந்தம் சீதபேதி சிலேட்டு மாதிக்கம் போம், cures indigestion, dysentery.

9. புளிப்பிரண்டை, vitis satosa; மார்பு நோய் வயிற்றுவலி, காடியம் போம், cures chest pain, stomach ach, and consumption.

10 நாட்டுப் பிரண்டை, country vine.

பிரண்டையுப்பு, பிரண்டை சாம்பலைக் கரைத்து தயாரிக்கும் உப்பு, Salt extracted from the ashes of the adament creeper.

பிரண்டைக் கிழங்கு, ஓர் கிழங்கு, the root of the climber-cissus quadrangularis — four angled cissus.

பிரதக்கரணம், decompose.

பிரதஸ்பரணி, see பிரஸ்பரணி.

பிரதமகாலம், விடியற்காலம், early morning.

பிரதமனம், a cerebral purgative administered with the aid of a blowing tube.

பிரதமை, கடுக்காய். Indian gall nut (இதற்கு மேல் தோல் சுருங்கி உள் தோல் பற்றுயிருக்கும்) 2. முதல், first.

பிரதரம், பெரும்பாடு, a disease in female where there is great flow of menses — menorrhagia; 2. பிளப்பு, crack.

NOTE:— This is a general term for menorrhagia, dysmenorrhoea, and leucorrhoea.

பிரதனம், பிரதமை. which see.

பிரதாகம், அமுக்கிரா, a plant, horse root shrub.

பிரதாபதி, பாண்டு, a disease marked by anaemia.

பிரதாபம், வெப்பம் heat, temperature; 2. பிரகாசம், brilliancy.

பிரதாபலங்கேச்சுரம். சீதசுரம் மூர்ச்சைபோம்.

பிரதாபலம்,

பிரதாவனம், காற்று, wind.

பிரதானதாது, சுக்கிலம், semen.

பிரதானகுண மூலத்தரு, தேரையர் செய்த ஓர் தமிழ் வைத்தியநூல். a Tamil medical treatise compiled by Theriyer which deals on the quality of medicines and drugs.

பிரமானகுணம், முக்கிய தன்மை, important quality.

பிரதானதமனி, large intestine.

பிரதானத்துவரி, கடுக்காய், gall nut — Terminalia chebula.

பிரதானநாடி, cardiac veins.

பிரதானியம்.

பிரதி, பதில், instead of; in lieu of; 2. எதிர், opposite.

பிரதிகதி, அதைப்பு, swelling.

பிரதிகம், அவல், pounded and flaked rice; 2. குழந்தை, child.

பிரதிகாரணன், காயங்கட்டுவோன், a dresser.

பிரதிகாரம், reaction,

பிரதிகாதனம், கொல்லல், killing,

பிரதிகாலை, தினந்தோறும் காலை, every morning —omni mane.

பிரதிகுரம், யோனிவாயிலில், 2 கை கால்கள் வெளிவந்து வெளிநோக்கல், hands and feet presentation.

பிரதிக்கினம், உடம்பு, body.

பிரதிசமாதானம், மாற்றுமருந்து, see பிரதிமருந்து.

பில்கல், பில்குதல், } கொப்பளித்தல், gargling.

பில்லங்கம், குரங்கு, monkey; 2. தவளை, frog.

பில்லபஞ்சம், எலிப்பயறு, a kind of gram.

பில்லம், கண்ணிமை புருவ முழுமையும் நீர் கட்டித் திரண்டு புடைத்து விம்மிக்காணும் ஓர் வகைக் கணநோய், a disease of the eye lid.

ஓர் கண்ணோய், இமைப்பில்லம், கண்ணிமை அடியில் சதை வளர்ந்து கண்பூ, பீளை, வலி, கூச்சம், நீர் வடிதல், ஆகிய குணங்களுள்ளது. see கண்ணோய்.

பில்லரோகம், சிலேட்டும பித்தங்களினால் பிறக்கும் கண் வியாதி, இமையினுட்புறத்தில் தசை வளர்ந்து துடித்து கண்ணிமைக்கும் பொழுதெல்லாம் அருவி உறுத்தி அதிகமாய் வலித்து, கண் சிவந்து கூசி, கருவிழியில் பூவுண்டாகி, ஓயாமல் பீளைகட்டி, நீர்ப் பெருக்கு முண்டாகுமோர் கண்ணோய், an eye disease caused by phlegmatic and bilious disorders in the system.

பில்லாச்சிவல்லி, Spatholobus Roxburghii. See ஆனைப்பிச்சான்.

பில்லாஞ்சி, கருப்பு பில்லாஞ்சி, ஒரு குத்து செடி, Black honey shrub — Phyllanthus multiflorus; black berried feather foil — Phyllanthus reticulatus.

பில்லி, பூனை, cat; 2. சூனியம், sorcery; witch creft; 3 ஒர்வகைப் பேய், a kind of devil.

பில்லிக்காரன், சூனியம்செய்பவன், a sorcerer.

பில்லிக்குராயன், இலாமிச்சை, a species of grass with fragrant root — Andropogam muricatum.

பில்லிசாரிகை, நரிக்கொன்னை, a tree.

பில்லிசூனியம், ஓர்வகைச் சூனிய வித்தை, black art; with craft; sorcery continued to do mischief.

பில்லியத்ரி, யானை நெருஞ்சில், thorny plant — big caltrops.

பில்லியெடுத்தல், சூனியம் வைத்ததை மந்திர சத்தியால் நீக்கல், to discover and remove the magical articles laid in witch craft to do harm.

பில்லிவெட்டு, ஓர் கண்ணோய்.

பில்லிவைத்தல், ஏவலினால் தீங்குசெய்தல், to bewitch one; 2. சூனியம் வைத்தல், to place magical materials to injure one.

பில்லை, tablet.

பில்லைதட்டல், to make tablets.

பில்லைமருது, See பிள்ளைமருது.

பிழாவல்லியம், நரியிலந்தை, a kind jujuba.

பிழி, கள், toddy, any fermented liquor; 2. பிதுக்கல், to squeeze out; 3. கூந்தற் பனைக்கள்ளு, toddy extracted from talipot.

பிழிதல், கையினால் அமிழ்த்திச் சாறெடுத்தல் சாறு பிழிதல், squeezing to draw out juice from herbs, fruits etc.

பிழிமருந்து, இலை, பூ, முதலியவற்றை நசுக்கிப் பிழிந்து மூக்கிலிடுதல், நசிய மாத்திரைகளை, சாறு அல்லது முலைப்பால் விட்டு ஊறவைத்துப் பஞ்சில் நனைத்து மூக்கில் பிழிதல், juice dropped into the nostrels; breast milk or juice where in the medicine is soaked and then dropped into the nostrils,—Errhine.

பிழியல், தேன், honey.

பிழுக்கை, மலம், as in எலிப்புழுக்கை, the excreta as in rat — Scybala.

பிழை, உயிருடன் இருத்தல், to live, to survive; 2. வியாதியினின்று குணமாதல், to recover from disease.

பிழைகாயம், சொற்ப அல்லது இலேசான காயம், slight injury; 2. பிழைத்துக் கொள்ளக் கூடிய காயம், other than a mortal wound.

பிழைக்கை, உயிர் பிழைத்தல், to out live, to survive.

பிழைத்தல், உயிர் வாழ்தல், to live; 2. பிழைத்தல், to survive.

பிழைப்பித்தல், உயிர் பிழைக்கச் செய்தல், to restore life; 2. உயிர் கொடுத்தல், revivify; 3. சொஸ்தமாக்கல், to cure a disease and make one survive.

பிழைப்பு, சீவிப்பு, livelihood; 2. உயிர் வாழ்தல், recovery.

பிழைப் பூட்டல், see பிழைப்பித்தல்.

பிழையால் வந்த பிள்ளை, சோரத்தனத்தினுற் பிறந்த குழந்தை, illegitimate child.

பிழையில்லா மருந்து, Indallible remedy.

பிளகு, பாக்குமரத்தின் வேர், the root of areca nut tree; 2. பிளவு, which see.

பிளகாரி, சாரணை, which see.

பிளத்தல், அறுத்தல், to split open; 2. எலும்பில் வெடிப்புக் காணல், fracturing; 3. இரு கூருகச் செய்தல், cutting asunder.

பிளந்த நாக்கு, இரண்டு பிரிவான நாக்கு, forked tongue.

பிளம்பு, பிளத்தல், வெடிப்பு, that which had been split, 2. எலும்பின் வெடிப்பு, crack in the bone; 3. வெடிப்பு, fissure.

பிளப்பு சீரகம், சீமைச் சீரகம், இதனுல் மண்ணீரல் வீக்கம் போம், a species of cumin seed.

பிளமாஞ்சு, கடற் பாசியின் சாரமும் பாலும், சீனியும் சேர்ந்துண்டாகும் வெண்ணிறமான களி, இது எளிதில் செரிக்கக் கூடியதும் பலத்தைத் தருவதுமான வுணவு, a kind of food — Blanc manger.

பிளம்பம், வங்கம், plumbago; lead.

பிளவு, பிளப்பு, which see.

பிளவு முருங்கை, தவசி முருங்கை, which see.

பிளவை, விப்புருதி, carbuncle; 2. வெடித்த புண், inverterate ulcer. இது முதுகந் தண்டெலும் பின் மீது மாங்காய் அல்லது எலுமிச்சம்பழம் பருமன் வீங்கி பின் பழுத்து கண்களுண்டாகி புரை யோடி குளிர் சுரம் வலி எரிச்சல் இவைகள் காணும், முதுகந் தண்டல்லாமல் முதுகின் பக்கங்களில் கண்டால் பக்கப் பிளவை என்று பெயர், மார்பில் கண்டால் மார்ப்பிலவை என்பர்; இக்கட்டிகளின் மேல் சல்லடைக் கண்களைப் போல் துவாரங்கள் ஏற்பட்டு அவைகளினின்று தயிர்போல் உறைந்த நீர் வெளிவரும்.

பிளவைக் கொல்லி, இது ஓர் பூடு; இரணம், கட்டி, பிளவை இவைகளைப் போக்கும் ஓர் மூலிகை, இலைக்கள்ளி, a plant that bursts abscess or carbuncle leaf spurge.

பிளவை ரோகம், தசைகளில் பூச்சியுண்டாகி மாமிசத்தைத் தின்று மஞ்சள் நீர் கொள்ளுதல், carbuncle.

பிளாஸ்திரி. களிம்பு, plaster,

பிளி, கழஞ்சி, 2. கள், toddy; 3. அழிஞ்சில், a tree — Rhododendron arboreum.

பிளிகை, இரைப் பையின் இடது பக்கமாய் சுணைந்திருக்கும் உருண்டையான ஓர் உறுப்பு, see பிலீகம்.

பிளிகைத்தாபம், பிலீகத்தாபம், which see. மண்ணீரலுக்கு ஏற்படும் அழற்சி.

பிளிசோதரம், See பிலீககோதரம்.

பிளிச்சக் கீரை, See பிளிச்சிறு கீரை.

பிளிச்சி, சீனக்காரம், alum,

பிளிச்சிறுகீரை, செம்பு அடங்கிய ஓர்வகைக் கீரை, புளியாரை: plant containing copper sorrel.

பிளிப்பிச்சி, foetid holly — Mappia elliptic.

பிளிமபி, புளிச்சக்காய் மரம், Bilimbi tree — Averrhoa bilimbi.

பிளிம்பிக்காய், ஓர்வகைப் புளிச்சைக்காய், fruit of Averrhoa bilimbi.

பிளிர்த்தல், கொப்புளித்தல், gorgling; 2. எதிர்க்களித்தல், emitting liquid from the mouth.

பிளிறல், கிறிப்பார்த்தல், tearing open.

பிளிறு, சேறு, mire.

பிளீகநாளம், See பிலீக நாளம்.

பிளேக்கட்டி, ஒர் சுரக்கட்டி, bubonic plague.

பிள்ளை, அணில், squirrel; 2. அன்றில் பறவையின் குஞ்சு, the young of the bird — Indian nightingale; 3. மரக்கன்று, young of tree as in தென்னம் பிள்ளை; 4. கீரி, mungoose; 5. நாகணவாய்ப் புள், a bird — mainate; 6. இளமையானவன், young lad; 7. கரிக்குருவி, a small black bird; 8. பறவைக்குஞ்சு, the young of birds in general; 9. குழந்தை, child.

1. வெள்ளைப்பிள்ளை, Hemicyclica travancorah.
2. தென்னம்பிள்ளை, young cocount palm.
3. ஊத்தாம்பிள்ளை, urinary — lbadder Vesica urinaria.

4. கீரிப்பிள்ளை, mungoose.

5. அணிற்பிள்ளை, squirrel.

6. குழந்தைப்பிள்ளை, human child.

7. சட்டாம்பிள்ளை, monitor.

பிள்ளைகரைத்தல், கருவழித்தல், to bring about abortion.

பிள்ளைகொடுத்தல், சோரப் புணர்ச்சியால் கற்பிணியாக்கல், seducing a woman and make her conceive.

பிள்ளைக்கட்டி, கருப்பங்கட்டி, an abscess of the womb.

பிள்ளைக்கற்றாழை, ஓர்வகைக் கற்றாழை, இதனால் தலைவலி, கண் குத்து, மூலம், குன்மம், உஷ்ணம், வறட்சி இவைகள் போம், குளிர்ச்சி உண்டாகும், மலசுத்தியாகும், a kind of aloe; See புள்ளிக் கற்றாழை.

பிள்ளைகாக்கும் பேதி, See வலம்புரிக்கொடி.

பிள்ளைக்காளி, ஓர் செடி, a plant.

பிள்ளைக்கிரீச்சரம்.

பிள்ளைக்கீரை, முளைக்கீரை, amaranthus gangeticus.

பிள்ளைக்குறி, பெண்களுக்குக் கருப்பந்தரிக்கும் அடையாளம், symptoms of conceivement.

பிள்ளைக்கேங்கல், longing to have a child.

பிள்ளைக்கோசம், கோஷ்டம், a drug-costus — Costus speciosus.

பிள்ளைக்கோட்டை, அரையாப்பு, venereal bubo about the groins,

பிள்ளைச்செடி, ஓர்வகைச் செடி, a tree — Alexandrian laurel.

பிள்ளைச்சோறு, cooked rice for the child.

பிள்ளைத்தக்கல், கருவழியாதிருத்தல், retention of pregnancy.

பிள்ளைத் தக்காதிருத்தல், கருவழிதல், to miscarry.

பிள்ளைத்தக்காளி, மனத்தக்காளி, a plant — Solanam nigrum.

பிள்ளைத்தாய்ச்சி, கருப்பிணி, pregnant woman.

பிள்ளைத்தாய்ச்சி நோய், woman become subject to various diseases as dysentery. nausea, vomiting, discharge of blood from the uterus, pain in the uterus, dropsical swelling, fever etc. Great care should be taken in the treatment of pregnant woman.

பிள்ளைத்தாட்சிக் கொடி, கெற்பக் கொடி, veins appearing on the abdomen of pregnant woman.

பிள்ளைத் தேங்காய், நாற்றுத் தேங்காய், the best kind of cocoanut for rising nursery.

பிள்ளைத் தேள், ஓர்வகைத்தேள், young scorpion: 2. மட்டைத்தேள், a kind of scorpion.

பிள்ளைத்தோழி, குழந்தை வளர்க்கும் செவிலி.

பிள்ளை நோய், குழந்தை வியாதி, children's disease.

பிள்ளைப்பரிகாரி, மருத்துவிச்சி, midwife.

பிள்ளைப்பால், முலைப்பால், human breast milk.

பிள்ளைப்பிணி, see பிள்ளை நோய்.

பிள்ளைப்பிராயம், பாலப்பருவம்; boy hood.

பிள்ளைப்பிறப்பு, சமுச்சரணம், child birth.

பிள்ளைப் பூச்சி, ஓர் பூச்சி, an insect of — Gryllus.

பிள்ளைப் பெறல், குழந்தையைப் பெறல், to deliver child.

பிள்ளைப்பெருமலடி, மலடி, a barren woman.

பிள்ளை பெறுதல், to give birth to a child.

பிள்ளைப்பெற்ற காய்ச்சல், பிரசவத்தினால் ஏற்படும் சுரம், Puerperal fever.

பிள்ளைப்பேறு, பிரசவமாதல், child bearing; 2. மக்கட்பேறு, child birth.

பிள்ளைப்பேறு பார்த்தல், to attend to delivery.

பிள்ளைமகளிளையோர், இளைஞர், young person.

பிள்ளைமகன், தேங்காய், cocoanut.

பிள்ளைமடல், leaf of cocoanut tree.

பிள்ளைமரம், தென்னைமரம், cocoanut palm.

பிள்ளைமருது, வெண்மருது, a kind of tree — Terminalia paniculata.

பிள்ளைமருந்து, வசம்பு, a medicinal drug — sweet flag — Acorus calamus.

பிள்ளைமை, பிள்ளைத் தன்மை, childish; 2. தலைச்சன் பிள்ளையினின்று எடுக்கும் ஓர் மாந்திரீக மை, a collyrium extracted or prepared from the first born child.

பிள்ளையார் பூ, ஓர் வகைப்பூ, குப்பை வேளைப்பூ, a kind of flower used for Vinayagar - flower of Vinaca rosea ( நித்திய கலியாணிப் பூ ).

பிள்ளையார் வேடங்கொள்ளல், கற்பிணியாதல், conceiving becoming pregnant.

பிள்ளையுண்டா யிருத்தல், கருப்பிணியா யிருத்தல், to be pregnant.

பிள்ளையுண்டாதல், கருதரித்தல், பெண்கள் மாதவிடாய் காலத்தில் 4 நாளும் விஷ்ணு காந்திச் சாறு அகஸ்தியர் லிங்கக் குழம்பில் இழைத்துக்கொடுக்கக் கருத்தரிக்கும், conceivement. If Agastiar linga kozambu is given with the juice of Evolvulus alsinoides.

பிள்ளை வண்டு, ஓர் வண்டு, a kind of bettle.

பிள்ளைவாசி, ஓர் வகைக் கொடி, a kind of creeper.

பிள்ளை விழுதல், கருவழிதல், to miscarry.

பிற இசிவு, a kind of fits.

பிறகது, வலம்புரி, which see.

பிறகரீசம், அகில், a fragrant wood-eagle wood.

பிறகருவி, உடம்பிற்குண்டான 60 தத்துவம், the sixty thathuwas of the body.

பிறகிசநீதம், நெய், ghee—Clarified butter.

பிறகிபத்திகம், அசோகு, a tree — Saraca indica.

பிறகீர்த்தி, சமனத்துவயம், a unknown drug.

பிறகுத்தம், see வஞ்சிக்கொடி.

பிறக்கணம், ஓர் நோய், a disease; 2. ஓர் கணநோய், a disease of the children.

பிறக்கம், மான் கொம்பு, horn of deer.

பிறக்கருவி, see பிறகருவி.

பிறக்கவியம், மயிலாடுங் குருத்து, a tree.

பிறக்கு, பின் புறம், back side.

பிறக்குதல், பிறத்தல், to be born.

பிறங்கல், மலை, mountain.

பிறங்கி, கருநெல்லி, black Indian gooseberry (a rare variety.)

பிறங்கு நாறி, புறங்கை நாறி, see புறங்கைநாறி.

பிறசாதனம், தேக்கு, teak wood.

பிறசாதிகம், தக்கோலம், cubeb pepper — Piper cubeba.

பிறசாதினி, பிறசாரினி, பிறசாரணி, } கொடியார் கூந்தல், a kind of spreading plant.

பிறச்சின்னை, ஓர் மீன், a kind of fish.

பிறஞ்ஞைதப்பல், stupor.

பிறதகி, கரிமுள்ளி, which see.

பிறதனம், கடுக்காய், Indian gall nut.

பிலதுரேயம், see இடவகம்.

பிறதெமம், பிறதேசி, } கடுக்காய், see பிரதேமம்.

பிறத்தல், தாயின் கருப்பத்திலிருந்து வெளிவரல், to come out from the mother's womb — to be born.

பிறத்தி, வழுதலை, which see.

பிறத்திப்பூரம், பிறத்தியகபன்னி, } நாயுருவி, a medicinal plant — Achyrauthes aspera.

பிறநீர்க்கண்டி.

பிறநீர்க்கொள்ளல்,

பிறநீர்க்கோவை, உடம்பில் கனல் மீறி நீர்க்கோவை யுண்டாகிப் பார்ப்பவர்கள் பயப்படும்படி வீக்கங் காணும் ஓர் நோய், a disease in which the body is bloated.

பிறநோய்ச்சுரம், பிறநோய்களினால் உண்டாகும் வேப்பு நோய், Ague associated with other diseases — Catenating ague.

பிறந்த குழந்தை, a new born child.

பிறந்தகோலம், பிறந்தமேனி, } நிருவாணம், stork nakedness.

பிறந்த நாள், சனித்த நாள், உலகத்திற்கு வெளிவந்த நாள், the day when one was born — birth day.

பிறந்தவம், பிறப்பு, birth.

பிறந் தாள், புறங் கால், back of the leg.

பிறந்திளைத்தல், becoming tired of birth, " பிறந்திளைத்தேன் எம்பெருமான் " (திருவாசகம்)

பிறந்தை, பிறப்பு, birth.

பிறபலம், கடுக்காய், Indian gall nut; 2. திப்பிலி, long pepper.

பிறபாலிகா, அவல், the beaten rice.

பிறபேசி, external ligament.

பிறப்பாரி, பிறப்பார், } நாய்வேளை, dog mustard plant — Cleome viscosa.

பிறப்பி, உண்டாக்கு, to originate, to produce; 2. சனிப்பி, to propogate.

பிறப்பிடம், வெளிவந்தவிடம், அதாவது யோனித் துவாரம், vagina; 2. கருப்பை, womb, uterus.

பிறப்பித்தல், குழந்தையை வெளிப்படுத்தல், to cause to be born to get the foetus out of the woms.

பிறப்பிலம், மருட்கற்றாழை, a kind of aloe.

பிறப்பிறப்பறல், பிறப்பு மிறப்பு மொழிந்து காயசித்தி பெறுதல், attain salvation without having any re-birth.

பிறப்பு, விதையிலிருந்து முளைக் கிளம்புவதும், முட்டையினின்று குஞ்சு வெளிப்படுவதும், கருவினின்று பிண்டம் வெளிவருவதும் பிறப்பெனப்படும், germination of the seed, coming of the young from an egg and delivery of the child is known as birth.

பிறப்பு, அச்சம், fear; 2. உற்பத்தி, birth; 3. தாயின் கற்பத்தினின்று வெளிவந்து பூமியில் பிழைத்திருத்தல், to live in the world having come out of the mother's womb.

பிறப்புக்குரிய, பிறப்புக்கிடமான, generative as in organ.

பிறப்புத்திட்டம், the law of generation - See Meltzer's law in Medical dictionary.

பிறப்பு வரிசை, the whole process where by the life is continued by reproduction or rebirth from the lowest stage to the highest stage. This is well explained in the chapter of சிவபுராணம் of Thiruvasagam.

" புல்லாகிப் பூண்டாய்ப் புழுவாய் மரமாகிப் பல்விருக்கமாகிப் பறவையாய்ப் பாம்பாகி பிறந்திளைத்தே னெம்பெருமான் ".

பிறப்பு வாசி, சென்மசுபாவம், in born nature; பிறப்பினாலேற்பட்டது, that which is caused from birth.

பிற மூலம், அஸ்தியில் அனல் ஏறி அபான வாயிலில் கத்திபோல் சதை வளர்ந்து உள்ளும் புறமுமாய் இருந்து கொண்டு மலவாயில் கடுத்து தினவை யுண்டாக்கு மோர் வகை மூலநோய், a kind of piles. Caused by excess of heat in the system and attended with itching sensation — external piles.

பிறரோகி, வறட்சுண்டி, a species of sensitive plant — Mimosa tripuctra.

பிறரோசிதம், See பிறரோகி.

பிறர் மனை நயத்தல், பிறன் மனையாளைப் புணரவிரும்பல், to love another's wife.

**பிறர்முகம் பார்த்தல்,** see பிறர்மனை நயத்தல்,

**பிறலேபம்,** plaster.

**பிறவடை,** கண்ணைச் சுற்றிலும் போடும் பற்று மருந்து, an external medicine intended to be applied round the eye.

**பிறவலி,** கண்டதிப்பிலி, root of long pepper.

**பிறவலி சன்னி,** fever or delirium marked by convulsions.

**பிறவாதசன்னி,** பிள்ளை பெற்ற பெண்களுக்குக் கண்டு துள்ளத்துடிக்கு உயிரைப் போக்குமோர் சன்னி, a fatal disease - a delirium which occurs during the puerperal period and causes death.

**பிறவி,** பிறப்பு, birth; 2. உற்பத்தி, to originate; 3. சகோதரம், issues of the same father.

**பிறவி ஒழித்தல்,** to be free from rebirth.

**பிறவிக் கல்,** இயற்கையான கல், natural stone as opposed to artificial stone.

**பிறவிக் கற்பம்,** பிறவியை ஒழிப்பதற்காக சாப்பிடும் காய கற்பம், rejuvenating drug for getting rid of re-births.

**பிறவிக் குணம்,** இயற்கையான குணம், பிறக்கும்போதேயுள்ளது, natural quality or disposition which is in born - inborn tendency.

**பிறவிக் குருடு,** பிறக்கும்போதே குருடு, இது தாயார் கற்பத்திலிருக்கும்போது வேக மருந்து சாப்பிடல் விஷந் தீண்டல் பத்திய குற்றம் காரணமாகும், born blindness, existing from birth — Congenital Amaurosis.

**பிறவிச் சுபாவம்,** இயற்கைச் சுபாவம் see பிறவிக் குணம்.

**பிறவித்தங்கம்,** இயற்கையா யுண்டாகும் தங்கம், உலகத்தார் பார்க்காத ஆயிரத் தெட்டு மாற்றுத் தங்கம், தங்க ரேக்கு, natural superior gold.

**பிறவித் துயர்,** பிறப்பினாலுண்டாகும் மன வருத்தம், worries of life.

**பிறவித்துவக்கு,** பிறவியின் தொடர்ச்சி, continuity of birth.

**பிறவித்துவந்தம்,** பிறவித் தொந்தம், which see.

**பிறவித் தொடக்கு,** } பிறவித்துக்கு, which
**பிறவித் தொடர்,** } see.

**பிறவித்தொந்தம்,** பிறவி சம்பந்தமான, relating to birth.

**பிறவிநபும் ஸகம்,** congenital impotency.

**பிறவிநோக்கல்,** } பிறக்கத் தொடங்கல்,
**பிறவிநோக்குதல்,** } about to be born.

**பிறவி நோய்,** பிறப்பிலேயுண்டான நோய்; கற்பத்திலூறிய நோய், congenital disease heriditary disease-inborn disease.

**பிறவிப் பாஷாணம்,** இயற்கைப் பாஷாணம், native arsenic as opposed to வைப்பு பாஷாணம், prepared arsenic.

**பிறவிப் பொன்,** இயற்கைப் பொன், native or natural gold as opposed to synthetic gold or alchemic gold.

**பிறவிமயக்கு,** உற்பத்தி யாகும் போதேயுள்ள மயக்கம், natural allurements of life.

**பிறவி மலடு,** இதில் வயிற்றில் 3-மடிப்புகள் விழுந்து இடுப்பு பருத்து உடம்பு தாவித்து பிள்ளை யுண்டாகாமை, in born barrenness or sterility

**பிறவி மறு,** பிறந்த போதேயுள்ள மறு, moles and warts found from the birth.

**பிறவி மூலம்,** Congenital haemorrhoids or piles. It is usually as cribed to defects in the semen and ovum of the parents. The polypic in this case are hardly visible and extremely painful. One suffering from this type of piles gets thinner and thinner every day and eats but very little owing, to impaired digestion and as a result of which a croaking sound is heard in the intestines,

**பிறவிருத்தியாதல்,** மலங்கழிதல், to have motion.

**பிறவி வாசல்,** யோனி வாசல், osexternum; 2. கர்ப்பவாசல், ostium vagina.

**பிறவிழும்,** பவழம், coral.

**பிறவிஜா,** காமம், lust.

பிறவிச்சு, retraction of the muscles of the nape.

பிறவீச்சு சன்னி, (புறவிச்சு) பிடரி வலித்து, நோய் மிகுந்து பேசப்பிடிக்க வொட்டாமல் மயக்கமுண்டாகி தலை கனத்து பாம்பு கடித்த விஷம் போல் உடம்பு நடுங்கித் திமிருண்டாய் நாள் தோறும் இரவில் துன்புறுத்தும், சில வேளை அடுத்தடுத்துக் குத்தல் கண்டு பற்கிட்டி வேர்க்கும், a disease of the nape of the neck marked by pain in the region, hence in ability to speak giddiness, heaviness of the head, shivering of the body, with numbness, and extreme is felt at nights; sometimes there will be sweating and lock-jaw.

பிறவுடலுறுப்பு, other bodily organ.

பிறழ்ச்சி, நடுக்கம், shivering, quivering.

பிறன்மனை, அன்னியன் பெண்சாதி, another's wife.

பிருகாண்டம், சரகண்ட பாஷாணம், a kind of arsenic.

பிருமுட்டி, சிற்றுமுட்டி, a medicinal herb — Pavonia zeylanica; 2. சாயவேர் அல்லது இம்பூரல் வேர் — root of Oldenlandia umbellata.

பிருல்சவ்வு, flakes.

பிருழாடம், மூன்றெழுத்தி லொன்றாகிய 'சவ்வு' one of the three Mystic letters named 'Savvu'.

பிருனுந்திய காலம்,

பிறிதாகி, மாகாளி, the root of a twiner பெருநன்னாரி, bigger variety of Sarsaparilla.

பிறிதேகியம், பொன் முசுட்டை, a twiner —Cissampelos pareira.

பிறியகம், கடம்பு, which see; 2. வேங்கை, the Indian kino tree — Pterocarpus bilobus; 3. பிளவு சீரகம், which see; 4. ஞாழல்; which see — saffron.

பிறியா நங்கை, வேப்பிலை நங்கை, a plant.

பிறுதானிகா, see கருங்கொடி.

பிறுந்தம், கருங்கொடி, which see.

பிறுமிநாசி, see புட்கரமூலம்.

பிறைக்கபாடம், இருதயத்தின் நாடியின் உள்ளுறைச் சவ்வாலான மூன்று மடிப்புகள், இதுதடிப்பு உறப்புமாய் சிறுமுருந்து திரளையுமுடையதாய் வட்டித்த ஓரம் சுவரில் பற்றியிருக்கும், semilunar valve of the heart made of three cusps; they are two in number one situated at the opening of the Aorta and the other at the opening of the pulmonary artery.

பிலறக்காய்ச்சல், மாதத்திற்கு கொரு முறை வரும் காய்ச்சல், fever coming once a month.

பிறைச் சவ்வு, கன்னி முத்திரை, hymen. இது இளம் பிராயத்தில் திரைந்து மடிந்து இளக்கமாயிருந்து வயது வருவதற்கு சற்றுமுன் அகன்று பூரணமாகும், இதன் மத்தியில் துவாரம் உண்டு, இதன் வழியாய் மாத தூதகம் வரும், it is thin membrane by which the vagina is partially closed. It his folded loosely in wrinkles until just before puberty when it becomes developed and expands. It has an opening in its centre for the escape of the menstrual secretion.

பிறை நாடி, See சந்திர நாடி.

பிறை மலர், அகத்தி, a tree — Sesbania grandiflora.

பிறைவளையமாகப் பூசல், See பிரை வளையமாகப் பூசல்.

பிரேனிதம், கெந்தி, sulphur.

பிற்கருவி, உடம்பிற்குண்டான 60 தத்துவம், See பிறகருவி.

பிற்காலம், முதுமை, old age; 2. அந்திய காலம், fag end of life; 3. இறந்த பிறகு, after death.

பிற்சாமம், நான்காஞ்சாமம், fourth period.

பிற்சாரணை, see உரோமகி.

பிற்பகல், மத்தியானத்திற்குப் பின்பொழுது, afternoon

பிற்பலிசாபம், செப்பு நெருஞ்சில், which see.

பிற்பிறவி, அழுக்கு, after birth secundines.

பிற்றிகம், முள்ளி, thorny plant.

பிற்றை, நாளை, to morrow; 2. பிந்திய நாள், the next day.

பினத்தல், பிதற்றுதல், raving.

பினற்றல், see பினத்தல்.

பினுகபாஷாணம், குங்கும பாஷாணம், a kind of arsenic.

பினுத்தல், See பினத்தல்.

பினுவபுட்பி, நேர்வாளம், croton seed plant.

பிணைதல், பிசைதல், to mix with hand.

பின்கரப்பான், ஓர் விரணநோய், a kind of skin disease opposite of முன்கரப்பான்.

பின்கலை, தசநாடியிலொன்று, one of the ten nadis.

பின்கால், hind leg.

பின்சரம், அரிதாரம், yellow orpiment.

பின்சுரப்பு, கடைசியாகச் சுரக்கும் பால், the last milk taken from the teat at any one milking as it is particularly rich in butter as compared with fore milk.

பின்துடரி, see திகைப்பூடு.

பின்பனி, மாசி பங்குனி மாதம், months of January and February when there is mist in the early morning.

பின்பிருக்குவித்தை.

பின்புத்தி, பின் தோன்றுமறிவு, knowledge that comes latter.

பின்மூலம், சிற்றுமுட்டி, root of a medicinal herb — Pavonia zeylanica.

பின்வலி, பிரசவமல்லது புண்களை சத்திரம் செய்த பின் ஏற்படும் நோய், after pains as in delivery or operation.

பின்வளைந்த கருப்பை, retroverted uterus.

பின்வளைவு, பின்மடிப்பு, retroflexion.

பின்றுடரி, see நாயுருவி; 2. பெண்துடரி, opposite முன்றொடரி.

பின்றொடரி, see திகைப்பூண்டு; 2. ஆடையொட்டி, which see.

பின்னகம், மயிர் முடி, hair knot.

பின்னகன், பேதி, diarrhoea.

பின்னங்கால், பின் புறங்கால், hind leg; hind part of the foot.

பின்னங்கை, the arm above the elbow — Brachium.

பின்னடைப்பான், பசிநோயிலொன்று, one of the diseases caused by hunger.

பின்னந்தலை, பிடரி, back of the head and neck.

பின்னந்தொடை, தொடையின் பின்புறம், back of thigh — Ham.

பின்னந் தொடை நரம்பு, தொடை அல்லது முழங்காலின் பிற்பக்கத்து நரம்பு, one of the tendons of the Ham.

பின்னம், குறைவு. defect: 2. பழுது deformity; 3. கழிவு, tear, 4. பராகம், pollen of flower; 5. உறுப்புக் குலைவு, distortion of an organ or limb, 6. சிதைவு; rupture; 7. எலும்பு முறிவு, fracture.

பின்னம், a perforation of any of the cavities or receptacles of the body by the tip of any pointed instrument—Punctured wound or ulcer.

பின்னல், கடற்பாசி, edible seaweed—Alga zeylanica.

பின்னல் கொடி, கிளைகளின் தண்டோ கொழு கொம்புகளின்மேல் பின்னிக்கொண்டு வளரும் ஓர் செடி, twiners.

பின்னற் கொடி, ஒஞான் கொடி, a creeper — Convolvulus racemosus; 2. பெருமுசுட்டை, many flowered bindweed—Ipomoea staphylina.

பின்னற் பாம்பு, sea eel.

பின்னுரி, முதுகின் கீழ்புறம், the lower portion of the back.

பின்னிசிப்பு, பின்னிசீவு, ஓர் இசிவு நோய், opisthotmos. see பாகிராயாமவாதம், தனுஸ் தம்பவாதம், ஓணன் நெய்யினால் தீரும், ghee prepared out of chameleon cures the disease.

பின்னியாகம், பின்னியாக்கம், குந்திரிக்கம், Indian frankincense—Boswellia thurifera.

பின்னிரோவம், முட்கண்டை, a thorny plant — Solanum genus.

பின்னீர்க்கோவை, நீர்க்கோவையினுலுண்டாகும், கோழை வாய் வழியாய் வராமல் உண்ணுக்கு வழியாய் விழுங்கும்படி இறங்கல் as opposed to முன்னீர் கோவை, which see mucus or phlegm getting through the back opening of the nose. This is opposed to முன்னீர்க் கோவை.

பின்னுச்சி, சிசுபிறக்கும்போது அதன் தலையின் பின்புறத்தில் முக்கோண ரூபமாக தோற்றப்படும் ஓர் சிறு குழி, a triangular space at the back of the infants head where occipital and parictal bones meet — Posterior fontanelle.

பின்னுச்சித் தோற்றம், கிரமப்பிரசவத்தைக் காட்டுமோர் குறி, presentation of occipits vertex — a characteristic sign of natural labour.

பின்னேரம், சாயுங் காலம், evening.

பின்னை, புன்னைமரம், a flower tree —Alexandrian laurel — Celophyllum; inphyllum.

பின்னைக்காயளவு, புன்னைக்காயின் அளவு, as big as the ( புன்னைக்காய் ) fruit Alexandrian laurel — Celophyllum insophyllum.

பின்னைநாள், மறு நாள்; next day; 2. பின்னுள், subsequent days.

பின்னைப்பூ, புன்னைப் பூ, flower of Alexandria laurel, see பின்னை.

பின்னையெண்ணெய், பின்னை காயிலிருந்து எடுக்கும் எண்ணெய், oil extracted from the kernel of the fruit of Alexandrian laurel.

பின்னேக்காடு, பிரசவத்தி லேற்படும் பின் வலி, after pains in labour.

பின்னேக்கு, பின் பார்வை, to see behind; 2. சென்ற காலத்தை எண்ணிப் பார்த்தல், to think of the past.

**பீ,** மலம், faeces — excreta; 2. கழுதை விட்டை மரம், ordure tree — Sterculia guttata; 3. பெரும்பீ, coromandel ailanto see பீநாறி.

**பீகசாரி,** இளையபெண், young woman.

**பீகம்,** சீரகம், cumin seed — Cuminum cyminum.

**பீக்கம்,** எட்டிக்கொட்டை, nuxvomica seed.

**பீக்கருவேல்,** ஓர் வகைக் கருவேலமரம், a species of கருவேல், — Acacia farnesiana.

**பீக்காக்கை.**

**பீக்கிலாத்தி,** சங்கங்குப்பி, the armpit shrub wtih a bad smell — Clerodendron inerme.

**பீக்கை,** வசளை, which see.

**பீக்கொஞ்சி,** ஒரு மரம், a tree — Coromandel jamoon alias Eugenia bracteata.

**பீங்காேனுடு,** பீங்கானுடைந்த துண்டு, a broken piece of porcelain.

**பீங்கான்,** வெள்ளைக் களிமண்ணினுல் செய்த பாண்டம், China ware — Porcelain.

**பீங்கான்கண்,** the vitreous humour of the eye — Vitreum; 2. செயற்கை கண், artificial eye.

**பீசகம்,** ஓர் மரம், வெட்பாலை, Tellichery bark — Wrightiana tinctoria; 2. கைகளும் தலையும் யோனி வாயிலே பிரசவ காலத்தில் அடைத்துக் கொள்ளல், presentation of vertex with prolapse of hands.

**பீசகவயம்,** முயற் செவிக்கள்ளி, a kind of spurge.

**பீசகோசம்,** விதைகளை யுண்டாக்கிக் கொண் டிருக்கும் பாகம், pericarp.

**பீசசிங்கி,** ஓர் தைலம், a medicated oil.

**பீசஞ்சம்,** தாமரை மணி, lotus beads.

**பீசதபம்,** பீசரம், orchitis: 2. அண்டவாயு, testitis.

**பீசதாதுவிருத்தி,** a condition in malignant tumour — Anaplasia.

**பீசநரம்பு,** சுக்கிலம் ஓடுவதற்கு கற்றகுழல்; சுக்கிலக்குழல், spermatic cord.

**பீசநாடி,** பீசத்துக்கு இரத்தத்தை யெடுத் துச் செல்லும் இரத்தகுழல், Spermatic arteries.

**பீசநீர்க்கோவை,** ஓதம், hydrocele.

**பீசபந்து,** மாமரம், mango tree.

**பீசபூரசுரசம்,** பழுத்த மாதுளை ரசத்தில் இந் துப்பு சேர்த்து இருதய சூலைக்காகச் சாப்பி டக் கொடுக்குமோர் ஆ. வே. மருந்து, pomegranate juice mixed with Sind salt which is given for heart disease.

**பீசபூரணம்,** கொம்மட்டி மாதுளை, a kind of citron.

**பீசபூரம்,** கொடிமாதளை, a variety of pomegranate.

**பீசப்புல்,** ஓர்வகைப்புல், a kind of grass — Danicum antidotale.

**பீசப்பை,** சுக்கிலம் தங்கும் பை, Sac containing sperm; 2. விரைப்பை, the skin covering the testicles.

**பீசமகம்,** முள் வெள்ளரி, a kind of cucumber.

**பீசமறைவு,** அண்ட மிலாதவன் one with no testicles — Cryptorchism; ,2. அண்டம் கீழறங்காது வயிற்றிலேயே மறைத்திருத் தல், undiscened tests.

**பீசமிருநாள்.** தாமரை வளையம், stem of lotus cut into pieces.

**பீசம்,** அண்டம், testicles; 2. ஆண்குறி, membrum verile; 3. தாமரைப்பூச் சுருள், pericarp; 4. சுக்கிலம், semen verile; 5. விரை, seed; 6. சந்ததி, off spring, progeny; 7. மூலம், origin, cause (as in பீச மந்திரம்); 8. வாலைப்பூ நீர், the essence of fuller's earth; 9. பூரகம், the vital air passing through the right nostril; 10. ஆண் குறியின் கீழே தொங்கும் இரண்டு விரைகள், இது இந்திரிய முண்டாவ தற்கும் ஆண் தன்மைக்கும் ஆதாரமாயி ருக்கு முறுப்பு, one of the two glands that secrete the seminal fluid in males; 11. பீச எழுத்து, a mystic letter — the syllable which forms the essential part of the man tram of any diety.

பீசம்வாங்கல், விரையெடுத்தல், castration, emasculation.

பீசரம், see பீசதபம்.

பீசர்,

பீசலதை, விரைக்கயிறு, spermatic cord.

பீசவாதம், அண்டவாதம், swollen testicles.

பீசவாயு, அண்டவாயு, orchitis.

பீசவிக்கம், விரைவீக்கம், swelling of the scrotum or testis.

பீசருகண்டி, காட்டாமணக்கு, which see.

பீசாட்சரம், ஓங்காரம், the mystic syllable with which the mantram of any diety opens; 2. விந்து, Semen.

பீசாமலம், கொருக்காய்ப்புளி, a thorny tree— Pithecolobium dulce.

பீசானி, விஷப்பாலை, a plant of the species of பாலை having poisonous quality.

பீசி, பீசத்தையுடையது, that which contains the seed.

பீசை, see பீசைபுல்.

பீச்சகத்தி, சிற்றகத்தி, which see.

பீச்சகம், வரகு, a cereal -- Paspalum scrobiculatum.

பீச்சைக்கைவாகு, இடது கைப்பழக்கம், left handedness; See பீச்சைக்கை.

பீச்சங்கு, ஓர் வகை நாற்றமுடைய சங்கஞ் செடி, cleome.

பீச்சங்குழல் } மலசலம் வாங்கும் ஓர் சூத்தி
பீச்சாங்குழல் } ரக்குழல், Syringe.

பீச்சல், கழிச்சல், to purge; 2. தண்ணீர் பாய்ச்சல், to syringe water.

பீச்சாக்கத்தி, }
பீச்சாங்கத்தி, } See பீச்சகத்தி.

பீச்சி, ஓர் அத்தி, wild fig — Ficus asperrima alias Ficus hispida.

பீச்சிபழம், தற்பூசினிப்பழம், water melon — Cucurbita citrullus.

பீச்சிப்பூ, ஓர் வகை மல்லிகைப்பூ, a kind of Jasmine — Jasminum grandiflorum.

பீச்சு, பீச்சல், to syringe; 2. கழிதல், to eject watery stool.

பீச்சுகுழல், See பீச்சங்குழல்.

பீச்சுதல், பீச்சங்குழலினுல் பீச்சுதல், clyster.

பீச்சுப்பிரயோகம், injection.

பீச்சுமருந்து, ஊசி குத்தி இரத்தத்திற் தள் செலுத்தும் மருந்து, injecting medicines through hypodermic syringe.

பீச்சுவிளா, See பீச்சுவிளாத்தி.

பீச்சுவிளாத்தி, ஓர் நாற்றமுள்ள மரம், பெரு மரம், a tree giving bad stink — Sterculia; foetida. 2. ஓர் விளாமரம், a kind of wood apple tree.

பீச்சைக் கால், இடது கால், left leg.

பீச்சைக்கை, இடது கை, left hand.

பீஞ்சல், see பீச்சுவிளாத்தி.

பீஞ்சாசிகம், தகரை, which see.

பீஞ்சுகபழம், கடுக்காய்ப் பழம், fruit of Terminalia Chebula.

பீஞ்செறி, See பீச்சங்கு.

பீடகம்,

பீடபற்பம்.

பீடமம், முள்துளசி, thorny holy basil.

பீடம், குதம், anus.

பீடம், polypus as in nose ear etc.

பீடயூதி, ஒருவகை மல்லி, jasminum humile.

பீடனம், பீடித்தல், suffering from:

பீடன்பாக்கு, மலையாளத்திலிருந்து வரும் ஒரு வகைத் துவர்ப்பு சத்து மிகுதியாயுள்ள பாக்கு.

**பீடிகை ஆசனபந்தனி**, பீடிகை எலும்பு, ஆசனவெலும்பு இவைகளின் கட்டுநார், Sacro ischiatic ligaments.

**பீடிகைக்கவிகை**, பீடிகை எலும்பின் பள்ளம், hallow of sacrum.

**பீடிகைச்சந்துப் பொருத்து**, sacro ilac symphysis.

**பீடிகை நரம்பு**, sacral nerves.

**பீடிகைபுச்ச பந்தினி**, sacro coccygial ligament.

**பீடிகையென்பு**, முள்ளந்தண்டு எலும்புகளில் கீழ்ப்பகுதியில் வால்போல் சிறுத்து முக்கோணமாகக் காணும் ஐந்து எலும்புகள், sacrum; 2. இது கூபகத்தின் பின் பக்கமாயும் முள்ளந்தண்டில் அடிவாரமாகவு மிருக்கிறது.

**பீடித்தல்**, துன்புறுத்தல், inflicting pain; 2. துன்புறல், to suffer through pain or disease.

**பீடிப்பு**, துன்புறுகை, suffering.

**பீடு**, வலி, pain, 2, துன்பம், distress; 3. பெருமை, greatness.

**பீடை**, துன்பம், suffering.

**பீட்சபித்தம்**, உடம்பு முழுமையுந் தடித்து, சிறு சிறு கட்டிகள் எழும்பி சலம் வடிந்து பலவீனம் உள்ளங் கை காதெரிச்சல் முதலிய குணங்களைக் காட்டும் நோய், a disease marked by bloating of the body with small boils, weakness, burning sensation of the palms and soles etc,

**பீட்டை**, இளஞ் சூல், which see; 2. இளங் கதிர், tender head of corn.

**பீதகசுரம்**, a kind of fever.

**பீதகசேபிதம்**, தாம்பூலம், betel.

**பீதகட்டம்**, சந்தனம், sandal.

**பீதகதலி**, செவ்வாழை, a species of red plantain — Muse sapientum ( rubrum ).

**பீதகந்தகம்**, 4 வகை கந்தகங்களு ளொன்று, one of the four kinds of sulphur.

**பீதகந்தம்**, பன்றி, pig.

**பீதகபத்திரம்**, சிறிய முள்ளங்கியிலை, small radish leaf.

**பீதகம்**, அரிதாரம், orpiment; 2. இருவேலி, cuscus root; 3. மஞ்சள், yellow; 4. தேன், honey; 5. பித்தளை, brass; 6. பொன்னிறம், golden colour.

**பீதகலிகம்**, see பீதரோகணி.

**பீதகல்**, பீதரோகணி, which see.

**பீதகற்றாழை**, மருட்கற்றாழை, a kind of aloe..

**பீதகாட்டம்**, செஞ்சந்தனக் கட்டை, red-sandal wood.

**பீதகாண்டகம்**, செம்முள்ளி, a red variety thorny shrub — Barlaria prionitis.

**பீதகாபேரம்**, பித்தளை, brass; 2. மஞ்சள் நிறம், yellow colour.

**பீதகாரகம்**, } வேங்கைமரம், kino tree — Ple-
**பீதகாரம்**, } rocarpus indicus, செம்புளிச்சை.

**பீதகாரம்**, செம்புளிச்சை, which see வேங்கை மரம்,

**பீதகாவேரம்**, மஞ்சள்: turmeric.

**பீதகேசம்**, பொற்றிலைக் கையாந்தகரை, see கரிசாலை.

**பீதகேசரம்**, சிறு நாகப்பூ, a shrub — Mesua ferrea.

**பீதசண்பகம்**, ஓர் வகை மஞ்சள் நிற சண்பகம், a yellow champaca flower tree.

**பீதசந்தனம்**, பொதிகை மலையில் விளையும் செஞ்சந்தன மரம் red sandal grown in the Pothigai or Agasthiar hill in Tinnellavell Dist.

**பீதசம்பகம்**, see பீதசண்பகம்.

**பீதசாரம்**. வேங்கை மரம், see பீதகாரம்; 2. சந்தனம், sandal; 3. செம்மல்லிகை, a red species of jasmine.

**பீதசாரதம்**, சருக்கரை வள்ளி, sweet potato — Ipomoea batatas.

**பீதசாரதி**, வேங்கை, see பீதகாரம்.

பீதசாரம், வெண் சந்தனம்—Sandal Santalum album: 2. வேங்கை மரம், see பீதசாரி; 3. செவ்வள்ளி, a creeper Dioscoria purpurea. 4 செவ்வல்லிக்கொடி, water plant-red Indian water lily — Nymphae rubra.

பீதசாரனம், பீதசாரம், which see.

பீதசாரி, சந்தனம், sandal tree or sandal wood.

பீதசாலம், see பீதசாரம்.

பீதசிம்மகதோஷம், அபத்தியத்தினுல் பிறக்கும், இதினின்று சன்னியும் கிளைக்கும், a disease caused by not observing diet. It may give rise to delirium.

பீதசிலந்தி, ஓர் வகை சிலந்திப் பூச்சி, a kind of spider.

பீதசுகாதீநம், மஞ்சணத்தி அல்லது நுணு, a tree with fragrant flowers and yellow wood —Indian mulberry—Morinda tinctora.

பீதசூதி, செம்மல்லிகை, a red variety of Jasmine.

பீதச்சா, நந்தியாவட்டம், a plant with white flowers — Tabernoe montana coronaria alias Nerium cronarium.

பீததாரு, செம்புளிச்சை, a plant — Erythroxylon monogynum; 2 செங்கொடி வேலி, red Ceylon leadwort — Plumbago zeylanica (rubrum); 3 தேவதாரு, red cedar tree — Bastard sandal; 4. புன்னை, a tree — Alexandrian laurel.

பீததுண்டம், பொன் வாய்ப்பறவை, a kind of bird with yellow beak.

பீதந்தாவாரை, பொன்னுவாரை, a shrub — Cassia auriculata.

பீதத்துருமம்' மர மஞ்சள், tree turmeric — Coscinium fenestratum.

பீதத்துவயம், கஸ்தூரி மஞ்சள். musk turmeric — Curcuma aromatica.

பீதநம், அரிதாரம். yellow orpiment; 2. குங்குமம், saffron powder.

பீதநி, மூவிலைப்புன்னை, a kind of புன்னை with three lobes.

பீதநிலம், மண்பூமி, soil of yellow mud.

பீதநேசம், பித்தளை, brass — compound of copper and zinc.

பீதபத்திரம், மலைக்காசினி, a kind of mountainous plant.

பீதபலம், வில்வம், a sacred tree bael — Crataeva religiosa alias, Aegle marmelos: 2. மஞ்சட் கத்திரி, yellow brinjal.

பீதபித்தம், பித்த நீருடன் தடிப்பான கபநீர் சேர்வதனுல் உண்டாகிய மஞ்சள் பித்தம், a kind of thick bile combined with watery phlegm.

பீதபீசம், வெந்தயம், seeds of fenugreek.

பீதபுட்பி, ஆவாரை, a shrub — Cassia auriculata; 2. கறிப்பீர்க்கு, ridged gourd; 3. பேராமுட்டி, a drug — Pavonia odorata.

பீதபூகம், கொம்மட்டி மாதுளை, a kind of citron.

பீதபூகிதம், செண்பகம், tree with very fragrant flowers — Michelia champaca.

பீதபூதி, செம்மல்லிகை, a red variety of jasmine — Jasminum humile.

பீதபூரம், கசப்பு மாதுளை, a kind of citron.

பீதப்பெண், குங்கும பாஷாணம், a kind of prepared arsenic.

பீதமணி, கனக்க புட்பராகம், one of the nine gems — to per of golden colour.

பீதமி, பத்மினி சாதிப்பெண், highest class of the four classes of women divided according to their lust.

பீதமுகம், See பீதபூரம்.

பீதமுண்டம், தூக்கணங் குருவி, pendulus or loxia bird.

பீதம், அரிதாரம், yellow orpiment; 2. பொன், gold; 3. சந்தனம், sandal; 4. நீர். water; 5. ஓர் வகைச் சாந்து, a kind of ungeant; 6. பொன்னிறம், gold colour; 7. மஞ்சள், turmeric; 8. அசோகு, asoka tree — Saraca indica; 9. அச்சம், fear; 10. சடைச்சி, a plant; 11. குடித்தல், drinking; 12. நான்கு வித வச்சிரங்களில் ஒன்று, a gem yellow coloured diamond.

**பீதயூதி**, செம்மல்லிகை, a species of jasmine whose flowers are red tinted.

**பீதராசம்**, பொன்னிறம், gold colour.

**பீதராசவர்த்தம்**, ஓர் வகையான மஞ்சள் நிறமான இராசவர்த்திக்கல், a kind of yellow precious stone of the species of Lapis lazule.

**பீதரோகணி** } **பீதரோகிணி** } கண் ரோகங்களுக் குபயோகிக்கும் இமயமலைச் சாரலில் விளையும் ஓர் செடி; இதன் வேரினுல் கருவிழி நீலகாசம் கிருஷ்ண மண்டலம் இமை நீர்ப்பில்லம் முதலியவைதீரும், a plant growing in the regions of Himalayas whose root in useful in eye diseases Root is of yellow colour hence the name; gold thread — Thalictrum foliolosum.

**பீதர்**, மஞ்சள் நிறம், yellow colour.

**பீதலகம்** } **பீதலம்**, } பித்தளை; brass — combination of copper and zinc.

**பீதலோகம்**, பித்தளை, brass. See பீதலம்.

**பீதவண்ணம** } **பீதவர்ணம** } மஞ்சள் நிறம், yellow colour; 2. கடுக்காய், a variety of Indian gall nut; 3. செவ்வள்ளி, red sweet potato.

**பீதவ்தகம்**, மஞ்சள் வண்டல், yellow precipitate.

**பீதவாணன்**, 20 மேகங்களிலொன்று, one of the twenty kinds Mega diseases.

**பீதவிளா**, பொன்னிறமாகக் காய்க்கும் விளா.

**பீதள்**, நெருப்பு, fire; 2. சூரியன், sun.

**பீதன்கம்**, புனம்புளி, a plant.

**பீதனம்**. கடுக்காய், Indian gall nut; 2. இச்சி, a tree.

**பீதனி**, மஞ்சள், turmeric; 2. மூவிலைப் புன்னை, See பீதநி; 3. முன்னைமரம், See முன்னை.

**பீதனேகம்**. பீதலகம், which see.

**பீதாந்தலைக்கொடி**, Crotoleria venucosa.

**பீதாப்பிரகம்**, ஓர்வகை மஞ்சள் அப்பிரகம், இதில் தாம்பிரம் வங்கம் இவைகளின் குணங்கள் இருக்கின்றன, a yellow variety of mica. It has properties of copper and tin.

**பீதாரு**, வெள்வேல், babul tree with white bark—Acacia leucophloea or A. ferruginea.

**பீதி**, அச்சம், fear; 2. குடிப்பு, drink; 3, நோய் பயம், morbid; anxiety see நோயாளி; 4. மனோபயம், hypochondriasis.

**பீதிகை**, செம்மல்லிகை, red jasmine — Jasminum humile; 2. பொன்மை, yellow or gold coloured unguent; 3. மஞ்சள் நிறம், yellow colour.

**பீதை**, பொன்னிற பூவுள்ள மருதோன்றி, a shrub with yellow fragrant little flowers — Lawsonia spinosa; 2. மஞ்சள், turmeric.

**பீத்ததுருமோதி**, சோதிவிருட்சம், which see.

**பீத்தரு**, (பீ + தரு) பெருமரம், see பீத்தாரு.

**பீத்தாரு**, தேவதாரு, a fragnant wood tree — Bastard sandal; a kind of pine tree — Erythroxylona aureolatum; 2. பெருமரம், see பீநாறி and பீத்தரு.

**பீத்தாருசருமம்**, பெருமரத்துப் பட்டை, bark of பெருமரம்.

**பீத்தாளி**, முசுக்கட்டான் பூச்சியைப்போல் முசுமுசுப்பாயும் இலைமுனை கூராகவும் மேற் பக்கம் ஊதா, சிவப்பு, சாம்பல் நிறமாகவும் கிள்ள பால்வடியும் ஓர் பூடு, a kind of plant.

**பீத்தும்பை**, dung tumbay — Justicia ciliaris.

**பீத்தோல்**, மேற்றோல், epidermis.

**பீநண்டு**, வயல் நண்டு, common crab found in the holes of rice fields.

**பீநாங்கிதசுரம்**, ஓர்வகைச் சுரம், a kind of fever.

**பீநாத்தி**, see பீநாறி.

**பீநாறி**, பெருமரம், a tree with bad odour — Sterculia foetida; 2. சங்கங்குப்பி, cleome; 3. இருள்செடி, which see; 4. குப்பைமேனி அல்லது நித்திய கல்யாணி — vinca rosea.

**பீநாறிசங்கங்குப்பி**, see பீநாறி.

**பீநாறிச்சங்கு**, பிச்சங்கு, which see.

**பீநாறிப்பட்டை**, பெருமரத்துப் பட்டை, bark of Sterculia foetida.

**பீநாறியிலை**, பெருமரத்தினிலை, leaf of Sterculia foetida.

**பீநாறியெண்ணெய்**, medicated oil prepared with Sterculia foetida.

**பீநாற்றமரம்**, See பீநாறி.

**பீநிசக்கிருதம்**, பீனிச நோய்க்கு பயன்படுத்தும் மருந்து நெய், medicated ghee useful for diseases of the nose.

**பீநிசம்**, See பீனிசம்.

**பீநிலம்**, Sapindus foliatus alias S. emarginatus.

**பீந்தோல்**, பீத்தோல், epidermis.

**பீபா**, Holigarna.

**பீப்பாக்கு**, நுங்குப்பாக்கு (நுங்கைப் போன்ற இளம்பாக்கு) tender areca nut with bad smell.

**பீமசாரி**, see மதகரி வேம்பு.

**பீமபீசம்**, ஓர் வகை அண்டநோய், a kind of testicular complaint.

**பீமமண்டூரம்**, யவட்சாரம், திப்பிலி, மிளகு, சுக்கு, மோடி, சித்திர மூலம், சம எடை கொண்டு 16 பலம் மண்டூர பற்பம் சேர்த்து இரும்பு பாண்டத்தில் இதற்கு 8 பங்கு கோமூத்திரம் விட்டு கட்டியாகும் வரையில் கிளறி இறக்கி, கடுக்காய் அளவு சாப்பிட 7 நாள் கொள்ள பரிநாம சூலை போம், a preparation with iron dross or impure of iron (Ferroso ferric oxide) and cow's urine as chief ingrediants prepared as mentioned above. It is useful for Parinama soolai.

**பீமம்**, பருமை, bulkiness; 2. அச்சம், fearfulness.

**பீமரம்**, பீநாறிமரம், tree with offensive smell — Sterculia foetida.

**பீமுக்கு மரம்**,

**பீயங்கன்**, இரசம், mercury.

**பீயாலம்** } **பீயால்**, } காட்டு மாங்காய்ப் பருப்பு, அதாவது சாரப்பருப்பு. wild mango pulp — kernel of Buchanania latifolia.

**பீயூசம்**, அமுதம். nector; 2. இளம்பசும். பால், milk of the cow which is young milk of the cow which has a very young calf.

**பீயை**, ஓர் நாறும் சணல், a kind of hemp — Tetrameles nudiflora

**பீரங்கிலோகம்**, ஓர் வகை லோகம், gun metal.

**பீரத்தைலம்**, பூவரசத் தைலம், a medicated oil prepared the fruit. bark of Portia tree, useful for skin disease.

**பீரபூதம்**, மாதுளை, pomegranate tree — Punica granatum.

**பீரமந்தம்**, அரசு, peepal tree — Ficus religiosa

**பீரம்** பீர்க்கு, a vegetable - ridge gourd — Luffa acutangula; 2. பூவரசு, portia tree; 3. வாகை மரம், flowering tree — Mimosa; 4. பலம், strength.

**பீரிடல்**, (இரத்தம்) வேகமாய்ப் பாய்தல், gushing.

**பீரிட்டடித்தல்**, } **பீரிட்டோடல்**, } இரத்தம், முலைப்பால் வேகமாய்ப் பாய்தல், to flow very rapidly — streaming.

**பீரிதம்**, சதகுப்பை, dill seed — Anethum sowa.

**பீரு**, வெள்ளாடு, goat; 2. புலி, tiger; 3. புருவம், eye brow.

**பீருகம்**, ஆந்தை, owl; 2. கரடி, bear.

**பீருகா**, பீதரோகணி, which see.

**பீருசாக்கல்**, ஆகாய நீல நிறம் அல்லது பச்சை நீலநிற சாதி கல், Ferooza — Turquoise stone.

**பீருதந்தி**, தண்ணீர் விட்டான் கிழங்கு, water root — Root of Asparagus surmentosus.

பீரும்பீர்க்கு, பூவரச மரம், Portia tree—Thespesia populnea.

பீரோத்தம், முருங்கை, a tree — Moringa, see சிறுமுருங்கை a plant.

பீர், அச்சம், fear; 2. பீர்க்கு. which see; 3. முலைப்பால், woman's breast milk.

பீர்க்கங்காய், கறிப்பீர்க்கு, ridge gourd — Luffa acutangula.

பீர்க்கங்காரம்,

பீர்க்கு, ஓர் கொடி, a climber ridge gourd climber, 2. பேய்ப்பீர்க்கு, a wild bitter kind gourd.

பீர்ச்சாங்குழல், see பீச்சாங்குழல்.

பீர்ச்சுதல், பீரிடச் செய்தல், to cause streaming as in blood or woman's milk, 2. மலங் கழித்தல், to ease.

பீர்த்தட்டி., மிக்க சுரங்காய்ந்து குடித்தவர் களைப்போல் தலை சுற்றி வாய் பிதற்றி வயிறு உப்பி கழிந்து நாக்கு கறுத்து விக்கல் இளைப்பு தாகங்கண்டு பத்து நாளையில் கொல்லும் ஓர் சன்னி, a delirious fever marked by high temperature, realing of the head, raving diarrhoea with bloating of abdomen, black tongue, hiccup thirst etc. It proves fatal in ten days.

பீர்மாந்தம், குழந்தைகளுக்கு வயிறு பொருமிப் பால் நிறமாகக் காணும் ஓர் வகை அசீரண பேதி, a diarrhoea in children characterised by milky white motions, with gurgling sound in the abdomen which is caused by indigestion.

பீர்மோதினி, மல்லிகை, jasmine.

பீலகம், எறும்பு, ant.

பீலகயம், செந்தாழை, shrub, a reddish yellow variety of pandanus — Fragrant screwpine—Pandanus odoratissimus.

பீலாம் கண்ட சோலார் மணி, — Moraca chinencis.

பீலி, பனங்குருத்து, shoot of palmyra palm; 2. பொன், gold; 3. மயில், peacock; 4. ஓர் வியாதி, a disease; 5. நத்தையோடு, shell of the snail.

பீலிகசோபை, சுரக்கட்டி, enlargement of spleen.

பீலிகநோய், மண்ணீரல் நோய், disease of the spleen,

பீலிகம், மண்ணீரல், spleen, வயிற்றில் மேல் இடதுபக்கமுள்ள ஓர் மாமிச கண்டம், an abdominal organ stituated in the left hypochonderic region.

பீலிகை, வயிற்றில் மண்ணீரலைப் பற்றிக் குழலி போல் திரண்டு குறுக்கே கிடந்து புரளவும் மேல் நோக்கி ஏறவும் செய்து ஓக்களித்து அன்னத்தைத் தள்ளி பலங் குறைந்து புளித்தேப்பமிடும் ஓர்வகை நோய், a disease of the spleen attended with loss of appetite, belching weakness, vomit etc.

பீலிகைக்கட்டி, மலத்தை மறுத்து மந்தித்து வயிற்றினில் பிரண்டு, பலத்தை குறைத்து ஈரல் பெருகிக் கனத்துத் திரண்டு சாப்பாடு குறைந்து ஓக்காளமும் ஏற்படும் காணும், (யூகிமுனி—1200) enlargement of spleen characterised by constipation, loss of appetite, big abdomen, nausea, eructation etc.

பீலிகை வாயு, மண்ணீரல் கெடுதியால் நேரும் ஓர் வித வாயு நோய், a disease of the spleen மலத்தை மிறுக்கும், மந்திக்கும், உடம்பினில் பலத்தைக் குறைந்து, ஈரல் பெருகி கனத்துத் திரண்டு சாப்பாடு குறைந்து ஓக்களித்து ஏப்பமுண்டாக்த மோர் வாயு, the symptoms are almost as in பீலிகைக் கட்டி but there will be excess of wind humour. see பீலகை க்கட்டி.

பீலிகோதரம், மண்ணீரல் வீங்கி வயிறு பெருத்துக் காணுமோர் நோய், enlargement of spleen with the dropsy of the abdomen. its symptoms being lasstitude, low fever; impaired digestion, loss of strength, collection of fluid in the abdomen, jaundice — see பழஞ் சுரத்துக் கட்டி.

பீலிக்கினி, சிவதை, a plant with purgative effect — Ipomaea turpethum.

பீலிவாகை, stipulate sirissa — Albizza stipulata.

பீலு, உள்ளங்கை, plam of hand; 2. உகாய் மரம், tooth brass tree — Salvadora persica alias S. indica: 2. அணு, atom.

பீலுகம், சடைச்சி, which see; 2. கரடி, bear.

பீலுவாதம், வைபீல வாதம், a logical reasoning that the world was formed of atoms.

பீலுவாதி, வைபீலவாதி, Epicurean philosopher.

பீவண்டு, ஒரு வகை வண்டு — a kind of beetle.

பீவரம், ஆமை, tortoise; 2. பருமை, bulkiness.

பீவரி, அசுவகெந்தம் அல்லது அமுக்கிரு, horse root — Withania somnifera; 2. பருவப் பெண், young girl; 3. பசு, cow.

பீவேலம், } ஓர் வகை வேலமரம், stinkink
பீவேல், } acacia — Acacia fernesiana.

பீவேலிகம், வேலிப்பருத்தி, a twiner — Daemia extensa.

பீவை, நீர், water.

பீழம், பீலுக்கிமரம், a tree.

பீழை, கண் பீழை, a plant — Carey a racemosa.

பீழைசாறல், கண்ணில் பீளை காணுதல், to run eyes; gummy secretion of the eyes.

பீழைவச்சிரம், வடப்பூலா, a kind of Poola shrub.

பீளல், பெண்குறி, genital organ of the female.

பீளை, கண்ணழுக்கு, gummy secretion from the eyes 2. ஓர் வகைக்கறிக்கீரை, a plant; it has lithontriptic and antilithic actions — woolly caper—Achyranthes lanata.

பீளைக்கண், பீளைசாரும் கண், Bleared eyes.

பீளைசாரல், பீளை கண்ணில் கட்டல், rheum in the eyes.

பீளைசாறி, ஓர் பூடு, a herb.

பீளைசாறுகை, பீளைசாறும் ஓர் வகைக் கண் நோய், bleared eyes, 2. பீளைசாறுதல், lippitude.

பீளைசேர்தல், பீளை சாறுகை, which see.

பீளைதள்ளல், see பீளைசாரல்.

பீள், கருப்பம். சிளை, embryo foetus.

பீள்வாயு, கருப்பவாயு, a disease of the uterus due to wind humour.

பீறல், கிழிதல், tearing of the skin.

பீறிப்போடல், சதை கிழயச் செய்தல், to lacerate or tear in pieces.

பீறு, கிழிதல், laceration; 2. குதம், anus.

பீறுண்டுசாதல், மிருகங்களினுல் கிழிபட்டு இறத்தல், to die of lacerated wounds caused by wild beasts mauled by wild animals.

பீனக்கி. நாக்குப்பூச்சி, earth worm roundworm of the intestines.

பீனங்கண், இரசம், mercury.

பீனசக்காமாலே, மூக்கில் சளி பிடித்தலால் வரும் காமாலே, Catarrhal jaundice.

பீனசக்காய்ச்சல் } மூக்கு சளி பிடித்தலால்
} வரும் சுரம், catarrhal
பீனசச்சுரம் } fever.

பீனசக்கிருதம். பீனசத்துக்கு உபயோகிக்கும் ஓர் மருந்து நெய், a medicated ghee useful for diseases of nose.

பீனசக்குறட்டை, ஓர் வகைக் குறட்டைப் பூடு, a climber; a variety of bitter gourd that cures catarrh of the nose — Trichosanthes laciniosa.

பீனசத்தைலம், நல்லெண்ணயும் நொச்சிச் சாறும் சேர்த்து காய்ச்சி இறக்கிய தைலம், a medicated oil prepared with gingelly oil and juice of Vitex regundu (five leaved chaste tree) useful for nasal affections.

பீனசப் புல், ஒரு வகை புல், a kind of grass.

பீனசம், சிரசில் கனலெழுந்து சூலேயால்ரோகம் அதிகரித்த சில்போலும் சிராய் போலும்காணப்படும் ஓர் வித மூக்கு வியாதி; இதுபனி காற்றில் திரிவதாலும் குளிர்ந்த நீரில் முழுகுவதாலும், மிதமிஞ்சிய போகம் செய்வதாலும் மிகு நித்திரை மூக்கில் தூசியடைதல் முதலிய காரணங்களினுல் உண்டாகும், mucous running off through the nostrils due to an inflammation or ulceration in the head or to cold affection the nose or excessive indulgence in sexual intercourse, heating of head entrance of the minute particles of dust or smoke into the nostrils excessive application of heat or cold, voluntry retention of stools and urine; diseases of the nose.

பீனச வகைகள்: different varieties of Peenasam and their symptoms:

1. வாத பீனசம் — நாசி வறண்டு நீர் வடிந்து சளி நாற்றமில்லாது வரல்.

   Vatha (wind humour) Peenasam — dryness of the nose, smell less mucous oozes out from the nose.

2. பித்த பீனசம்— மஞ்சள் சளி வடிந்து புலால் நாற்றம் வீசுதல்.

   Pitha (bile humour) Peenasam—yellow mucous with bad smell comes from the nose.

3. சிலேட்டும பீனசம், —நாசி மாறி மாறி யடைத்து முத்துப்போல் நீர் வடிந்து நாறும், துணுக்குச் சளி விழும், மூக்கில் குத்தல் உண்டாம்.

   Silesma (phlegm humour) Peenasam. each nostril is blocked alternately while clean fluid flows from the other and occasionally a bit of mucous may come out pricking pain is present.

4. நீர்ப் பீசனம்— நாசி நீர் வடிந்து மழை காலத்தில் தும்மல் கழுத்து வலி பிடரியும் முகமும் ஊரல்.

   Neer (water) Peenasam fluid runs down from the nose and during rainy season, sneezing, pain in the nape.

5. சீழ்ப்பீனசம்— அதிக சூட்டினுல் கால் முதல் நாசிவரை புண்ணுகி சீழ் வடிந்து தலைவலி காணல்,

   Sigh—(pus) Peenasam-pus comes from the nose and causes head ache. It is due to inflammation.

6. இரத்த பீனசம்— கபாலத்தில் வட்ட வட்டமாய் புண்ணுகி நாசி வழியாய் உதிரம் வரும், தலை வலிக்கும்.

   Raktha (blood) Peenasam, blood oozes from the nose, head ache is felt.

7. சிராய்ப் பீனசம்— நாசியில் ஈருள்ளி கூடுபோல் சீழ் திரண்டு மணம் தெரியாது விடாது தலை வலிக்கும்.

   Sirai — Peenasam is characterised by constant head ache loss of smell, and some solid substance of the size of garlic frequently falls from the nose.

நெல்லிமுள்ளி, கடுக்காய், கஸ்தூரி மஞ்சள், கையாந்தகரைச் சாறு விட்டரைத்து, தலை உடம்பில் தேய்த்து 5 நாளைக்குஒருதரம் முழ்கிவரப்போம் to cure this disease grind Indian gooseberry, gall nut skin, and musk tumeric with the juice of eclipta alba and apply the paste to the head and body and bath. This must be repeated once in five days.

பீனசரோகம், நாசிரோகம், disease of the nose. See பீசனம்.

பீனம், பாசி, duck weed; 2. கொடிப்பாசி, water weed; 3. பருமை, bulkiness; 4. வயிறு, belly.

பீனயக்கம், புரசு, a tree, bastard teak — Butea frondosa.

பீனுறி. பீநாறி, Vinca rosea, see பீநாறி.

பீனுறிப்பட்டை, பீநாறி மரத்தின் பட்டை, bark of பீநாறி, which see.

பீனிசம், பீனசம், மூலத்தில் கனலேறிக் கபாலத்தில் நீரையேற்றி ஒரு நாசியையடைத்து மற்றொரு நாசியில் நீர் வடிந்து அடிக்கடி தும்மலுடன் பிடரியும் தலையும் கனத்து வாரந்தோறும் கபாலம் வறண்டு நீர் திரண்டு நாற்றமடித்து உடம்பு வெதும்பி, நாவில் ருசியும், மூக்கில் மணமும் அற்று சிரசுநீர் நெஞ்சில் இறங்கித் துன்புறுத்தும் ஓர் வியாதி, an increased flow of mucous from the nose fauces etc, owing to the inflammation of the membrane or cold in the head.

பீனிசம் போக்கி, தைவயலி, not-identified.

பீனிசவயரி, பீனிசத்தை நிவர்த்திக்கு மருந்து, medicine that cures Peenasam.

பீனிச வியாதி, see பீனிசம்; 2 நாட்பட்ட சலதோஷம், chronic cold.

பீனிசவ்விரை, சிமை அவரை, a kind of lablab.

பூமிப்பனை, நிலப்பனை, a plant — ground palm — Curculigo orchioides.

பூமிப்புடம், குழி தோண்டிப் புதைத்து வைத்தெடுத்தல், a process of subjecting medicines to the heat of the earth: 2. காய்ச்சிய தைலத்தையோ அல்லது புடமிட்ட மருந்தையோ சுத்தியடைவதற்காக வேண்டிப் பூமிக்குள் புதைத்து வைத்தெடுத்தல், prepared oil or calcined medicine is subjected to the heat of the earth by burrying it in the earth in order to get itself purified.

பூமியாமலகம், see பூமியாமலகி.

பூமியாமலகி, பூ மி யா ம ல க ம், a plant — Phyllanthus niruri.

பூமியாலம், பூதணம், which see.

பூமியிலயிக்கியமாதல், மண்ணுயப் போதல், இறத்தல், to die — to get decomposed.

பூமியில் சமாதி வைத்தல், பூமிப்புடம் வைத்தல், see பூமிப்புடம்.

பூமியில் சேர்த்தல், புதைத்தல், to burry.

பூமியுடநாதம், பிண்டமாவு, the pulverized foetus for extracting medicines.

பூமியுப்பு, பூநீறு, which see.

பூமியுறுப்பிலக்கணம், பிருதிவி நூல், Geology.

பூமிருது, see வழலை.

பூமிலாபம், மரணம், death.

பூமிவிளா, நிலவிளா, which see.

பூமி வெளுப்பு மண், சுதை மண், (சுண்ணும்பு மண்) which see.

பூமி வெள்ளை, வீரம், corrosive sublimate — per chloride mercury.

பூமிவேர், பூநாகம், earth worm; 2. நிலவேர் root under the earth.

பூமீன்கெண்டை.

பூமுகிழ், another.

பூமேனி skin as soft as flower.

பூமொட்டு, பூஅரும்பு, flower bud.

பூம்பதரை, பாதிரி, which see

பூமபழம், சவுக்கார எண்ணெயைப் போக்கும் ஓர் பழம், a fruit capable of removing the oil from the fuller's earth.

பூம்பனை, பூப்பனை, } ஆண்பனை, male palmyra.

பூம்பாதிரி,

பூம்பாளை, இளம்பாளை, young spadix; 2. ஓர் சம்பாநெல், a variety of paddy, 3. தென்னம்பாளை cocoanut spadix.

பூம்பாறை, பூநீறு விளையும் பூமி, fuller's earth.

பூம்பிஞ்சு, இளம் பிஞ்சு, the young of an immature fruit.

பூம்புகை, நறும்புகை, a fragrant smoke: an incense 2. பூம்புல், புதர்செடி, சுணைகள் செறிந்தது, a shrub—Eupatorium semiserratum

பூயசிராவம், கண் சந்துகளில் வீக்க முண்டாகிப் பழுத்து சீழ் வடிந்து கொண்டு சந்தி (சன்னி) பாத லட்சணத்துடன் கூடியிருக்குமோர் கண்ணோய், an eye disease marked by swelling at the angles, and oozing of pus.

பூயதி, செறித்தற்குறிய. digestive.

பூயதுட்டவிரத்தம். pyemia.

பூயத்துவம், சீழ் கொள்ளல், suppuration.

பூயபாவம், சீழ் பிடித்தல், formation of pus as in வித்திரதி ( abscess ).

பூயம், சீழ், pus; 2. முறிந்த இரத்தம், a precipitated blood; 3. கண் பீளை, eye dirt purulent exduate from the eye.

பூயரத்தம். இரத்தம், சீழ், a disease in which bloody or blood streaked pus in discharged through the nostrils either as the effect of a blow on the region of the forehead or through the highly heated condition of the local blood. Pitham and Kapam — Bloody pus.

பூயவஸ்தி, empyema.

பூயவலசிரோகம், (பூயம்+அலசி) வெள்விழிச் சந்தில் வீக்கத்தைத் தருகின்ற சிறிய கட்டிகள் எழும்பி கண்களில் மாருத பீளையைத் தள்ளுமோர் கண்ணோய், a suppurated swelling occurring at the joining of the eyelids and the white coat and exuding a sort of foetid and dense pus.

பூயாரி, வேம்பு, margosa tree; see பியாரிகம்: 2. நில வேம்பு, a plant — Justicia paniculata.

பூயாசலம், கண் பீளை, eye dirt.

பூயாரிகம், வேப்பமரம்; neem tree — Azadirachta indica.

பூயாலசம், கண்களின் சந்துகளில் வீங்கி ஊசியால் குத்துவதுபோல் வேதனையுண்டாகி நாற்றமுடன் சீழ் வடியும் ஓர்வித கண்ணோய், an eye disease marked by swelling at the angles of the eye with pricking pain and discharge of bad smelling pus.

பூரகப்புல், மத்தங் காய்ப்புல், a kind of grass. see பூரகம்.

பூரகம், மத்தங்காய்ப்புல், a kind of grass — Cynosurus Egyptius; 2. நறுக்குத்திப்பிலி, root of pepper longus; 3. மூச்சு வுள்ளே வாங்கல், to breath in the vital air through nostrils. (சந்திரநாடி சூரியநாடிகளினால் பிராண வாயுவை உள்ளே யிழுத்தல்).

பூரகாக்கி, பூலா, which see.

பூரக்கட்டு, கட்டினபூரம், subchloride of mercury which is bound.

பூரக்கட்டு, (செய்யும் முறை); சீனப்பூரம் 1 பலம் முலைப்பாலில் 3 நாள் ஊற வைத்து எடுத்துலர்த்தி ஒரு சட்டியில் துளசி ரசம் பிழிந்து அதில் பூரத்தை வைத்து அடுப்பேற்றி சிறு தீயாக அந்த ரசம் சுண்டும் வரை எரித்தெடுத்தால் கட்டிவிடும், first purify the China subchloride of mercury by soaking it in human breast milk for 3 days and dry it, and then put it in a vessel containing eight times its weight of ocimum sanctum juice and heat till the juice evaporates. This is one of the methods of binding subchloride of mercury.

பூரக்களிம்பு, பரங்கிப்புண்ணுக்கு உபயோகிக்கும் ஓர் வித இரசக்களிம்பு, an ointment prepared with subchloride of mercury as chief ingredient and used for chancre and other venereal ulcers.

பூரக்கிலேதம், பூரம் சேர்ந்த ஓர் கழுவு நீர், a black wash.

பூரசம், பூமியின் சத்து, அதாவது பூநீர், which see.

பூரச்சுண்ணம். பூரத்தை பூநீரிலிட்டு 7 நாள் அரைத்து சிப்பியில் செலுத்திப் பொதிந்து புடமிடச் சுண்ணமாகும், calcined subchloride of mercury. Purified Sub-chloride of mercury is well ground with efflorescince salt (பூநீறுவுப்பு) and luted after keeping it in oxyster shell and then calcined.

பூரணகருப்பம், எல்லா அவயவங்களும் வெளிதோன்றி அமையப் பெற்று உடம்பும் பக்குவ மடைந்து காணும் நிலைமை; நிறைந்த கருப்பம், full term or period of pragnancy.

பூரண கருப்பிணி, நிறைகருப்பிணி, woman in full term of pregnancy, woman quick with child.

பூரணகுணம், முழுமையாக சுகமடைதல், complete cure.

பூரணகிருதம், see பூரானகிருதம்.

பூரணக்கிறிமானம், திலக விருட்சம், a tree.

பூரண சந்திராதி மாத்திரை, நத்தைச் சூரி தேவதாரு, நன்னாரி, காண்டாமிருகக்கொம்பு இவைகளுடன் கடைசரக்கு சேர்த்துச் செய்யுமோர் மாத்திரை; இதனால் குழந்தை நோய் அதிசாரம், நீர்க்கடுப்பு, பெரும்பாடு வெட்டை, முதலிய நோய்கள் போம், a pill containing Nathaisuri, horn of rhinocerose etc. prescribed for menorrhoegia, diarrhoea children's disease etc.

பூரணசந்திரோதய சூரணம், இரத்தம் சுத்தியாக்கும், a powder for purification of blood.

பூரண சந்திரோதயம். வீரிய விருத்தியை உண்டாக்கும் ஓர் ஆயுள் வேத சிறந்த மருந்து, பற்பல நோயையும் போக்கும், an infallible Ayurvedic medicine capable of curing many ailments and promoting secretion of semen. It is a Siddha Medicine too. It contains gold, sulphur and mercury.

**பூரணசந்திரோதய ரசம்,** அதிசாரம் இரத்த பேதி, புளித்தேப்பம், சூலை வலி, பரிணும சூலை இவைகள் தீரும். இது ஒரு ஆ - வே இரசாயனம், a Rasayana powder in Ayurveda prescribed for all kinds of diarrhoea dysentery, soar belching (eructation) acute pain and parinama soolai.

**பூரணசாத்திரம்,** see பூரண சூத்திரம்.

**பூரணசிங்கி,** கொங்கணர் வாதகாவியத்தில் சொல்லிய முறையின்படி உடும்பு, ஆமை முதலிய 4 வகை பிராணிகளின் நெய்யை வாங்கி அதற்கு புனுகு சவாது சேர்த்தும் மற்றும் நிமிளை சூதம் முதலிய 21 சுன்னமும் வீரம் பூரம் முதலிய 15 மருந்தினங்களும் சேர்த்தும் அரைத்த மெழுகு, இதுவே தைக்கும் சாரணைக்கும் உதவும், a wax like preparation mentioned in Konganar's Vadha kavyam used in alchemy and for animation of mercurial pill.

**பூரணசிசு,** பூரண கர்ப்பமாகி வளர்ந்து பிறந்த குழந்தை, full grown child born after full period of pregnency.

**பூரணசூத்திரம்,** அகஸ்தியர் தமிழில் செய்த ஓர் வைத்திய நூல், a Tamil Medical work compiled by Agastya Rishi.

**பூரணச்சௌக்கியம்,** முழுதும் குணப்படல், complete cure.

**பூரணச்சுண்ணம்,** முப்புச் சுண்ணம் see பூமிநாதச் சுண்ணம்,

**பூரணஞ்செயநீர்,** பூ நெருப்பு செயநீர், a pungent liquid prepared out of பூநீறு.

**பூரணத்திற் புக்கியாடல்,** உடலினின்று உயிரை தன்னிச்சைப்படி பிரித்தலும் மறுபடி உடலிற் கொண்டுவந்து சேர்த்தலும், கூடுவிட்டு கூடு பாய்தல், Soul passing from one body to the other.

**பூரணத்திநுப்பு,** சத்தியுப்பு அல்லது உவருப்பு, a kind of salt.

**பூரணத்தின் நீர்,**

**பூரணநாடி.** இரத்த நிறைந்திருக்கும் நரம்பில் ஓடும் நாடி, full pulsation felt in the artery full of blood.

**பூரண நூல்,** See பூரண சூத்திரம்.

**பூரணபலம்,** பெருங்கம்பிப் பூடு, a plant.

**பூரணபலன்,** முழுபலன், full strength — full benefit.

**பூரணபாண்டித்தியம்,** possessing full qualification.

**பூரணபிண்டம்,** முழுவளர்ச்சி பெற்ற கரு, full grown foetus.

**பூரணபுட்பி,** குதிரைவாலி, which see.

**பூரணபிரசவம்,** complete successful delivery of child.

**பூரணமதுமேகம்,** திரிதோஷகால வித்தியா சத்திருல் நோயாளியை நெடுநாளைக்கு உயிருடன் வைத்திருக்கு மோர்வகை மதுமேகம், இது கஷ்டசாத்தியம், diabetes which does not end the life.

**பூரணமாதம்,** பத்தாமாதத்திய கருப்பம் அல்லது முழுமாதத்திய கருப்பம், full term pregnancy.

**பூரணம்,** உடம்பின் ஞானக்கண், eye of wisdom; 2. குழிப்புண்ணில் ஆற்றக் கூடிய மருந்தை நிரப்புதல், to fill the perferating ulcer with medicine; 3. பூரண சந்திரோதய மருந்து, a medicine containing gold, mercury and sulphur; 4. இலவங்கப் பட்டை, cinmamum bark; 5, கொழுக் கட்டை என்னும் பலகாரத்தின் உள்ளீடு, that which is kept inside the confection called கொழுக்கட்டை, which see, 6. குறைவா யிருப்பதைப் பூர்த்தி பண்ணும் வஸ்து, that which completes the deficit; 7, பெண்குறி, female private part.

**பூரணலேகியம்,** See பூரணுதி.

**பூரணவயசு,**
**பூரணவயது,** } நிறைவயது, long age.

**பூரணவிபவன்,** He who is omnipresent, pervades all things and who possessed of that quality of one whose wish is not moved by the result and is not attached to any object.

**பூரணன்,** மிருதபாஷாணம், a kind of arsenic.

பூரணுதி, பழம்புளி, the essence of the brain of the foetus; 2 கஞ்சாவினுல் செய்யப் படும் ஓர்வகை லேகிய மருந்து, an electuary prepared with Ganja as chief ingredient.

பூரணுதியுத்திரம், விசுத்தி, one of the six mystic centres situated at the neck — Cervical region

பூரணுதியுப்பு, யாகவுப்பு, a kind of salt used in medicines,

பூரணுதிலேகியம், கஞ்சாவோடு மருந்து சரக் குகளை சேர்த்துச் செய்யும் ஓர்வகை லேகி யம், இது யோகத்தைக் கைகூடச் செய்யும். a confection prepared from the mixture of ganjah and other medicinal drugs incorporated with honey, sugar, ghee etc.

பூரணுயு, } முழுவயது, long life.
பூரணுயுசு, }

பூரணி, இலவமரம், silk cotton tree — Bombax malabarica; 2. இலவங்கம், cloves; 3. தேவி, the goddess Sakti or Universal power.

பூரணிரசம், இலவம்பிசின், resin of பூரணி, which see.

பூரண்டம், பேரரத்தை, underground stem — greater galangal — Alpinia galangal (major).

பூரதங்கம், நெல்லிப் பருப்பு, kernel of the seed of Indian gooseberry.

பூரதிகாரம், சீனக்காரம், alum.

பூரதிபூரம், நாயுருவி, a plant — Indian burr — Achyranthus aspera.

பூரந்தனம், கொடிமாதுளை, a kind of creeper — Citrus medicalinomum.

பூரபதி, பச்சைக் கருப்பூரம்.

பூரம், ஓர் மருந்து, இரச கர்ப்பூரம், impure subchloride of mercury; 2. பூரான், centiped or milleped on account of its numerous legs; 3. தேள், scorpion; 4. கருப்பூரம், camphor.

பூரபதங்கம், sublimed subchloride of mercury.

பூரம் (வைப்பு) வெடியுப்பு, சீனம், காரம், (சரி யிடை) கூட்டி, அரைத்து சந்தனக் கஷா யத்தில் கரைத்து கூழ்போல் பாததிரத்தி விட்டு, இதில் வால்மிளகு போட்டு பூமிக் குள் ஒரு மண்டலம் வைத்துப்பிறகு எடுக்கப் பூரம் குருவாக நிற்கும், இதுதான் முதன் மையான சரக்கு சித்தர் செய்யும் முறை (மச் சமுனி - 800) subchloride of mercury. Its preparation as given in Match muni 800 — Saltpetre, alum, borax equal parts. grind well, mix well with sandal wood decoction to the consistence of gruel and cubeb powder and lute well and burry under the earth for forty days.

பூரவர்க்கம், பூனைக்காலி, a climbing plant — Cowitch — Dolichos pruricus.

பூரவுண்டை, பூர மருந்தின் குளிகை, a pill prepared with subchloride of mercury as one of the ingredients.

பூரவுப்பு, சத்தியுப்பு which see, இது ஓர் வைப்புச் சரக்கு, இதில் சாறு வராத் தழை களில் எல்லாம் சாறு வரும், even brittle leaves will give juice if pounded with this salt; 2. கற்பூரவுப்பு, which see.

பூராசருக்கரை, நாட்டுச் சருக்கரை, course sugar.

பூராடமாஞ்சி, செம்பருத்தி, red cotton plant. — Gossypium arboreum.

பூரான், அநேக கால்களையுடைய ஓர் விஷ சந்து, a venamous creature of the centepede or myriapod family — Scolopindra myriapoda—Centepede. 2. புனங்கொட்டை முதலிய வற்றின் பருப்பு the kernel of mono colytendons such as palmyra etc.

பூரான்கடி, பூரான் வகை 8. அவையாவன: 1. கரும் பூரான்; 2. வெண் பூரான்; 3. செம்பூரான்; 4. மண் பூரான்; 5. காட் டுப் பூரான்; 6. பூசிறுரான்; 7. பெரும் பூரான்; 8. சாணிப் பூரான்; இவைகளின் கடி, bite of centipede.

பூரான் காவிக்கல், மஞ்சட் காவிக்கல், an yellowish red stone.

பூரி, புல், grass; 2. பொன், gold; 3. பப் பரப்புளி, elephant tamarind — Adansonia digitata; 4. நரி யிலந்தை, jackal jujuba.

பூரிகா, அகில், aguila or eagle wood.

பூரிக்காய், சவுரிக்காய், a fruit — Trichosanthus palmata.

பூரிக்கொண்டை.

பூரிதயம், சிறு தக்காளி, small tomato.

பூரித்த நீர்ப்பை, பருத்த மூத்திரப்பை, distended bladder.

பூரித்தல், நிரப்புதல், filling; as in அம்மை பூரித்தல்; 2. பருத்தல், growing; large as in pustules or ulcers.

பூரித்தியம், மூக்கிரட்டை, a prostate plant — Boerhaavia diffusa.

பூரிநகர், அகில், see பூரிகா.

பூரிநெல்லி, காட்டுக் கன்னி, a tree — Acronychia laurifolia.

பூரிப்பு, மிகுதி, fulness; as in அம்மை பூரிப்பு; 2. உடம்பின் பூரிப்பு; in high spirits; to to get elated.

பூரிப்புளி, பப்பரப்புளி, a plant — Adansonia digitata.

பூரிமரம், ஆனைப் புளியமரம், monkey bread tree — Adansonia digitata.

பூரிமாயன், நரி, jackal.

பூரிமாயு, ஆண் நரி, male jackal.

பூரியர், நிலவேம்பு, a plant; ground neem—Justicia paniculata.

பூரு, புருவம், eye brow.

பூருகம், மரம், tree.

பூருண்டி, மல்லிகை, jasmine; 2. வேலிபருத்தி, a twiner — Daemia extensa.

பூருது, பூநீறு, which see; 2. ருதுநீர், menses.

பூருவசனனம், முற்பிறப்பு, the previous birth.

பூருவசன்மம், see பூருவசனனம்.

பூருவதேகம், பழயவுடம்பு, original body.

பூருவபட்சணம், கந்தகம், sulphur.

பூருவம், பழமை, oldness; 2. ஆதி, original.

பூரோத்தம், தாமரை வளையம், coil of the lotus stalk.

பூர்ச்சபத்திரம், ஓர் பூடு, a herb — Betula bhojpattra.

பூர்த்தமலர், see பூநீறு.

பூர்த்தம், நிறைவு, saturation.

பூர்த்தல், the full bloom of a flower; 2. பாண்டத்தின்மேல் உப்பு படிதல், deposit of salt on pots containing salt.

பூர்த்தவிலயனம், நிறையும்படி கரைத்த கரைப்பு, saturated solution.

பூர்த்தவீக்கம்.

பூர்த்தி, நொச்சில், a garden plant — Vitex negundo; 2. நிறைவு, saturation.

பூர்த்தித்தல், நிறையும்படி கரைத்தல், saturate.

பூர்த்தெடுத்த சுண்ணம், தாளித்த சுண்ணும்பு, slaked lime.

பூர்வகண்டம், ஓர் ஆயுள்வேத நூல், an Ayurvedic Science.

பூர்வகர்மம், see அசுத்த மாயைத் தோற்றம்.

பூர்வகாத்திரம், தலை, head.

பூர்வகுணம், மருந்துகளுக்கு இயற்கையாகவே ஆதிமுதல் ஏற்பட்ட குணம், the natural properties of drug or medicine.

பூர்வகுளம், பனிநீர், dew water; 2. சுத்த சலம், crystal or pure water; 3. பனிக்குடத்து நீர், liquor amni.

பூர்வக்கியானி, முன்சன்ம காரியங்களை நினைவில் வைத்திருப்பவர், one who remembers his condition in his former life.

பூர்வசுரசம், முதிர்ந்த நொச்சி, a tree aged — Vitex negundo.

பூர்வசெயநீர், சாகாவுப்பு செயநீர், a liquid extracted from the salt obtained from the foetus.

பூர்வருப்பு, தலைப்பிண்டத்தின் மேல் பூக்கும் நவரசருப்பு, the white coating of salt found on the first born child of a woman.

பூர்வரூபம், உடம்பில் இயற்கையாகவே யுள்ள நோயின் தன்மையைக் குறிப்பிடும் குறிகள், that which indicates the natural diseases existing already in the system; 2. நோய் காண்பதற்குமுன் காணும் அறி குறிகள், preliminary symptoms of a disease, premonitory symptoms or indications of a disease.

பூர்வவேதம், ஆதிகாலத்து வேதங்கள்; இவை 4 வகை; தைத்திரியம், பௌடிகம், தலவகாரம், சாமவேதம் என்பன, the Preancient Vedam which cosists of four parts — Thaithirium, Poudikam Thalavakaram and Samam.

1. தைத்திரியம் — அறஒழுக்கமாகிய ஐந்து பெரிய வேள்விகளைப் பற்றிச் சொல்வது முதலாவதாகிய பாகம்.

2. பௌடிகம் — பொருள் பற்றிய ஒழுக் கமாகிய அரசநீதியைப் பற்றியது.

3. தலவகாரம் — முல்லை நிலத்துச் செய் கையாகிய கற்பொழுக்கத்தை அறி விப்பது.

4. சாமவேதம் — அறம், பொருள், இன் பம் ஆக இம்மூன்றின் நிலையாமை பற்றியும் அதற்கு மேலுள்ள வீடு பேருகிய அழிவற்ற பேரின்பப் பொருளை நன்கு விளக்குவது.

பூர்வான்னம், முற்பகல், forenoon

பூர்வோதம், நீர்ப்பூலா, a water plant — Phyllanthus reticulatus.

பூலதாநாடி, நோயில்லா மனிதனின் நாடி நடை, See சொஸ்த நாடி, healthy pulse. இது காலையில் சீதளமில்லாமலும், பகலில் உஷ்ணமாயும் சாயுங்காலத்தில் தீவிரமாயும் நடக்கும்.

பூலதை, நாங்கூழ், an intestinal worm; round worm; 2. படர்கொடி, a creeping plant, cherry nut meg — Polyalthia fragrans; 3. பூநாகம், a small snake or worm existing in flowers especially in that of fragrant screw spine.

பூலத்தி, மருதமரம், a tree — Terminelia alata.

பூலத்திகம், }
பூலத்திகிரி, } see பூலா.

பூலா, புல்லாந்தி, a plant — Phyllanthus or Flueggia genus, பலவகைப்படும்:

1 வெட்பூலா, Careya arborea.

2. வெள்ளைப் பூலா அல்லது வெண் பூலா, bears white fruits — Flueggea. lencopyrus.

3. கருப்பு பூலா, Bears black fruits.

4. வறட்பூலா, Flueggia microcarpa.

5. நீர்ப்பூலா, Phyllanthus reticulatus.

6. சிவப்புப் பூலா, Bryonia rham noides.

7. பேய்பூலா, Rhamnus wightii.

8. கிச்சலி கிழங்கு, a plant and its tuber — Curcuma Zedoaria.

பூலாகிகம், பூவந்திமரம், see பூவந்தி.

பூலாங்கிழங்கு, ஓர் கிழங்கு, the root of பூலை — பெருங் கிச்சிலிக் கிழங்கு - Curcuma zedoaria.

பூலாசம், புல்லாந்தி, Flueggia leucopyrus; 2. நீர்ப்பூலா, Phyllanthus relieulatus.

பூலாஞ்சி, பூனைப்புல், a grass.

பூலாத்தி, பூர்க்கும் மருது, flowering murdan — Terminelia paniculata.

பூலாப்பட்டை, பூலாமரத்தின் பட்டை, bark of பூலா which see.

பூலாமூலம், see பூலாங் கிழங்கு.

பூலாவேர்பட்டை, பூலாவேரின் மேல்தோல், bark of the root of புல்லாந்தி, which see— see பூலான்.

பூலான், கருப்பு பூல்லான், black honey shrub — Phyllanthus reticulatus; 2. முள் ளில்லா வெண்பூல்லாந்தி, white honey shrub.

பூலி, வெண்பூலி, வெள்ளை புல்லாந்தி, see பூலான்.

பூலிகா, சுடுதுரத்தி, which see.

பூலியாத்தி, மலையாளத்தில் விளையும் ஓர் வகை ஆத்தி, a shrub—Bunhinia malabarica.

**பூலை**, அணிற்பிள்ளை, squirrel; 2 கிச்சிலிக் கிழங்கு, long zedoary — root of Curcuma zedoaria.

**பூலைப்பூ**, பூலைச் செடியின் பூ, flower of சிறுபூலை.

**பூல்**, பூலா, புல்லாந்து, which see.

**பூவகை**.

**பூவகை லேகியம்**, தாது விர்த்தியையும் இரத்த வூறலையும் உண்டாக்கி மேகவகை சுரம் முதலிய வியாதிகளைப் போக்க, பூவினங்களைக் கொண்டு செய்யும் ஓர் வகை லேகியம், a confection or electuary prepared from flowers and other ingredients.

**பூவசுமரம்**, மன்னு, a tree flowering ash — Fraxinus ornus.

**பூவடிவிதழ்** bracts.

**பூவண்டமயிர்**, } வெண்காயம், onion.
**பூவண்டம்**, }

**பூவதி** — Nephalium longana.

**பூவத்தி**, மருது, a tree — Terminelia alata; 2. பூ மரம், flowering fog — Schlerichera trijuga.

**பூவந்தம்**, } நிலாவிரை, a plant — Indian senna — Cassia lanceolata.
**பூவந்தவம்**, }

**பூவந்தி**, நெய்க் கொட்டான், three lobed soup nut tree — Sapindus emarginatus. It is like soap (மணிப்புங்கு) because its berry produces much froth when agitated with water; 2. ஓர் மருந்து, a medicinal preparation; 3. புன்த மரம், a tree — Dalbergia arborea.

**பூவந்திப்பட்டை**, பூவந்தி மரப்பட்டை, bark பூவந்தி, which see.

**பூவந்திப்பழம்**, மணிப்புங்குப் பழம், which see.

**பூவந்திமரம்**, நெய்க்கொட்டான், see பூவந்தி.

**பூவந்தெட்டி**, see பூவந்தெத்தி.

**பூவந்தெத்தி** — Memeylon heyeanum.

**பூவம்**, கொஞ்சி, honey tree — Schleichera trijuga — காட்டுப்பூவம், விரத்தபூவம், பிரப்பம்பூவம்.

**பூவம்பழம்**, கொஞ்சிப்பழம், fruit of பூவம் which see.

**பூவரசம்பட்டை**, பூவரசமரத்தின் பட்டை, 100 வருஷத்திய மரத்தின் பட்டைக்குக் குட்டம் போம், bark of portia tree — Thespesia populnea bark of hundred years old tree is said to cure leprosy.

**பூவரசம்பழுப்பு**, புழுத்த புண்ணையாற்றும், yellow aged leaf of Portia tree. It heals ulcers infested with worms.

**பூவரலம்வேர்**, root of Portia tree.

**பூவரசு**, பூவரசுமரம், 100 வருஷத்திய பூவரசு வேர், நாட்பட்ட குட்டம் போம்; சமூலம் கிருமி விரணம், காணுக்கடி, விஷ பாகம் பெருவயிறு கரப்பான் சிரங்கு சல பிரமேகம் போம், tulipor — Portia tree —Thespesia populnea.

**பூவரசுப்பால்**, எச்சல் தழும்பு முதலிய சரும ரோகங்களுக்கு உபயோகப்படும் பூவரசு மரத்தின் பால், the yellow milk or juice of the fruit of Portia tree is used for ringworm and other skin diseases.

**பூவரிசி**,

**பூவரும்பு**, பூமொக்கு, flower bud.

**பூவழலை**, see பூநீறு; 2. சவர்க்காரம், fuller's earth; 3. ருதுநீர், menses.

**பூவளர்த்தி**, கண்ணிமை ரோகம், a disease of eye lid.

**பூவனம்**, see பூவரசு.

**பூவன்**, பூவன் வாழைமரம், a kind of plantain tree — Poovam; 2. பூவம், which see; 3. காட்டுப்பூவன் — dragon's eye — Nephelium longana.

**பூவன்குருந்தழை**, — Vernonia anthelmentica.

**பூவன்தெட்டி**, ஓர்காசா, bilberry — Medinilla heyneamum.

பூவன்பழம், நெய்க்கொட்டான் பழம், soap nut tree. see பூவந்தி.

பூவாடங்கேழ்வரகு, a kind of Ragi.

பூவாதிகாரம், சீனக்காரம், alum.

பூவாது காய்க்குமரம், ஆல் முதலியன, tree that bares fruit without flowering like fig. banyan etc,

பூவாத்தாள், see பூநீறு.

பூவாமரம், கோளி, trees yielding without flowering See வனஸ்பதி

பூவாரை, see பழம்புளி.

பூவாழை, ஒருவகை வாழை. a variety of Plantain — Poovan.

பூவிதழ், பூந்தோடு, petal of a flower.

பூவிந்து, வீரம், per-chloride of mercury; 2. அப்பிரகம், mica talcum.

பூவிந்து நாதம், see பூவிந்து.

பூவிரணம், ஆண்குறியின் மலரிலுண்டாகும் புண், sore on the glans pensis.

பூவிரால்,

பூவிரோசனம், மருந்து தெளித்த பூவை முகர்வதினால் பேதியாதல், motion caused by smelling flower sprinkled with medicine.

பூவிலாப்பாலை, ஓர் விதபாலை, stinking swallow wort —Pentatropis microphylla.

பூவிழல், கண்ணிற் பூவிழல், cataract of the eye.

பூவிளாம், கற்பாஷாணம், a kind of native arsenic.

பூவிளா,

பூவிளையுந்தேசம், பூநீறு எடுக்குமிடம், fuller's earth where efflorescence is collected.

பூவிற்கண்ணி, அத்தி, fig tree.

பூவின் குருநீறு,

பூவின்சருக்கரை, பூ + இன் — சருக்கரை sugar extracted from flowers; 2. பூமிச்சர்க்கரைக் கிழங்கு which see.

பூவுசிலை, ஓர் வாகை, sirissa tree — Albizzia.

பூவுறை, காட்டிலுப்பை, forest bassia — wild mohawah tree — Bassia latifolia.

பூவுமாமரம், பூவந்திமரம், see பூவந்தி.

பூவுள், பூவின் உட்பக்கம், inside of the flower — corolla.

பூவெண்ணெய், பூக்களைக் கொண்டு காய்ச்சின வாசனைத் தைலம், fragrant oil prepared with flowers; 2. ஓர் பூடு, a climbing flower plant — Sarcostigma kleinii

பூவெண்புள்ளி, opacity of the lens (an eye disease).

பூவெள்ளெழுத்து,

பூவேர், பூநாகம், earth worm.

பூவை, காயாமரம், a tree unyielding.

பூவை, கிளி, parrot; 2. நாகணவாய்ப் புள், the maina bird; 3. ஓர் காசா, iron wood; 4. பெண் woman; 5. குயில், a bird with melodiustune—Indian Cuckoo; 6. கீரிப்புழு, an intestinal worm thread worm — Oxyuris.

பூவோடு, தொட்டிப் பாஷாணம், red arsenic — orpiment.

பூழக்கரம், கோஷ்டம், a drug — Arabian costum — Costus speciosus.

பூழான், கவுதாரி, a bird — Partridge; 2. காணுங்கோழி, a kind of jungle fowl with long legs; 3. சம்பங்கோழி, Turkey.

பூழியசணி, பூசணி, pumpkin — a kind of gourd.

பூழியபலம், see பூசணி.

பூழியாசிகம், சீமையகத்தி, ring worm shrub — Cassia alata.

பூழில், அகில், eagle wood.

பூழிற்குமிழ், ஓர் குமிழ மரம், kandahar tree— Gmelina arborca.

பூழ், see பூழான்.

பூழக்கரம், See பூழக்கரம்.

பூழ்தி, புலால், flesh or raw meat; 2, புழுதி, dust.

பூளம், பூவரசு, Portia tree; 2. பூவந்தி, which see.

பூளிகம், சிறுபூளை, a small annual plant.

பூளிபலம், See பூழியபலம்.

பூளை, இலவம்பஞ்சு, silk cotton tree — Bombax malabarica; 2. ஓர் மருந்து செடி, a medicinal herb — Illecebrum lanatum; 3. பீளை — சிறுபீளை, பெரும்பீளை, என இரு வகை — Achyranthes lanata alias Aerva-lanata.

பூளைக்கொடி, a climbing wort plant—Herua scandens.

பூளைப்பஞ்சு, பூளைப்பூ, } இலவம்பஞ்சு, silk cotton tree, see பூளை; 2. பெரும் பூளை, javanese wort plant Aerva javanica.

பூறுகம், பூறுகியம், } தண்ணீர் மிட்டான், thorny climber — water root — Asparagus sarmentosis.

பூனண்டம், தகரை, a plant — Cassia tora.

பூனற்கண்ணிக் கீரை, ஓர் செடி, a plant — Illecebrum sessile.

பூனகக்கின்னணி, See பூநாகக்கிண்ணி, பூநாகத்தில் இரசம் கட்டும்.

பூனகம், இலைக்கள்ளி, leafy spurge.

பூனச்சிப்புல், see குறத்திப்பாசி.

பூனிப்பயறு, பாசிப்பயறு.

பூனில், அகில், eagle wood.

பூனீர்சுண்ணம், calcified பூநீறு, which see.

பூனிறு, சவர்க்காரம், soap; 2. பிண்டமாவு, which see; 3. பூநீறு, which see.

பூநீற்றுக்குரு, சட்டைமுனி 1000-ல் சொல்லியுள்ள ஓர் இரசவாத மருந்து, an alchemical preparation told in the text — Sattaimuni 1000.

பூனை, இலவம்பிசின், the gum of silk cotton tree; 2. காஞ்சொறி, a kind of nettle — Tragia involugrata; 3. சிறுகாஞ் சொறி, Tragia cannabina; 4. ஓர் வீட்டில் வளர்க்கும் மிருகம், பூனை, cat — Felis demestica.

பூனைக்கடுவெளி, கஸ்தூரி யெலும்பு, which see.

பூனைக்கண்கல், ஓர் மணி, a gem; Cat's eye. ( வைடூரியம் ).

பூனைக்கண் குங்கிலியம், ரூமிமஸ்தகி, masticha — Mastic cat's eye dammer — Pistacia lentiscus.

பூனைக்கழற்சி, ஓர் வகைக் கழற்சி; a grey coloured creeper— Caesalpinia munosoides.

பூனைக்காச்சி, ஓர் கொடி, காயின் மேல்தோல் பூனையின் மேல்தோல் போல் உரோமமுடையதாயிருக்கும்; கொடியிலைகள் அவரைக் கொடி போன்றது; காய் சுணையுள்ளதாயிருக்கும்; காயினுள்ளிருக்கும் பருப்பு மாவு சத்துள்ளதாயிருக்கும்; இம்மாவினை எளைமக்கள் பிட்டு முதலிய சிற்றுணவாகச் செய்துண்பார்கள்; இச்செடி கோடிக் கரைக்காட்டில் மிகுதியாயுள்ளது, a twiner like lablab. The fruit is covered with hair. The flour of the seed is used for making pudding and eaten by the poor. It grows abundantly in the forest at Kodi-Karai.

பூனைக்கடி, பூனைக்கடியின் விஷம், bite of cat.

பூனைக்காஞ்சொறி, கிருமி, திமிர்ப் பூச்சி இவைகளை வெளிப்படுத்த உபயோகப் படுத்த உபயோகிக்கும் ஓர் பூண்டு, a climbing plant used in medicine to bring out intestinal worms, germ etc, see பூனைக் காலி.

பூனைக் காட்டஞ் சிலந்தி, ஓர் வகைச் சிலந்தி an insect.

பூனைக்காந்தி,

பூனைக்காய்ஞ் சொறி, see பூனைக்காஞ்சொறி.

பூனைக்காய் வேளை, ஓர் வகைக் காய்வேளை, a species of காய் வேளை which see —Galega villosa.

பூனைக்காரிகம், பூனைப்புல், which see.

பூனைக்காலவரை, பூனைக்காலிவித்து.

பூனைக்காலி, கலவிக்கு வேண்டிய பலத்தைக் கொடுக்கும் ஓர் செடி, பூனைக்காஞ் சொறி, a climing plant used as a nerve tonic to promote sexual intercourse — Common, cowitch — Mucana pruricus, the infusion of the pods is a remedy for dropsy and intestinal worms, the seeds are aphrodisiac.

பூனைக்காலி வித்து, இது பார்ப்பதற்கு அவரைக் கொட்டை போலிருக்கும், seed of the climber — Mucana pruricus; 2. கரும்பூனைக் காலிவித்து கருப் பாயிருக்கும்.

பூனைக்கிழங்கு,

பூனைக்கீரை, ஓர்வகைக் கீரை, a kind of greens.

பூனைக்குடல், ஓர்வித நரம்புக் கயறு, cat jut; 2. பூனையின் குடல், intestines of cat.

பூனைக்கெளிறு,

பூனைச்சத்தம், நெஞ்சில் உண்டாகும் சத்தம், a cardiac murmur like the mewing of a cat — Bruit depiceulement.

பூனைச் செவி, குறை காது, deformed ear like of a cat.

பூனைதொழுஞ்சாறு, குப்பைமேனிச் சாறு, juice of rubbish plant — Acalypha indica.

பூனைத் திசை, தென் கிழக்கு; அக்கினிதிக்கு south east.

பூனைத்தேக்கு, a tree — Betavian teak — Klichuhovia hospita.

பூனைப்பகை, குப்பைமேனி—Acalypha indica.

பூனைப்பகைவன், எலி, rat.

பூனைப்பகைவன் முள், எலிமுள்ளு, bone of rat.

பூனைப்பஞ்சு,

பூனைப்பீசன், see பூனையண்டம், scrotum of cat; 2. ஒரு கொடி, a creeper.

பூனைப்பருந்து,

பூனைப்பிடுக்கன், பூனைப்புடுக்கு, } ஓர் மரம், a tree — Grewia scabrophylla.

பூனைப்புடுக்கன் காய், இது பட்டவிடம் விரணமாகும், the fruit of Mucana pruricus.

பூனைப்புதித்தான், see பூனைக்காலி.

பூனையண்டம், see பூனைப்பீசின்.

பூனைப்புரண்டி, cat's purr.

பூனைப்புரண்டி சத்தம், purring heart sound.

பூனைப்புலி, see சுக்கு நாறி, a tree.

பூனைப்புல், பூனையாதரம், which see.

பூனைப்பூண்டு, ஓர் விஷப்பூண்டு, a poisonous drug.

பூனையவரை, பூனைமயிரைப்போல் முசுமுசுப்பாயுள்ள ஓர் வகை யவரை, see பூனைக் காலி வித்து.

பூனைப்பேரிகம், சுணங்கு விருட்சம், which see.

பூனைமடி, see பூனைப்பிடுக்கன்.

பூனை மயிர், see பூனைக்கழற்சி; 2 வெள்ளை மயிர், thin fine hair on the foetus: the fine dowony hair found on the body except the pulams and soles — Lanugo.

பூனைமூலி, குப்பைமேனி, see பூனைப்பகை.

பூனையடிச் சிலந்தி, a kind of cancer.

பூனையாதரம், பூனைப்புல், a kind of grass.

பூனையின் தண்டு, பூனைக்கீரைத் தண்டு, stalk of பூனைக்கீரை, which see.

பூனைவகை, different kinds of Cat's:—

1. மீன் கொல்லிப் பூனை, Felis viverrina.
2. சிவிங்கிப் பூனை, Felis bengalinse.
3. புலிப் பூனை, Felis rubiginosa.
4. காட்டுப் பூனை, Felis chaus.
5. வீட்டுப் பூனை, Felis domestica.
6. புனுகு பூனை, Civet cat — Viverra civettina.

பூனைவணங்கி, குப்பைமேனி, cat worshipped plant; rubbish plant — Acalypha indica. It is used as vermifuge and as an antitode for poisonous bites, cats eat its root, and rub its head and neck over it; 2. நாயுருவி, a plant — Achyranthes aspera.

பூனைவாற்புல், cat's tail grass — Timothy grass.

பூனைவித்து, பூனைக்காலிவிரை, which see.

பூனைவிரந்தி, பூனைவிருதனம், பூனைவிரேதனம், } ஓர் கொடி, a climbing creeper — Capparis roxburghii.

பெகுபுத்திரி, அம்பளங்காய், a plant capable of binding — salt petre.

பெங்கு, ஓர் வகைக் கள், a kind of toddy.

பெசலத்தி, a plant — Dolichondrone falcata.

பெச்சேஷிரா, see பலாசு.

பெடகருவாள், கொட்டைக் கரந்தை, a plant which see.

பெடித்திரியான், தழுதாழை, a shrub — clerodendron phlomoides.

பெடை, பெட்டை, a female bird as in பெட்டைக் கோழி.

பெட்டகத்துத்தி, see கஸ்தூரி வெண்டை.

பெட்டி, மூளிவாய், hare lipped mouth; a deformed mouth.

பெட்டிக்கோரை, ஓர் வகைக் கோரைப் புல், a kind of cyprus grass.

பெட்டிலிக் குழல், நச்சுக்குழல், poisonous pipe.

பெட்டிவெல்லம், பனை வெல்லம், பனங்கருப்பட்டி, palm jaggery.

பெட்டை, see பெடை, female of camel, ass, horse etc.

பெட்டேகம், see செந்தக்காளி.

பெட்டைக் கண், சாய்ந்த, கண் quint eye.

பெட்டைக் கண்ணன், சிறு கண்ணையுடையவன், one possessing small eyes.

பெட்டைக் கோழி, பெண்கோழி, a female fowl - hen.

பெட்டைக் குரல், ennuchoid voice; a high falsetto voice in man resembling that of a woman or ennuch.

பெட்டைச்சி, பெண் பிள்ளை, woman.

பெட்டைத்தனம், ஆண்மையை யிழந்து பெண் நடத்தையை மேற்கொள்பவன், the loss of male characters and assumption of famale characters — Anandria.

பெட்டையன், ஆண்மையற்றவன், impotant effiminate man, an individual in whom male and female; characteristics are combined; 2. அலி, ennuch.

பெண், பெண், girl; 2. பெண் பிள்ளை, female of the human species, woman; 3. விலங்கின் பெண், female of animals; 4, கந்தகம், sulphur; 5. கற்றாழை, aloe.

பெண்கரு, சுரோணிதம், menstrual blood.

பெண் கலவி, ஸ்திரி சம்போகம், sexual intercourse — conjugal felicity.

பெண் காந்தம், female magnet having little or none of magnetic power.

பெண்காணுச் சையோகம், "பெண்காணுச் சையோகம் பிடித்துதானால், பேசாமற்கொல்லுமடா பிறநீர்க் கோவை".

பெண் காமக்கனை, காமநீர், female semen.

பெண் காமம், amorous ardours of young maidens.

பெண்குமஞ்சான், சாம்பிராணி, incense; frankin cense.

பெண்குறி, யோனி, female genital—pudendum mulibae.

பெண்குறிப்புண், see யோனிப் புண்.

பெண் சங்கமம். பெண் போகம், intercourse with woman.

பெண் சரக்கு, புளிப்புச் சரக்கு, acid substance such tamarind, vinegar, fruit etc.

பெண் சரக்குச் சத்து, acid.

பெண் செருப்படை, பெருஞ் செருப்படை, a prostate plant with large leaves as opposed to சிறு செருப்படை,

பெண்டகன், பேடி, a ennuch.

பெண்டகை, அலித்தன்மை, பெண்ணின் தன்மை, woman hood, feminine quality.

பெண்டமுதமூலி, கொட்டைக் கரந்தை, which see.

பெண்டன். see பெண்டகன்.

பெண்டாளல், பெண்ணைக் கெடுத்தல், seducing a woman.

பெண்டு, see பெண், woman in general.

பெண்டுக்கழைத்தல், to call upon or force a woman for sexual intercourse.

பெண்டுகட்டி, one who is interested in dealing with or attending to the affairs of woman; பெண்கள் நாணமுறுதவாறு சரசமாகப் பேசிப் பழகியிருப்பவன்.

பெண்டுகம், see கழற்சி.

பெண்ணடைக்கால்.

பெண்ணகம், நீர்முள்ளி, which see.

பெண்ணங்கம், பெண்குறி, genital of a female.

பெண்ணடி, பெண்ணின் உள்மூலம் அல்லது தாது, female rectum or uterus.

பெண்ணமுதம், கொட்டைக் கரந்தை, which see.

பெண்ணலி, an hermaphrodite — a female in whom the genital organs are similar to those of the male — Androgyna.

பெண்ணமுரி, பெண் மூத்திரம், the urine of female — Children or girl or woman.

பெண்ணரசு, அல்லிராணி, Queen Alli.

பெண்ணரவம், பெண்பாம்பு, female snake; 2. பெண்போகம், sexual intercourse.

பெண்ணலம், பெண்ணின் இன்பம், Conjugal felicity.

பெண்ணழுக்கு, ருதுநீர், menstrual fluid.

பெண்ணன், see பெட்டை, one destitute of manly power.

பெண்ணுகா, ஸ்திரீசம் போகம் உதவாது, not to have connection with woman.

பெண்ணுசிகம், தக்காளி, tomato.

பெண்ணாசை, மூவகையாசையில் பெண்பால் விரும்புமாசை, desire for woman.

பெண்ணாண்மை, பெண்ணுக்கேற்பட்ட ஆணுக்குரிய நடத்தை, the assumption of male characterstics by a woman — Masculinity — Viraginity.

பெண்ணாதம், நாதம், the semen of a woman; 2. மாதவிடாய், menstrual blood.

பெண்ணின் பருவம், வாலை 1-16, தருணி 17-30, பிரவிடை 31-50, விருத்தை 51-முதல், Vallai stage up to 16 years old, Tharuni from 17 to 30 years, Piravidai from 31 to 50 years, Viruthai from 51 on wards.

| பருவபெயர் | | வயது | | அமுதநிலை |
|---|---|---|---|---|
| பேதை | — | 7 வயதுவரை | — | உச்சி. |
| பெதும்பை | — | 11 வயதுவரை | — | நெற்றி |
| மங்கை | — | 12 வயதுவரை | — | உதடு. |
| மடந்தை | — | 19 வயதுவரை | — | பிடரி. |
| அரிவை | — | 25 வயதுவரை | — | சன்னம்; |
| தெரிவை | — | 31 வயதுவரை | — | குய்யம். |
| பேரிளம் பெண் | — | 42 வயதுவரை | — | அல்குல். |

பெண்ணின் தத்துவம், சோதிட நூற்படி இன்ன இன்ன நட்சத்திரங்களிற் பிறந்த பெண் இன்னவிதமான இயற்கை குணங்களைப் பெறுவாள், இது எட்டு வகைப்படும்; according to astrology the character of the female will change according to the star at the time of her birth.

1. தெய்வ தத்துவம்.
2. முனித் தத்துவம்.
3. நாகத் தத்துவம்.
4. காந்தர்வத் தத்துவம்.
5. பூதத்தத்துவம்.
6. இயக்கித் தத்துவம்.
7. அரக்கித் தத்துவம்.
8. பைசாத் தத்துவம்.

பெண்ணீர், பெண் பிள்ளையின் சிறுநீர் அல்லது மூத்திரம், the urine of a girl, see பெண்ணமுரி.

பெண்ணுறுப்பு, பெண்குறி, the genital of a female (in botany); 2. மகரந்தக் குழாயின் நடுவே நிற்பது, pistil.

**பெண்ணூற்றுத் தோஷம்**, பெண் குழந்தைகளைத் தாக்கும் தோஷக் குற்றங்களினால் ஏற்படும் நோய்கள்; இது சாதாரணமாய் 5 மாதத்திய கருப்பிணி புருஷனிடம் புணர்ந்து எழுந்து வரும்போது பெண்குழந்தை எதிரில் பார்ப்பதனால் உண்டாகும், இது மாதிரியே ஆண்குழந்தை எதிர்ப்பட்டாலும் குற்றம் ஏற்படும், அது ஆணூற்றுத் தோஷம் எனப்படும், அப்படி உண்டான தோடம், தாய்வழியாக வயிற்றில் இருக்கும் கருவுக்கும் உண்டாகி, அது பிறந்தஉடன் அதற்கு வயிறு வலித்தல், கழுக்குதல், முகம் கருகிப் பேய்முகம் போற் காணப்படல் என்பவைகளாம், a woman after intercourse in the night were to see a woman of five months pregnancy first when she comes out of the bed in the next morning, the foetus in the womb gets affected and when it is born it suffers from pain in the abdomen and its face will be shrinked and look devilish. This is பெண்ணூற்றுத் தோடம். Male after intercourse in the night were to see the five months pregnant woman first when he comes out of the bed the next morning, tha foetus in the womb will be affected; when it is born it suffers from pain in the abdomen etc. This is ஆண் ஊற்றுத் தோடம்.

"அரிவை யர்க்கும் ஆண்கட்கும் அதனில தோட மேதென்றால்
கருவாம் அஞ்சு மாதத்தில் காணில் கலநத தாய் முகத்தைப்
பெறுவாள் அந்தப் பிள்ளைக்குப்பேனில் சளுக்கும் வயிறுவலி
கருகு முகமும பேயினகுணங் கண்டே யறிந்து கொள்வீரே".

—பாலவாகடம்.

**பெண்ணை**, பனை, palmyra tree; 2. பெண் மரம், female tree; 3. நீர்முள்ளி, thorny plant — Hygrophila spinosa alias Astercantha longifolia.

**பெண்ணேட்டம்**, நரிப்பயறு, a plant — dew gram — Phaseolus aconiti folius.

**பெண்தண்டு**, காதினுட்புறத்துத் தண்டு, internal ear.

**பெண் தத்துவப் புணர்ச்சி**, பெண்களின் இயற்கைத் தன்மையில் வாய்ந்த ஷ 8 வகைப் பெண்களைக் கொக்கோக நூற்படி இன்ன இன்ன வகைப் பெண்ணை இன்ன விதமாய்ப் புணர வேண்டும் என்று பலவித காரணங்களைக் கொண்டு செய்யும்புணர்ச்சி; ஒவ்வொருவகைப் பெண்களுக்கும் காரணங்களாவன: நாகவக்கரணம் முதலிய ஏழு வகை லீலைகள் தெய்வத் தத்துவப் பெண்களுக்குரியது, இப்படியே மற்ற வகைகளுக்கும் சொல்லியுள்ளது, different methods of intercourse according to the character or variety of the woman.

**பெணதள்ளல்**, பெண்சம்போகமில்லா திருத்தல், அதாவது விலக்கல் (மருந்து சாப்பிடும் போது உண்டான பத்தியம்) to avoid sexual intercourse.

**பெண்துடரி**, நீரிழிவைப் போக்கவும் ஆண் வசியம் உண்டாகவும் உபயோகிக்கு மூலிகை, a plant used for diabetes and also for influencing men

**பெண் பருவம்**, ஏழுவகை பருவங்கள் see பெண்ணின் பருவம்.

**பெண்தோஷம்**, சம்போகத்தினால் ஏற்படும் சன்னி, சுரம் முதலிய தோஷம், delirium, fever ect., and caused by intercourse with a woman in menses; 2. குழந்தைகளுக்குண்டாகும் ஓர்தோஷம் இதனால் குழந்தைகளுக்கு நெஞ்சு வரண்டு கண்குளிந்து வெளுத்து பெருமூச்சு, வியர்வை, மயக்கம் இவைகள் உண்டாகும், morbid affection in children from various causes such as the child being the first to fall in sight or to be touched or taken by a woman after she is vitiated by abortion intercourse menses etc. It is of 6 kinds: 1.பெண்ணூற்றுத்தோடம் (சையோகஸ்திரி தோடம்); 2. அழிதோஷம் (கர்ப்பம் அழிந்த தோடம்); 3. குளித்தவள் கண்ட தோஷம்; 4. குளித்தவள் எடுத்த தோஷம் 5. முட்டுதோஷம் (தார ஸ்திரி தோஷம்) 6. குளிச தோடம் (பாலவாடகம்) or குளி தோஷம்; see குழந்தை தோஷம்.

**பெண் நீர்**, சிறு பெண் மூத்திரம், urine of a girl; 2. menstrual fluid.

**பெண் பத்தியம்**, மருந்துண்ணுங்கால் சையோகம் விடல் observation of diet, when taking medicine by avoiding intercourse.

**பெண்பகசம்**, செம் மருதோன்றி, red fragrant nail dye — Lawsonia spinosh.

**பெண்பனை**, காய்க்கும் பனை, palmyra palm yielding fruits.

பெண்பால், பெண், female in general; 2 முலைப்பால், breast milk.

பெண் பிசாசு, female devil

பெண்பிரண்டை, புளிபிரண்டை, a climber hairy wild vine — Vitis setosa.

பெண்பிள்ளை, பெண், woman; 2. பெண் குழந்தை, female child.

பெண்பீசம், சினைப்பை, overium.

பெண் பைத்தியம், பெண் போகத்திலே எப்போதும் நினைவேயிருத்தல் insane sexual desire in the male as opposed to one in the female — Nymphomania.

பெண்போகம், பெண் சம்போகம், sexual connection. It is prohibited before 16 and after 70 years.

பெண் போகவிடம், பெண் புணர்ச்சியால் நேர்ந்த விஷநோய்கள், disease caused by vitiated intercourse.

பெண்மகள், பெண் see பெண்பிள்ளை.

பெண் மஞ்சள், a variety of tumeric used by woman for smearing, round shaped tuber of turmeric.

பெண் மஞ்சான், see பெண்குமஞ்சான்.

பெண் மதம், see பெண் காமக்கலை.

பெண் மயக்கம், }
பெண்மயல், } see பெண்போகம்.

பெண்மரம், புறவயிரமுள்ள மரம், பனை, மூங்கில், கமுகு, தெங்கு முதலியன, a tree having outer portion of stem harder than inside, such as palms; 2. காய்க்குமரம், fruit bearing trees as opposed to those that that cannot bear fruits; 3. மிருதுவான மரம், soft spongy tree.

பெண்மரை, பெண்ணெருமை, the she of a buffalo or elk.

பெண்மலடு, பெண்களுக்கு மாதந்த ருது காலத்தில் வெளிப்படும் இரத்தமானது திரிதோஷத்தினால் கருஞ் சிவப்பாயும் மஞ்சள் அல்லது நீல நிறநிறமாயும் சீழைப் போல் வெளுப்பாயும் கட்டியாயும் மலமூத்திர நிறமாகவுள்ள இக்குணங்களினால் கருத்தரியா திருக்குந்தன்மை, steribility or barrenness in woman due to several causes such as irregularities in menses or defective menstruation in which the discharge assumes several colours forming some times clots.

பெண்மாயமூலம் பார்த்தல், பெண்ணோடு சேர்தல், to copulate with woman.

பெண்மாயம், See பெண் மயக்கம்,

பெண் மாலை, பவளம், coral.

பெண்மாவைக்கிழங்கு,

பெண்மூங்கில், சாதாரண குழாய் மூங்கில், a common bamboo. Female bamboo; Hollow bamboo See மூங்கில். The silicious concretion known as tabasheer is a bluish white concrete light substance a secretion from the joints of the reed on a state of disease — malformation or fracture. It unsists of 90½% of silica a minute quantity of lime and vegetable matter. see மூங்கிலுப்பு.

பெண்மூச்சு, பெண் மூர்க்கம், obstinacy of woman.

பெண்மூத்திரதாரை, பெண்கள் மூத்திரப் பையினின்று அல்குலுக்கு (வந்துசேரும்) பின்வழியாய் வரும் மூத்திரவழி, female urethra—Urethra mulicbre.

பெண்மை, பெண்தன்மை, womanliness.

பெண்மையல், see பெண்மயக்கம்.

பெண்ரோகம், பெண்களினால் உண்டாகும் நோய், venereal diseases.

பெண்லிங்கம், யோனிலிங்கம், clitoris.

பெண்வகை, நான்கு சாதிப்பெண், பதுமினி — சித்தினி — சங்கினி — அத்தினி, see தொகையகராதி, four classes of women.

பெண்வண்டு, தேள்.

பெண்வதம், Gynecology.

பெண்வழலை, மாதத்தடக்கு, menstrual blood 2 நாதம், woman semen.

பெண்விலக்கல், sexual separation.

பெண்வில்வம், இதன் பட்டை, பூ மஞ்சள் நிறமானவை, cf, ஆண்வில்வம், its bark flower are yellow.

பெண்வெறுத்தோன், woman hater — Misogynist.

பெதரிகாளம், காஞ்சிரை அல்லது எட்டி, a poisonous tree —Strychnos nuxvomica.

பெதிகாரம், பொரிகாரம், borax.

பெதும்பை, பதினொறு வயதுப்பெண், girl aged eleven years; 2. எட்டு முதல் பதினொரு வயதுவரையுள்ள பெண், girl aged from eight to eleven years. (9 வயதுப்பெண் அமுதநிலை நெற்றி) 3. பெண் பொது — woman in general.

பெத்தகாலம், இலயகாலம்; பிறவித்துன்ப மடையுகாலம்; the period or time during which the soul in the body is subjected to karma or other evils from previous births.

பெத்தணத்தி, See பேதனத்தி

பெத்தமுத்தி, இலயமுத்தி — பந்தம் — வீடு the two states of the soul bondage and liberation.

பெத்தமுருவம், பெருங்குரும்பை, a plant.

பெத்தமூலம், சிறுவழுதலை, a plant of the brinjal species — Solanum jacquini.

பெத்தம், கட்டு, bondage; 2. பந்தம், spiritual bondage; 3. சேர்மானம், earthly attachment; materialism as connection.

பெத்ததிசை, ஆன்மாபாசத்திற் குட்பட்டிருக்கும் காலம், the period during which soul in the body remains subjected to materialism.

பெத்தலர், நேர்வாளம், Croton plant.

பெத்தலாம், }
பெத்தல், } See பெத்த முருவம்.

பெத்தற்குரும்பை, பெருங்குரும்பை, a plant.

பெத்தனத்தி, See பேதனத்தி.

பெத்தி, கறிமுள்ளி, a thorny plant — prickly night shade — Solanum indicum.

பெத்திகை, பெருமுள் கத்தரி, brinjal with thorns.

பெந்தம், பெத்தம், which see.

பெந்தனம், }
பெந்திப்பு, } See பெத்தம்.

பெந்திபேகம், சிறு நீலி, indigo plant — small.

பெந்தை, அவலட்சணமாய்ப் பருத்தது, to grow too bulky and clumsy — un-wieldy.

பெந்தைக்கண், பெரியகண், big eyes ugly to look at; 2. முட்டைக்கண், goggle eye.

பெப்பமரம், புளிகரணை, which see.

பெப்பர்மிண்டு, ஓர் சீனதேசத்துச் செடி, a small plant looks like புதினா, ( Mint ) — Marrubium vulgare.

பெப்பாசிட்டி, ஓர் பூடு; இதன் காய் ஈரம்பட வெடிக்கும். இதை அப்பளாசிட்டி என்பது முண்டு, a herb. See பேப்பாசிட்டி,

பெப்பிகனம், வேங்கை, a tree — Kino tree.

பெயர் சொல்லான், வசம்பு, sweat flag — Acorus calamus.

பெயர்தனம், }
பெயர்தானம், } see பெப்பிகனம்.

பெயர்தல், metastasis — transference of bodily function or disease etc from one part or organ to another; transformation of chemical compounds into others in process of assimilation by an organism.

பெயர்த்தவம், ஓர் கொடி, ( தெள்ளு ) a climber.

பெய்கலம், கொள்கலம், a receiving vessel as in distillation retort or receiver.

பெய்தல், கொட்டல், விடுதல், pouring into 2. செறித்தல், inserting; stuffing; 3. போடுதல், placing or putting in.

பெரட்டிக்கீரை, a kind of greens.

பெரி பெரி, a disease like dropsy caused by the deficiency of vitamin —Thiamine hydrochloride marked by swelling of the body.

பெரிமாதப் பூடு, தழுதாழை, a tree — Clerodendron phlomoides.

பெரிய, பெரு, large, broad; 2. நீண்ட, long; 3. பருத்த, big; bulky.

பெரியஅந்தர் தாமரை, See பெரிய ஆகாசத் தாமரை.

பெரியஅறுகு, யானையறுகு, a kind of grass — Panicum ischoemoides.

பெரிய ஆகாசத்தாமரை, பெரிய அந்தரத் தாமரை, a water or aquatic plant — big variety of — Pistia stratiotes.

பெரிய ஆம்பல், பெருவல்லி; அல்லி, a big species of water lily — Nymphae edulis.

பெரிய ஆல், வடவிருட்சம், Big banyan tree— Ficus bengalensis.

பெரிய ஆவிரை, see ஆவிரை.

பெரிய இரசாயினி, —Lymphatic vessel.

பெரிய இலவங்கப்பட்டை, மொத்து இலவங்கம் பட்டை, Wild Cinemon — Cassia bark — Cassia lignea.

பெரிய ஈஞ்சு, see பேரீஞ்சு.

பெரிய உடைமரம்.

பெரிய உதியம், a tree — Spathe trumpet flower tree — Addichos crispa.

பெரிய எலுமிச்சை, கொடி நாரத்தை, lemon fruit — Citrus lemonum.

பெரிய எழுத்தாணிப் பூடு, an prostate herb — large variety of Lactuca sarmentosa.

பெரிய ஏலக்காய், காட்டேலம், greater or Ethiopian cardoman — Capsules or Amonum — Amonum subulatum. see பேரேலம்.

பெரிய கண்ணுகம், பெரிய கண்களையுடைய ஓர் வகை நாகப்பாம்பு, as opposed to சிறு கண்ணுகம் a species of cobra with big eyes.

NOTE by C. D. இது பெரிய கண்களையுடைய துத்த நாகத்தைக் குறிக்கும், the cut or broken surface of zinc will appear with big facets or islets where as சிறு கண் நாகம் broken surface will possess small facets of istats. When zinc is purified or consolidated these facets must become smaller & smaller and disappear finally.

பெரிய கம்பி, பெருங் கம்பிப் பூடு, a large species of gum plant - Cumby resin tree — Gardenia gummifera alias O. latifolia.

பெரிய கருணைக் கிழங்கு, a corm — Tacca pinnatifida.

பெரிய களா, பெருங்களா, a plant with thorns — Carissa carandas.

பெரிய காட்டு சாதிக்காய், wild mace — Myristica mulubarica.

பெரிய குண்டுமணி, யானை குண்டுமணி a tree — Adananthera pavonina.

பெரிய குருடனுர். பாம்பாட்டிச் சித்தனின் தகப்பன், father of Pambuhatti Siddhar.

பெரிய கடலை, பூசணிக்காய், pumpkin.

பெரியகோசாதகி, பேய்ப் பீர்க்கு, a wild bitter kind of gourd — Luffa amara.

பெரிய கோவை, பெருங்கோவை, a large caper — a climbr — Bryonia grandis.

பெரிய சலவாதி, மலங்கழித்தல், going to stools.

பெரிய சாலி, சாலிமரம் அல்லது மராமரம் sea side Indian oak — Eugenia racemosa.

பெரிய சிவப்பம் மான் பச்சரிசி, a milky plant —Euphorbia pilulifera red variety.

பெரிய சீரம். பெருஞ் சீரகம் அல்லது சோம்பு a plant — Pimpinella anisum.

பெரிய சேரான், a tree glabrous marking nut — Semicarpus travancoria.

பெரிய சோதி, மகா மூலிகை 23-ல் ஒன்று, one of the 23 - kinds of drugs of higher qualities.

பெரிய நகரம், கிரந்தி தகரம், which see.

பெரியதகரை, பெருந்தகரை, - Cassia sophera; 2. பொன்னாவிரை, a plant shrub — Cassia auriculata; 3. பேராவிரை, which see.

பெரிய தக்காளி, cape gooseberry; edible winter cherry — Physalis peruviana. The fruit exactly resembles the winter cherry of English gardens. It is concealed in leaf appendage. The young shoots bear the finest fruits. Fruits make good preserve.

பெரிய தழற் கொடி, larger scratch wort— Mucana monosperma.

பெரிய தும்பை, ஓர் வகைத் தும்பை, a plant — Leucus cephalotus.

பெரிய தெள்ளுக்காய்ச் செடி, Negrobean plant, the pods are highly irritating — Mucona monosperma alias Carpopogon monospermum.

பெரிய நங்கை, பெரியாணங்கை as opposed to சிறியாணங்கை — Polygala elongata as opposed to Polygala grinersis.

பெரிய நறுவிலி, பெருநறுவிலி, a tree large sebesteus — Cordia myxa alias C. obliques,

பெரிய நாய் முள்ளு, ஓர் விரணநோய், a kind of ulcer.

பெரிய நுணா, a tree — Morinda citrifolia.

பெரிய நோவு, மிகுவலி, severe pain; 2. பிரசவ வலி, labour pain.

பெரிய படலம்,

பெரிய பாசம், ஊர்க் குருவி, a big species of sparrow.

பெரிய பாண்டத்தி, ஓர் வகைத் தொட்டி பாஷாணம், a kind of red arsenic or orpiment.

பெரியபுடம், a big fire with cow dung cakes for calcination.

பெரிய பூளை, பெரும் பூளை, which see.

பெரிய மாவிலிங்கம், பெருமாவிலிங்கம், Lingam tree — Crataeva religiosa.

பெரிய முருங்கை, large morinda.

பெரிய முள்ளங்கத்திரி, a brinjal with thorns.

பெரிய முள்ளங்கி, இரசத்தைத் தாக்குமோர் மூலிகை, a plant acting on mercury.

பெரிய மூக்கறட்டை, see மூக்கறட்டை.

பெரியமூளை, அமுதமூளை, cerebrum.

பெரியம்மான் பச்சரிசி, பெருஞ்சித்திரப் பாலாடை, a milky plant — Euphorbia pilulifera.

பெரியம்மை, ஓர் வைசூரி; முதலில் காய்ச்சலுண்டாகி கடலைப் பிரமாணம் கொப்புளங்கள் உடம்பு முழுவதும் முத்துகள் போலே எழும்பி உடம்புவலி, கீல் தளர்ச்சி முதலிய குணங்களுண்டாகு மோர்வகை அம்மை, ( வ - மொழி மசூரிகை ), small pox with large eruptions or blebs — Variola pimphegosa.

பெரியலவங்கப் பட்டை, கருவரப் பட்டை, Cassia bark tree — Cinnamomum tamala.

பெரிய வழுதலை, a big brinjal with thorns.

பெரியவாகாசத் தாமரை, See பெரிய ஆகாசத் தாமரை.

பெரிய வாத்தி, a tree — Bauhmia purpurea.

பெரிய விலை, முடக்கற்றான், palsy curer — Cardiospermum helicacabum.

பெரிய வில்வம், பெருவில்வம், a tree —Aegle marmelos.

பெரியவுரி, வண்ணானவுரி—indigofera.

பெரிய வெலுமிச்சை, பிள்ளையார் எலுமிச்சை, large lime - giant lemon — Citrus medica-limonum.

பெரிய வெள்ளை, பிரஸ்நபரணி, which see.

பெரியன்அளவு, ஒருபலம் அல்லது ஒருவிராகனெடை, one palam or one pagoda weight.

பெரியாணங்கை, பற்பவகைக்கும், செந்தூர வகைக்கும், விடத்திற்கும் உபயோகிக்கும் ஓர் சிறந்த மூலிகை, a very rare plant used in medicines and in poisons.

பெரியாணங்கை நீர், ருதுநீர், menstrual fluid; 2. சிறுநீர், urine.

பெரியாதளை, காட்டாமணக்கு, a plant — Jatropha curcas.

பெரியா நங்கை, பெரிய நங்கை, which see.

பெரியாநீதம், பெருமருந்து அல்லது ஈஸ்வர மூலி — Aristolochia indica.

பெரியாமணக்கு, பெரிய விதைகளைத் தரும் ஆமணக்குச் செடி, caster plant which yields large sized seeds — Ricinus communis.

பெரியானுதி, தான்றி, a tree — Terminalia bellerica.

பெரியோருண்ணுங் கற்பம், கஞ்சா யிலை, முப்புக்குரு, leaf of ganja plant — Indian hemp — Cannabis sativa.

பெரியவீடு கொள்ளி, see பெருவிடுகொள்.

பெரின்பானல்.

பெரு, பெரிய, large; 2. பருத்த, bulky; 3. நீண்ட, long.

பெரு ஈசன், எருமை, buffalo.

பெருகடம்பை, பெருங்கடம்பை மரம், a tree — Barringtonia acutangula.

பெருகமுடித்தல்.

பெருகம்பு, தயிர்ச்சலம், whey water thin fluid found in the formation of curd.

பெருகரண்டி நிறை, பெரிய கரண்டியளவு, table spoonful as opposed to சிறுகரண்டி நிறை, teaspoonful.

பெருகரந்தை, பெருங்கொட்டைக் கரந்தை as opposed to சிறுகொட்டைக் கரந்தை, Indian globe thistle—Sphoecranthus indicus.

பெருகல், பெருகுதல், distending; 2. வளர்தல், growing in size; 3. விங்கல், swelling; 4. அதிகமாதல், increasing.

பெருகளர்வா, see களர்வா.

பெருகளா, கார்கொள் மரம், a tree — Salvadora indica; 2. பெரியகளாக்காய், large caranda — Carissa carandas.

பெருகா கோளி, நீரிழிவைப் போக்கும் ஓர் வகை காகோளி, unidentified plant said to cure diabets.

பெருகாஞ்சி,

பெருகாஞ் சொறி, பெருங் காஞ்சொறி, as opposed to பூனை அல்லது புன்காஞ்சொறி, large climbing nettle — Tragia involucrata.

பெருகி see துத்தம்.

பெருகிலை, a plant — Cleodendron infortunatum.

பெருகுதல், see பெருகல்; 2. பருத்தல் as in வயிறு, enlargement as of stomach.

பெருகுவேறு, வேறு தயிர், fresh curd.

பெருக்க மரம், பப்பரப் புளிமரம், a species of large tree, brahmin tamarind tree — Adansonia digitata.

பெருக்கி, நாதம், menstrual blood; 2. விந்து semen.

பெருக்கு, மாதப் பெருக்கு, menstruation; 2. வெள்ளம், overflowing as நீர்ப்பெருக்கு in diabetes. and இரத்தப் பெருக்கு, in haemorrhage; 3. பப்பரப்புளி, fruit of Adansonia digitata.

பெருக்கு வேளை, உச்சிப் பொழுது. midday.

பெருங்கடம்பு, பெரிய கடம்பு மரம், see பெருங்கடம்பை.

பெருங்கடம்பை, Hyjal tree — Barringtonia acutanglea.

பெருங்கடம்பைக் கிழங்கு,

பெருங்கடற்றுமரை ஓர் கடல்மீன், a sea fish —Discosomia.

பெருங் கடுகு, செங்கடுகு, red mustard.

பெருங்கடுக்காய், கப்பற் கடுக்காய், a big gall nut

பெருங்கடுச்சி, தழுதாழை, a tree — Clerodendron phlomoides.

பெருங்கட்டுக் கொடி, தண்ணீர் கட்டுங் கொடி, as opposed to சிறு கட்டுக்கொடி, coagulating creeper; broom creeper — Cocculus villosus (bigger variety).

**பொன்னம்பர்,** அன்னபட்சியின் மலமானது ஆகாசத்திலிருந்து கெலிப்போடு அக்கினியைப் போன்று நிறத்தை உடையதாய் வெப்பமான தரையில் விழுந்து அது இரும்பைப் போல் கெட்டிபட்டு ஆங்காங்கே சுருண்டு கொண்டிருக்குமென்று ஓர் கதை உண்டு, இப் பொன்னம்பர் முப்பு முடிப்ப தற்த உபயோகப்படும்.

2. அன்னங்கள் சமுத்திரத்திற் சென்று தாமரைச் சத்துக்களை விழுங்கி மேலே பறக்க என்றதினாலே சமுத்திரத்திலும் ஒரு வித தாமரை உண்டு என்று ஏற்படுகிறது; மேற்கண்ட அன்னங்கள் ஆகாயத்தில் நெருங்கிப் பலத்தோடு ஒன்றோடொன்று தாக்கி, கூட்டங்களாகச் சுற்றிப்பறந்து தங்கும்போது அப்பட்சிகளின் மலங்கள் பூமியில் விழும். இது இறுகிக் கெட்டிப்படு வதே இச்சரக்கெனப்படும். இது அபூர்வமான வேலைகளைச் செய்யத்தக்க ஆச்சரியம் பொருந்தியது, இதைப் பலர் வேறுவிதமாக உண்டாகப்பட்டதென பலவிதமசகச் சொல்லுவார்கள்; various versions of how Amber is formed as given above.

**பொன்னம்பலம்,** see தில்லைமரம்.

**பொன்னரிதாரம்,** ஓர்வகை மஞ்சள் அரிதாரம், yellow or golden colour orpiment —Yellow sulphuret of Arsenic.

**பொன்னலரி,** மஞ்சளலரி, — Nerium odorum bearing yellow flowers.

**பொன்னலாரி,** மதனகாமப்பூ, which see.

**பொன்னவர்வணங்கும் வேம்பு,** a shrub — Indigofera asphalathoides.

**பொன்னறுவிலி,** Cordia sebestena.

**பொன்னுகம்,** see ஆசையம்.

**பொன்னுகுங்கண்ணி,** பொன்னுங்கண்ணி, prostate plant — Sessile plant — Illecibrum sessile an edible green.

**பொன்னுங்கண்ணி,** பொன்னுங்காணி, கொடுப்பை, வழிநோய், வாதகாசம், சம்பிரரோகம், சீதளச் சூடு, பீலிகம், மூலம்போம், an herbaceous plant found in wet lands, tank bundes etc. It is good for eye diseases, spleen diseases, piles and internal heat. It is an edible green. It calcifies copper into red powder which is very useful in gastric & duodenal ulcers, tamarind should be avoided.

**பொன்னுங்கண்ணிச் சக்களத்தி,** it is similar to பொன்னுங்காணி and found together Water olive — Hydrolea zeylanica alias Nama zeylanica.

**பொன்னுங்காணி,** see பொன்னுங்கண்ணி.

**பொன்னுங்காணித் தைலம்,** பொன்னுங்காணிச்ச மூலச்சாறு உழக்கு எண்ணெய், இரண்டையும் கலந்து அதற்கு கோஷ்டம் பசும்பால் விட்டரைத்துக் கலக்கிக் காய்ச்சி வடித்த தைலம், இதனால் பித்தரோகம், உஷ்ணம், உட்சுரம், கைகால் கண் எரிச்சல் போம், குளிர்ச்சியுண்டாம். இச்சாப்பத்தியம், medicated prepared out of the juice of sessile plant as chief ingrediant. It is a bathing oil. It is cooling and good for the eyes and neurities.

**பொன்னுங்காய்,** பூவந்திக்காய், soap nut raw fruit of Sapindus trifoliatus.

**பொன்னுங்காய்ப்பழம்,** பாம்பு விஷத்திற்கு கொடுப்பது, ripe fruit of sapindus trifoliatus. It is given for snake bite.

**பொன்னுன்காலி,** மஞ்சட் கரிப்பான், a plant.

**பொன்னுங்கொட்டை.** பூவந்திக்கொட்டை, see பொன்னுங்காய்.

**பொன்னுணி,** see ஆணி; உரையாணி.

**பொன்னுந்தகரை,** see பொன்னுவரை, படை முதலியவைகளுக்கு உபயோகப்படும்.

**பொன்னுந்தட்டான்,** ஓர் பறவை, இதன் கறியால் பிரமேக வெப்பம், கரப்பான் போம் வீரிய தேஜசு உண்டாம், a bird whose flesh is edible. It cures certain skin diseases, venereal diseases and internal heat.

**பொன்னுமி,** மஞ்சட்கொன்னை, which see.

**பொன்னும்பழம்,** நொய்க்கொட்டான், which see.

**பொன்னும்பளம்,** நெய்க்கொட்டான், a plant four leaved soap nut — Hemigyrosa canescens.

**பொன்னும்புமரவரு,** Limodorum.

**பொன்னும்புவேர்,** ஆவாரை வேர், the root of ஆவாரை which see.

பொன்னுரைக்கிரை, ஓர் வகைக் கீரை, a kind of greens.

பொன்னூர்சிதேவி.

பொன்னுலங்காய்,

பொன்னுவடம், மார்பெலும்பு, sternum.

பொன்னுவரம், பொன்னுவரை, பொன்னுவாரம், } see பொன்னுவிரை.

பொன்னுவாரை, பூ நிலம், 4-பூ, தழை மஞ்சள், மூலம் கறுப்பு;, மொக்கு வெண்மை; விதை கடுகுபோலாம், இதில் எதைச் சாப்பிட்டாலும் அனேக ஆண்டு இருக்கலாம், ஓர் கற்ப மூலிகை, வட பொதிகையிலுள்ளது, foetid cassia smell of the plant very disagreeable - leaves and seeds cathartic; 2. a plant cassia sophera alias Cassia occidentalis.

பொன்னி, see பொற்றலை; 2. பொன்னிறம், gold colour; 3. மஞ்சள் சாயம், gold colour dye - Kamela dye — Mallotus philipinensis.

பொன்னிச்சி, கெவுரி பாஷாணம், a kind of arsenic.

பொன்னிமிளை, மஞ்சள் நிமிளை, இதுசுவையில் முதல்தித்திப்பாயும் பிறகு சிறிது காரமும் கசப்புங்கலந்ததாயுமிருக்கும், சோகை மகோதரம் போம், gold coloured bismuth; 2, சுவர்ண மாட்சிகம் - ஓர் உபரச சரக்கு, one of the minerals.

பொன்னிமிளை சுத்தி, நிமிளையை மூன்று நாள், தாய்ப்பால் அல்லது பசுப்பாலில் ஊறவைத்து கழுவி எடுக்கவும், It is purified by soaking it for 3 days in kadi, or breast milk or cow's milk and washing.

பொன்னிமிலை பற்பம், இரத்த வாந்திபோம், calcined powder of பொன்னிமிளை —arrests haemoptesis.

பொன்னிலை, பொன்தகடு; gold leaf.

பொன்னிறைச்சி, பொற்றிலைக் கையாந்தகரை, which see.

பொன்னிறத்தி, கண்டங்கத்திரி, a thorny shrub—solanum jacquini; 2. பொன்னூமத்தை, which see.

பொன்னிற நீர், மஞ்சள் நிற மூத்திரம், urine which is of straw colour.

பொன்னிறப்புஷ்பி, see பொன்னூமத்தை.

பொன்னிறமாட்சி, பொன்னிமிளை, which see.

பொன்னிறமுகிர்ந்தோன், பொன்னிறசக்தி, } see பொன்னிமிளை

பொன்னிறம் கலந்த கரும் பூவலமருதோன்றி, } மஞ்சளும் கருப்பும் கலந்த பூவுடைய மருதோன்றி, unarmed orange and black coloured nail dye—Crossandra undulacfolia.

பொன்னிற வெற்றிலை, வெற்றிலைப் பழுப்பு, மஞ்சள் வெற்றிலை, yellow betel leaf.

பொன்னிதரோகணி.

பொன்னீர்ப்பூவல மருதோன்றி, gold coloured nail dye —Lawsonia alba.

பொன்னுக்காதி, களிம்பற்ற செம்பு, copper purified which does not rust.

பொன்னுக்கு விங்கி, காதண்டை வீங்கும் ஓர் நோய், கூவைக்கட்டு, புட்டாளம்மை, Inflammation of the parotid gland —mumps. It is believed that it is cured by wearing a gold chain, hence the name.

பொன்னுருக்குங்காரம், பொரிகாரம், borax.

பொன்னுனி மூலி, see பொன்னூமத்தை

பொன்னூமத்தன், see பொன்னூமத்தை, இதன் பச்சைத் தழையினுல் சொர்ணமலைக் காணலாகும், இதன் சாற்றைப் பிழிந்து ரவியில் காயவைத்து, செம்பையுருக்கிக் கிராசமிய பசுமையான தங்கமுண்டாகும், (அக—மாஞ்) இத்தழையினுல் சிங்கம், யானை முதலிய காட்டில் வசிக்கு மிருகங்களெல்லாம் மநடங்கி வணங்கி வசியமாகும், It is useful in alchemy to transmute copper into gold. It aids to conquer wild animals, lion, elephant etc.

பொன்னூமத்தை. ஓர் வகை மஞ்சள் நிற பூவுடைய ஊமத்தை. dhatura bearing yellow flowers; 2. மருளூமத்தை. இதனுல் விரணக்கிரந்தி. நாட்சென்ற கிராணி, பித்த விஷசுரம் நீங்கும், இது கொடிய நஞ்சாகையால் வைத்தியர்கள் தேகபலம் நோய் பலம் அறிந்து வெகு சாக்கிரதையாய் உபயோகிக்க வேண்டும். a variety of dhatura. It is poisonous, and so must be used with caution.

பொன்குண முருங்கை, ஓர் வாகை—Allizzia odoralissima.

போகக்கல், செம்பாறைக்கல், a kind of red gravel rock.

போகக்களஞ்சி, பாவை, lady; 2. பெண், girl.

போகக்குளிகை, a pill to increase the virility or power of sexual intercourse.

போகசக்தி, கலவிக்குரிய ஆண்மை, power of sexual intercourse; vital power.

போகணம், பெருமருந்து, a turning plant, Indian birth wort— Aristolochia indica.

போகணி, ஓர் வாய் அகண்ட பாத்திரம், a wide mouthed metal vessel.

போகண்டன், 5 வயது முதல் 16 வயதுக் குட்பட்டவன், a boy from 5 to 16 years.

போகத்தானம், } போகஸ்தானம், } ஆனந்தமயகோசம், that state of insensibility produced by excess of joy during meditation or concentration; 2. உடம்பு, body.

போக நிதானம், புணர்ச்சிக்குரிய காலம்; time suitable for copulation.

போகபிசாசிகை, பசி, hunger.

போகப்ப விந்திரி, ஏகம்பச்சாரம், a kind of salt mineral;2 போகம் புணர்ச்சி,intercourse. enjoyment (in Philosophy) it is the perception of objects upon which enjoyment - ensues.

போகமணிச்சாறு.

போகமிகவாசி, முட்பலாசு, a tree. see பலாசு.

போகமுண்டாக்கி, காமத்தை மூட்டும் வஸ்து drug that increases the sexual power; following are a few such drugs, நறுந்தாளி நன் முருங்கை, தூதுணம், பசளை. அறு கீரை இதிலொன்றை புளிநீக்கி நெய்யிட்டு உண்ண நிர்வாகம் உண்டாம்.

போகம், கண்பூ, cataract of the eye; 2. இரசம், mercury; 3. பெண்போகம், sexual intercourse — Coition; 4. சாலாங்க பாஷாணம், a kind of arsenic.

போகம் விடாப்பெண், over sexed woman.

போகம் விடாப்பெண், தூரவழி நடந்தவள்; 2. தன்னை மறக்கும்படி மதுபானம் பண்ணி னவள்; 3. நிர்த்தனம் செய்து இளைத்தவள்; 4. நான்காம்நாள் ருது ஸ்நானம் பண்ணின வள்; 5. தாபசுரத்தினால் மெலிவுற்றவள்; 6. கர்ப்பிணியாயிருப்பவள்; 7. நூதன புருஷ னுடன் புணருபவள்; 8. அமிர்த போசனம் பண்ணினவள்; 9. பசியால் வருந்தியவள். 10. மாறுபட்ட குறியினையுடையவள்.

போகம் விளைதல், காமவிச்சை யுண்டாதல், increas of desire to have intercourse.

போகரோகணி, புல்லூரி, a parasitic plant.

போகர், ஓர் சித்தர்; இவர் தமிழ் நாட்டுவேட் கோவர் வகுப்பைச் சார்ந்தவர், இவரைச் சர்வ சாஸ்திரங்களில் துறைபோய காரணம் பற்றிப் போகர் என்று அழைப்பார்கள்; இவர் காலாங்கி நாதருக்கு முதல் மாணாக்கர்; இவர் சதுரகிரியிலுள்ள காய கற்ப மூலிகை களால் தேகசித்தி செய்து விளங்கியவர்; இவர் எல்லா நாட்டு மொழிகளும் நன்கு தெரிந்து வாத வைத்திய யோக ஞானங் களைப் பல நாட்டிலும் பரப்பி பலநாட்டு மொழிகளையுந் திரட்டி தமிழில் (1700) ஆயி ரத்தெழுநூறு பாடல்களால் ஒரு நிகண்டு செய்து தந்தவர்; இவர் புலிப்பாணி, கரு வூரார், கொங்கணவர் இடைக்காடர் முதலி யோருக்கு அட்டமாசித்தி முதலிய சர்வ ஞானங்களையும் போதித்த ஆசாரியராவார்; இவருடைய மாணாக்கருள் புலிப்பாணி பழனியிலும் இடைக்காடர் அருணசலத்தி லும் ஆசிரமம் கொண்டு அமருவாராயினர்; ஆசிரியராகிய போகரோ தமிழ் மாணவர் சிலருடன் சீனதேசத்திற்குச் சென்று பல கருவி நூல்களும் இயந்திர நூல்களும் இயற்றி ஆங்குள்ளவரைப் படிப்பித்து அர சரால் மதிப்புப் பெற்றுத் திரும்பிவந்து சதுரகிரியில் அமர்ந்தார்; பிறகு அவ் விடத்தை விட்டுப் பழநி மலையை அடைந்து வாழ்வார் ஆயினர்.

இவர் செய்ததாக சப்தகாண்டம், நிக ண்டு, வைத்தியம், சரக்கு வைப்பு, பல திரட்டு, கற்பசூத்திரம், உபதேசம், முப்பு சூத்திரம், அட்டாங்கயோகம், பூஜாவிதி முத லிய நூல்களும் இன்னும் பல நூல்களும் பஞ்சபட்சி சாத்திரமும் இருக்கின்றன.

போகர் சீஷன், புலிப்பாணி, Pulipani a disciple of Bogar.

போகர் செம்பு வித்தை, தங்கச்செம்பு செய்யும் மார்க்கம், the art of transmutation of copper into gold.

போகர் பெருநூல், போகர் ஏழாயிரம், 7000 verses compiled by Bogar, a Siddhar.

போகவரிசி, கார்போகவரிசி, see போகி.

போக வலிமை, பெண்ணிடம் சம்போகிக்கவுள்ள சக்தி, the power of sexual intercourse.

போகவிச்சை, புணர்ச்சியில் ஆசை, liking to have intercourse.

போகவிருத்திக் கீரைகள், நறுந்தாளி, நன் முருங்கை, தூதுவளை, பசளை, அறுகீரை, the greens that increase the power of virility; they are given above.

போகவிருப்பம், see போகவிச்சை.

போகவிர்த்தி, நல்லரிசி, increase of harvest.

போகாநிழலி, சாயாவிருட்சம், a kind of tree which does not cast its shadow.

போகாப்புனல், ஆவியானவன்னி, vapour.

போகி, கார்போகி விதை, seeds of a plant — Psoralea corylifolia; 2. பாம்பு, snake; 3. பூவரும்பு, flower bud; 4. இரண்டு தரம் தீர்த்த கவுனக் குளிகை, a mercurial pill animated by a special process of calcination described in the Tamil Medical Science; 5. பெண் போகத்தில் அமிழ்ந்தினவன், one immersed in sexual intercourse. 6. போகித்தல், enjoying sexual pleasure; copulating; 7. கோரக்கர் கையிலுள்ள ஓர் கவுன குளிகை, a ball possessed by Korakar a Siddhar which enables him to travel in air.

போகிகாந்தம், காற்று, wind.

போகிதேரம், புளி நறளைக்கிழங்கு, the root of a creeper — Cissus acida alias Vitis lanata.

போகித்தல், போகிப்பு, அனுபவித்தல், experiencing sexual or animal pleasure; 2. புணர்தல், to have coitus.

போகித்தூரிதம், மணத்தக்காளி, a plant — Solanum nigrum.

போகில், கொப்பூழ், naval; 2. பறவை, a bird; 3. பூவரும்பு, flower bud.

போகிவல்லபம், போகிவல்லியம், சந்தனம், sandal wood.

போகிவாசம், சந்தனமரம், sandal wood tree — Santalum album.

போக்கணந்தூக்கியிலை,

போக்காடு, போக்கு, இறப்பு, death.

போக்கிவிடல், குணப்படுத்தல், as in நோய், curing the disease.

போக்கிற் கொள்ளுதல், பத்திய மில்லாமல் மருந்துண்ணல், taking medicine in the usual course without observing dietic restrictions.

போக்குக்கஞ்சி, see உரிமைக்கஞ்சி.

போக்குநீர், நீர் ஒழுக்கு நோய், passing of more urine — diabetes insipidus.

போக்கு முலைச்சி, சிவகரந்தை, ceylon loolsy — Sphoeranthus zeylanica.

போக்குலவணம், திலாலவணம், a kind of salt.

போக்கொன்றை,

போங்கம், மஞ்சாடிப்பூ, flower of the tree மஞ்சாடி.

போங்காலம், இறக்குங்காலம், time of death.

போசகம், எட்டி, a tree nuxvomica — Strychows nūxvomica.

போசகி, அகத்தி, a tree—Sesbania grandiflora alias coronilla grandiflora.

போசம், அகத்தி, see போசகி.

போசரோகணி, கடுகு ரோகிணி, root of a plant — Helleborus niger.

போசரோணி, see பெரு விடுகொள்.

போசனகஸ்தூரி, நாரத்தங்காய், or கச்சல், fruit of a variety of citrus tree.

போசனகுடாரி, சீரகம், cumin seeds of the plant — Cuminum cyminum.

போசனக்குழல், உணவுக் குழாய், alimentary canal.

போசனக்குறடா, மிளகாய், chilly; fruit of a plant—Capsicum annum; 2. ஊறுகாய், fruit such as limes, mango, etc preserved in salt.

போசனசஞ்சீவி, எட்டு வகை குன்மத்திற்குக் கொடுக்கப்படும் மருந்து, a medicine given for the eight kinds of gunmum.

போசனத்துக்கான, உணவுக் குதவும், esculent.

போசனப்பதார்த்தம், தின்பண்டம், eatables.

போசனப்பரிகாரம்,

போசனப்பிரியம், gastronome.

போசனப்பிரியன், பேருணவு கொள்வோன்; வயிறு தாரி, a glutton - epicure.

போசனப்பெருக்கம், உதராக்கினி விருத்தியினால் அதிகமாகச் சாப்பிடல், eating more due to excessive hunger.

போசனம், உணவு, food, 2. உண்ணல், eating; 3. அறிவு, knowledge.

போசனாசயம், இரைப்பை, stomach.

போசனாந்தம், சாப்பிட்ட பிறகு; உண்டபிறகு, at the end of meals.

போசி, அரக்காம்பல், a red water lily.

போசிதான்மிசிரி, (யுனா) இதை சர்க்கரை பொங்கலோடு சேர்த்து கிண்டிச் சாப்பிட இளைத்த தேகம் பருக்கும். அன்றியும் தாது புஷ்டி நரம்புக்குப்பலம் உண்டாம். கீழ் வாதம் இசிவு மகோதரம்போம்; இது ஓர் விதை, a seed used by Unani doctors.

போஜிதான்மிசரி, see போசிதான் மிசரி.

போச்சியம், தின்பண்டம், eatables.

போஸ்தக்காய், fruit of poppy plant the seeds of which is called கசகசா. If wounded it yields opium (அபினி) a milk which becomes black when dried.

போஸ்தக்காய்ச் செடி, poppy plant — Garden poppy — Paver somniferum.

போஷகதாது, திரிதாது, three dhathus — three humours.

போஷணக் கோளாறு, உணவு வகையி லேற்பட்ட குழப்பம், derangement of the nutrition — Trophopathy.

போஷண, பலத்தைக் கொடுக்கிற, nutritious.

போஷணசாலை, குழந்தைகளைப் பால் கொடுத்து வளர்க்குமிடம், nursing home.

போஷணத்தந்துகி, lacteal, the primary lymphatic vessel that remains in the centre of intestinal villies is known as lacteal.

போஷணநாடி, arteries contributing to the assimilation of food — Nutrient arteries.

போஷணரோகம், any disease or disorder to nutritional causes — Trophonosis.

போஷணம், உடம்பை வளர்த்துப் பலத்தைக் கொடுக்குந் தொழில், nutriment — Nutrition; 2. கொழுப்பிக்குமுணவு, nourishing food—Nourishment.

போஷிக்கத்தக்க, பலத்தைக் கொடுக்கும், Nutritions.

போஷிக்குமுணவு, Nourishing food.

போடகசுரம், பயறுபிரமாணம் சிறு கொப்புளங்கள் உடம்பு முழுவதிலும் காணும் ஓர் வகை சுரம், see அம்மைசுரம், fever due the rising of blebs on the body.

போடகநாறி, see போதக நாறி.

போடகம், கொப்புளிப்பான்; chicken pox; 2. ஓர் அம்மை, a variety of small pox; 3. கொப்பளம், bleb; boil.

போட செமிக்கி, வயிறு, belly.

போடம், vesicle or bleb, pustule.

போடி, சம்பு நாவல் மரம், jambo tree — Eugenia Jambolana.

போடிவ பட்டாணி, ஓர் வகை பட்டாணி, a kind of pea.

போடு, orabanche cernus.

போட்களம், போட்டா, } பொடுதலை, a prostate plant — Lippia nodifolia alias Verbena nodifolia.

போடோபில்லி, ஓர் சீன தேசச் செடி, a Chinese plant.

போணம், சோறு, cooked rice.

போதகம், காஞ்சிரை, nuxvomica tree — Strychinos nuxvomica; 2. இளமை, youth; 3. குழந்தைப் பருவம், infancy; 4. புலி, சிங்கம் இவைகளின் குட்டி, the young of tiger, lion etc; 5. யானை, elephant; 6. பசளை, a prostate palant — Pottulaca oler acea; 7. திப்பிலி, long pepper; 8 நாக்கி லுள்ள கபம், See போதக சிலேட்டுமம்; 9. வாலைப்பூநீர், which see.

போதக சிலேட்டுமம், நாவிலிருக்கும் ஓர்வகை நீர்ப்பசை, a variety of Kapham named போதகம், which is said to be at the tongue,

போதக நாறிமரம், கொள்ளிக் கட்டைத் தேக்கு, a tree.

போதகப்புல், a kind of grass.

போதகாசிகம், மட்டிச்சாம்பிராணி, Benzoin.

போதகம், போதகா, } பேரண்டம், தலையோடு, cranium.

போதகி, கண்களில் கடுகளவு கட்டிகள், கபத்தின் மேலீட்டினாலேற்படும், small mustard size blabs in the eye due to excess of phlegm humour; 2. பெண்ணூர்க் குருவி, a female species of sparrow; 3. பசளைக் கொடி, spinach climber — Basella cordifolia; 4. வேங்கை மரம், a tree — Pterocarpus marsupium; 5. சீரகம், cumin seed; 6. ஓர் கண்வியாதி, a kind of eye disease; see போதகிவர்த்தமம்.

போத கிராந்தி, விஷ்ணு கிராந்தி.

போதகி வர்த்தமம், கண் இரப்பைகளினுட் பாகத்தில் செந்நிறமான கட்டிகளுண்டாய் இரத்தம் வடிந்து, கொண்டு நமையுடன் கூடிய மிக்க வலியையு முண்டாக்குமோர் கண்ணோய், a number of red boils or postules resembling red mustard seeds attended with pain, itching and exudation of blood

போதக்கியம்.

போதக் கிரியை, சன்னியினால் தானே புலம்பிக் கொண்டே உடுத்திருக்கும் துணியைக் கிழித்தும் உண்ணாமல் மயக்கத்தோடு கிடக்கும் ஓர் செய்கை, a delirious condition marked by crying, fainting, tearing of the cloth worn by him, etc.

போதசு, போதஸ், } ஓர் பூடு, an herb.

போதச்சயம், ஓர்வித மயக்கம், அதிசுழுத்தி, a long or prolonged sleep — Coma.

போதத்தம், சிவப்பு மந்தாரை, a tree—Bauhenia variegala.

போதநாசனி, கோவை, a creeper — Bryonia grandis.

போதம், அறிவு, knowledge; 2. ஞானம், wisdom: 3. யானைக்கன்று, young of an elephant.

போதயத்தம், பட்டாணி, pea pulse.

போதயந்தரத்தான், சிறு காடை, a bird; quail.

போதயம், பட்டாணி, pea seed — Pisum sativum.

போதரவிடல், உயிர்த்தல், respiring; breathing.

போதனமரம், காசுக்கட்டி உண்டாகு மரம் — Catchu nigrum.

போதனம், புகை காட்டல், funigating exposing, to smoke; 2. அறிவு, knowledge: 3. பாதாள மூலி, a creeper, ஆடு தின்னாப் பாலை, or கோரைக்கிழங்கு or சிறு நெருஞ்சில் or சீந்தில், which see.

போதனுவாக்கி, செம்முள்ளி, a red species of the Indian night shade — Barleria prionitis.

போதனை, see பேதனமரம்.

போதா, a large stork; heron; crane.

போதி, அரச மரம், a tree — Ficus religiosa; 2. மலை, mountain; 3. அறிவு, knowledge.

போதிதரு, } see போதி.
போதிரன், }

போதிமம், அரசு, tree — Ficus religiosa.

போது, காலம், time; season; 2. பூ, flower; 3. பூவரும்பு, flower bud; 4. தாமரை, lotus.

போதுகாலம், பெண்கள் குழந்தை பெறும் பக்குவம், பத்தாமாதம், period of delivery, i.e, tenth month.

போதுமளவு, வேண்டிய மட்டும், a sufficient quantity — Quantum sufficit.

போதுளி, வெண்கடம்பு, or கடப்பமரம், common cadamba tree — Anthocephalus cademba.

போதை, மயக்கம், alchoholic intoxication, 2. சல்டக் கஞ்சா, ganjah — Cannabis sativa.

போதைப்புல், காவட்டம் புல், a kind of grass — Citronella — Andropogon nardus; 2. கர்ப்பூரப்புல், lemon grass from which oil is extracted — Andropogon citratis.

போத்திராயுதம், பன்றி, pig; hog.

போத்திரி, பன்றி, pig; 2. வெள்ளரி, cucumber.

போத்து, செம்போத்துக் குருவி, a bird — Indian cuckoo; 2, மிருகத்தின் ஆண் வகை; the male among animals e.g. எருமைக்கடா; 3. தென்னம்பிள்ளை, young cocoanut plant — Cocoanut seedlig; 4. நீர்ச்சாதி, amphibious animal.

போநாந்தை, பனை, palmyra tree — Borassus flabellifer, இளம்பனை,young of palmyra.

போந்தி, பருமை, big; 2. வீக்கம், swelling.

போந்து, பனை, palmyra plam; 2. இளம் பனை, young of palmyra; 3. வேங்கை மரம், kino tree — Pterocarpus marsupium; 4. பல்லி, lizard.

போந்துகம், பனைமரம், palmyra tree — Borassus flabellifer.

போந்துகாதினை, மஞ்சள் தினை, yellow variety of Itallian millet — Setaria italica.

போந்துகாபீர்க்கு, நுரைபீர்க்கு, loofa— Luffa aegyptiaca.

போந்தை, see போங்து.

போம்பல், நீர்க்கடம்பு, water cadamba or female cadamba — Stephegyne parviflora.

போம்பறி, நிலக்கடம்பு, a tree — Anthocephalus cadamba.

போம்பனி, மருவு, a plant, maid's love — Artmesia abrotanum.

போராமக்கணம், குழந்தைகளுக்கு காணும் ஓர் நோய், a children's disease.

போர்க்கணம், குழந்தைகளுக்குவரும் ஒரு நோய், a children's disease.

போத்தேங்காய், வலிய தேங்காய், a variety of cocoanut.

போர்மாந்தம், குழந்தைகளுக் குண்டாகும் எண்வகை மாந்தத்திலொன்று, one of the eight varieties of diseases caused by indigestion in children marked by gurgling noice in the abdomen; 2, குழந்தைகளுக்கு மயக்கமுண்டாகி, பாலுண்ணுமல் உடம் பிளைக்கும் ஓர்வகை மாந்தநோய், a kind of indigestion in children attended with giddiness. shaking of head, palpitation of heart sunken eyes etc.

போர்வை, தோல், skin.

போலம், நிலக்கடம்பு, see போம்பறி.

போலவங்கம், பவளம், coral; 2. கள், toddy.

போலி, ஒட்டகம், camel.

போலிச்சரக்கு, a false drug which resembles the real one.

போலிச்சூதகம், பொய்த்திட்டு, மாதவிடாய்க் குண்டான குணங்களெல்லாம் இருந்தும் இரத்தமாத்திரம் வராதிருத்தல், a condition in which the bodily symptoms of menstruation occur without any blood - Xeromenia.

**போலிச்சூல்,** பொய்க்கருப்பம், false pregnancy pseudo pregnancy — Pseudo cyesis.

**போலிப்பிர மேகம்,** சனன வுறுப்புகளில் அழுக்கு முதலிய மாசுகள், சேர்ந்திருக்குங் காரணத்தினுல் வீக்கங் கண்டுண்டாகும் மேக நீரொழுக்கு, a disease caused by accumulation of dirt in the genitals but has the same symptoms as venereal disease.

**போலிமருந்து,** imitation medicine — false medicine which resembles the real medicine.

**போலி முள்ளந்தண்டு,** பீடிகை யெலும்பு — Sacrum. It is called false vertebral because the composed bone closely resembles the vertebral of the skin.

**போலிவிப்புருதிக் கட்டி,** swelling; resembling an abscess.

**போலிவைத்தியம்,** Charlatanism--Quackery.

**போல்,** மூங்கில், bamboo.

**போவகரியெலே,** புங்கங்கொட்டை, soap nut.

**போழ்தல்,** பிளத்தல், splitting; 2. வெடித்தல், gaping.

**போழ்து,** see போது.

**போழ்துக்கு முன் பிடிக்கில் துப்பி,** நாக சிங்கி, a medicinal plant which see

**போழ்முகம்,** பன்றி, hog.

**போளம்,** நிலக்கடம்பு. see குயக்காலம் — Anthocephalus cadamba; 2. கரியபோளம், which see; 3. வெள்ளைபோளம் which see.

**போளாங்கல்.** gravel stone.

**போறை,** கோரை. a kind of grass,

**போற்குன்றி,** வரிக்குண்டுமணி, jewellers' beed.

**போற்றலரி,** நிலப்பூசினி, a creeper — Ipomea digitata.

**போற்றிரசமூலி,** மருளுமத்தை. which see.

**போனகம்,** சோறு, cooked rice.

**போனகற்பி,** கொக்கிறகு, feather of stork.

**போனூர்தேடி வழிமறித்தான்,**

**பௌண்டிரவம்**, பாஞ்சாலிக் கொடி.

**பௌதிக**, பூமிக்குரிய, physical; 2. பூதசம்பந்தமான, relating to elements; 3. இரசாயன, chemical.

**பௌதிகக் கவர்ச்சி**, இரசாயனக் கவர்ச்சி, chemical attraction of atoms of the element of others resulting in chemical compound.

**பௌதிகக் கிரணம்**, Chemical ray.

**பௌதிகக்கூட்டு**, Chemical composition.

**பௌதிகக் கூட்டுப்பாடு**, Chemical composition.

**பௌதிகக் கூறுபாடு**, Chemical analysis.

**பௌதிக சந்தி**, Chemical union.

**பௌதிக சரக்கு**, குக்கில் முதலியன, chemical drug as bdellium.

**பௌதிக சரீரம்**; பூதவுடம்பு, physical body; 2. ஐம்பூதத்திற்குரிய வுடம்பு, body consisting of elements.

**பௌதிக சாஸ்திரம்**, ஓர் ஆயுள்வேத நூல், an Ayurvedic science book — Physics.

**பௌதிக ஞானம்**, ஐம்பூத சம்பந்தமான வுடம்பிற்குரிய ஞானம், wisdom of man in his physical body; 2. புத்தமதத்திற் கூறிய ஞானம், the eminence of wisdom related to Buddhistic philosophy.

**பௌதிக பரீட்சைசாலை**, இரசாயன விஷயங்களை ஆராய்ச்சி செய்யுமிடம், chemical laboratory.

**பௌதிக புலன்**, பூதசம்பந்தமான ஐம்புலனிலொன்று, one of the five physical senses.

**பௌதிக பிரிவினை**, இரசாயன விதிப்படி ஒரு வஸ்துவினின்று பிரிதல், Chemical decomposition.

**பௌதிக மங்கை**, பொன்னுங்கண்ணி, sessile plant — Illecebrum sessile alias Alternanthera sessile.

**பௌதிகம்**, பூதசம்பந்தம், relating to five elements; 2. புத்தசம்பந்தம், Buddhistic.

**பௌதிக ரசாயனம்**, பூதசம்பந்தமான இரசாயனம், Physico chemical.

**பௌதிக லோகம்**, பஞ்ச பூதத்தால் அமைந்தவுலகம், world founded on five elements — Physical world.

**பௌதிக வாதம்**, இரசாயன நூல், chemistry.

**பௌதிகவாதி**, இரசாயன சாஸ்திரி, chemist.

**பௌதீகம்**, கருநெல்லி, which see.

**பௌத்தர தாமரை**, குளிர்தாமரை, lotus.

**பௌத்திரத்தினை**, மஞ்சள் தினை, yellow Itallian millet.

**பௌத்திரநெல்லி**, அரிநெல்லி.

**பௌத்திரப் புல்**, தருப்பைப் புல், sacrificial or sacred grass.

**பௌத்திரம்**, See பௌத்திரரோகம்; மூலத்தில் வாயுகண்டு மேகநீர் சனித்து புரையோடி சீழ் பாய்ச்சல் கண்டு முளைவிழும் ஓர் நோய் fistula in ano due to other causes than venereal.

**பௌத்திர ரோகம்**, போகத்தினால் கனல் மிஞ்சி மேகமுண்டாகி பீசத்திற்கும் அபானத்திற்கும் இடையில் கொடியின் அடிநரம்பின் மேலாவது அதன் இருபக்கத்திலாவது அண்டம் அபானவாயு ஆகிய இவைகளிலாவது நமைச்சலெடுத்து வீங்கி நொந்து கொப்புளித்து சீழும் சலமும் வடிந்து பிறகு புரையோடி நரம்பழுகி, கண்கள் உண்டாகி அதன் வழியே மூத்திரமும் மலமும் இறங்கி அதினால் உடம்பு மெலிந்து சாப்பாடு செல்லாது ஆயாசத்தையும் களைப்பையுமுண்டாக்கும் ஓர்வகை நோய், a deep narrow sinuous ulcer extending between the surface of the body and internal an cavity near the anus said to have been caused by accumulation of venereal secreations due to excess of heat caused by sexual intercourse — Fistula in ano caused by venereal disease.

**பௌத்திர விரல்**, மோதிர விரல், ring finger.

**பௌத்திரபோளம்**, See கரியபோளம்.

பௌத்திர முருங்கை, புனல்முருங்கை, which see.

பௌத்திராயம், see செந்திராய்.

பௌத்திராவம், ஊதளை, physic nut plant — Jatropha glandulifera.

பௌத்துவம், மரகதம், a precious gem; emrald.

பௌந்திரம், See பௌத்திரம்.

பௌமம், பூமி சம்பந்தம், relating to earth; physical; 2. நிலத்திற் பிறப்பன, physical bodies.

பௌரகம், நொச்சி, a garden plant — Vitex negundo.

பௌரிக்காய், சவுரிக் காய், fruit of climber — Trichosanthes palmata.

பௌருசத்துவம், ஆண் தன்மை, manly power — Potency.

பௌருசம், புருடித்தன்மை, manliness.

பௌரைக்கல், கற்சிட்டம், over burnt brick.

பௌலுருவி, புல்லுருவி, parasitic plant.

பௌவம், கடல், sea; ocean; 2. உப்பு, salt; 3. நுரை, forth; 4. நீர்குமிழ், water bubble.

**மகதும்**, see மகிழம்.

**மகதுருமம்**, அரசு, a tree — Ficus religiosa.

**மகபொட்டி**, குதிரைப்பல் மெழுகாகும், a drug which is said to turn the tooth of the horse into a wax.

**மகர சால்**, மாமரம், mango tree.

**மகர சிதம்**, கொன்னை, a tree — Cassia rhombifolia alias C. fistula.

**மகரசியா**, செழுமலர்க் கொன்றை, large flower cassia — Cassia florida,

**மகரதம்**, கொடிவேலி, a plant, plumbago — Plumbago zeylanica.

**மகரத்துவஜம்**, ஒரு மருந்து, a medicine. It is considered as one of the brightest jewel of the Ayurveda, the most glorious achievement of ancient Rishis. It is obtained by taking 8 tolas of thin gold leaf, 64 tolas of mercury and 128 tolas of sulphur and making an amalgam. This is put in a narrow nacked glass bottle and placed in an even position in a sand bath and heated for 3 days with strong fire. After cooling collect the medicine gathered round the neck of the bottle.

**மகரந்தத்தாள்**, மகரந்தப் பையையுடைய பூங்காம்பு, stamen filament.

**மகரந்தப்பு**, வெந்தயம், fenugreek — Trigonella foenumgraecum.

**மகரந்தப்பை**, மகரந்தப் பொடியையுடைய பை, anther.

**மகரந்தப்பொடி**, பூந்துள் அல்லது பூந்தாது, pollen grain; 2. பூவின் நடுக்காம்புகளின் நுனியில் இருக்கும் பையிலடங்கிய பொடி, pollen grain found in the anthers.

**மகரந்தம்**, கள், toddy; 2. குயில், a bird — Indian cuckoo; 3. பூந்தேன், honey of flowers; 4. பூந்தாது, pollen of flowers; 5. தேமா, a sweet mango tree.

**மகரந்தம்**, கஸ்தூரி மல்லி, musk jasmine — Jasminum pubescens.

**மகரந்தவதி**, பாதிரிப்பூ, flower of Stereospermum suoveolens.

**மகரந்தவர்க்கம்**, (Bot) stamen.

**மகரந்தாட்டகாசம்**, முல்லைக்கொடி a variety of jasmine creeper — jasminum angustifolia.

**மகரந்திக**, தேமாமரம், sweet mango tree.

**மகரந்தௌகம்**, பூ, flower.

**மகரப்பூ**, see மகரந்தப்பூ: 2. வழலை, which see.

**மகரப்பூ**, இதுவே மராட்டிப்பூ, which see.

**மகர மச்சம்**, மகர மீன், a fish, shark.

**மகரம்**, பூந்தாது, pollen of flowers, 2. சுரு மீன்; shark fish; முதலை, corocodile.

**மகரம்**, (in Astrology) capricarnus — Sword fish. 2. பன்றி மீன், dolphin.

**மகர வாழை**, காட்டுமல்லிகை, wild jasmine; 2. மருகு, Origanum marjorana: 3. ஒரு வகை வாழை, a kind of plantain.

**மகர விருத்தி**, சேம்பு, tuber - colocasia — Colocasia antiquorum.

**மகரவிரி**, சேம்பு, see மகர விருத்தி.

**மகரவேதிகம்**, வாலுளுவை. intellect tree — Celastrus paniculata.

**மகராகரம்**, } கடல், see, ocean.
**மகராங்கம்**, }

**மகராசபூபதி**, மூலாதாரம், one of the six centres in the human system situated in the region of anus.

**மகராசமூலி**, மண்ணீரல், spleen.

**மகராலயமருதம்**, see மகராலயம்.

**மகராலயம்**, உப்பு, common salt, 2. கடல், sea; ocean.

**மகரி**, கடல், sea; ocean.

மகரிப்பு, கையாந்தகரை, a plant — Eclipta albo or E. prostata.

மகருதம், கொடிவேலி, a plant plumbago — Plumbago zeylanica.

மகவாட்டி, குழந்தைப் பிள்ளைக்காரி, a woman having child in arms.

மகவாதரோகம், complicated rheumatic diseases.

மகவு, பிள்ளை, child.

மகளிக்கீரை, ஓர் கீரை, a greens.

மகளிரான் மலர்மரம், பத்துவித பூச்செடிகள்; (தொகையகராதி) மகிழ், முல்லை, ஏழிலை, சண்பகம், குரா, அசோகு, பாதிரி, புன்னை, குருக்கத்தி, மரா முதலியன, a group of ten flowering trees or plants.

மகளிது, see மகிழம்பூ.

மகளோத்து, நரிப்பாலை, which see.

மகனுலிமூலி, சிறுமுன்னை வேர், See முன்னை.

மகன்றில், ஓர் பறவை, a bird.

மகா, அளவற்ற, immense; 2. உன்னத, superior; 3. மேன்மையான, great: 4. மிகுந்த, intense; 5. பெரிய, great; 6. உயர்ந்த, high.

மகாஅகதம், the name of an antitoxic preparation.

மகாஅவிழ்தம், சுக்கு, dried ginger.

மகாஅவுஷத நாசனி, பூசினிக்காய், pumpkin — Cucurbita pepo.

மகாகச்சம், சமுத்திரம், ocean; 2. மலை, mountain.

மகாகணம், குழந்தைகட்கு நாக்கு உதடு புண்ணுகி, கண் வெளுத்து, உடல் வெதும்பிக் காணும் ஓர்வகைக் கணை, a congenital disease of the children marked by anaemia, ulcerated tongue and lips.

மகாகண்டம், பெரிய முள்ளங்கி, large raddish — Raphanus sativus.

மகாகண்மணி, இந்திர பாஷாணம், a variety of arsenic

மகாகதம், காய்ச்சல், fever, 2. மிகுந்த வெப்பம், intense heat; 3. மிகுந்த கோபம், great anger.

மகாகந்தம், வெங்காயம் அல்லது உள்ளி, onion — Allium cepa; 2. அரிசந்தனம், red sandal — Pterocarpus santalinus.

மகாகரண சரீரநாசம், Spiritual phenomena.

மகாகல்யாணகம், ஓர் வகை கிருதம், a medicinal ghee in Ayurveda for insanity and for strenthening memory and under standing

மகா கற்பம், சிறந்த கற்பமூலிகை, a superior drug to prolong life; drug of all healing potency; 2. சித்தர்கள் உபயோகிக்கும் ஓர் சிறந்த மருந்து, a superior medicinal preparation used by Siddhars to secure immortal youth.

மகாபித்தம், வில்வமரம், bael tree — Aegle marmelos alias Crataeva marmelos.

மகா காசம், ஓர்வகைக் காசநோய், a kind of virulent asthma or bronchitis; 2. பரவெளி, atmosphere or ether.

மகாகாமி, மிக்ககாமங் கொண்டவன், a lascivious person; 2. முத்திருக்கஞ் செவி, a plant, which see.

மகாகாயம், பெரிய உருவம் அல்லது யானை, elephant; 2. பருத்தவுடம்பு, a stout body.

மகா காலங்கம், ஆதண்டை, a thorny shrub — Capparis horrida.

மகா காலம், நெடுங்காலம், a long time; 2. மாமரம், mango tree; 3, குறட்டை, Korattay — Trichosanthes salmata.

மகா காளி, ஆட்டுச்செவி அல்லது ஆடு தீண்டாப்பாலை, a bitter prostate plant — Aristocochia bractata.

மகா கிராவணி, ( real variety ) —Hydrocotyle asiatica.

மகா கிரீவம், ஒட்டை, Camel; 2. நீணட கழுத்து, long neck.

மகா கிருதம், clarified butter other than. 2. கும்பக்கிருதம், fresh clarified butter.

மகாகுட்டம், பெருவியாதி, leprosy. In this type of leprosy the skin contracts and with the bursting of the skin a piercing pain is felt in the affected parts. It loses all sensibility to the touch or heat and is accompanied by a general sense of lassitude in the limbs.

மகா குணபாடம், தேரையர் செய்த ஓர் தமிழ் வைத்திய நூல், a Tamil Medical Science — (Materia medica) by Theraiyer.

மகா குண்டலினி, the cosmic energy.

மகா குமரி, தங்குமச் செவ்வந்தி, a big variety of red Chamomile — Chrysanthemum indicum (red).

மகா கும்பாவம், குமிள் அல்லது குமிழ், Kashmere tree — Gmelina arborea; 2. மேகாதி வாதம், கபம், கிரகணி, பாண்டு, இவைகளை நீக்கும் ஓர் மூலிகை. it is useful for anaemia, diarrhoea (chronic), rheumatism etc.

மகா கும்பி, பெரும் பூசினி, a larger variety of pumpkin — Cucurbita pepo (large).

மகா குழம்பு, அகஸ்தியர் பெருங்குழம்பு, a wax like medicine.

மகா கெந்தா, கறுப்புக்கடலை, a black pulse — Bengal gram.

மகா கெந்தம், சீதேவி செங்கழுநீர், which see.

மகா கோடா சுழிமாத்திரை, தாளகம், விரம், கௌவுரி. லிங்கம், பாஷாணம், சூதம், கெந்தி, துரிசி, வெண்காரம், அன்னபேதி, பால்துத்தம், மனோசிலை, செப்புத் தொட்டி, படிகாரம், வாளம், இவைகளைச் சுத்திசெய்து கடைச்சரக்குகளுடன் சேர்த்துத் தயாரித்து சித்தநூலிற் கண்ட அனுபானப்படி கொடுக்கும் மாத்திரை. இதனுல் மாலைக்கண் காமாலை, சோகை, விஷதோஷம், விப்புருதி, பீலிகை, காசம், கிரந்தி முதலியவைகள் தீரும், a pill containing the above drugs which is used for jaundice, dropsy, bronchitis diseases of spleen, night blindness etc.

மகா கோளி, unidentified plant.

மகா கோஷா, கற்கடகசிங்கி, மாமர குடும்பத்தைச்சேர்ந்த பிஸ்டேசியா இண்டகிரிமா மரத்தில் தோன்றும் கொம்பு போன்ற புது வளர்ச்சியாம் a growth like the claws of crab seen on the leaves & petioles of Pistacia integerrima; galls of Pistacia integerrima.

மகாக்கினி, காடாக்கினி, great fire which see.

மகாக்கினி, தீபாக்கினி. moderate fire spreading flames.

மகாங்கம், ஒட்டை, camel.

மகாசகா / மகாசகை } வாடாத பூவுள்ள மறுதோன்றி மரம், a tree yielding unfading flowers — Gomphroena globosa; 2. வாடா மல்லிகை, a kind unfading flower.

மகாசங்கம், எலும்பு, bone; 2. நெற்றி, forehead.

மகாசத்தி, சத்தி, the great universal power the female energy of deity.

மகாசம்பு, பெருநாவல், a tree yielding a large variety of jambo fruits — Eugenia jamboo.

மகாசயம், கொடிய சயநோய், advanced consumption; 2. சமுத்திரம், ocean.

மகாசனி, வாலுளுவையரிசி, seed of intellect tree — Celastrus paniculata.

மகாசாயம், ஆலமரம், banyan tree — Ficus bengalensis.

மகாசாரக்கந்தம், பேரீச்சு, date wild variety — Phoenix acaulis.

மகாசாரம், சிறு விடுகொள், which see.

மகாசாலி, பெரும் பீர்க்கு, big variety of ridge gourd; 2. சிவப்புநெல், red paddy; 3. வெள்ளையரிசி, white rice; 4. கோதுமை, wheat.

மகாசாலினி, தின்பீர்க்கு, a climber — Luffa acutangula.

மகா சிங்கிச் சுண்ணம், துருசுச் சுன்னம், calcined white powder of copper sulphate — blue vitriol.

மகாசித்திரசாயனம், தாளிப்பனை, talipot palm.

மகாசித்தாடன்,

**மகாசிந்தாதி லேகியம்,** தீராத பாண்டு, காமாலை, சோகை, ஆகிய இவைகளுக்குக் கொடுக்கும் ஓர் வகை லேகியம், இதன் செய்முறை அகத்தியர் வல்லாதி — 600 ல் பார்க்கவும், an electuary preparation as in Agastian Vallathi 600. It is useful in jaundice, dropsy, anaemia etc.

**மகாசிரவி,** கோவை, a climbing plant.

**மகாசிரோட்டம்,** கிரகணி, chronic diarrhoea.

**மகாசுகந்த ரசம்,** see இருகுவசந்பாட்சி.

**மகா சுக்கம்,** see மகாசுசா.

**மகாசுராங்கிசக் குளிகை,** ரசம், கெந்தி, ஊமத்தம் விதை, திரிகடுகு சமன் கொண்டு எலுமிச்சம் பழச்சாற்றினால் அரைத்துருட்டிய மாத்திரை, தினசுரம், இருமுறை சுரம், மும்முறைச் சுரம் நான்முறை சுரம் மற்றும் சுர வகை எல்லாம் போம், a medicated pill prepared with mercury, sulphur ect., for fevers — intermittent fevers.

**மகாசுவாசம்,** கண்டத்தில் கலகல வென்ற சத்தத்துடன் விடும் பெருமூச்சு, a disease in which the patient breaths heavily lying unconcious, and a low rattling sound in the throat, eyes fixed in gaze and with cramps at his sides.

**மகாசுவேதம்,** சிறு வாலுளுவை, intellect plant — Celastrus paniculata

**மகாசூலை,** rheumatism.

**மகாதசம்,** மாவுலிங்கம், a tree — Crataeva religiosa.

**மகாதந்தம்,** யானைக்கொம்பு, tusk of an elephant.

**மகாதமனி,** இருதயத்தின் இடது பக்கத்திலிருந்து கிளம்பும் ஓர் பெரிய செவ்விரதக் குழல், a large artery starting from the left ventricle of the heart — Aorta.

**மகாதலம்,** அரிதாரம், yellow orpiment.

**மகாதனம்,** பொன், gold.

**மகாதாது,** see மகா தனம்.

**மகாதானம்,** பெருங்கொட்டை, a big seed.

**மகாதி,** திப்பிலி, long pepper plant — Piper longum.

**மகாதிக்தம்,** ஓர் கிருதம், a bitter medicated ghee given for skin diseases. It is a Ayurvedic preparation.

**மகாதிப்பம்,** பெருமரம், a tree which see.

**மகாதிரகிருதம்,** a medicinal ghee all kinds of leprosy.

**மகாதிராவகம்,** ஆ. வே. முறைப்படி சித்திர மூலவேர், நாயுருவி, புளியம் பட்டை, இலைக் கள்ளி, பிரப்பு முக்கிரட்டை, முதலியவை களைச் சுட்டுச் சாம்பலாக்கி மற்ற கடைச் சரக்குகளுடன் சேர்த்து வாலையிலிட்டு வடிக்கும் திராவகம், an Ayurvedic preparation obtained by distilling the ashes of some plants along with some bazaar drugs.

**மகாதிலதம்,** சாலிபாதி, which see.

**மகாதிவ்விய மெழுகு,** a wax like medicinal preparation.

**மகாதுருமம்,** அரசு, a tree — Ficus religiosa.

**மகாதேவி,** the Great Mother.

**மகாதேஜம்,** பாதரசம், mercury or quick silver.

**மகாதோஷக்குறி,** உந்தியில் ஒரு விரல் பொருந்தும எக்கி உயர எழும்பில் இத் தோஷமாம்; a symptom or morbid condition — தோஷம்.

**மகாதோஷ நீக்கி,** சித்தா மல்லி, see சிற்றுமல்லி; 2. பாவட்டை; a small tree — Pavata indica.

**மகாத்திரம்,** தேக்கு, teak — Tectona grandis.

**மகாத்துருவம்,** வெண்கடம்பு, white cadamba — Anthrocephalus cadamba.

**மகாநங்கை,** மிளகாய் நங்கை, which see.

**மகாநந்தை,** கள், toddy.

**மகாநாகம்,** சுரபுன்னை மரம், a tree which see; 2. பெரும் பாம்பு, a big snake.

**மகாநாதம்,** சங்கு, conch; 2. பொன், gold; 3. பொன்னிமிளை, a kind of yellow bismuth.

**மகாநாரி,** சுரபுன்னை, see மகாநாகம்.

**மகாநிசி,** நடு இரவு, mid night.

**மகாநித்திரை,** மரணம், eternal sleep—death.

**மகாநிம்பம்,** } **மகாநிம்பர்,** } பூவரசு மரம், Portia tree — Thespesia populnea; 2. பெருவேம்பு, big species of neem tree; 3. 100 வருஷத்திய வேப்பமரம், a margosa tree of 100 years old—Melia indica alias Azadirachta indica; 4. சர்க்கரை வேம்பு, neem whose bark is sweet to taste.

**மகாநிர்குண்டி தைலம்.** கண்ணோய் — சிராபீனிசம் இவைகளுக்குத் தலை முழுகும் தைலம் a bathing oil prepared out of நொச்சி — Vitex negundo.

**மகாநீலம்,** கையாந்தகரை, a plant —Eclipta prostata; 2. மரகதம், a precious gem — emerald.

**மகாநேமி,** காகம், crow.

**மகாந்தம்,** மகரந்தம், pollen.

**மகாபஞ்சகாவிய கிருதம்,** a medicated ghee used for epilepsy, insanity dropsy, abdominal tumour, piles. chlorosis and jaundice.

**மகாபட்சி,** ஆந்தை, owl.

**மகா பஞ்சமூலம்,** ஐந்து வகையான மரத்தின் வேர் பட்டைகள் சேர்ந்த கூட்டு (வில்வம், முன்னை, ஈகர் மூலி, பாதிரி, பெருமரம்) the roots of the five trees or plants which see.

**மகாபதுமம்,** வெண்டாமரை, white lotus flower.

**மகாபதுமவிசர்ப்பி,** பாலர்களுக்குத் தலையிலும் கீழ் வயிற்றிலுமுண்டாகி மரணத்தையுண்டாக்கும்; இது முதலில் நரம்பின் வழியாக நெற்றியில் கண்டு பிறகு மார்பிலிறங்கி கடைசிபாகக் குதத்திலிறங்கும், See பாலவிசர்ப்பி, a kind of scabis.

**மகாபத்திரம்,** வில்வஇலை, leaf of bael tree, see விளம்பத்திரி; 2. see லோத்திரம்; 3. தேக்கு, teak; 4. பனைமரம், palmyra palm.

**மகாபத்திர,** பூசபத்திரி, a plant which see

**மகாபத்திரி,** சிவப்பாமணக்கு, red castor plant

**மகாபலம்,** மயிர் மாணிக்கம், which see.

**மகாபலம்,** கொழிஞ்சி, orange tree — Citrus aurantifolia; 2. பேராமுட்டி — Pavonia odorata; 3. தென்னை, cocoanut tree; 4. கொம்மட்டி மாதுளை, a kind of citron; 5. தூதுவளை, a thorny shrub — Solanum trilobatum; 6. கொழுமிச்சை, ஓர்வகை நார்மரம்; இதன் பட்டையினின்று சணலைப் போன்ற நார் எடுக்கப்படும், flax tree — Sida rhomboides the bark yields a flax like fibre.

**மகாபலன்,** வலிமையுள்ளவன், a strong person; 2. காற்று, wind.

**மகாபலா,** பேராமுட்டி, a plant — Pavonia odorata; 2. வரித்தும்மட்டி, a creeper — Citrullus colocynthis; 3. பேய்க்களா, which see.

**மகாபலிகம்,** வெள்ளைப் பூசினி, ash gourd — Benincasa cerifera.

**மகாபலை,** வில்வம், a tree — Crataeva marmelos.

**மகாபாரிச வாதம்,** கையுங் காலும் ஒருபக்கங் கனத்து, திமிர்த்து, உடல் வீழ்ந்து, நாவு தடுமாறிப் பிழைக்கும் வழியில்லாது தீராத சன்னியை புண்டாக்குமோர் வாதம், (யூகி-*1200*) para plegia.

**மகாபாபத்தழகி,** சிவகமூலி, which see.

**மகாபிராணம்,** காகம், crow.

**மகாபுடம்,** இரண்டு கசம் அகலம், நீளம், ஆழமுள்ள சதுரப் பள்ளத்தில் அல்லது குழியில் *1000*, விரட்டியில் போடும் மருந்துப் புடம், a process of calcining medicines in a pit measuring 2yds × 2yds × 2yds or 2 cubic yeards with 1000, cowdung cakes. The luted crucible with medicine is placed in the centre of the pile or above 750 cakes and set fire with camphor when all the cakes are completly burnt into ashes and cooled the crucible is taken out and opened

NOTE :— ஆயுள் வேதப்படி 2 முழம் சதுரமாயும், 2-முழம் ஆழமாயும் பள்ளம் தோண்டி அதில் பாதிவரை காட்டுமுட்டைகளைப் நிரப்பி அதன் மத்தியில் மருந்து பாண்டத்தை வைத்து மேலும் காட்டு முட்டையை நிரப்பித் தீமூட்டிப் போடும் புடம்.

மகாபுருஷம், see மேதை.

மகாபூ, பெருஞ்சீரகம் அல்லது சோம்பு, anise — Aniseed—Anethum foeniculum.

மகாபூசிதம், பெருஞ்சீரகம், see மகா பூ.

மகாபூசுரபி, புன்னை, a tree — Alexandria laurel — Celophyllum apetalum.

மகாபூதம், பஞ்சபூதம், five elements — gross elements as opposed to suble elements.

மகாபூதம், gross element.

மகாகபெலம், கொம்பட்டி, a creeping plant — water melon — Bryonia callosa or Citrullus vulgaris.

மகாபெலா, See மகாபலா

மகாபேகன், தவளை, frog.

மகாபைசாசிகம், ஓர் கிருதம், இது பைத்தியத்திற்குதவும், a medicated ghee for insanity.

மகாபிரளயம், dissolution of universe; deluge.

மகாப்பிராசத்தி, ஓர்வகை அப்பிரகம், a kind of mica.

மகாப்பிரியபான்னி, சிறுவிடு கொள், which see.

மகாமகரப்பூ, வழலை, which see.

மகாமக விருட்சம், கற்பக மரம், a celestial tree which gives whatever is wished for.

மகாமண்டூரம், a calcined red powder prepared from iron gross.

மகாமதம், வெறி, intoxication — madness.

மகாமரு, கருப்பு வாகை, black species of வாகை, which see.

மகாமால், வில்வயிலை, leaf of bael tree. see மகாபத்திரம்.

மகாமாயை, see மாயை.

மகாமுகர், முதலை, crocodile.

மகாமுடி, யோனி, பெண்குறி, a female genital.

மகாமுனி, அகத்தியமுனி, the great sage Agastya; 2. தும்புரு, which see.

மகாமூர்க்கம், நாரத்தை, bitter orange tree —a variety of citrus.

மகாமூலி, மகாமூலிகை, } ஆகாச கருடன் கிழங்கு, Sky root — Climbing shrub — Bryonia epigaea; 2. கற்பத்துக்கு உதவும் சட்டமுனிவாதநூல் 1000த்தில் சொல்லியுள்ள 23 சிறந்த மூலிகைகள், the 23 superior drugs related in the Tamil alchemical science 1000 of the Siddhar named Satta Muni — All healing drugs of high potency. They are the drugs which secure for the user a mastery over the body. They are the lords of all the medicinal herbs and are followed by the rejuvenation of the system and enable the user to live for hundreds of years on the earth in the full enjoyment of a new body. The regime of diet and conduct is the same as for the Soma plant.

Compare this with ambrosia which is known in Ayurveda by the epithet of Soma, used for the prevention of death and decay of the body. The soma plant is classified into 24 species according to the difference of their habitats, structures epithets and potencies. Although it is mentioned in Rig Veda, it is now a days not within our reach.

மகாமூஷிகம், பெருச்சாளி, bandicoot.

மகாமேகரோகம், பிரமேகம், which see.

மகாமேதை, மருளுமத்தை, which see.

மகாமேதைகண்டியல், வெள்ளை, white

மகாமேதோ, see மகா மேதை.

மகாயோனி, யோனியானது யோனி கருப்பம் இவ்விடங்களில் புகும்போது அல்குலில் சதை வளர்ந்து விலாசமாக பருக்கும் ஓர் வகையான பெண்களுக்குண்டாகும் நோய், a disease of the vagina wherein it is extremely dilated.

மகாரச சூதம், ஓர் மாமரம், a kind of mango tree.

மகாரசதம், பொன், gold

மகாரசம், ஓர் மரம், a tree; 2. கஞ்சி, rice water; 3. காடி, any fermented liquid.

மகாரசனம், see மகா ரசதம்.

மகாரசிங்கி, நாதம், ovum.

மகாரசிநகாரம், மிளகு, pepper — Piper nigrum.

மகாரசிதம், மாமரம், mango tree.

மகாரம், கல்லுப்பு, rock salt; 2. மகார வெழுத்து, the mystic letter 'ம'.

மகாரவி, கறுப்பரிசி, black rice.

மகாரவுப்பு. கல்லுப்பு, rock salt.

மகாராத்திரம், நடு ராத்திரி, midnight.

மகாராச மிருகாங்கம், க்ஷயம், காசம், பாண்டு முதலிய நோய்களைப் போக்கும் ஓர் ஆயுள் வேத மாத்திரை, an Ayurvedic medicine used for consumption, bronchitis, anaemia etc.

மகாராச யோகி, பச்சைக் கற்பூரம், crude comphor.

மகாரிட்டம், மலைவேம்பு, mountain neem — Melia azedirachta.

மகாரேவதம், முட்பலாசு, which see.

மகாரோகம், குட்டம் முதலான பெருவியாதி, big diseases like leprosy etc.

மகாலிங்கம், a tree — Weaver bean—Schrebera savietenoides.

மகாலோகம், காகம், crow.

மகாவக்கினி, } see கமலாக்கினி.
மகாவன்னி, }

மகாவசந்தகுசுமாகதம் உதர நோய், உன்மாதம், பாண்டு, விஷபேதி, குன்மம், வீக்கம், க்ஷயம், சுவாச காசம், மேக நீர்ப்பேதி, குறை நோய், மார்புவலி இவைகளைப் போக்கக்கூடிய ஓர் ஆயுள்வேத மாத்திரை. an Ayurvedic pill capable of curing some complicated diseases as stomach complaints, lunacy, dropsy, cholera, dyspepsia swelling consumption, asthma, diarrhoea to venereal causes, leprosy chest complaints etc.

மகாவலி, see மகாவல்லி,

மகாவல்லி, வசந்த மல்லிகை, a jasmine creeper of the spring season; 2. வில்வம், bael tree.

மகாவன்னி, சூதம், mercury; 2. See கமலாக்கினி,

மகாவன்னிரசம், சலோதர ரோகத்திற்குக் கொடுக்கும் ஓர் ஆயுள்வேத மாத்திரை, an Ayurvedic pill given for ascites.

மகாவாதரோகம், நரம்பைப் பற்றிய வியாதி மருந்தினால் தீர்ப்பதற்கு வசப்படாமலும் ஏதாவது ஒரு உறுப்பை நாசப்படுத்தும் வாதரோகங்கள், இது ஆயுள வேதத்தின் படி 16 வகை. nervous disease such as palsy neuralgia etc.

மகாவிக்கல். அதிக சப்தத்துடன் பிறக்கும் விக்கல், hiccups which produces a feeling of crushing pain at the vulnerable parts stretches out the body in full shaking all the limbs and causes severe thirst. It occurs with a considerable force accompanied by a loud sound.

மகாவிஷம், ஏறில் இறங்காத விஷம், an incurable poisonous bite.

மகாவிஷ்ணு, மலையாறு, Mountain river.

மகாவிந்து, அப்பிரகம், mica, talc.

மகாவிம்பம், மரகதம், a precious gem; emerald.

மகாவியவீழி, விருசு, a tree,

மகாவியாதி, a deep seated disease seriously affecting the vital principles foreboding a fatal, termination as பிரமேகம், வாதநோய்.

மகாவிருகதி, சேம்பு, a garden plant — Colocasia antiquorum or caludium nymphacifolium.

மகாவிருக்கம், சதுரக் கள்ளி, a kind of square spurge — Euphorbia antiquorum alias E. nerifolia.

மகாவிருட்சம், சதுரக் கள்ளி, see மகாவிருக்கம்; 2. கொடிக் கள்ளி — Sacrostemma intermedium; 3. மராமரம், a tree — Aporosa lindliyama; 4. ஓமை; which see.

மகாவிருட்சாதி, புல்லூரி, a parasite plant.

மகாவிருத்தம், see மகா விருக்கம்.

மகாவிருத்தி. see மகா விருகதி.

மகாவில், பேராமுட்டி, a medicinal plant — Pavonia odorata.

மகாவில்வம், a tree —Limonia acidissima. see நாயெலுமிச்சை.

மகாவினிதம், பேராமுட்டி, a medicinal plant see மகாவில்.

மகாவின் பால், பசுவின் பால், cow's milk.

மகாவீரம், குயில், a bird - Indian cuckoo.

மகாவெள்ளை, படிகக் கல், a crystal stone.

மகாவேகம், குரங்கு, animal — Monkey.

மகானிலர், தகரை, a plant — Cassia tora.

மகான், a great personage.

மகான்னம், —Euruale ferox alias Anneslea spinosa.

மகி, தேவாங்கு, an animal which see.

மகிகை, மூடுபனி, mist.

மகிடம், எருமை, buffalo.

மகிடரோசனை, கோரோசனை, a biliary calculus found in the abodomen of a buffalo.

மகிடி, நரம்பு பிசகல், be sprained; 2. மக்களித்தல், be dislocated, relapse.

மகிந்தகம், எலி, rat; 2. கீரி, mungoose

மகிமை, கொங்கணவர், one of the Siddhars named Konganavar, the author of several Tamil Medical Works.

மகிரி, நிலஞ் சோதி, a plant which see.

மகிழ மரம், } மகிழம், } ஓர் பூ மரம், a flowering tree — Mimusops elengi, Title from the fragrance of its flowers see மகுலம்; 2. சீமை மகிழ், a tree — Chrysophyllum coinito.

மகிழம் பழம், fruit of மகிழம். which see.

மகிழ் மலர், மகிழம் பூ, fragrant flower of மகிழ மரம் which see.

மகிளம், see மகிழம்; 2 பட்டாவியா மகிழம், see சீமை மகிழ்.

மகிளம் பூ, மகிழ மரத்தின் பூ, see மகிழ் மலர்.

மகிளரி, மயிலிக் கீரை, மகிளரியில் இரும்பைக் காய்ச்சித் தோய்க்கப் பொன்னாகும், a kind of vegetable green. It is said to be capable of transmuting iron into gold.

மகிள், முள் மகிழ், Indian bully tree—Sideroxylon tomentose.

மகீ, பசு, cow; 2. பூமி, earth.

மகீசனி, ஐந்திலை நொச்சி, a small tree — Vitex negundo.

மகீருகம், மரம், a tree; 2. தாவரம், plants.

மகீலதை, நாங்கூழ், vermiform appendix.

மகுடம், மந்தாவு, as in கண் மகுடம், dimness of the eye

மகுஷ்டகம்,—Phaseolus aconite folius.

மகுமம். மார்பு, breast; chest.

மகுரக்கா, வழுதலை, brinjal plant.

மகுரம், கண்ணாடி; பளிங்கு, mirror; 2. பூமொக்கு, flower bud

மகுலம், see மகிழமரம், the bark is red and is bitter astringent and mucilaginous. It is a tonic and periodic. Water distilled from flowers is used in melancholia. Flowers though not attractive in appearance is very fragrant. Berries are sweet and eaten.

மகுளம் பல், கவிழ்தும் பை, a plant —Nepata indica.

மகூலம், மலர்ந்த பூ, blossomed flower.

மகேசம், அப்பிரகம், mica

மகேசுவரி, தீமுறுகல் பாஷாணம், phosphorus.

மகேந்திரகதலி, ஓர் வித வாழை, a plantain grown in மகேந்திரம்.

மகேந்திரசாலம், அறுபத்தி நான்கு கலைக்கியானத்தி லொன்றாகிய ஓர் மாய சாலம், a kind of magic being one of the 64 arts and sciences.

மகேந்திரம், மகேந்திரமலை, Eastern ghats.

மகேருகம், ஓர் வகை மலக்கிருமி, a kind of worm in the intestine.

மகோதரசுரூபி, முடக்கொற்றான், a creeper; - baloon vine palsycurer — Cardiospermum halicacabum.

மகோதம், see மகிழம்.

மகோதயம், அரசமரம், a tree — Ficus religiosa.

மகோதரக் குணம், ( மகா + உதரம் ).

" மகோதரமான போதே வாய்வதும் நேரேயோடும்
மகோதரமானபோதே வாடியே பூதிககொள்ளும்
மகோதரமான போதே வயிற்றடி புறங்கால் வீங்கும்
மகோதரமான போதே வந்திடும் குணமி தாமோ."

an abnormal collection of serous fluid in the peritonial cavity. It is marked by fluctuant painless swelling of the abdomen. It is due to local inflammation of the peritonium or to obstruction of venous circulation — Ascites.

மகோதரம், உடம்பில் வெப்பம் அதிகரித்து நீருண்டாகி உடம்பு கனத்து வயிற்றில் வாயுவும் நீருங்கோத்து பெருக்கும், இராக் காலத்தில் வாயு கலந்து வாதை மிகவுண்டாக்கி நெஞ்சுலர்ந்து தாகம் ஆயாசம் இவைகளையுண்டாக்கும் ஓர் நோய், கவுசை முற்றி மூன்று திங்களில் அடிகால் வீங்கி, கண் நீலமாயிருக்கும்; நீர் பெருவயிறு, see மகோதரக்குணம், 2. சுக்கிலம், semen.

மகோதர வியாதி குணம், நீர் நோயின் குணம், Leucophlegmatic. See மகோதரக் குணம்.

மகோதரன், தீராப்பசியன், a person with ravenous appetite which never gets appeased.

மகோந்நதம், பனைமரம், palmyra tree — Borassus flabellifer.

மகோர கட்டம், வெள்ளைப் பூண்டு, garlic — Allium sativum.

மகோற்பலம், தாமரை, lotus flower.

மகௌடதம், சுக்கு, திப்பிலி வசம்பு, the group of three drugs namely - dryginger, long pepper and sweet flag.

மகௌடதி, நன்மருந்து, acommon term used for different surgical medicanients.

மக்கடம், மர்க்கடம், } குரங்கு, animal — monkey.

மக்கம், எருக்கு, a plant—Calotropis gigantea.

மக்கலவாயு, பிரசவித்தவுடனே யோனியைச் செவ்வையாய்ப் பிசைந்து வெளிக்காற்று நுழையாதபடி துணியால் இறுக்குக் கட்டுதல் வழக்கம், அப்படிக்கட்டாவிடில் காற்று நுழைந்து மககலவாயு உண்டாகும், a disease caused by mismanagement after delivery; by not putting tight bandage round the abdomen

மக்கல், பழமையாகி கெட்டுப்போதல், musty.

மக்கல் நாற்றம், ஓர் வகைத் துர்க்கந்தம், கெட்ட நாற்றம், fusty.

மக்கல்லசூலை, see மக்கல்லம், ஓர்வித சூலை நோய், see மக்கல் வாயு.

மக்கல்லம், பிரசவித்த பெண்களின் கருப்பையிலிருந்து அழுக்கு சரியாய் வெளிப்படாததினால் ஏற்படும் ஓர் கருப்ப தோஷம். a disease in which lochia of newly delivered woman is obstructed in its exit by the local vayu and thereby causing growths (nodules) below the naval on the sides of the pelvis or of the pubis. Severe piercing pain is felt about the region of navel stomach and bladder.

மக்களிக்கு சுரம், பழஞ்சுரம், relapsing fever.

மக்களித்தல், சுளுக்குதல், sprain; 2. வியாதி மீண்டும் வருதல், relapsing of any disease; 3. புரளுதல், dislocating.

மக்களிப்பு, see மக்களித்தல்.

மக்களுறை, மக்கள்மருந்து, medicine intended for human being.

மக்கள், மனிதர், human being.

மக்கனம், அமிழ்தல், drowning.

மக்கனிசம், தங்கம், refined gold.

மக்காசோளம், பெரிய சோளம் அல்லது துலுக்கச் சோளம், Maize — Indian corn — Zea mays alias Holchus sorghum. It is a tonic demulcent, aphrodisiac alterative. It is beneficial in cases of piles abdominal tumours, boils opthisis

மக்கா திருநீற்றுப்பத்திரி, ஐப்ஜாவிலை, மிக்க வாசனை யுடையதும் சின்னி யிலையைப் போன்றதுமான மக்கா தேசத்திய பூடு, இவ்விலையினால் தங்கம் மெழுகாகும், a plant; holy ashes leaf; Ocimum basilicum. Sweet smelling plant; the leaves are used to turn gold into wax like substance.

மாசயனி, உடம்பிலே சிதைந்த வணுக்களை வாங்கி இரத்தத்திலே செலுத்துங் குழல், lymphatics — lymphatic vessels.

மாசயனிக் கிரந்தி, ganglia of the lymphatics.

மாசரம், கஞ்சிமேற் படரும் மேல் ஏடு, the thin cream like coaling on the surface of the rice water.

மாசலம், ஓர் நோய், a disease; 2. முதலை, crocodile.

மாசவாருள்ளி, கொட்டைப்பாசி, which see.

மாசவிடாய், மாசவொழுக்கு, } பெண்களின் மாதவிடாய்; menses of woman.

மாசற்ற, அழுக்கில்லாத, without impurities; 2. புடமிட்ட, calcined.

மாசற்ற கதலம், இரும்பு, iron.

மாசற்ற காந்தம், ஞாழல், which see.

மாசற்ற சோதி, சூடன்; கற்பூரம், camphor.

மாசற்ற நீர், பனிக்குடத்து நீர், liquor amni a discharge in woman just before delivery.

மாசற்ற பத்திரம், புன்னை, which see.

மாசற்ற மலை, நாக மலை, mountain containing zinc ore.

மாசற்ற ரூபி, கற்பூரம், camphor.

மாசற்ற லிங்கம், கொண்டகச் சிலை, a kind of pure black stone without impurities used for making idols as lingam

மாசற்ற வர்ணத்தூள், ஏமமணல். gold ore.

மாசற்ற வர்ணம், மாசற்ற வண்ணம். } அன்ன பேதி, green vitriol — sulphate of iron.

மாசற்ற வாளம், சுத்தி செய்த நேர்வாளம், purified croton seed.

மாஷா, 8 - குன்றி மணி யெடை, a weight of 8 jeweller's bead.

மாசாதம், கூழ், pudding; pap.

மாசாதி, சைதன்னிய பிரகாச சாதியாகிய ஆண்சாதி நான்கு வகையிலொன்று, one of four divisions of men.

மாசாரம், see மாசரம்.

மாசாலம், ஓர் மாயவித்தை, a kind of magic.

மாசானப் பருவதம், இரசித மலை, mountain containing silver ore.

மாசி, see மாசி பத்திரி; 2. see மாசிக்காய்; 3. மேகம், cloud; 4. மலம், motion; ஓர் வகைக்கண் ரோகம், a variety of eye disease.

மாசிகம், ஓர் மருந்து, a medicine.

மாசிகா, அம்பளங்காய், which see.

மாசிகை, பறவை, a bird.

மாசிக் காயுப்பு, மாசிக்காயினின்று சேகரிக்குமுப்பு, tannic acid.

மாசிக்காய், மாசக்காய், இதனால் அக்கரம் வெப்பு கணச்சூடு, குழந்தை நோய் போம், oak galls — Quercus infectoria. It cures stomatitis, congenital heat, fever etc.

NOTE (by C. D.) இது உண்மையில் காயல்ல. கழலைக் குழவி, (gall wasp) குடும்பத்தைச் (Cynipida) சேர்ந்த சில வகைப் பூச்சிகள் முட்டையிடுவதற்காக ஒரு வகை மரத்தைத் துளைக்கும் போது காயமுற்ற பகுதியில் உள்ளதிசுக்கள் அபரிமித வளர்ச்சி (Hypertrophy) அடைதலாலும், பால் வடிந்து உறைவதாலும் கழலைகள் போன்ற புது வளர்ச்சிகள் தோன்றுகின்றன, முட்டை பொரிந்து புழுவாகி, கூட்டுப் புழுவாகி பின் பூச்சியாக வளர்ந்ததும் அதைச் சுற்றியுள்ள கழலையில் ஒரு சிறு துளை செய்து அது வெளியேறிவிடும். இதனால் தான் மாசக் காயில் அநேகமாக சிறு துளை காணப்படும்; துளை விழுந்த காயை விட துளை விழாத காய்தான் மருந்து செய்ய சிறந்தது, ஏனெனில் அப் புழுக்கள் அந்த கழலையின் உள் பாகத்தை தின்று விடுவதால்தான் துளை விழாத கழலையில் முட்டை பொரிந்து புழுவாவதில்லை. அது கெட்டியாகவே யிருக்கும்.

**மாசிக்காய்க் கஷாயம்**, மாசிக்காயினின்று வடிக்கும் கஷாயம், decoction of oak gall.

**மாசிக்காய்க் களிம்பு**, an ointment prepared from oak gall.

**மாசிங்கம்**, கலைமான் கொம்பு, horn of stag — Deer's horn.

**மாசித்த கன்னி**, நாறு கரந்தை; கொட்டைக் கரந்தை, Indian globe thistle — Sphoeranthus indicus.

**மாசித் தண்ணீர்**, மாசி மாதத்துப் பனித் தண்ணீர், dew water collected in the month of மாசி, February and March; 2. பனி கலந்த தண்ணீர், water mixed with dew water.

**மாசித்தர் யோசம்**, பேரோசனை, a kind of peculiar stone used by Siddhar's while flying in the aerial regions to afford stability; 2. ஓர் வகை உபரசச் சரக்கு, a kind of mineral stone described in Tamil Medical Science.

**மாசித் திக்கல்**, கருங்கல், black granite stone.

**மாசிப் பச்சை**, Arternesia indica; வாசப் பச்சை.

**மாசிப் பச்சோபிதம்**, மர மல்லிகை, a tree jasmine which see.

**மாசிப்பத்திரி**, ஓர் கசப்புப் பூடு, a bitter plant. Indian worm wood — Arternesia indica alias A. absinthium alias A. vulgaris. The produce or dried plant is brought from Persia; contains a bitter azoized matter, resinous, bitter green volatile oil, salts of potash albumin, fecula, affords to medicine an extract; a tincture, syrup, etc.

**மாசிப் பத்திரியெண்ணெய்**, volatile is comphoraceous of repellsive bitterness used as vermifuge.

**மாசிலம்**, மனோசிலை, red orpiment — impure bisphurate of arsenic.

**மாசிவித்தில் தயங்குஞ் சோதி**, வெள்ளைப் பாஷாணம், white arsenic.

**மாசிவிளக்கொளி**, சிங்கம்; சிம்பம், lion.

**மாஜினம்**, majoon; an opium preparation.

**மாஜீன்**, See மாஜினம்.

**மாசு**, அழுக்கு, dirt, filth; 2. கருமை, blackness; 3. மேகம், cloud.

**மாசுகட்டி**.

**மாசுகம்**, பீர்க்கு, ribbed gound.

**மாசுகி**, மிளகாய், chilly — Capsicum annum.

**மாசுக்காரம்**, see மாசுக்கரம்.

**மாசுணம்**, பாம்பு, snake; 2. பெரும் பாம்பு, rock or mountain snake.

**மாசுணி**, } நாய்ப்பாகல், a creeper which
**மாசுதம்**, } see.

**மாசு தீர்தல்**, அழுக்கு நீங்கல்; குற்றம் விலகல்; களிம்பு போக்கல்; மாசுதீர்ந்து சுத்தியாம், purification.

**மாசுபடர்தல்**, கண்ணில் படருமோர் நோய், an eye disease marked by growth of film.

**மாசுபலம்**, see பம்பிளிமாசு.

**மாசு மங்கையர்**, கொட்டைக் கரந்தை, See மாசித்தகன்னி.

**மாசுமருவற்ற**, களங்கமில்லாத, without any blemish.

**மாசுரசுரம்**, அம்மைச் சுரம், pox fever.

**மாசூரசுரம்**, உடம்பில் குருவை எழுப்பும் ஓர் வகைக் கொடுஞ்சுரம், an eruptive fever of virulent type; eruptions appear all over the body.

**மாசெடி**, வால்மிளகு, cubebs.

**மாசை**, பொன், gold.

**மாசோலை**, மாசபரணி, which see.

**மாச்சசக்காய்**, see மாசிக்காய்.

**மாச்சத்து**, starch.

**மாச்சரேகம்**, மிளகாய் நங்கை, a plant.

**மாச்சல்**, see மாய்ச்சல்; 2. சாவருத்தம், agony of death; 3. மரணம், dying.

மாச்சாதம், see மாசாதம்.

மாச்சி, மாச்சிதம், } பாம்பு கொல்லி, a plant — Herb of repentance or grace — Common rue — Ruta graveolus— a plant which cures snake bites.

மாச்சிலே, மாக்கல்லு, spanish chalk.

மாச்சிவிடாய், மாதசூதகம், woman's menses.

மாச்சுக்கு, மாவைப்போல் நொருங்கும் வெண்மையான சுக்கு, dried ginger without fibre ( white & soft ).

மாஞாலம், மாசாலம், a kind of magical art; 2. பேருமத்தை, a big variety of dhatura.

மாஞ்சகத்தி, see மராமரம், a tree — Aporosa lindleyana.

மாஞ்சத்தி, See மரா மரம்.

மாஞ்சரோகணி, ஓர் காயசித்தி மூலிகை, a rejuvenating plant.

மாஞ்சரோகணியம், see மாஞ்சரோகணி.

மாஞ்சாரை.

மாஞ்சி, பெருங்கோரை, a large species of grass; 2. சடாமாஞ்சில், valerian root; — Cyperus stoloniferus; 3. வாசனைப்பண்டம், a fragrant substance; 4. மகிழமரம், Mimusops elengi.

மாஞ்சிடம், வெண்கூளி, which see.

மாஞ்சி பாத்திரி, அழுகண்ணி, a carniverous plant — Drosera indica.

மாஞ்சில் பொருத்தம், இலுப்பை, a tree — Bassia longifolia.

மாஞ்சிரை — Astitachya longifolia.

மாஞ்சி ரோகணி, கண்புகைச்சலை நீக்கும் ஓர் பூண்டு, a herb useful for eye diseases. It removes dimness of sight.

மாஞ்சில், ஓர் மருந்து, a medicine; 2. சடா மாஞ்சில், Indian spikenered - Valerian root — Cyperus stoloniferus; 3. ஓமம், ajwon seed — Carum ajowan; 4. மகிழமரம், a flowering tree — Mimusops elengil; the flowers are very fragrant; 5. கௌரி பாஷாணம், a kind of arsenic.

மஞ்ரசெவிக்கள்ளி, see மான் செவிக்கள்ளி.

மாடக்கனி, தேவாங்கு, sloth — a kind of animal moving with great slowness on the ground — Mammals of S. America.

மாடக்கனிவாய், கருங்குளவி, a black beetle.

மாடக் கொள்ளு, see சிறுவிடு கொள்ளு.

மாடடம், சீரகம், cumin seed — Cuminum cyminum.

மாடத்ததிபதி, காட்டெருமை, wild buffalo — Bison.

மாடபர்ணி — Teramus labiatus.

மாடப்புறு, ஓர் வகை வீட்டுப்புறு, a dove bred in houses — domestic pigeon.

மாடப்புறு கண்ணீறம், அமுக்கிறு, winter cherry - a plant — Withain somnifera.

மாடமுட்டை, கண்பீளை, discharge from the eye.

மாடம், உளுந்து, black gram — Phaseolus mungo; 2. வீடு, house.

மாடனம், முட்டைக்கோசு, cabbage — Brassica oleracea capitata.

மாடன், துருசு, blue vitriol — sulphate of copper.

மாடன்விற் கொடிச்சி, கற்பூரம், camphor.

மாஷகம், see மாசகம்.

மாஷபுஷ்டிகா, பெருவிடுகொள், which see.

மாஷமண் செய்தல், to lute with black gram flour.

மாஷப்பன்றி,

மாஷம், உளுந்து, black gram — Phaseolus mungo; 2. ஓர்வகை விரணக் கட்டி, an abscess.

மாஷயவம், மிளகு சாரணை, a creeper which see.

மாஷாபுஷ்டிகா, பெருவிடுகொள், which see

**மாடிலாதிநம்**, செந்நாய், which see.

**மாடு**, பொன், gold; 2. மாடு, cattle; 3. அகன்மணி, a flat gem.

**மாடு பிடுங்கி** — cattle devourer; 2, கழுகு, common brown vulture.

**மாடு மீன்**, தலையினுச்சியி லிருந்து கொம்பு போல் இரண்டு வளர்ந்திருக்கும் காரணத் தைப்பற்றி இதற்கு இப்பெயர். ஓர் கடல் மீன் இதற்கு பணப் பெட்டி மீன் என்று ஆங்கிலப் பெயர், coffer fish — with two horn like growths on the head. It is a sea fish.

**மாடுன்னிப்பாசம்**, அணிப்பிள்ளை, squirrel.

**மாடை**, பொன், gold.

**மாஷையிடை**, **மாடையிடை**, } உளுந்தொடை, a black gram weight.

**மாட்சா**, பேய்த்துமட்டி, a creeper — Cucumis colocynthis.

**மாட்சிகதாது**, அயக்கந்தகம், Iron pyrites. It is met with in many parts of India. It grows in the river; Tapi and it copes with the divine ambrosia in its highly therapeutic. properties. It has been used in medicine from a very remote period. It occurs in two forms — dark yellow nodules with golden lustre and in silvery radiated crystals called respectively: சொர்ண மாட்சிகம், and தார் மாட்சிகம். It was originally believed to contain gold and silver respectively; chemically it is known as bisulphate of iron. It is purified by soaking in ihe solution of rock salt in the juice of lime. Physicians used to prepare medicines mixed with other ingredients and prescribe them for diseases as anaemia, urinary diseases, ascites, anasarca prurigo etc. It is also used as tonic and alterative.

**மாட்சிகற்பம்**, நிமிளைபற்பம், calcined pyrite.

**மாட்சிகம்**, பொன்னிமிளை, yellow coloured bismuth — iron pyrite. See மாட்சிக தாது; 2. ஓர்வகை தேன், a kind of honey secreted, by tawny bee's and considered best.

**மாட்டம்**, சீரகம், cumin seed — Cuminum cyminum.

**மாட்டல்**, தீமூட்டல், to set fire.

**மாட்டிறைச்சி**, மாட்டுக் கறி, Beef — Carobubula. It was not a forbidden food. Charaka speaks of it as an article of diet. It is not good for health.

**மாட்டுக் குளம்பு**, பச்சிலைக்கொடி. See சாகடம்; 2. cow's hoof.

**மாட்டுக் கொம்பு**, ஓர் உபரசச்சாக்கு, horns of cattle. ( பசுவின் கொம்பு, cow's horn ) a kind of natural body.

**மாட்டுக் கொழுப்பு**, மாட்டின் நிணம், tallow — Adeps juvena.

**மாட்டுச்சாபிகம்**, கோரோசினை, Bezor orientale.

**மாட்டுச்சிலும்பன**, பெருஞ்சிலும்பன், a plant.

**மாட்டுதல்**, see மாட்டல்.

**மாட்டுப்பரங்கி**, கலியாணபூசினி, ash pumpkin.

**மாட்டுப்பல்**, மாட்டின் பல், tooth of cattle; 2. அகன்றபல், broad tooth.

**மாட்டுப்பிலாச்சை.**

**மாட்டுப்பூசினி**, விஷம் நீங்குவதற்காகக் கொடுக்கும் ஓர் பழம், a kind of fruit given as antidote against poison.

**மாட்டுமழு**, சூடுபோடல், branding.

**மாட்டுமுளைக் காளான்**, ஓர்வகைக் காளான், a kind of mushroom.

**மாணி**, ஆண்குறி, penis; 2. மருக்கம், body; 3 இந்துப்பு, rock salt.

**மாணிகை**, எட்டுப் பலம்கொண்ட நிறை, a weight of 8 palams.

**மாணிக்கதீபம்**, ஓர் சிறந்த இரத்தினம், a very bright ruby or gem.

**மாணிக்கபூடு**, பிண்டம், foetus.

**மாணிக்கம்**, ஓர்வகை உயர்ந்த சிவப்பு கல், a red gem — Ruby; 2. நவமணியிலொன்று, one of the nine gems; 3. பாம்பு கக்கிய ஓர் கல், a gem supposed to be in the head of cobra; 4. ஓர் சிலந்தி, carbuncle; 5. பேரண்டம், cranium.

மாணிக்கருலம், மரகதம், a green gem — — emerald.

மாணிக்குறி, ஆண்குறி, the male organ — Penis.

மாணிச்சாறு, இலைச்சாறு, juice from the leaf.

மாணிபந்தம், மாணிமந்தம், } உப்பு, salt.

மாணிமலைப்படை, கட்டுக் காடை, a bird — glide.

மாணீர்ச்சாறு, இலைத்தண்ணீர், juice of leaf.

மாண்டவர், (பரிபாஷை) தேங்காய், cocoa-nut.

மாண்டார், இறந்தோர், the dead.

மாண்டு போதல், இறத்தல், to die, தீர்தல், destroyed (in alchemy) இறத்தல்.

மாதகந்தாம், பருத்தி, cotton.

மாதங்கசிந்து, யானைக்காஞ் சொறி, which see.

மாதங்கி, கலைச் செம்பு; கற் செம்பு, which see.

மாதசிகசுரம்,

மாதசுரம், மாதத்திற்கொருமுறை வருங்காய்ச்சல், a fever coming once in a month; 2. பிறைக்காய்ச்சல், ஒவ்வொரு பிறைக்கும் வரும் சுரம், i. e, periodical fever coming every month.

மாதசுருபி, கருவண்டு, black beetle.

மாதசுருபிதம், எலி, rat.

மாதசூதகம், மாத தூரம், woman's menses.

மாததூரம், மகளிர் சூதகம், woman's monthly course.

மாதத்திட்டு, see மாதசூதகம்.

மாத நம், இலவங்கம், clove.

மாத நாலி, ஏலரிசி, cardamon seed.

மாதப் பிரவிடை, see மாத சூதகம்.

மாதப் புரு, ஓர் வகை நீர்ப் பறவை, a kind of aquatic bird — Onocrotalus. It is a migration bird which remains here during winter.

மாதப் பெருக்கு, see மாத தூரம்.

மாத முழுக்கு. see மாதவிடாய்.

மாதம், மாசம், month; 2. கடைதல், churning; 3. கிராம்பு, clove; 4. கொல்லல், killing; 5. உபாதை, suffering.

மாதரம், எலுமிச்சம் பழம், lime fruit.

மாதரழகி, பெருந்துளசி, large ocimum sanctum.

மாதரிச்சை, பெண்கள் மேலுண்டாகும் விருப்பம், sexual desire in females.

மாதரிடு மருந்து, பெண்கள் புருஷர்களைத் தம்வசமாக்கி, தம்மிஷ்டப்படி நடக்கச் செய்யும்படிக்கு வெற்றிலை, திண்பண்டம் இவைகளில் சேர்த்துக் கொடுக்கும் ஓர் மருந்து, see இடுமருந்து.

மாதரிடு விஷம், மாதரிடு மருந்து, which see

மாதருடமவுனுதி, அபினி, opium.

மாதருநரக்கட்டி, கருப்பாயாசக் கட்டி abscess in the uterus.

மாதர், பெண்கள், women.

மாதர் காய், தேங்காய், cocoanut.

மாதர் காய்ச்சல், காமக் காய்ச்சல், fever due to passion.

மாதர் குணச்சீலம், கெந்தகம், sulphur.

மாதர் குலம், மாதர் வம்சம், class of women.

மாதர் பால், முலைப்பால், human breast milk.

மாதர் பிணி, பெண் வியாதி, venereal disease.

**மாதர் போகம்,** பெண் போகம், intercourse.

**மாதர் மணத்தை முறிந்தோட்டி,**

**மாதர் தோஷம்,** morbid condition caused specially in children by woman when she is in vitiated condition.

**மாதர் லிங்கம்,** பெண் குறியின் நடுவிலிரும் ஓர் நரம்புப் பகுதி, clitoris.

**மாதலி,** வசம்பு, sweet flag—Acorus calamus.

**மாதலுங்கம்,** மாதளை, pomegrante — Punica-granatum.

**மாதவ சுந்தரி,** பூமி, earth.

**மாதவ சுரன்,** புட்பராகம், one of nine gems — Topaz.

**மாதவநிதானம்,** one of the teatises on medicine dwelling extensively on the diagnosis of diseases. The author is Madhava who was born in Golconda in S. India and was the prim minister to the Raja of Vijayanagaram in the 12th Century A. D.

**மாதவப் பிரியம்,** சிவப்புப் பூசினி, pumpkin-Cucurbita maxima or C. pepo.

**மாதவம்,** கள், spirituous liquor—fermented liquid; 2. வசந்த காலம், spring season; 3. தேனினுல் பக்குவம் செய்த ஓர் மது, intoxicating preparation from honey; 4. இனிமை, sweet; 5. இலுப்பை, a tree—Bassia longifolia; 6. யோக நிஷ்டை, a posture of yoga.

**மாதவம் பரிவாள்,** காட்டு முருங்கை, a tree; wild moringa.

**மாதவம் புரிவாள்,** தாரையிலை, leaf of lotus.

**மாதவ ரொட்டி,** கருந்துளசி, black species of holy basil — Ocimum sanctum.

**மாதவல்லி,** சித்தினி சாதிப் பெண், one of the four classes of women divided according to their lust.

**மாதவழகி,** வட்டக் கிலுகிலுப்பை, round rattle wort; one of varieties of Crolalaria laburnifolia.

**மாதவனிறம்,** சடைச்சி, which see.

**மாதவாசிப் பூடு,** தேட்கொக்கி யிலை; which see.

**மாதவி,** குருக்கத்தி, Melina racemosa — ஓர் கொடி. இதனுல் தலைநோய், தாகம், சிலேட்டும விரணம்,பித்தகோபம் பல விஷம் போம், It cures thirst, head ache ulcers etc.

**மாதவி,** வசந்த மல்லிகை, jasmine.

**மாதவிகை,** வசந்த மல்லிகைக் கொடி, the jasmine grown in spring season—Gaertnera racemosa.

**மாதவிக் கொடி,** ஓர் வகைக் கொடி a tall climber — Melina racemosa or a kind of creeper — Combretum ovalifolicum.

**மாதவிடாய்,** see மாதத் தீட்டு, woman's monthly course — Catamenia.

**மாதவிடாய் சன்னி,** fever with attends during menses.

**மாதவிடாய் சூலை,** pain in the abdomen during the periods.

**மாதவிடாய்த் தோஷம்,** disorders of menses.

**மாதவிடாய் வயிற்றுவலி,** மாதவிடாய் சூலை, which see.

**மாதவிடாய் வழுவு,** see மாதவிடாய் தோஷம்.

**மாதவிடை,** மாதவிடாய், monthly periods.

**மாதவிலக்கு,** } மாதவிடாய், monthly
**மாதவிலக்கல்,** } periods.

**மாதளம்,** see மாதுளை, pomegranate — Punica granatum.

**மாதளம்,** see மாதுளங் காய்; பிஞ்சு, tender fruits of pomegranate, பலவித கழிச்சல் போம், good for dysentery and diarrhoea.

**மாதளம்பூ,** flower of pomegranate - a variety of pomegranate plant; which bears only flowers and no fruit. Its flowers are useful for worship & magic.

**மாதளம் வேர்ப்பட்டை,** மாதளை வேர்ப் பட்டை, root bark of Punica granatum.

**மாதளை,** ஓர் மரம், a tree 15 — 20 ft. red-flowers; longevity of tree remarkable. All parts are rich in tannic acid and act medicinally as astringents and anthelmintic. There are several varieties and those with yellow flowers are very rare. The male variety is called பூமாதுளை which doesnot bare fruits. Some bare sweet fruits and some sour fruits. Bark is anthelmentic, the rind, flowers are astringents used as decoction or powder with cloves for such bowel complaints as are not accompanied with tenesmus.

1. பூ மாதளை, male variety of pomegranate.
2. புளிப்பு மாதளை, which bears only sour fruits; fruits useful in vomiting.

3. தித்திப்பு மாதுளை, which bears only sweet fruit; fruits are used as tonic.
4. கொடி மாதளை; சீதளங்காய், a variety of Citrus.
5. கொம்மட்டி மாதளை, a variety of Citrus.
6. தாது மாதளை, same as பூ மாதுளை — Punica granatum.
7. வயல் மாதளை.
8. வெள்ளை மாதளை, one with white pulpy seeds.
9. சீமை மாதளை — Cynodia vulgaris.
10. தாடி மாதளை, Punica granatum.
11. சிகப்பு இரட்டை மாதளை, same as No. 1.

மாதளைச் சிலை, மாந்தளிர்க்கல், a kind of stone.

மாதனம், கிராம்பு, clove.

மாதா, தாய், mother; 2. சத்தி, Goddess Sakti.

மாதாசை, பெண்ணாசை, craving for woman; lust; 2. காமவிச்சை, sexual desire.

மாதாந்த சஞ்சீவி, மாதவிடாய், menstruation; 2. நாதநீர், menstrual fluid.

மாதாந்த நீர், see மாதாந்த ருது.

மாமாந்த ருது, பெண்களுக்கு கருக்குழியிலுள்ள சன்ன நரம்புகளினின்றும் இரத்தமானது ஒழுகிச் சேர்ந்து அல்குல் வழியாக வெளிப்படும், a blood discharge from the womb; through vagina every month.

மாதாந்தர குன்மம், சூதக வாயு, which see.

மாதாந்த ருதுச் சிக்கல், disturbtion to monthly discharge or periods in woman.

மாதாந்த வெள்ளம், நாரி சுக்கிலம் the menstrual discharge of woman.

மாதாந்திர காலம், see மாதாந்த ருது, menstrual period.

மாதாந்திர குன்மம், see சூதக வாயு.

மாதாந்திர சிராவம், மாதாந்த ருது, அதாவது இரத்த ஒழுக்கு, menstruation fluid.

மாதாம் புரத்தி, கோவை, a climber — Coccinia indica.

மாதி, மாதிமி, } மாமரம், mango tree — Mangifera indica.

மாதிகம், யானை நெருஞ்சில், a plant which see.

மாதிகா, முட்பலா, a tree.

மாதித்தா, கிளிமுருக்கு, a plant which see, see கிளிமுருக்கு.

மாதியம், நெருஞ்சில், small caltrops — Tribulus terrestris.

மாதிபா, ஆனையறுகம் புல், devil grass — larger variety of Cynodn dactylon.

மாதிபொதி, மாதிபோதி, } நெருஞ்சில், a prostate plant with thorny fruits — small caltrops — Tribulus terrestris.

மாதிமி, மாமரம், mango tree — Mangifera indica.

மாதிரசித்தி, விஷம், poison.

மாதிரம்; ஆகாயம், atmosphere; 2. மலை, mountain; 3. மல்லிகைப் பூ, jasmine flower.

மாதிரி, அதிவிடயம், a drug — Aconitum hetrophyllum; 2. ஒப்பு, specimen.

மாதிரிகை, தாய், mother: 2. போன்றது, resemblence.

மாதிலகம், பொன்னூமத்தை, dhatura bearing yellow or gold coloured flowers.

மாதினி, சிறு வழுதலை, brinjal plant.

மாதீபலம், கொடி மாதளை, a variety of Citrus creeper.

மாது, பெண், woman, lady; 2. வெண்ணெய், butter.

மாதுகபுட்பி, a kind of liquorice.

மாதுகம், see மதுரகம் அல்லது மதுகம்.

மாதுகாமம், பவளம், coral.

மாதுங்கம், கொம்மட்டி மாதுளை, a kind of citron citrus; 2. கையாந்தகரை, a plant — Ecliptus prostata.

மாதுநாதம், பெண்கள் பிரவிடையாகும் போது காணும் இரத்தம், menstrual blood.

மாதுநீர், பெண்கள் பிரசவத்திற்கு முன்பனிக் குடமுடைந்து யோனி வழியாய் வெளிப் படும் நீர், liquor amni.

மாதுபனி நீர், மாதுநீர், which see.

மாதுபாகம், புட்பராகம், one of nine gems — Topaz.

மாதுரகம், } மல்லிகை, jasmine.
மாதுரம், }

மாதுரி, சாராயம், arrack; liquor.

மாதுரியம், இனிமை, sweetness; 2. மிக்க மதுரமான, lusciousness.

மாதுரு, தாய், mother.

மாதுலங்கம், மாதளை, Pomegranate; 2. see கொடிமாதுளை; 3. பெரிய எலுமிச்சை, Citrus medica. The மாதுளங்காய் (citrus fruit) is light acid, appetising & pleasant. It proves beneficial in cough and asthma, brings on relish for food allays thirst and cleanses throat.

மாதுலங்காதிக்கிருதம், மாதுலங்காய் (citrus) சாறால் செய்த ஓர்மருந்து நெய், a medicated ghee prepared with the juice of the Citron fruit as chief ingredient.

மாதுலங்காய் — Citrus fruit. See மாதுலங்கம்.

மாதுலநாதம். கருந்துளசி, black variety of holy basil — Ocimum sanctum.

மாதுலம், அடுக்கு ஊமத்தை, dhatura bearing multi (two or more) coralled petals.

மாதுலுங்கம், see மாதுலங்கம்.

மாதுவசை, பெண் வசம்பு, sweet flag (under ground stem) with more hairs at nodes — Acorus calamus.

மாதுவம், கள், a spirituous liquor; 2. கற்தூரம், dried date fruit.

மாதுவாசி, விசுத்தி, one of the six mystic centres of the human system — Maheswaran and Maheswari are God and Goddess of the centre. Its function is concealing (மறைத்தல்).

மாதுளங்கம், see மாதுலங்கம்.

மாதுளங்காய், மாதளையின்காய், unripe fruit of pomegranate. It is made into a paste and given with dysentery; the tender ones are good and better.

மாதுளம், மாதளை, which see.

மாதுளம் பழம், மாதுளை; pomegranate fruit (ripe) இதனால் சந்நியாசி ரோகம், வாந்தி கபம், மிகுதாகம், மலட்டு நோய், வாய்நீர் சுரப்பு, வாந்தி, விக்கல, மாந்தம், அதிசுரம் நெஞ்செரிவு காதடைப்பு நீங்கா மயக்கம் உடம்பு சூடு போம், it cures sterility, vomiting thirst, salivation hiccups, fever, burning in the throat, indigestion etc. When fully ripe the fruit bursts. Its juice is very pleasant to taste

மாதுளம் பிஞ்சி, பலவித மலக்கழிச்சல் போம், tender fruit of Pomegranate.

மாதுளை, see மாதளை.

மாதுளைத் தோல், the rind of the fruit both dried a fresh are used; the fresh rind is made into a paste and given mixed with curd for dysentery and diarrhoea. The powder of the dried one is mixed with clove powder — cinnamum bark powder and given for the same diseases. It is astringent

மாதுளைரசம், மாதுளம் பழத்தின்சாறு, juice of pomegranate fruit; extremely pleasant to taste and refreshing.

மாதுளைவித்து, சுக்கிலமிறுகும் பிரமேகச் சுறுக்கு போம், உடம்புக்குக் குளிர்சியாம், seeds of pomegranate fruit — aphrodisiac in action.

மாதுளை வேர் — root of pomegranate tree.

மாதூகம், இலுப்பை மரம், mowah tree — Bassia longifolia.

மாதுளை வேர்ப்பட்டை, the root bark is greyish yellow externally and yellowish internally without odour. Its decoction is used for destruction of tape worms, chronic diarrhoea, and also for sore throat. It is an astringent, It can be used as infusion also,

மாதூரியம், பெண் வசம்பு, see மாதுவசை.

மாதேசி, எலுமிச்சை, lime.

**மாதேவி,** சிதேவியார், a plant which see; 2. ஊமத்தை dhatura plant; 3. கந்தகம், sulphur.

**மாதோஷம் நீக்கி,** புளியாரை, sour sorrel — oxalis corniculata.

**மாத்தம்,** அலரி, oleander — Nerium odorum.

**மாத்தானை,**

**மாத்தியானம்,** see midday — noon.

**மாத்திரம்,** அளவு, measure; 2. பிரமாணம், quantity; 3 தன் மாத்திரை, primitive; 4. see தும்பி, a flying creature.

**மாத்திரா காலம்,** அதிவேக மில்லாமலும் அல்லது மெதுவில்லாமலும் நடுத்தரமாக நூறு எண்கள் எண்ணுவதற்கு வேண்டிய கால அளவு, time required to count hundred.

**மாத்திரி,** } வசம்பு, a plant — Sweet flag.
**மாத்திரிகம்,** } Acorus calamus. It has under ground stem used in medicine.

**மாத்திரை.** அளவு, measure; 2 கால நுட்பம், moment of time; 3. கால விரைவு, swiftness of time; 4. மருந்துக் குளிகை, medicinal pill.

**மாத்திரை,** வேண்டிய சரக்குகளைச் சுத்தி செய்து சூரணித்து கலுவத்திலிட்டு சொலவியபடி கஷாயங்கள், சாறுகள் இவைகளினுல்கையில் ஒட்டாமலிருக்கும் வரை அரைத்துத் திரட்டிய சிறிய உருண்டை, a pill; see மாத்திரை பாகம்

**மாத்திரைக்கோல்,** மாந்திரிகப் பிரம்பு, magic wand or rod. மந்திரத்தைச் சொல்லி சுற்றும், 1½ சாண் நீளம், 1 விரல் கனமுள்ள மூங்கில் அல்லது மரத்தினுல் செய்த கோல்,

**மாத்திரைச் சிமிழ்,** phial for keeping pills— see சிமிழ்.

**மாத்திரை,** கற்கதிரவியங்களைத் தனியாக வேனும் அல்லது பற்ப செந்தூரங்களுடன் கலந்தேனும் தண்ணீர் கஷாயம் அல்லது மூலிகை சாற்றினுல் நன்று உறவாகும்படி ஒட்டாதபடி, மெழுகுபோல் அரைத்து. குறிப்பிட்ட அளவின்படி தயாரித்த மருந்துண்டை, pill — see மாத்திரை பாகம்.

**மாத்திரை திரட்டல்,** உருண்டை (அளவுபடி) உருட்டுதல், making pills with fingers.

**மாத்திரை திரட்டி,** pill maker — machines are now employed to make pills or tablets.

**மாத்திரை பாகம்,** மாத்திரைகள் செய்யும் பாகம், The ingredients should be first purified & powdered into a fine powder and then maserated with the prescribed juices or liquid one after the other in their order. Each time it must be grinded till it becomes waxy in consistency does not adhere to the fingers or mortar and pestle; lastly it must be made into pills as prescribed and dried in shade.

**மாத்து,** தங்கம், re-fined gold.

**மாத்துப் பொதி,** நெருஞ்சி, a prostate plant with thorny fruits — small caltrops—Tribulus terrestris.

**மாத்துருகம்,** பசுவைப் போன்ற ஓர் வகை மான், a species of deer resembling cow.

**மாத்விகம்,** see மாத்துவிகம்.

**மாத்துவிகம்,** இலுப்பைப் பூ, சாராயம், wine prepared from the flowers of Bassia longifolia.

**மாநசப்பூசை,** see மாசைப் பூசை.

**மாநாகம்,** ஓர் பாம்பு, a kind of snake.

**மாநிறக்கல்,** நீலக்கல், a gem of blue colour — Saphire.

**மாநீர்,** தண்ணீர், water.

**மாந்தக்கட்டி,** கல்லீரலின் வீக்கம், a disease of the liver marked by thickening of the elements of stroma.

**மாந்தக்கணசுரம்,** குழந்தைகட்கு மாந்தத்தினுல் ஏற்படும் ஓர் வகைக் காய்ச்சல், fever due indigestion in children combined with congenital heat

**மாந்தக்கணச் சன்னி,** குழந்தைகளுக்கு மாந்தக் காய்ச்சலினுலேற்படும் சன்னி, a kind of brain fever affecting the children due to indigestion.

**மாந்தக்கணம்,** இதுவே கணமாந்தம், குழந்தைகளுக்கு செரியாமையினுல் வயிறு இரைந்து கழிவதினுல் ஏற்படும் ஓர் வகை கண நோய், a disease in children due to indigestion and congenital heat — Taber mesentrica.

மாந்தக் கருக்கு, சுர அல்லது விஷ தோஷங்களுக்கு கொடுக்கும் ஓர் மருந்து, mixture of roasted and powdered drugs given for fever. The roasting is done till it becomes black, hence the name.

மாந்தக் கழிச்சல், குழந்தைகளுக்கு மாந்தத்தினுல் குரல் கம்மி வலிகண்டு பலவிதமாய் மலங்கழியு மோர் நோய், a kind of diarrhoea in children accompanied by hoarse-voice, convulsions etc.

மாந்தக் குடோரி, மாந்தத்தை நீக்கும் புல்; நான்முகப்புல், a herb that is said to cure மாந்தம்.

மாந்தக்கோடி, உப்பில்லாக் கொடி, which see.

மாந்தக்கொதி, குழந்தைகளுக்குச் செரியாயாமையினு லேற்படும் ஓர்வகை சுரம், a kind of fever affecting children due to indigestion.

மாந்தசன்னி, மாந்தத்தினுல் குழந்தைகளுக்கு உண்டாகும் ஓர்வகை சன்னி, a kind of delerium in children caused by fever due to indigestion. A convulsion or fits in infants.

மாந்த சீலை, தேற்றுன் பழத்தின் சாற்றை ஒரு சுத்தமான வெள்ளைச் சீலையில் நனைத்து உலர்த்திக் கொண்டு பிறகு வேண்டிய போது அதைத் தண்ணீரிலிட்டுக் கசக்கி அதன் சத்து முழுவதும் வந்த அந்நீரை மிகக் கஷ்டப்படும் காலத்தில் குழந்தைகட்கு கோழை வெளிவரக் கொடுக்கும் மருந்து, a white piece of cloth which is soaked in the juice of fruit of clearing nut and dried; the process is repeated several times. To get the phlegm out from the chest of children, this cloth is soaked and squeezed in warm water and the liquid is administered.

மாந்தசுரம், — Diphtheritic fever.

மாந்தத்தையறுக்கி, பாவட்டை, a tree — Pavatta indica.

மாந்தத் தைலம், oil prepared with castor oil and several ingredients and given for மாந்தம்.

மாந்தபத்திரம், வில்வயிலை, Bael leaf — Aegle marmelos.

மாந்தப்பட்டை, மாந்தப்புல் பட்டை, bark of மாந்தப்புல்.

மாந்தப்புல், காவட்டம் புல், a kind of grass— Andropogen nardus.

மாந்தமசுற்றி, } மாவிலங்கம், a tree —
மாந்தமறுக்கி, } Crataeva roxburghii.

மாந்தமாத்திரை, அசீரணம், பசியின்மை, அரோசகம் முதலிய மாந்த நோய்களுக்குக் கொடுக்கு மாத்திரை, pill given for diseases caused by மாந்தம்.

மாந்தம், indigestion.

மாந்தம், ஓர்வகைக் கொடி, see உப்பிலாங் கொடி, a climber; 2. செரியாமை, indigestion; 3. மந்தம், loss of appetite; 4 ஓர் நோய், a disease; 5. பலண்டுறுக பாஷாணம், a kind of arsenic.

மாந்தரோகம், மாந்த நோய், a disease in children caused by the fermentation of acids in the stomach due to fermentation — Zymotic diseases. They are of 21 varieties — but some have added more and named them after the prominent symptom observed.

1. வாத மாந்தம்; 2. பித்த மாந்தம்; 3 சிலேட்டும மாந்தம்; 4. விஷ மாந்தம்; 5. போர் மாந்தம்; 6. சுர மாந்தம்; 7. நீர் மாந்தம்; 8. சொரியா மாந்தம்; 9. கட்டு மாந்தம்; 10. பால் மாந்தம்; 11. எரி மாந்தம்; 12. துலைமாந்தம்; 13. தலை மாந்தம்; 14. கண மாந்தம்; 15. வலிப்பு மாந்தம்; 16. சுழி மாந்தம்; 17. முக்கு மாந்தம்; 18. சன்னி மாந்தம்; 19. ஊது மாந்தம்; 20. விக்க மாந்தம்; 21. உப்பு மாந்தம்; 22. அடை மாந்தம்; 23. அட்ச அக்கர மாந்தம்; 24. அள்ளு மாந்தம்; 25. உளை மாந்தம்; 26. பேதி மாந்தம்; 27. கணை மாந்தம்; 28. கழி மாந்தம்; 29. புளி மாந்தம்; 30 பேய் மாந்தம்; 31. மலடி மாந்தம்; 32. வாள் மாந்தம்; 33. சன்னிபாத மாந்தம்; 34. இழுப்பு மாந்தம்; 35. சத்தி மாந்தம்; 36. தோஷ மாந்தம்; 37. கல் மாந்தம்; 38. உப்பல் மாந்தம்; 39. வாந்தி மாந்தம்; 40. வரட்சி மாந்தம்; 41. திட்டு மாந்தம்; 4. நீர்க் கண மாந்தம்; 42 கர்ப்ப மாந்தம்.

மாந்தர்போகம், மாதர் போகம், intercourse with woman.

மாந்தல வேம்பு, சருக்கரை வேம்பு, which see.

**மாந்தல்,** குடித்தல், drinking; 2. புசித்தல், eating: ஊழ் வினைப்பயன் அனுபவித்தல், experiencing the sorrows and pleasures being the result or outcome of what he had done (bad or good) in the previous birth.

**மாந்தவலி,** மாந்தத்தினால் குழந்தைகளுக்கு காணும் இழுப்பு, —Trismus noscentium.

**மாந்தவலிப்பு,** siphtheritic convulsion.

**மாந்தவிருமல்,** cough due to indigestion.

**மாந்தவுப்பிசம்,** bloating of abdomen due to indigestion.

**மாந்தளிர்,** மாந்துளிர், tender leaf of mango which is red in colour.

**மாந்தளிர்க்கல்,** see மாந்துளிர்க்கல்.

**மாந்தளிர்ச் சிலை,** கற்காவி, which see.

**மாந்தளிர்ப் பச்சை,** கொக்குக்கல், coral stone coralline; 2. செப்புச் சிலை, coppor idol.

**மாந்தனுதி,** சூடாலைக் கல், a kind of load stone.

**மாந்தன்,** மனிதன், man; 2. வாழை, plantain.

**மாந்தி,** மாமரம், mango tree — Mangifera indica; 2. குடித்து, having drunk.

**மாந்தித்தை,** மாவிலிங்கம், a tree — Crataeva Roxburghii.

**மாந்தி விழுப்பு,** fits in children.

**மாந்தியத்தை மறுக்கின்றோன்,** வாய்விளங்கம், which see. Wind berry — Embelia ribes.

**மாந்தியம்,** see மாந்தம்.

**மாந்திரகம்,** மாமரம், mango trec — Mangifera indica.

**மாந்திரவஞ்சி,** சாப்பிர விரை, monkey turmeric — Bixa orellana.

**மாந்திரியம்,** தும்பி, which see.

**மாந்திரியர்,** மந்திரவாதிகள், magicians.

**மாந்திரீக சிகிச்சை,** மந்திரத்தைச் சொல்லிச் செபம் செய்து நோய் தோஷ முதலியவற்றை விலக்கல், to cure diseases and other affections by chanting mantrams.

**மாந்திரீகம்,** It is an esoteric science dealing on occult subjects such as evocation of spirits, the raising of ghosts, the discovery of concealed treasures, the bewitchments and other mummeries of the ceremonial magic. It is even debased to the purposes of sorcerer. It is based chiefly on a doctrine of the powers of utterences and mystic letter and words.

NOTE:— It is said the possessor of the Divine formulae could in some obscure way influence the God to whom they are attributed; above all the demons and devil's (evil spirits) become sub-servient to the power of such words.

**மாந்துதல்,** see மாந்தல்.

**மாந்துளிரவிச்சிலை,** } கற்காவி, red — ochre.
**மாந்துளிர்க்கல்,** }

**மாந்துளிர்,** மாமரத்தின் இலைத்தளிர், the tender leaves of the mango tree, which are red in colour.

**மாந்தை,** ஓர் நோய், a disease; 2. காவட்டம் புல், a kind of grass — Andropogen nardus.

**மாபகம்,** தண்ணீர், water.

**மாபத்தரூபி,** கற்பூரம், camphor.

**மாபலம்,** மிக்கபலம், immense strengtn, 2. மாம்பழம், mango ripe fruit.

**மாபலன்,** காற்று, wind.

**மாபலி,** எலிச்செவிக் கீரை, a prostate plant — Ipomaea reniformis.

**மாபாவிவாழை,**

**மாபிரமி,** பிரமேகம், venereal disease.

**மாபுலி,** சிங்கம், lion.

**மாபோகம்,**

**மாப்படிதல்,** as in tongue; மாப்பூத்தல், coating of the tongue.

**மாப்படிந்த நா,** coated tongue.

**மாப்படிந்த நாக்கு,** coated tongue.

**மாப்பண்டம்,** மாவினால் செய்த பலகாரம், cakes prepared with rice flour.

**மாப்பிசைதல்,** kneading; 2. பிசறுதல், mixing.

**மாப்பிலாச்சை,**

**மாப்பிண்டம்,** கருப்பிண்டத்தை மாவைப் போல் உலக்கைக் கொண்டு நைய இடித்த வஸ்து, a pounded mass of the foetus.

**மாப்பூத்தநா,** furred tongue — coated tongue.

**மாப்பூத்தல்,** see மாப்படிதல்.

**மாமட்டி,** see மம்மட்டி.

**மாமணி,** மாணிக்கம், ruby, a gem; 2. வெங்கலம், bronze.

**மாமதக்காணம்,** பேய்க்கொள், wild horse-gram.

**மாமதீர்த்தியர்,** வைத்தியர், physician.

**மாமதுராசிரவம்,** அதிமதுரம், root of Glycirrhiza glabra — Liquorice.

**மாமம்,** மஞ்சள், turmuric — Curcuma longus.

**மாமரக் கிலுவை,** மாங் கிளுவை, mango balsam.

**மாமரத்தின் புல்லுருவி,** parasitic plant growing on mango tree.

**மாமரம்,** தேமா, மாங்காய் மரம், mango tree —Mangifera indica.

**மாமருந்துநூலோர்,** வைத்தியர், physician.

**மாமறையோன்,** இரசம், mercury.

**மாமலகம், மாமலக்காய்,** நெல்லிக்காய், fruit, Indian gooseberry — Embelica officinalis.

**மாமலற்கண்ணி,** சங்கிலே, leaves of the plant — Monetia balerioides.

**மாமலத்நா,**

**மாமலி,** அத்தி, fig — Ficus racemosa.

**மாமலை,** see கௌதிரகம்.

**மாமறையோன்,** ஈஸ்வரமூலி அல்லது பெரு மருந்து, a twining plant —Indian birthwort — Aritolochia indica.

**மாமாசி,** சடாமாஞ்சில், root of a medicinal grass. Valerian root — Indian spikenard — Cyperus stoloniferus.

**மாமாத்திரர்,** physician.

**மாமாலம்,** பேயை மிரட்டல், allurement of a devil.

**மாமாலை,** பேய் மாலை, a plant.

**மாமிசகதசுரம்,** ஓர் வகைச் சுரம், a kind of fever affecting the flesh.

**மாமிச அற்புதம்,** ஓர் கழலை நோய், a tumour on the flesh.

**மாமிச கண்டம்,** a lump or piece of flesh.

**மாமிசகத நோய்,** disease affecting the flesh.

**மாமிச சந்தி,** செம்மணி, which see.

**மாமிசக் கிரந்தி,** மினுமினுத்துப் பருத்துக் கெட்டியாய் நரம்புகளால் சுற்றப்பட்ட ஓர் வகைக் கிரந்தி, an inflammation of the lymphatic gland.

**மாமிசக் கிராணி,** சிலேட்டுமக் கிராணி, a variety of diarrhoea — caused by phlegm humour.

**மாமிச சிராவி மேகம்,** மூத்திரமானது வெள்ளாட்டுக் கொழுப்பை யொத்து வேளைக்குக் குறுணியளவாக விறங்கும் ஓர் மேக நோய், a kind of diabetes.

**மாமிசச் சிலை** கார் நிறக்கல், a kind of black stone.

**மாமிச தந்துகி,** உடம்பின் மாமிச பகுதிக்குச் செல்லும் சன்ன இரத்தக் குழல், capillary supplying the muscle.

மாமிச தாது, muscular tissue.

மாமிசதாரி, இறைச்சியுண்போன், flesh or meat eater.

மாமிசபகுதி, மாமிசபாகம், muscular portion.

மாமிச பலம், உடம்பின் சதை வல்லமை, muscular strength.

மாமிச பலா, தற்பூசினிப் பழம், water melon.

மாமிச பாகம், மாமிச் பகுதி.

மாமிச பேசி, தசைநார், muscle, muscular tissue.

மாமிச பேதி, ஓர் வகைப்பூடு, a herb; 2. ஓர் வகைக் கழிச்சல், a kind of diarrhoea.

மாமிச போசனம், புலால் உணவு, meat diet; flesh diet — non-vegetarian diet.

மாமிசப் படலம், கண்மணியின் முனையில் சதை வளர்ந்து ஊறல், கூசுதல் நீர்வடிதல் முதலிய குணங்களையும் பிடரி நோயையும் உண்டாக்குமோர் வகைக் கண்ணோய், an eye disease accompanied by growth of flesh over the pupil, inflammation and discharge of water from the eyes.

மாமிச மற்ற — discarnate.

மாமிசமுனை, தசை நீளமுனை, muscular. papillaris.

மாமிச மொத்தை, சதைத்திரட்சி, tumour.

மாமிசம், இறைச்சி, flesh; meat.

மாமிச ரசம், கறியைக் கொதிக்க வைத்து அதினின்று இறக்கும் சத்து, a kind of nourishing broth — soup.

மாமிச ரணம், ulcer affecting the muscle.

மாமிச வற்புதம், See மாமிச அற்புதம்.

மாமிச விருத்தி, சதைப்பிடிப்பு, muscular growth.

மாமிச விருத்தி ஔஷதம், சதைப் பிடிப்புக் காகக் கொடுக்கும் மருந்து—Sarcolic.

மாமிசோத்தானம், உயிர்த் தெழுதல், revival or resuming of life.

மாமிசோமம் — Majoma.

மாமிரான், ஆசாம் தேசத்து ஓர் கசப்பு வேர், a bitter root — Assamese golden thread-root — Coptis teeta.

மாமுகிலே, துளசி, a secred plant; holy basil — Ocimum sanctum.

மாமுடி, see நெட்டி; 2. எட்டி, nux-vomica.

மாமுட்டிப் பூண்டு — an herb.

மாமுட்டிரை, எட்டி, nux-vomica — Strychnos nux-vomica.

மாமுநி, மாமுனிகி, { நாயுருவி, a plant; Indian burr —Achyranthes aspera.

மாமூதா, சகமுனியா, a plant; scammony — Ilex aquifolium.

மாமூதாப் பிசின், கிரீஸ் சிரியா முதலிய தேசங்களில் விளைந்த ஓர் வகை மரத்தின் உறைந்த பால், the resinous gum obtained from a kind of tree grown in Greece, Syria and other places.

மாமூரி, see மாமுநி.

மாமூலி, வெண்காக் கட்டான், a twiner bearing white flowers — Clitoria ternatea (typica).

மாமேகம், பிரமேகம், venereal disease.

மாமை, அழகு, beauty; 2. நிறம், colour.

மாமோசம், பேரோசனை; a kind of natural body described in the Tamil medical science.

மாம், மாமரம், mango tree — Mangifera indica.

மாம்சோமம், see மாமிசோமம்.

மாம்படை, வாழை, plantain tree.

மாம்பம், நெல்லிப் பருப்பு, the kernel of the fruit of Indian gooseberry — Emblica myabolam.

மாம்பருப்பு, மாங்கொட்டையி னுள்ளிருக்கும் பருப்பு, the seed or kernel inside the mango nut. It is astringent.

மாம்பழக் கொன்னை, (un-identified.)

மாம்பழச்சிட்டு, ஓர்வித சிட்டுக்குருவி, a kind of sparrow.

மாம்பழப்பூச்சி, see சுழல்வண்டு.

மாம்பழம், மாங்காய்ப்பழம், mango fruit.

மாம்பாலிருள், இரும்பகம், a tree.

மாம்பிசின், மாமரத்துப்பால், gum of mango tree.

மாம்பிஞ்சி, இளமாங்காய், tender mango fruit; it is good for health.

மாம்பிரம், சிறுதேக்கு, knot plant — Cleodendron serratum.

மாம்புஷம், நாணல், a reed.

மாம்புளி, See மாம்புளிச்சை,

மாம்புளிச்சி — Spondias mangifera.

மாம்புளிச்சை — Indian hog plum — Spondias mangifera.

மாம்பூ, மாமரத்தின் பூ, flower of the mango tree.

மாயப்பூனை,

மாயகலை, சந்திரகலை, the vital air passing through the left nostril.

மாயகன், விளாமரம், wood apple tree — Feronia elephantum.

மாயகன்னி, குப்பைமேனி, a plant — Acalypha indica a vermifuge and expectorant.

மாயகா, வெள்ளரி, cucumber — Cucumis sativas.

மாயக்காய், oak nut.

மாயசாலம், dissimulation; chicanary.

மாயசிகிச்சை, மாந்திர சிகிச்சை, magnetic healing.

மாயத்தி, முத்திருக்கஞ் செவி, a plant — Asaram europacum — Asarabacca,

மாயப்பெண், மாயாபோகப் பெண, passionate woman.

மாயப்பொடி, புனுகு, சவ்வாது, etc., mixture of Civet, zibet etc., a perfume powder.

மாயமாமூலி, மாயமூலி, } உடம்பிலிருக்கும் பித்து; அங்கப்பிச்சு, the bile in human body.

மாயம், அழகு, beauty; 2. கறுப்பு, blackness; 3. மாயை, illusion; 4. பஞ்சபட்சி பாஷாணம், a poisonous drug.

மாய யாக்கை, பொய்யுடம்பு, un-real body.

மாயரூபம், மெய்போலக் காணும் பொய்யுருவம், illusive body.

மாயவன் மூலி, விஷ்ணுகரந்தை, a plant — Sphoeranthus indicus; 2. துளசி, holy basil plant — Ocimum sanctum.

மாயவன் மேனி, நாகப்பச்சை, a peculiar green stone; 2. ஓர் உபரசச் சரக்கு, a mineral — one of the natural substances.

மாயவாழ்க்கை, உலக வாழ்க்கை, worldly life which is not real.

மாயவாழ்வு, அநித்திய வாழ்வு, transitory life.

மாயவித்தை, ஓர் மந்திரவித்தை, a magical art; 2. சித்து விளையாட்டு, phantas magoria.

மாயன்மாலை, துளசி, holy basil plant — Ocimum sanctum.

மாயன்வித்து, வெள்ளரி விரை, seeds of cucumber fruit — seeds of Cucumis sativus.

மாயன்விந்து, அரிதாரம், yellow orpiment. 2. வெள்ளரிவிரை, seeds of cucumber fruit.

மாயாக்காய், See மாசிக்காய்; இதனுல் மேகவேகம், அக்கரம, பொருமல் போம்.

மாயாசத்தி, பஞ்சசத்திலொன்று, one of the five kinds of energy — passive cause of creation or matter. That power which seemingly makes the infinite into finite; the formless into forms and the like. So it is

a power which veils conciousness and produces world experience.

The particular power where by the dualistic world is brought into being which is both a veiling ( ஆவரணம் ) and projecting ( விச்ஷேபம் ) Sakthi.

NOTE:—Maya is a power which veils consciousness thus producing world experience. It is that power which makes the whole into a part, the infinite to finite, the form less into forms and the like and cuts down veils and negates perfect consciousness. It is that power by which things are measured i. e, formed and made known. It is the sense of difference or that which makes Man see the world and all things and persons as different from himself when its truth is **he, it or they** are the one self. It is the cause of dualism inherent in all phenomenal experience.

It contains and is in fact constituted by the collective சமஸ்காரம் or வாசனை, the mental impressions and tendencies produced by Karma accomplished in previous and existing births. They were produced by desire for worldly enjoyments and themselves produce such desires.

மாயாசாலம், மாந்திரீகம், magic.

மாயாதம், முதலை, crocodile.

மாயா தேகம், நிலையில்லாத வுடம்பு, mortal body; transitory body.

மாயாபசரணம், வெண்ணெய், butter.

மயாபுரி, பித்தளை, brass; 2. மாயா தேகம், transitory body.

மாயாமம், புளி, tamarind.

மாயாமலம், மும்மலத் தொன்று, one of the three evil passions — confusion of mind.

மாயாரூபம், சித்திவகையால் கொண்ட ரூபம், assumed form by super — natural powers.

மாயாலீலை, sportive; illusions.

மாயா வித்தை, see மாயாவித்தை,

மாயா விநோதன், wonder worker; legerdemain.

மாயாளி, வட்டத்திருப்பி, root of a twiner see பொன் முசுட்டை—Cissampelos pereira.

மாயு, பித்தம், bile.

மாயுச்சம், நாகமணல், sand containing zinc ore.

மாயூரம், மயில், peacock.

மாயே சத்துரு, } ஒட்டை கோரோசனை, gall
மாயே துராசு, } stone of camel.

மாயை, அறிவு, knowledge. இது இரண்டு; 1 மருள் மாயை; 2. இருள மாயை; 3. இந்திர சாலம், magic, jugglery; 4. five kinds of delusions. 1. தமம், obscurity of mind; 2. மோகம், depravity; 3. அவித்தை, ignorance; 4. அமிர்தம், anything strange, 5. நஞ்சு, placenta.

மாயை மலம், see மாயாமலம்.

மாயோள், பெண், woman; 2. துர்க்கை, Goddess Durgai.

மாயோன் பூடு, துளசி, holy basil - Ocimum sanctum.

மாயோன் பெண்டிர், அரிதாரம், yellow orpiment.

மாயோன் வித்து, வெள்ளரி விதை, seeds of cucumber fruit — Cucumis sativus; 2. விஷ்ணு கரந்தை, a plant — Sphoeranthus indicus.

மாயோன் விந்து, வெள்ளி, silver.

மாய் ஆச்சா, a tree ebony — Hardwickia binata or Diospyros ebenoter; 2. கொல். to kill.

மாய்கை, சுக்கிலம், semen; 2. ஆச்சா, a tree—Hardwickia binata. 3. சிசுவின் நஞ்சுக் கொடி, naval cord.

மாய்கை வல்லவன், சித்தரில் தேறினவன், best of Siddhars who had conquered passions.

மாய்ச்சல், சாவருத்தம், agony of death.

**மாய்ச்சி,** பாம்பு கொல்லி, a plant which see.

**மாய்தல்,** சாதல், dying.

**மாய்த்தல்,** கொல்லல், killing.

**மாய்த்துக் கொள்ளல்,** தற்கொலை புரிதல், committing; suicide.

**மாய்வு,** சாவு, death.

**மார,** மகிழ மரம், a tree with very fragrant flowers — Mimusops elengi.

**மாரக சலதோஷம்,** மரணத்தை யுண்டாக்கு மோர் வகை சலதோஷம், a kind of virulent cold resulting in death — Influenza.

**மாரகம்,** மரணம், death; 2. மரணகாரணம், that which causes death such as cholera etc.

**மாரகாகளம்,** குயில், a bird — Indian cuckoo.

**மாரக்கம்,** கையாந்தகரை, a prostate plant —Eclipta prostata.

**மாரசம்,** வெள்ளி பற்பம், calcined medicinal powder of silver; 2. வெள்ளீய பற்பம், calcined medicined powder of tin — white lead.

**மாரடம்,** மருக்காரை, a plant — Gardenia.

**மாரடிப்பு,** இரத்தாசயத்தின் துடிப்பு, beating of the heart.

**மாரடைப்பு,** நெஞ்சை யடைக்கும் ஓர் வகை நோய், a disease of the heart — Angina pectoris; 2. நெஞ்சடைப்பு, obstruction of breast in cases of asthma and other diseases — Breast pang; 3. மார்பில் கொழுப்பு படிவதினாலும், பலவீனத்தினாலும் உண்டாகு மோர் நோய், a paroxysmal neuorsis with intense pain and oppression about the heart with difficulty of breathing; occuring in males after 40 years of age and resulting in fatal termination. It is associated with sedantry habits brain work, gout or diabetes. The first paroxysm may appear after some violent exertion or when walking up hill or after heavy meal. (night).

**மாரணக்கரு,**

**மாரணக்கிரமம்** — sequences of symptoms of death.

**மாரணக்கிரியை,** மாரண வித்தை, which see.

**மரணஞ்செய்தல்,** இறக்கும்படி மாந்திரீகத் தினால் செய்தல், causing death by magic or witch craft; 2. changing minerals into something else chemically. by some special process. See மாரண வேதை.

**மாரணமந்திரம்,** மரணத்தை யுண்டாக்கு மந்திரம், Manthiram causing death.

**மாரண வித்தை,** சூனியவித்தை, sorcery; witch craft; 2. இறக்கும்படியாகச் செய்யும் வித்தை — Necromancy.

**மாரண வேதர்,** இரசவாத முறைகளை இயற்றிய சித்தர்களி லொருவர், one of the Siddhars who is an alchemist.

**மாரணவேதை,** உலோகங்களை படியச்செய்து அதினால் வாதம் செய்தல், a process in alchemy by which minerals are transmuted into gold after destroying their properties.

**மாரண்டம்,** பாம்பு முட்டை, eggs of snake.

**மாரத்துச் சாமை,** ஓர் சாமை, a kind of millet.

**மாரம்,** கோடகசாலை, a small plant — Rangia — repens; 2. மரணம், death.

**மாரளிடுக்கி,** மோகம், lust; 2. போகம், sexual union.

**மாரளை,** துராய், which see.

**மாரன் புட்பம்,** மன்மதனுடைய புட்பம்.

**மாராசு,** அலரி, a flower — Oleander — Nerium odorum.

**மாராட்டம்,** புத்தி தடுமாற்றம், be-wilderment.

**மாராணி,** மார்பாணி, keloid in the chest.

**மாராயம்,** see மாரம்.

**மாரி,** கள், fermented juice of a palm tree; toddy; 2. சாவு, death; 3. சாறு, juice; 4 நீர், water; 5. பெருவாரி நோய், epidemic disease (தொத்து நோய்); 6. மழை, rain; 7. மேகம், clould; மண்மாரி; கல்மாரி; கீழ்மாரி; முன்மாரி, பின்மாரி; which see.

மாரிகாலம், மழை காலம், rainy season.

மாரிசம், ஓர் வகைக் கீரை, edible green —Amaranthus oleraceous.

மாரிசாதம், வானம்பாடி, a bird — sky lark.

மாரிசி, மிளகு, pepper — Piper nigrum.

மாரிடிப்பு, மார்த்துடிப்பு, beating of the heart.

மாரிமுத்து, ஓர் நோய், a kind of disease.

மாரியம்மன், மாரியாத்தாள், } அம்மைக்குரிய தேவதை, Goddess of small pox.

மாரியுள்ளான்,

மாரீசம், மிளகு, pepper — Piper nigrum; 2. வால் மிளகு, cubebs.

மாருசி, see மாரிசி.

மாருண்டம், see மாரண்டம்.

மாருதக் கருமான், see காசாங்கம்.

மாருத சூலம், தும்புரு, which see.

மாருதத்தைப் போக்கி, புனம்புளி, which see.

மாருத நாதம், வங்க மணல், lead ore.

மாருதப்பிரமன், see மாருத மகிபன்,

மாருதப் பூடு, அழுகண்ணி, a plant — a carnivorous plant which water oozesout — Drosera indica.

மாருதப் பொழியான், சாரைப் பாம்பு, a variety of snake; which see.

மாருத மகிபன், சூதபாஷாணம், a kind of arsenic.

மாருதம், காற்று, wind; 2. பிராணவாயு, vital air; 3. மந்தாரச் சிலை, which see; 4. see பூனைக்காலி, a twiner; 5. வெங்கலம், bronze.

மாருதவண்ணக்கல், காகச் சிலை, load stone.

மாருதவீமன், ஏகம்ப பாஷாணம், a kind of arsenic.

மாருதாசனம், பாம்பு, snake.

மாருதாபகம், எலுமிச்சை, lime.

மாருதி, கழற்கொடி, a climbing thorny shrub—Caesalpinia crista; 2. நாய்வேளை, a plant — Cleome viscosa.

மாருதிக் கங்கை, see மாருதிச் செங்கை.

மாருதிக்குடிலம், வங்க மலை, mountain containing lead ore.

மாருதிச் சிங்கி, அரச மரம், a religious tree — Ficus religiosa.

மாருதிச் செங்கை, கண்டகிச் சிலை, a sacred stone found in the river Gandaga.

மாருதி நாதம், வங்க மணல், sand mixed with lead ore.

மாரெலும்பு, breast bone — Sternum; 2. see மார்பெலும்பு.

மார், மார்பு, chest; 2. பெண்முலை, woman's breast.

மார் இரேசகி, breast; pump.

மார்க்கசி, கையாந்தகரை, a plant— Eclipta prostata.

மார்க்கட்டி, பெண்கள் முலையில் காணும் கட்டி, breast abscess — Mammary abscess.

மார்க்கணம், தேடல், research work.

மார்க்கண்டம், மார்ப்பகுதி, breast portion of man; 2. மாரின் கறி, flesh of the chest.

மார்க்கண்டி, மாரெலும்பு, sternam.

மார்க்கண்டேய சூரணம், The ingrediants of this preparation are mercury, sulphur, cinnabar, fried borax, the three acrids, antimony, cloves, large cardamums, plumbago, dry ginger, moringa, gum of silk cotton—Pavonia odorata (பேராமுட்டி) Bauhinia tomentosa buds(காட்டாத்திப்பூ) seeds of Butea (புரசு) opium, in equal measures and reduce them to powder. It cures enteric fevers, dysentery, loss of digestive, fire, emaciation of and waste of the seven dhatus.

மார்க்கபம், மார்ச்சளி, phlegm in the chest.

மார்க்கல், ஓர் வகை மாக்கல், a kind of soft stone.

மார்க்கவம், கரிசாலை, a plant—Eclipta prostata.

மார்க்கழலை, tumours in the breast as adenoma, fibroma affecting the girls between 20 and 30 years.

மார்க்கூடு, மார்பறை, thorax.

மார்ச்சலம், மார் நீர்க் கோவை — Bronchial catarrh.

மார்ச்சளி, மார்பில் கபங்கட்டும் ஓர் நோய், Bronchitis; Catarrh or cold in the chest. இதற்கு நாய்ப்பாலை யிலையைத் தூள் செய்து 2½ grs. தேனில் கலந்து இருவேளை யுண்ணப்போம் — The remedy for this is powder of நாய்ப்பாலை (which see) with honey.

மார்ச்சனம், துடைத்தல், cleaning.

மார்ச்சனி, rubber—Caoutchouc, gumelastic India rubber — Ficus elasticus.

மார்ச்சாரகம், மார்ச்சாரகண்டம், மயில், peacock bird.

மார்ச்சாரம், பூனை, cat.

மார்ச்சாரி, கஸ்தூரி, musk; 2. புனுகு, civet.

மார்ச்சாலம், பூனை, cat; 2. கோமேதகம், a gem Cat's eye — Cinnamon stone; 3. மர நாய், pole cat or palmyra dog.

மார்ச்சிலந்தி, பெண்களுக்கு முலையில் வரும் கட்டி, abscess of the breast — adenoma — Cancer of the breast.

மார்ச்சோரம், See மருகு.

மார்த்தண்டன், மார்த்தாண்டம், எருக்கு, a milky shrub — Calotropis gigantea; 2. பன்றி, pig.

மார்த்தவகர தூபனம், fumigation for softening.

மார்த்தவம்—Ramollissement.

மார்த்தாண்ட பைரவம், a medicinal pill.

மார்த்தாண்டன், சூரியன், sun.

மார்துடிப்பு, மார்த்துடிப்பு, நெஞ்சு துடித்தல்; மார்பின் இடப்பக்கம் இருக்கும் இருதயம் பலமாகவும் வேகமாகவும் துடித்தல், palpitation of the heart; throbbing of the chest.

மார்நீர்க் கோவை, நுரையீரலைச் சுற்றியிருக்கும் சவ்வின் இடையில் நீர் தங்குவதால் ஏற்படும் ஓர்வித நோய், a kind of disease affecting the membranous coating of the lungs by causing inflammation and collection of fluid; 2. பக்கசூலை — Pleuritic effusion; விஷ்ணுசக்கர மாத்திரை is a good remedy for this disease (by C. D.)

மார்நோய், மார்வலி, neuralgia of the chest.

மார்பகம், நெஞ்சு, chest.

மார்படைப்பு, நெஞ்சடைப்பு, a disease — Angina pectoris.

மார்பம், see மார்பகம்.

மார்பறை, see மார்புக்கூடு,

மார்பாணி, மார்பில் வரும் அணி நோய், — Keloid chest

மார்பிளவை, cancer of the breast; abscess of the breast.

மார்பு, நெஞ்சு, chest; breast.

மார்புக்கபம், மார்ச்சளி, phlegm in the chest.

மார்புக் குடைச்சல், மார்நோய்.

மார்புக்கூடுகட்டு,

மார்பு சிலந்தி, see முலைவித்திரதி,

மார்பு சீதளம், தைலம் தேய்த்து ஒத்தடம் போடக் குணமாகும், cold chest the remedy is fomentation with wheat wan,

மார்புசூலை, pain in the chest due to rheumatism.

மார்புச்சளி, மார்ச்சளி, flueno thorax — bronchorxea.

# மீ



மீ, ஆகாயம், sky — etherical.

மீ கண், கண்ணின் மேல், above the eye.

மீக்கல், அப்பிரகம், mica.

மீக்குவம், மருது மரம், a tree — Terminalia paniculata; 2. பெரும் பருத்தி. a plant; 3. கருமருது, black mardh — Terminalia tomentosa.

மீகை, புலி தொடக்கி, which see.

மீசுவைத்தல், மேலே வைத்தல், placing above.

மீச்சிதக் களி. } வெள்ளாவிப்பானை; earthern
மீச்சிதம், } pot used by washer man for boiling clothes with fuller's earth.

மீடம், மூத்திரம், urine.

மீண் கிளிர்வு, reflex irritation,

மீண் செயல், எதிர்த்தாக்கம், reaction.

மீதி, கருஞ் சூரை, a species of black thorny shrub.

மீதிகி, see மீதி.

மீதிரா, பெரு லவங்கப்பட்டை; thick cinnamum bark.

மீதிரை, சூரை, a plant.

மீதிந்து, பேரரத்தை, greater galangal — Alpinia galangal (major).

மீதுந்து, நெல்லி, Indian gooseberry — Emblica myrobalam.

மீதுரை வேர், கஸ்தூரி மஞ்சள், musk turmeric — Curcuma aromatica.

மீதூணருந்தல், மித மிஞ்சிப்புசித்தல், glut —to eat in excess.

மீதூணன், பெருந்திண்டி தின்போன், glut on — surfeiter.

மீத் தோல், மேலேயிருக்குந் தோல்; பீத்தோல், epidermis — Scarf.

மீநாட்சி, see மீனுட்சி.

மீந்தோல், see மீத் தோல்.

மீமாம்சம், a philosophical system.

மீலனம், கண் சிமிட்டு, winking of the eye.

மீரு,

மீளப் பாய்தல், regurgitable as in blood.

மீளல், திரும்புதல், relapse as in fever.

மீளா வியாதி, குணமாகா நோய், an incurable or chronic disease.

மீளும் நோய், curable disease.

மீள் வித்தல், as in உயிர் மீள்வித்தல்; to restore life.

மீறுதல், அளவு கடத்தல், transgressing the limit; 2. அதிகப்படல், increasing.

மீனகாதி, கொக்கு, stork.

மீனங்கம், மீனெலும்பு, fish bone.

மீனங்கு, விரியன், a snake.

மீனஞ்சு, மீன் கொள்ளிப் பூடு, a kind of plant killing fish—rattle wort — Crotolaria paniculata.

மீனஞ்சுவன்னி, கடல் நுரை, bone of cuttle fish.

மீனமரம், மதகிரி வேம்பு, which see.

மீனம், மீன், fish; 2. மீன ராசி, one of the signs of the zodiac — Pisces.

மீனம்பர், செம்மீன் வயிரம், Ambergris greayamter a morbid secretion of Spermaceti Whale. (மீன்+அம்பர்—fish+perfume) 2. கடலுக்குள்ளகப்படும் ஓர் விதமருந்து, a solid opaque ash coloured substance found in the sea

NOTE— The Ambragresia of chemists is a solid, obaque ash coloured mottle fattey and inflammable substance. When heated has a fragrant odour. It is a concretion of the indigestable portion of the cuttle fish which forms the food of the sperum whale. The nucleus of the mass is generally the horny beaks of these creatures and the substance itself is found in the intestine of the sperm whale or in the shores of the seas frequented by the species. No other whale is known to be subject to these bezoars. It is found floating in the Indian ocean or adhering to the rocks of Moluccus, Maldives and other islands. It is esteemed as perfume. It is an aphrodisiac substituted for British Phosphorus. A drop or two of the essence mixed with lavender water can be used as a perfume. It is used as a stimulent in low fevers, chronic, catarrh. hysteria and other nervous affections.

மீனவன், சிங்கம், fisher man.

மீனவல்லிகை, மீன் கொத்திக் குருவி, a bird with long beak — King fisher.

மீனன் கொடி, lady copleris — floribunda.

மீனுஞ்சு, see மீனஞ்சு, அக்கினிக் கட்டி, an abscess with burning sensation.

மீனுட்சி, பொன்னுங்காணி, a medicinal prostate plant — Illecebrum sessile.

மீனுட்சி மைந்தன் விரம், per- chloride of mercury.

மீனுண்டி, சர்க்கரை, sugar.

மீனும்பூச்சி, மின்மினிப் பூச்சி, glow worm.

மீனுய், ஓர் மீன், a fish; 2. நீர்நாய், water dog.

மீனுரச்சிகம், மீன் கொல்லி, one that kills fish.

மீனீரலெண்ணெய், codliver oil.

மீனு, வாலேந்திர போளம், Myrrh — a gum-resin used in medicines.

மீனெண்ணெய், fish oil — Codliver oil.

மீனெரிஞ்சான், see மீனஞ்சு.

மீனெலும்பு, மீனங்கம், which see.

மீனெறி, see மீனவல்லிகை.

மீனென்பு, உபரசத்திலோர் வகை, a kind of natural body.

மீனேறு, மகர மீன், a sea monster probably the horned shark.

மீனை, வசுவாசி, சாதிப் பத்திரி மரம், a tree mace tree — Myristica fragrans.

மீன், மகர மீன், a kind of monster sea fish —shark; 2. மச்சம், fish.

மீன் எண்ணெய், மீன் கொழுப்பு, fish oil — Oleum piscis — Codliver oil. ஐரோப்பா தேசத்தில் காட் (Cod) என்னும் சமுத்திர மீனினின்று எடுக்கும் நெய்.

மீன்கல், மீன்கள் தலையிலுண்டாகும் கெட்டியாயுள்ள வெளுத்த கல், இதைத் தண்ணீரிலுரைத்து குடிகக கல்லடைப்புப்போம். a stone in the head of some fish. It is a good diuretic, even removes stones in the bladder and kidney.

மீன்குத்தி, மீன் கொத்திக் குருவி, a bird preying on fish - King fisher — Ospray.

மீன் கொத்தி, ஓர் புள், a bird — Halcyon.

மீன் கொல்லி, ஓர் விதப்பூடு, a plant which kills fish — Crotolaria panniculata, see மீனஞ்சு.

மீன் கொல்லிப்பூனை, fishing tiger cat.

மீன் கொழுப்பு, மகர மீன் தலையிலிருந்து எடுக்கும் கொழுப் பெண்ணெய்—Celacum spermaceti.

மீன் கொள்ளி, see மீன் கொல்லி.

மீன் சிதள், }
மீன் செதிள், } மீன் செதிள், fish scale.

மீன் சிலாம்பு, கணவாய் மீன் ஓடு, இதைத் தவறுதலாய்க் கடல் நுரை யென்றும் சொல்லிக் கடையில் விற்பதுண்டு. This is sold in the bazaars as cuttle fish bone.

மீன்சினை, மீன் கரு, fish low.

மீன் செய் குளம்—Aquarium.

மீன் செவுள், gill.

மீன் தலைக்கல், மீனின் தலையிலிருக்கும் கல், சுறு மீன் தலைக் கல், நீர்க் கட்டுக்கு இழைத்துக் கொடுப்பதுண்டு, fish bezoar — This is a diuretic.

மீன் தலைவாளம், மீன் எலும்பு, which see. மீன் பிரால்.

மீன் பட்சணை, மீனை யுணவாகக் கொள்வது.

மீன் பிரால், scales of the fish.

மீன் பீலி, கெண்டைப் பீலி, a kind of fish.

மீன் மலம், see மீனம்பர்.

மீன் மல வயிரம், see மீனம்பர்.

மீன் மிதப்பு, மீனிற்குள்ளிருக்கும்காற்றுப்பை, air bladder of fish.

மீன் முள், see மீனெலும்பு

மீன் வகை, 1. விரால் மீன்; 2. குறவை மீன்; 3. அயிரை மீன்; 4. இருல் மீன்; 5. கெண்டை மீன்; 6. சன்னக் கெண்டை; 7. பேராரல் மீன்; 8. சிற்றுரல் மீன்; 9. கச்சல் மீன்; 10. உழுவை மீன்; 11. கொடுவா மீன்; 12. வாளை மீன்; 13. சேல் கெண்டை; 14. கெளிற்று மீன்; 15. ஓளைவாளை; 16. சுறு மீன்; 17. கொள்ளி மீன், 18. சன்ன கூலி; 19. திருக்கை மீன்; 20. மடவை மீன்; 21. சுரும்பு மீன்; 22. உல்ல மீன்; 23. கற்றலை மீன்; 24. வெள்ளைவௌவால்; 25. கரு வௌவால்; 26. நெய்த் தோலி; 27. மயிறி மீன்; 28. விலாங்கு மீன்; 29. கிழங்காள் மீன்; 30. வஞ்சிரம் மீன்.

Different varieties of fresh water and sea fish as mentioned above.

மீன் வச்சிரம், சில மீன்களின் பையிலிருந்து எடுக்கும் நார்போன்ற வெளுத்த ருசியற்ற ஓர் வஸ்து, a substance found in fish — Isinglass —Ilthyocolla.

மீன் வெட்டி, சுறு, a fish — Shark.

முகக்கடுகம், } திரிகடுகு, which see.
முகக்கடுகு, }

முகக் கடுப்பு, முகச் சினப்பு, a swelling or pimple on the face.

முகக்கட்டை, தாடை, chin.

முகக்கந்தம், முருங்கை மரம், drumstick tree — Moringa oleifera.

முகக்களை, முகச் செழிப்பு, brightness of the face.

முகக் காதனி, cancrum oris.

முகக்கிளர்ச்சி, முக மலர்ச்சி, liveliness of the face.

முகக் குறி, நோயாளிக்குடைய முகத்தின் சின்னங்கள், 14-வித முகத்தில் ஏற்படும் சின்னங்கள், இது பல காரணங்களை முன்னிட்டு உண்டாகும், symptoms in the face of a patient; fourteen of attitudes or expressions of the face indicative of various emotions or passions as weariness pain, disgust etc.

முகக் குறிப்பு, facial features.

முகக் கோட்டம், முகக்கோணல், Crookedness of the face.

முகங் குப்புறல், முகம் கீழ்ப்புறமாதல், facing down.

முகங் கொள்ளுதல், கட்டி அல்லது பரு, சிலந்தி உடைவதற்கு முன் முனை கொள்ளுதல், formation of cone in an abscess, ulcer or carbuncle —shoot forth as in boils.

முகங் கோடல், see முகங்கொள்ளுதல்

முகங் கோணல், to make a wry face.

முகசம், பல்லு, tooth.

முக சன்னி, முகத்தைக் கோணச் செய்து விகாரப்படுத்தும் ஓர்வித சன்னிபாத சுரம், facial neuralgia.

முக சரக்கு, முதற்சரக்கு, the first-rate drug.

முகசிங், முகத்திலுண்டாகும் ஓர்வித நோய், a disease of the face.

முகசிராவரோகம்.

முகசின்னம், See முகக்குறி.

முகசீரி, நாக்கு, tongue.

முக சுரம், பனங்கல் — Palmyra toddy.

முகசோதனம், முகங்கழுவுதல், cleaning of the face.

முக சோதி, எலுமிச்சை, lime.

முகச்சாடை, See முகச்சாயல்.

முகச்சாயல், ஒத்த முகக்குறிப்பு, resembling features.

முகச்சித்தி, பார்ப்பவர் மோகிக்கத்தக்க முகமாயிருத்தல், loveliness face — magnetic influence in the face.

முகச்சுருக்கம், முகத்திரை, wrinkles of the face.

முகச்செழிப்பு, cheerful; countenance.

முகஞ்சுண்டுதல், முகங்கருகுதல், face becoming dark.

முகஞ்சுளித்தல், cross face.

முகஞ்செத்துப் போதல், வெட்கத்தால் முகவாட்டமடைதல், face becoming wan – pale through shame.

முகஞ் செய்தல், சிலந்தி குழித்தல், formation of the point in an abscess.

முகடமறியோன், பச்சோந்தி, green lizard — Chamelion.

முகடன், உள்ளான் குருவி, a bird; snipe.

முகடிக்கொடி, காக்கை, crow.

முகடு, உச்சி, crown of the head.

முகட்டுக் கூர்மை, மாங்கிச பேதி, which see.

முகட்டுப்பூச்சி, மூட்டுப்பூச்சி, bug.

முகண்டம், கடலை, gram; pulse.

முகதாவனம், முகங்கழுவல், cleaning of the face.

முகதானியம், மொச்சை, field bean — Dolichos lablab (typica).

முகதூஷிகம், வெங்காயம், onion — Allium cepa.

முகதூஷிகா ரோகம், முகப்பரு, acne; இது வாலிபத்தில் முகத்திற் காணும்; நகம் பட்டாலும் கிள்ளினாலும் விருத்தியாகி அபாயத்தை விளைவிக்கும். These pimples like the thorns of cotton tree appear on the face of young men. Wasted semen is the principle cause. If interfered, it easily forms cellulitis.

முகத்தானி, அவல், flaked rice.

முகத்தில் அரும்பிறங்கல், said of a boy with hairs sprouting on the upper lip.

முகத்திரியக்கு நாடி, முகத்திலோடும் ஓர் வகை நாடி, tranverse —facial artery.

முகத்திரை, முகத்தின் சுருங்கிய தோல், furrous in the face—wrinkles in the face.

முகத்திற்குரிய, முகசம்பந்தமான, facial.

முகத்துக்கு முகம், face to face.

முகத்துவாரம், enterance.

முகத்தூஷணம், ஈருள்ளி, onion — Allium cepa.

முகநரம்பு, facial nerve.

முகநாடி, முகத்தோற்றம், appearance of the face; 2. முகக்குறி, features in the face — Symptom expressed by the countenance; 3. முகத்தையும், மூக்கில் ஓடும் சரத்தையும் பார்த்து நோயின் தன்மையை நிதானிப்பது, seeing the features of the face of the patient and the course of the vital air in the physician himself one should judge the prognosis of the disease; 4. முகத்தின் நாடி, facial artery.

முகநாளம், facial vein.

முகநிறம், complexion.

முகந்தகம், ஈரவெண்காயம், onion — Allium cepa.

முகந்தம், முருங்கைமரம், drumstick tree — Moringa oleifera.

முகந்திகா, முருங்கை, drumstick.

முகந்திரிதல், change of countenance.

முகபாகம், facial region.

முகபூஷணம், தாம்பூலம், betel and nut.

முகபூரணம், வாய் நிரம்பியது, mouthful.

முகப்பரு, வாலிபர் முகங்களில் வெங்காயப் பூ போலும் இலவமுள்ளைப் போலும் அடி பருத்து முனையுள்ளதாகிய கொப்புளங்கள், (வ. மொ.) முகதூஷிக ரோகம், which see; இது நகம்பட்டு விருத்தியடைந்தால் அபாயமாம், facial pimples amongst lads attaining maturity — Acne. The pimples which are found on the face of young men through the deranged condition of the blood — Pimples of youth apply chank paste with milk or rose water or mayanathailam.

முகப்பிரியம், நாரத்தை, a citron fruit.

முகப்பிரியா; அனுமூலு, field bean — Dolichos lablab (typica).

முகப்பூச்சு, முகத்திற்குப் பூசும் ஓர் வாசனைத் தூள், facial powder; 2. அரிதாரம், yellow orpiment.

முகமங்கு, see முகவங்கு.

முகமண்டலம், facial region — Circumferance of the face.

முகமண்டலிகா கிரகம், நாலாவது நாள்; மாதம் அல்லது வருஷத்தில் குழந்தை அல்லது தாயைப் பிடிக்கும்; அப்போது சுரம், உடம்புவலி, தலைசுற்றல் முதலிய குணங்களை யுண்டாக்கும், bad malignant planet affecting the mother or child in the fourth day, month or year after giving birth. The symptoms are fever, ague, vertigo etc.

முகமண்டிகாக் கிரகம், A disease in children attributed to the influence of malignant stars and it is marked by increasing cry, rumbling sound in the abdomen, emaciation of the body, swelling of the face and the extremities, voracious appetite, frightful appearance etc.

முகமலர்ச்சி, blooming face; 2. முகக்களை, attractive; bright face.

முகமாயம், முகமயக்கு, hypnotic face: confusion of mind caused by the look of a woman.

முகமாற்று, ஓர் மயக்குவித்தை, a magic art.

முக மினுமினுப்பு, எண்ணெய் கசிவினல் முகம் பளபளப்பா யிருத்தல் — seborrhea.

முகமுகெனல், வாய் கொப்பளிக்கும் சத்தம், gurgling of water in the mouth.

முகமுறித்தல், முகம் வாட்டமடையச் செய்தல், to make the face fade.

முகமூதல், soft swelling about the face and the eyes — Urticaria gigantea.

முகமைந்து, பிண்டநிலைகள், state of foetus are five:

1. பிண்டத்தோற்றம், its appearance.
2. உட்புறவுறுப்பு, internal organs.
3. நோய், disease.
4. யாக்கைப்பொருள், bodily substance.
5. உடல்நிலை, state of body.

முகம், முகம், face; 2. கட்டியின் முனை, point of the abscess or boil etc; 2. இந்திர கோபம், Cochilean insect; 3, தொடக்கம், commencement as in உருக்குமுகம்.

முகம் கழுவுதல், rinsing the face.

முகம்குளுப்பை தட்டல், முகம் வீங்கல், face becoming swollen.

முகம் சுண்டல், frowning.

முகம்வவ்வால்.

முகம்வீங்கிமரம், see முகம்வீங்கி விருக்ஷம்.

முகம்வீங்கி விருக்ஷம், தில்லைமரம், which see.

முகயோனி, a form of impotence under which one is incapable of sexual excitement unless he licks another persons sud.

முகரதம், நாயகியும், நாயகனும் புணர்ச்சியில் அதிக விருப்பமும் இன்பமும் இனிது தோன்றவும், அன்பும் ஆசையும் மிதந்தும், மிஞ்சியும், அதனுல் பலவிதமாக இருவர் குறியையும் மாறிமாறி ஒருவருக்கொருவர் சும்பனம் செய்தும், கவ்வியும், கடித்தும், சுவைத்தும், உறுத்தியும், துழாவியும் காமநீர் பெருகும்படி செய்து புரியும் ஓர்வித லீலை; இது 6 வகைப்படும்; பாற்சுரவை, வாகியம், அப்பியந்தம், சும்பிதம், பரிமிட்டம், சூடியம்; இது பெண்கள் நாயகனை வசப்படுத்தும் தொழில்களாம், in erotic science:— the male and female kiss, suck, bite, lick rub etc., each other's genitals to creat excitement. This is of 6 kinds; see above. 2. ஓர் வகைப் புணர்ச்சி, a kind of sexual intercourse.

முகரம், சங்கு, conch; 2. காகம், crow.

முகரி, மூக்கினடி, bottom of the nose; 2. தாழை, fragrant screw pine; 3. மூகை, a dumb person.

முகருதல், முகர்தல், smelling.

முகரூபு, சாயல், feature.

முகரேயம், அப்பைக் கோவை, a climber sweet caper (a variety of கோவை Coccinia indica) — Lehneria umbellata.

முகரோக பூசிதம், வெள் வேல், a tree — Acacia leucophloea or A. ferruginea.

முகரோமம், முகத்தில் முளைக்கும் மயிர், தாடி, மீசை, hairs growing on the face — bread moustache.

முகலட்சணம், visage.

முகலாங்கலம், பன்றி, hog.

முகலி, தாழை, a wild shrub growing near the sea shore - fragrant screw pine—Pandana oderatissima; 2. நிலப்பனை, ground palm—Curculigo — Corchioides.

முகவங்கு, முகத்தில் படரும் கருந்தேமல், a skin disease rendering the face black. இதற்கு நீலியிலை வேரை பழ ரசத்தில் அரைத்து பூச போம். தண்ணீரில் 1:3 கலந்து பூசவும். see வியங்கம் the remedy is grind the root of indigofera tinctoria (common indigo) with the juice of lime mix it with water 1:3 proportion and apply.

முகவசிகரம், பட்சமான பார்வை, charming; face bloom or beauty of the face.

முகவசியம், ஓர் வித்தை, an art.

முகவணைக்கல், see உத்திரப்படிக்கல்.

முகவல்லபம், மாதுளை, pomegranate; 2. உலோத்திரம், bark of wood apple.

முகவதாசன்னி, புருவத்திலும் செவியிலும் குத்தலுண்டாகி முகத்தையும் வாயையும் ஒரு பக்கமாக மாற்றி திருப்பிவிடும் ஓர் வகை சன்னி நோய், இதனால் காரியுமிழ வும் வாய் கொப்பளிக்கவும் முடியாது, facial paralysis rendering gargling or spitting impossible.

முகவாதம், முகவாயு, } முகத்தைப் பற்றிய நோய், தலை வலி கண்டு, முகத்தைச் சுளுக்கி கண் சிவந்து பிடரி புளிந்து பழைய முக மாறி ஒரு முகமாய்த்திருகி வாங்கி வலித்திடு மோர் வாதம், a disease affecting the face facial paralysis.

முகவாதை, ஓர் முகநோய், a disease of the face.

முகவாய்க்கட்டை, see மோவாய்க்கட்டை.

முகவாய்க்கட்டை இழுப்பு, drawing of the chin or lower jaw on one side.

முகவாய் நீட்சி, prominent lower jaw.

முகவிகாரம், முகத்திற்கு ஏற்படும் வேறு பாடு, facial deformity.

முகவிலாசம், முகச்சிறப்பு, features of the face.

முகவெள்ளைப் பருந்து,முகமாத்திரம் வெளுத் திருக்கும் ஓர் வகை பருந்து, a species of kite with white face.

முகவை, அகப்பை, wooden spoon; ladle.

முகாக்கினி, காட்டாக்கினி, big fire.

முகாத்தமஞ்சரி, திப்பிலி, long pepper — Piper longum.

முகாமயம், முகரோகம், disease of the face.

முகாமொத்தை மூலி, முடக்கொற்றான், a medicinal creeper; balloon vine — Cardiospermum halicacabum.

முகாயி, திப்பிலி, long pepper — Piper longum; 2. கருமுகில் பாஷாணம், a prepared arsenic.

முகார விந்தம், முகத்தாமரை, lotus like face.

முகிரம், காமம், lasciviousness.

முகிரன், காமங் கொண்டவன், a passionate man.

முகில் நிறம், colour of the cloud black.

முகிவு காலம், மரண காலம், time of death.

முகிழம், மலரும் பருவத்தரும்பு, flower bud ready to bloom; 2. தாமரை வளையம், the coil of lotus stalk.

முகிழரும்பு, ஆல், அரசு, அத்தி இவற்றின் அரும்பு, flower buds of banyan, ficus religiosa and fig.

முகிழிதம், see முகிழம்.

முகிழ், அரும்பு, bud; 2. கத்திரிப்பிஞ்சு, tender brinjal.

முகிழ் விரியாக் கத்திரி, கத்தரிப்பிஞ்சு, tender brinjal—சுரம்பித்த தோஷம் கபம்போம். குரல் தொனி பலக்கும். It is a diet article - useful in fever. etc.

முகிற் குன்றம், வக்கிராந்த பாஷாணம், a kind of arsenic.

முகிற் சுன்னம், see முகிற்குன்றம்,

முகினி, புளிய மரம், tamarind tree — Tamarindus indica.

முகுனிகம், பொறி கடலை, fried being a gram sold in bazaars.

முகுடம், கோபுரப் பூடு, a kind of plant — unidentified.

முகுந்தம், இரசம், mercury.

முகுந்தரப்பிரியம், see வெள்ளை நாகணம்.

முகுரம், ஓர் மல்லிகை, a variety of jasmine; 2. கண்ணாடி, mirror; 3. தளிர் tender leaf 4. பளிங்கு, reflector.

முகுலம், உடம்பு, body; 2. ஆத்துமா, soul.

முகுலி, தாழை, fragrant screw pine — Pandanus.

முகுளம், தாமரை வளையம், coil of lotus stalk; 2. மொட்டு, flower bud; 3. கபாலத்திற்குள் அடி மூளையோடு சேர்ந்திருக்கும் முள்ளந்தண்டுக் கொடியின் தலைப்பான குமிழ், the upper enlarged portion of the spinal cord — Medulla oblongata.

முகுள், மலரும் பருவத் தரும்பு, an opening bud.

முகூர்த்தம், a measure of time equal to 48 minutes.

முகூலகம், see தந்திமரம், telegraph tree,

முகை, see முகில், மிடா, a large earthern vessel; 3. மலரும் பருவத்தரும்பு, flowering bud.

முகைத்தல், அரும்புதல், budding.

முகைப்பால், முலைப்பால், breast milk.

முகோதயம், (in midwifery) face presentation.

முக்கடுப்பு, frowning of the face.

முக்கட்சபத்திரம், see நறுங்குறிஞ்சி.

முக்கட்பிரான், சிவ துளசி, Shiva's basil.

முக்கணவன், ஓர் கொடி, a creeper.

முக்கணம்,

முக்கனன் கொம்பு, யானைத் தந்தம், elephant tusk.

முக்கண்,
முக்கண் கனி, } தேங்காய், cocoanut.

முக்கண்டகி, நெரிஞ்சில், a shrub with thorny fruits — big caltrops.

முக்கண்ணன்,
முக்கண்ணரி, } தேங்காய், cocoanut.

முக்கண்ணரின் பால், தேங்காய்ப் பால், milky juice of cocoanut kernel.

முக்கண்ணரிளையோன், இளநீர், tender cocoanut.

முக்கண்ணெருகண், பச்சைக் கருப்பூரம், crude camphor.

முக்கண்பால், தேங்காய்ப் பால், milk of cocoanut kernel.

முக்கத்தாரி, ஓர் கடைச்சரக்கு, a bazaar drug, see முக்கத்தாரி.

முக்கந்தம், முருங்கைமரம், drumstick tree — Moringa oleifera.

முக்கரு.

முக்கரணம், மனம், வாக்கு, காயம், 3 classes of organs - mind, speech, and action.

முக்கருவுங்கூட்டல்.

முக்கருவு, முட்டை, egg; 2. நாபிக்கொடி, placental cord.

முக்கவிப்பு, முக்கோஷ்டம், which see.

முக்கல், முக்குதல், tenesmus; 2. bearing down pain. இது மூலவாயுவினால் பிறந்தது.

முக்கவெளி, புட்பராகம், one of nine gems — Topaz.

முக்கழஞ்சு, a weight.

முக்கறட்டை, see மூக்கறட்டை.

முக்கனி, மூன்றுவகைப்பழம்; வாழை, பலா, மா, the three ripe fruits not good for health viz —plantain, jack and mango,

முக்காஞ்சி — Dyospyros orientalis.

முக்காட்டு நித்திரை, முகத்தையும் உடம்பையும் மூடித்தூங்குதல்; இதனால் இரண்டு கண்களுக்கும், தோள்களுக்கும் வலிவுண்டாகும்; அன்றியும் குளிர்வாடை வெயில் வேகம், தூசி, பனிக்காற்று இதனால் விளையும் குற்றங்கள் விலகும், sleeping covering the face & body. It is good for health; the breeze, dew, dustywind will have no effect.

முக்காய், மூன்றுவகைக் காய், the three kinds of fruit:

1. கடுக்காய், gallnut.
2. நெல்லி, Indian gooseberry.
3. தான்றி, bellerica.

முக்காய்வேளை, five leaved wild indigo — Tephrosia spinosa.

முக்காரி, கலம் என்னும் ஓர் அளவு, 12 measures.

முக்காலம், மூன்று வேளை; காலை, மத்தியானம், மாலை, the three times a day — morning noon and evening.

முக்காலி, நெருப்பு, fire.

முக்கால், மேற்சுவாசம், hard breathing; 2. three fourths.

முக்கால், மூன்று தடவை; மூன்று பொழுது, three times.

முக்கால்புடம், ¾ fire for calcination.

முக்காவளையம் வேர், root of முக்காய்வேளை; which see.

முக்காவேளை, ஓர் பூடு, a plant. See முக்காய் வேளை; 2. வெள்ளி நீறும், It calcifies silver.

முக்காழிப் பனங்காய், மூன்று கொட்டையுள்ள பனங்காய் — Palmyra fruit containing three nuts.

முக்காற்கூறு காய்ந்த வெந்நீர், ஒன்றுக்கு முக்கால் பங்காகச் சுண்டிய வெந்நீர்; முக்காற் பங்கு சூடுகொண்ட வெந்நீர், water boiled down to one fourth.

முக்கிசா, தீவதாட்சி, which see.

முக்கிய தைலம், நல்லெண்ணெய்; எள்ளெண்ணெய் — Rape seed oil - gingelly or seasame oil

முக்கிளைக்கள்ளி, a kind of spurge.

முக்கீரம், ஓர் செடி, a plant.

முக்கு, முக்குதல், to make violent efforts in suppressing the breath and directing it downwards as a woman in child birth or strain at stools.

முக்குக்கணம், குழந்தைகளுக்கு ஆசனம் வெளிப்பட்டு முக்கலுடன் சீதம், இரத்தம் சீழுடன் ஒழுகி உடம்பு வாட்டமடையும் ஓர் நோய், a disease in children causing hard breathing — Tabes mesentric. see மூலக்கணம்.

முக்குணம், மூன்றுவிதகுணம், the natural dispositions or qualities and characters, they are சாத்துவிகம், இராஜசம் and தாமசம். The three principles nature or three fundamental attributes of the original nature — Satwa, Rajas and Tamas which correspond to adhesion, cohesion and disintegration in the physical plane, affection, love and hatred in the moral and Emancipation. Spritual affinity and Sin in the Psychic plane. see திரிகுணம்.

முக்குணம், வாத பித்த சிலேட்டும குணங்கள், the three humours in the human system namely Vatham (wind humour); Pitham (bile humour); Kapham (phlegm humour).

முக்குட்டி செய்தல்,

முக்குந்துருக்கம், மூன்று வகைக் குங்கிலியம், the three kinds of incenses.

முக்குமாந்தம், குழந்தைகளுக்கு உடல் மெலிந்து முக்கி முக்கி சீதம் கழிதலுடன் சுரத்தையும் உண்டாக்கும் ஓர் வித மாந்த நோய், a disease in children accompanied by fever hard breathing and dysentery and purging.

முக்கு மூலம், மூலச்சூடு, heat near the rectal region.

முக்குருந்து. காட்டெலுமிச்சை, wild lime.

முக்குளி, கோழி முளையான் கீரை, a kind of greens.

முக்குரா,

முக்குளிக்காரை, சதக்காரை, a kind of webra — Canthium genus.

முக்குளிக் கீரை, உப்புக் கீரை, காமவிச்சையும் அதிசாரமும் உண்டாகும், a kind of vegetable greens—Portulaca pilosa; 2. பெருமுக்குளிக் கீரை என ஒரு வகையும் உண்டு.

முக்குளிப்பான்; ஓர் நோய், a kind of pox; 2. ஓர் பறவை, a bird.

முக்குறட்டை, பூனை முட்குறட்டை, a variety of குறட்டை, small Korattai — Trichanthes genus.

முக்குற்றக் கலப்பு, வாத பித்த சிலேட்டுமக் கலப்பு, the mixture of the three humours in the body.

முக்குற்றம், மூன்று குற்றம், காமம், வெகுளி, மயக்கம், the three kinds of evil in humans — Sexual desire, anger and delusion; 2. முத்தோஷம்—வாத, பித்த, கபம், the three humours in human system.

முக் கூட்டு, mixture of three.

முக் கூட்டுத் தைலம், நல்லெண்ணெய், சிற்றாமணக் கெண்ணெய், பசுவின் நெய் ஆகிய இம் மூன்றோடு மற்ற மருந்து சரக்குகளையும் சேர்த்து போகர் முறைப்படி செய்த வோர் தலை முழுக்குத் தைலம், medicated bathing oil preparedwith gingelly oil, castor oil and ghee with other drugs according to Bogar.

முக்கூட்டு நெய், முக் கூட்டெண்ணெய் which see.

முக் கூட்டெண்ணெய், பசுவின் நெய், நல்லெண்ணெய், சிற்றாமணக் கெண்ணெய் ஆகிய விம் மூன்றும் கலந்த மருந்தெண்ணெய், இதை உடம்புக்குத் தக்கவாறு கூட்டிக்கொள்ள வேண்டும், see பதார்த்த குண சிந்தாமணி, the combination of cow's ghee, gingelly oil and (small seed) castor oil in the proportion of 1 : 2 : 3 according to the nature of the body or equal proportion.

| | நல்லெணணெய். | பசுவின் நெய். | ஆமணக்கு நெய். |
|---|---|---|---|
| வாத தேகிகள் — | 2 | 1 | 3 |
| பித்த தேகிகள் — | 1 | 3 | 2 |
| கப தேகிகள் — | 3 | 2 | 1 |

விதம் கூட்டி உபயோகிக்க வேண்டும்.

முக் கூறிடல், மூன்று பங்காய்ச் செய்தல், make into three equal parts.

முக்கூறிலை, tricuspidate leaf.

முக்கூறு, மூன்று பங்கு, three parts.

முக்கூறு போடல், see முக்கூறிடல்,

முக் கோஷ்டம்.

முக்கோணம், பெண் குறி, the genital of a female because of its resemblance to a triangle.

முக்கோண வாரி, உட்காதினுள்ளிருக்கும் பள்ளம், the oval cavity of the internal ear — Vestibule.

முக்கோதனம், தோதகத்தி, a tree.

முக்தகஞ் சுகம், தோலுரித்த பாம்பு, a snake which has casted its outer skin.

முக்தம், பயறு, pulse.

முக்தா காரம், முத்துச் சிப்பி, oyster shell.

முக்தா பலம், கற்பூரம், camphore; 2. சிப்பி, oyster shell; 3. முத்து, pearl.

முசகம், எலி, rat.

முசக்காட்டுக் கீரை, ஓர்வகைக் கீரை, a kind of vegetable green — Ipomoea biloba.

முசங்கி, ஓர்வகைத் கொவ்வை; கொவ்வை, which see.

முசரு, தயிர், curd.

முசருகம், பவளம், coral.

முசலம், இரும்புலக்கை, iron pestle.

முசலி, உடும்பு, guana; 2. ஓணான், chameleon; 3. தாழை, fragrant screw pine — Pandanus; 4. நிலப்பனை, ground palm plant — Curculigo orchioides; 3. முதலை, crocodile; 4. மெருகன் கிழங்கு, a bulbous root; 5. சந்திரன், moon.

முசலிகா, செந்தாழை, a red or deep yellow variety and very fragrant screw pine shrub — Pandanus.

முசலிகை, உடும்பு, guana.

முசலிகொங்கை, தாழை விழுது, adventitious roots of screw pine.

முசலிவர்க்கம், உடும்பினத்தைச் சேர்ந்தது, lizard kingdom.

முசலை, ஓர்வகைக் கோரைக் கிழங்கு, a kind of fragrant root as that of nut grass

முசல், முயல், a animal; rabbit. Its flesh is eaten coral is calcified in its blood, which is good for Tuberculosis.

முசல்மண் ரோகம்.

முசல்காதிலை, முயற்காதிலை, a creeper; leaf of the creeper — Ipomoea biloba.

**முசல்காதுக் கீரை,** ஓர்வகைக் கொடி, a kind of creeper — Ipomoea biloba.

**முசல்செவிக் கள்ளி,** ஓர்வகைக் கள்ளி, a kind of spurge.

**முசல்மூலி,** முயல் தின்னும் மூலிகை; அருகம் புல் — Dub-grass or devil's grass — Cynodon dactylon.

**முசல்வலி,** ஓர்வகை வலிப்பு, convulsion; 2. நடுக்கம், trembling.

**முசற்காது,** கை கால், விரை, வீக்கத்தைப் போக்கும் ஓர் பூண்டு, a plant capable of removing swelling of the limbs scrotum etc.

**முசற் கொம்மட்டி,** ஓர்வகைக் கொம்மட்டி, a kind of melon.

**முசற் செவி,** முயற்காது, ear's of the hare; 2. முயற்செவிக் கள்ளி, which see; 3. முயற்காதிலை, which see.

**முசற்றழை,** } Rabbit weed — Hare leaf
**முசற்றுழை,** } —Ipomoea biloba.

**முசாதகம்,** வெண்டாமரை, white lotus.

**முசிகுந்தபுட்பம்,** வெண்டாமரை, white lotus.

**முசிடி,** தன்னிறத்தை அடிக்கடி மாற்றும் ஓர் வகைக் கடல் மீன், a sea fish which changes its colour.

**முசிடிவிரை.**

**முசிடு,** } See முசிற்றெறும்பு or
**முசிட்டெறும்பு,** } முயிற்றெறும்பு.

**முசிதம்,** வெண்காரவுள்ளி, which see.

**முசித்தல்,** இளைத்தல், being emaciated.

**முசிப்பாற்றல்,** இளைப்பாற்றல், taking rest.

**முசிப்பு,** மெலிவு, debility; weariness, thinness, diminution

**முசிறு,** see முயிறு.

**முசிறுமுட்டை,** முசறுமுட்டை, eggs of the red ant.

**முசிற்றெறும்பு,** see முயிறு or முயிற்றெறும்பு, a large redant which makes nest on trees — Formica elongata; F. samaragdina; found in Malabar chiefly; 2. முசிற்றுமுட்டைத் தைலம், oil prepared from the eggs of the red ants.

**முசு,** ஓர் வகை சாதிக்குரங்கு, a variety of superior monkey — an ape.

**முசுக்கட்டை,** கம்பளிப்பூச்சி, hairy caterpiller or silk worm; 2. கம்பளிப்பூச்சி செடி or கம்பளி கொண்டான், Mulberry — Morus indica — Indian mulberry plant.

**முசுக்கை,** முசுமுசுக்கை, rough bryony — bristly bryonia — Bryonia scabra alias Mukia scabrella.

**முசுட்டை,** ஓர் கொடி, a climbing plant; 2. ஓர் மருந்துப்பூடு, a medicinal plant.

**முசுட்டைப் பெண்,** ஓர் புழு, a kind of worm.

**முசுண்டை,** ஓர் கொடி, a climber.

**முசுப்பிரா,** நரிக்கொன்னை, a variety of cassia.

**முசுமக்கி,** மஞ்சட் காளான், yellow mushroom.

**முசுமல்லிகை,** காட்டு மல்லிகை, wild jasmine. இதனால் சோகை, காமாலை, பிரமேகம் போம்.

**முசுமாலினி,** மஞ்சட் காசிதும்பை, yellow balsam.

**முசுமுசுக்கை,** ஓர்வகைக் கொடி, a climber; சுனையுள்ள இலைகள்; இரத்தநிறப் பழம்; பித்த நாசனி, See முசுக்கை or இரு குரங்கின் கை.

**முசுமுசுக்கை கீரை,** முசுமுசுக்கையிலை, leaf of முசுமுசுக்கை; சுவாசகாசம், கோழை முதலியவைகளுக் குபயோகிப்பது; மேற்படி நோய்கள் தீரும், can be used for cough bronchitis etc.

**முசுமுசுக்கை நெய்,** ghee prepared with Bryonia scabra as chief ingrediant.

**முசுமுசுத்தல்,** ஓர்வித தினவு, a kind of itching sensation.

**முசுமுசுப்பு,** tomentosa.

முசுரண்டம், முசுருமுட்டை, which see.

முசுரம், புற்றுக்காளான், mush room growing on ant hill.

முசுவல், see முசுட்டை.

முசுறு, சிகப்பெறும்பு, red ant — Formica elongata.

முசுறுப்புல், அளத்துப்புல், a grass — Pommerculla cornucopia.

முசுறுமுட்டை, மரங்களிலிருக்கும் கட்டெறும்பைப் போன்ற சிவந்த எறும்பின் முட்டை; இலுப்பை மரத்தின் முசறுமுட்டை விசேஷ குணம் எனக்கருதுவர்; இதனுல் மகாவர்தம் போம், the egg of a red ant which has its nest in trees. The one on the tree Bassia longifolia is considered best for medicinal use.

முசுறுமுட்டைத் தைலம், சிவப்பெறும்பின் முட்டையினின்று எடுக்குந் தைலம், a medicated oil extracted from the eggs of red-ants.

முசுறுமுட்டைப் பால், விஷம் நீங்குவதற்காக வேண்டிய நசியத்தில் உபயோகிக்கும் ஓர் எறும்பின் முட்டை, the juice from the eggs of red ants used as an antidote in poisons.

முசுறு மூலி, பெருமருந்து, a twiner — Aristo lochia indica.

முசுற்றெறும்பு, a large variety of red ants.

முசைபேயெட்டி, மைலாலக்கடி, which see; மைதாலக்கிடி — Tetracantha rox-burghii see பிசின்பட்டை.

முச்சதுரம், சதுரக்கள்ளி, square spurge —Euphorbia antiquorum.

முச்சந்தி, மூன்று வேளை, the periods of the day — morning — midday and evening.

முச்சந்தி தோஷம், a morbid condition of infants which is cured by a religious function of the three streets.

முச்சந்தி மூப்பன்,

முச்சந்திமண், மூன்று தெரு கூடுமிடத்தி லுள்ள தரைமண், mud at the junction of three streets.

முச்சரக்கு, சுக்கு, மிளகு, திப்பிலி, the three pungents — dry ginger pepper and long pepper.

முச்சாமம், மூன்று சாமம், nine hours.

முச்சி, உச்சி, crown of the head; 2. முருக்கு, a tree — Erythrina indica.

முச்சிமரம், கலியாண முருக்க மரம், a tree with prickles—Erythrina indica. one bearing red flowers; the other white flowers.

முச்சியமானம், விட்டு வருதல், intermittent.

முச்சியமான் சுரம், விட்டு விட்டுக் காயும் சுரம், intermittent fever, சுரம் விட்டு வரும் பொழுது வியர்வை, நடுக்கல், பிதற்றல், பேதி, வாந்தி முதலிய குணங்களைக் காட்டு மோர் வகைச் சுரம், the symptoms are perspiration shivering, purging vomiting etc.

முச்சினி, மூன்ரு மாதம், third month.

முச்சினியக்கேடு, } சோம்பு, which see.
முச்சினியம், }

முச்சீரம், } மூன்று வகை சீரகம்: 1. சீரகம்; 2. பெருஞ் சீரகம் 3. கருஞ் சீரகம், the three kinds of cumin; which see.
முச்சீரகம், }

முச்சுக் கருவளி, ஊர்க் குருவி a bird — sparrow.

முச்சுரம், வாதம், பித்தம், சிலேட்டும சுரம், Vatha fever, Pitha fever, and Kapha fever.

முச்செயநீர், மூன்று வகை செயநீர், the three kinds of pungent liquids that are prepared by keeping some salts in the open air at nights during the dew season.

முச்சை, முருக்கு; see முச்சிமரம்.

முஞல், கொசுகு, mosquito.

முஞ்சம், பூணூற் பூண்டு, a plant.

முஞ்சரம், தாமரைக் கிழங்கு, root of the lotus.

முஞ்சல், சாதல், dying.

முஞ்சி, நாணற் புல், a kind of reed.

முஞ்சை, தருப்பைப் புல், sacrificial grass.

முடகாய்,

முடக்கத்தான், இந்திரவல்லி, palsy curer—balon vine — Cardiospermum helicacabum.

முடக்கம், முடங்குதல், being bent.

முடக்கம் செய்தல், முடமாகும்படி அதாவது நொண்டியாகச் செய்தல், காலை முறித்தல் எழுந்திருக்க முடியாமற் செய்தல், to cripple or mutilate or maim a person.

முடக்கறுத்தான் கொடி, a creepar. see முடக்கத்தான்,

முடக்கற்றுன், ஓர் பூடு, a prostate plant, see முடக்கத்தான்.

முடக்கன், தாழை, a fragrant screw pine.

முடக்கு, முடங்கல், being bent.

முடக்குக் கால், முடவாட்டின் கால், which see.

முடக்கு சுரம், முடக்குமாரி, dengue fever.

முடக்கு சூலை, rheumatice affliction.

முடக்குச் சரக்கு, அவியற் சரக்கு, which see.

முடக்கு நாயகம், சுளுக்கு நாயகம், a plant which see.

முடக்கு நோய், a disease which prevents the use of limbs or deforms the limbs.

முடக்கு மாரி, அம்மை கண்டதின் வாயிலாக ஏற்படும் முடக்கு வாதம், fever causing pain in the joints and cripple the person.

முடக்கு வாங்கல் — disappearance of the deformity or impairment.

முடக்கு வாதம், கைகாலை முடக்கும் வாத நோய், a painful inflammation affecting the muscles and small joints accompanied by caculi — Rheumatoid arthritis; 2. Chronic inflammation of a joint with deformity — Arthritis deformans.

முடக்குவாயு, கீல்வாயு, arthritis.

முடக்குற்றுன், முடக்கற்றுன், which see.

முடக்குனி, மஞ்சட்சின்னி, which see.

முடக்கொத்தான், ஓர் கொடிப்பூண்டு, see முடக்கத்தான் or முடக்கற்றுன், இதனல் கீல் பிடிப்பு, சிலைப்புக் கிரந்தி, பாததாக வாதம் போம். It cures arthritis and other Vatha diseases.

முடங்கசாலி, காரை, Carrai — a wild plant.

முடங்கண்மூலே, தாழை விழுது, adventitious root of Screwpine.

முடங்கநாறி, a tree.

முடங்கலி, மத்தங்காய்ப் புல், which see.

முடங்கல், தாழை, a shrub — fragrant screw-pine —Pandanus; 2. நோய், contraction o limbs due to disease — Persistent idiopathic contracture of a joint — Arthrogryposis; 3. முள்ளி, a thorny shrub; 4. மூங்கில், bamboo; 5. மடங்கல், being bent.

முடங்கிடந்தவர், நொண்டியாய்ப் படுக்கையிலிருந்தவர், one who was crippled.

முடங்கின கால், மடங்கின கால், bent-legs owing to contraction and stiffness.

முடங்கினவாதம், see முடங்குவாதம்.

முடங்கு, ஒரு நோய், a disease that causes contraction of limbs; 2. முடங்குதல், bending, contracting to become lame and maimed.

முடங்கும் வாயு, see முடக்கு வாயு.

முடங்குவாதம், முட்டு கடுகடுத்து முறிந்தது போல் நடக்கவொண்ணுது தவழ்ந்துபோகும்படி செய்யுமோர் நோய், a disease that cripples the person rheumatic and gout diseases.

முடங்குளை, சிங்கம், lion.

முடசஞ்சம், நிலவேம்பு, a plant - the creat —Andrographis paniculata alias Justicia paniculata; cures fevers.

முடத்தி, நொண்டிப்பெண், a lame girl.

**முடமயிர்**, இரண்டு இரைப்பைகளும் ஒட்டிக் கொண்டு விரணம் பிறந்து கருமணி வெளுத்துக் காணும் ஓர் வகைக் கண்ணைப்பற்றிய நோய், a disease affecting the pupil of the eye caused by the sticking of the eye-lids together; 2. ஒரு வித தொண்டைப் புண், an affection of the throat found in men practising celibacy.

கண்கள் சிவந்து இமை தடித்து அரிப் புண்டாகி, நீர் வடிந்து, பீளை கட்டுவதுடன் கண்ணுக்குள் பூவுண்டாகி, பிரதிமாசமும் இமை மயிர்கள் உதிர்ந்து வளைவாக முளைத்து, கண்ணுக்குள் உறுத்துவதினால் கவிழ்ந்த பார்வையாகவே யிருக்கச் செய்யும், மேலும் தலைவலித்து மூக்கில் நீர் வடிந்து விழி ஆலத்தில் போய்க் கொண்டிருக்கும், கண்ணை மூடவும் திறக்கவும் முடியாது.

**முடமா**, காட்டுமா, அதாவது சாரப்பருப்பு, wild mango seed — Buchanania angustifolia.

**முடமாக்கல்**, நொண்டியாக்கல், to cripple.

**முடம்**, நொண்டி, lameness; 2. உறுப்புக் குறை, defective limbs or organs; 3. கீல் பிடிப்பு, urthritis.

**முடலை**, நாற்றம், bad smell; 2. வலிமை, strength.

**முடவன்**, நொண்டி, lame person — crippled; 2. காலில்லான், one without legs; 3. சனி, Saturn planet.

**முடவாட்டுக்கல்**, உபரச வகைகளி லொன்று, one of the 120 kinds of mineral or natural bodies enumerated in the Tamil Siddhars medical science.

**முடவாட்டுக்கால்**, ஆட்டுக்கால், a tree.

**முடவாதம்**, lameness. It is said to be caused by the drawing up of the nerve trunks of both the legs by the deranged Vayu lying about the region of the waist.

**முடவான்**, பெரியாணாங்கை, which see.

**முடவுதல்**, நொண்டுதல், limping.

**முடனத்திமூலி**, செம்பருத்தி, red cotton — Gossypium (Sp.)

**முடி**, தலை, head; 2. துளசி, holy basil — Ocimum sanctum; 3. வழலை — a medicinal preparation from the human skull or salt, extracted from the soil of fuller's earth; 3. தேங்காய்ப் பாதி, half of the cocoanut; 4. கல்லுப்பு, rock salt; 5. சூரியன், the sun.

**முடிகம்**, பெருச்சாளி, bandicoot.

**முடிகயறு போடல்**, பூச்சிகடி, கக்குவான், குளிதோஷம் முதலிய நோய்களுக்கு மந்திர சக்தியால் ஓர் கயறுமுடிச்சு உடம்பில் அணிவது, wearing of the magic thread to ward off or cure certain diseases — Morbid conditions of infants, insect bites, whooping congh, etc.

**முடிகருத்தல்**, blacking of the hair.

**முடிகாரம்**,

**முடிக்கீரை**,

**முடிக் கிழாவண்ணான்**, தேவாங்கு, an animal which see.

**முடிக்கோரை**, ஓர் வகைக் கோரைப்புல், a variety nut grass; 2. தலைமயிர், hair on the head.

**முடிசாரம்**, சரக்கொன்றை, a tree — Cassia fistula.

**முடிசம்**, கொன்றை, Cassia.

**முடி சுருளையெலும்பு**, மாரெலும்பு, breast bone — Sternum.

**முடி செயநீர்**, வழலையுப்பு செயநீர், a pungent liquid obtained from வழலையுப்பு — which see.

**முடிச்சுக் கஞ்சி**, கொதிக்கும் கஞ்சி சோற்றில் சுக்கைச் சீவித்தரித்து, துணியில் முடிந்து அதில் போட்டு காய்ச்சி வடித்த கஞ்சியின் தெளிவு, rice gruel or porridge made by adding a small cloth bundle containing dry-ginger in addition to the usual ingredients.

**முடிச்சுக் கழலை**, a tumour having the appearance of a knot.

**முடிச்சுவிழல்**, as in hair — Trichomycosis nodularis.

**முடிதலைச் சுன்னம்**, தலையின் முடியினின்று செய்யப்படும் ஓர் வகைச் சுன்னம், calcined powder prepared from the black hair of the head.

**முடிதல்**, சாதல், dying.

முடிதாரசுத்தி, பனங்கள்ளு படி 4ல் கிளிக் கட்டி எரித்துக் கொள்வது, purification of the hair bundle the hair in a cloth and boil it in 4 measures of palmyra toddy.

முடிதாரம், —

முடி தும்பை, ஓர் வகைத் தும்பை, a variety of தும்பை which see.

முடித்தல், தயாரித்து வைத்தல், prepared as in மருந்து முடித்தல்; 2. முற்றுவித்தல், completing, bringing to end.

முடித்துக் காட்டல், பெரியோர்கள் செய்த முறைப்படி செய்து காட்டல் — demonstrating the preparation following the method adopted by elders.

முடித்தைலம், தலைக்குத் தேய்த்துக் கொள்ளுந்தைலம், bathing oil; 2. தலைக்கிட்டு முழுகுந் தைலம், hair oil.

முடிநாதம், இந்திரகோபம், velvety red insect — Cochineal insect.

முடிநீர், மூளைநீர், liquid extracted from brain; 2, விந்துநீர் semen.

முடிநீர்த்தான், சரக்கொன்றை, a tree — Cassia fistula.

முடிநீலம், துருசு, blue vitriol.

முடிப்பிலை,

முடிப்பு, ஊணுங்கொடி, a creeper.

முடிமயிர், தலைமயிர், hair on the head.

முடிமாமிசம், தலையிலுள்ள நார் போன்ற நீண்ட சவ்வு, an elastic muscle of the head.

முடிமாலிகம், மஞ்சள் கொன்னை, a cassia.

முடிமூளை, தலைக்குள்ளிருக்கும் மூளை, brain of the human head.

முடிமேலழகி, கோடகசாலை, a herb, which see.

முடிமேல்முடி, செருந்தி, which see.

முடிமேல் முடிக்கிழங்கு,

முடியகங்கம், } சிற்றுமுட்டி — Pavonia
முடியகந்தம், } zeylanic.

முடியண்ட சவ்வு, முடிமாமிசம்; இழுத்தால் நாரைபோல் நீளும் படியான தலையின் சவ்வு, a membrane covering the head.

முடியண்டம், தலை மண்டையோடு, cranial bone; human skull.

முடியண்ட படருப்பு,

முடியால், எல்லாம், all; whole.

முடியாதவாத முடிக்கின்றேன், சவர்க்காரம், soap,

முடியில் தரித்தான், சரக்கொன்றை, Cassia fistula.

முடியுப்பு, கல்லுப்பு, rock salt.

முடியுறுப்பு, தலைமுடியின் ஓர் பகுதி, organ of the head.

முடியுறுப்பைந்து, தலையிலுள்ள 5-பாகம்; see பதுமம்.

முடிவிடம், முடியுமிடம், the place of termination.

முடிவிஷம், தலையிலிருக்கும்விஷக்கல், poisonous stone in the head.

முடிவுகாலம், மரண காலம், time of death.

முடிவேர், வெட்டிவேர், khus khus.

முடுக்கன், பலமுள்ளவன், a strong man.

முடுங்கனல், செங்குளவி, a red beetle.

முடிங்கி, பலாவிளி, which see.

முடுவப்புளகம்,

முடுவல், நாய், dog; 2. செந்நாய், a ferocious — wild dog.

முடை, கெட்ட வாசனை, bad stink; 2, நாற்றம், bad smell; 3. புலால், all kinds of flesh 4. முடைதல், which see.

முடைச்சை, Buchanania latifolia; see முடைமா.

முடைதல், இளைத்தல், becoming lean; 2. கொழுத்தல், growing fat.

முடை நாறி — Vitis linnaea.

முடைநாற்றம், மரணம், death; 2. புலால் நாற்றம், stench of a dead carcase; the offensive smell of the flesh or fish.

முடையா, காட்டுமா, forest mango — Buchanania latifolia; see முடைமா.

முடையிலை, see முடைச்சை.

முட்கடு, ஓர் கடுமரம், a tree.

முட்கத்தரி, முள்ளங்கத்தரி, thorny kind of brinjal. 2. கண்டங்கத்தரி, which see.

முட்கபரணி, Phaseolus trilobus.

முட்கப்பிரார்த்தம், சக்கிரவர்த்தி, which see.

முட்கம், விஷசெருந்தி, a poisonous shrub.

முட்கரணை, காட்டுக்கரணை, wild yam.

முட்கவிகம், பூனைக்காலி, which see.

முட்கள்ளி,

முட்கற்றாழை, ஓர்வகை முட்கற்றாழை, a kind of aloes with throns.

முட்கா, பச்சைப்பயிறு, green gram — Phaseolus aureus.

முட்காசிகம், குருக்கு, a plant.

முட்காபரணி, ஓர் பருப்பு விதை,; பாசிபயிறு, a kind of edible seed — Phaseolus trilobus.

முட்காவிளாய், முட்காய்வேளை; which see.

முட்காய்வேளை, ஓர் முட்பூண்டு, a thorny shrub—Tephrosia spinosa or Galega spinosa see முக்காவேளை, the root bark in decoction is given for enlargement of spleen. It can be as powder also.

முட்கிளுவை, ஓர் வகைக் கிளுவை, Spiny plant forms a good hedge — Commiphora berryi or Amyris spinosa.

முட்கீரை, See முள்ளுக்கீரை.

முட்குரண்டி,

முட்குருந்து,

முட்கொழுந்து,

முட்கொடுச்சி, தூதுவளை, a thorny climber — Solanum trilobatum.

முட்கொத்தான், see முள்கொத்தான்.

முட்கொன்றை, ஓர் வகைக் கொன்றை, a thorny species — Caesalpinia genus.

முட்கொழுஞ்சி,

முட்சங்கம், சங்கஞ்செடி, four spined menetia — Azema tetracantha.

முட்சங்காரிகம், see முள்முருங்கை.

முட்சங்கு, ஓர் வகைச்சங்கு, a kind of conch chunk with thorn like points; 2. ஓர் வகை உபரசச்சரக்கு, one of the natural bodies used in medicines; 3. முட்சங்கஞ் செடி, see முட்சங்கம்.

முட்சிணிக் கொழுந்து,

முட்சீதா, a variety of custard apple.

முட்சிரிதம், கிளுவை, a tree — Balsmodendron berryi.

முட்சுண்டை, தூதுவளை அல்லது பேய்ச் சுண்டை, prickly chundai — Solanum trilobatum.

முட்செம்பை,

முட்செங் கொன்றை, நீரலரி, a species of flowering plant — water gannair, Red shanks — Polygonum genus.

முட்செடி, முள்ளுகளுடையசெடி; முட்பூண்டு, a thorny shrub.

முட்செவ்வந்தி, ஓர் வகைச் செவ்வந்தி, a kind of flower — Chrysanthemum genus.

முட்செம்பை, a tree.

முட்டசாம்பல், see முட்டைச் சாம்பல்.

முட்டடைடைப்பான், ஓர் வகை அடைப்பான் நோய், a disease.

முட்டளவுகுழி, முழங்காலளவு ஆழமான குழி, a pit knee deep.

முட்டாபலம், ஓர் சங்கஞ்செடி, Misllitoe berry thorn — Azima tetracantha.

முட்டி, varieties; 1. விஷமுட்டி; 2. பிராய் முட்டி; 3. தும்முட்டி; 4. சிற்றுமுட்டி; 5. பேராமுட்டி; 6. கேசமாமுட்டி, which see.

முட்டி, எட்டி, a poisonous tree — Strychnos nux-vomica; 2. சிற்றுமுட்டி, Pavonia zeylanica; 3. பேராமுட்டி, Pavonia odorata; 4. பேய்த்தும்முட்டி, bitter apple; 5. வெல்லம், Jaggery; 6. ஒரு பலம், a palm weight; 7. ஒருபிடி, handful.

முஷ்டி, fist.

முட்டிக்கத்திரி, ஓர் வகைக் கத்தரிக்காய், a species of brinjal.

முட்டிக்காய், தும்முட்டிக்காய், the fruit of Bryonia pubescens.

முட்டிக்கால், வளைந்தகால், knock knee — crook kneed.

முட்டிக்கால் தட்டல், see முட்டிக்கால்.

முட்டிக்கால்தட்டி, a knock kneed person.

முட்டிக்கீரை, குமுட்டிக்கீரை, a kind of greens — Celosia nodiflora.

முட்டிக்கொண்டு வரல், as in மூத்திரம், to come out of presure.

முட்டிச்சுரை, கின்னரச்சுரை, bottle pot gourd.

முட்டிப்பார்த்தல், கிட்டப் பார்த்தல், seeing close.

முட்டிப் பிரமாணம், ஒரு பிடி அளவு, what can be held in the folded hand or fist.

முட்டிப்பிரயோகம், முட்டிமைதுனம்; Masterbation.

முட்டிப்பூச்சி,

முட்டிரண்டு, சிற்றுமுட்டி, Pavonia zeylanica and பேராமுட்டி, Pavonia odorata—Celosia nodiflora.

முட்டிருமல், குத்திருமல், irritating cough caused by inflammation.

முட்டு, முழந்தாள், knee; 2. மகளிர் பூப்பு, menses; 3. நெருக்கம், pressure; dense; 4. முட்டுதல், opposing.

முட்டுக்காய், இளந்தேங்காய், tender cocoanut.

முட்டுக்கால், முழந்தாள், knee.

முட்டுக்குட்டு, பெண்களுக்கு மாதவிடாயின் குற்றத்தால் ஏற்படும் ஓர் விதக் கருப்ப நோய், a disease of the uterus in females—Dismemorrhoea.

முட்டுக்கோலகம், குருவிச்சி, a plant.

முட்டுச்சீலை, சூதகச் சீலைத்துண்டு, a piece of cloth used by woman during menses — menstruous cloth.

முட்டுத்தொய்வு, ஓர் நோய், a disease — difficulty of breathing — dyspnoca.

முட்டு தோஷம், பெண்கள் மாதவிடாய் காலத்தில் ஏடுப்பதினுல் குழந்தைக்கு தோஷந்தாக்கி, பால் தாங்காமல் கண் குழிந்து நாக்கு, வாய் கருகித் துன்புறும் நோய், a morbid condition in children caused by the evil effects of the woman in menses taking the child; the symptoms are pitting of the vertex of the head, vomiting. sunken eyes, disfigaration of the face etc.

முட்டு நோய், menstrual disease.

முட்டுப்படுதல், முடைப்படுதல், see முட்டுப்பாடு.

முட்டுப்பாடு, திக்குமுக்கடைதல், suffocation.

முட்டு வாதம், முட்டியில் வாத நிற்பதினுல் முடக்கவும் நீட்டவும் முடியாது சற்றே நடந்தால் கவிழ்ந்துவிழுவதைப்போல் தோற்றுமோர் வாதநோய்; (யூகி - 1200) a disease of the knee joint.

முட்டு வாளை, ஓர்வகை நோய், a kind of disease like துடைவாழை.

முட்டு வீக்கம், கணுக்களின் வீக்கம், swelling the joints; 2. முழங்கால் வீக்கம், swelling of the knee.

முட்டுளசி, (முள் + துளசி) ஓர் வகைத் துளசி: எலி விஷம் போம், a plant — Acanthospermum hispidum.

முட்டை, அண்டம், egg; 2. ஓர் நோய், a disease; 3. சினை, ovum; 4. எருமுட்டை, cowdung cake; 5. தவிடு, bran.

முட்டைக் கண், பொருந்துக்கண், goggle eye; பெந்தை விழி.

முட்டைக் கண்ணீர், சொட்டுச் சொட்டாய் விழும் கண்ணீர், dropping of tears.

முட்டைக் கரண்டி, கோழி முட்டையின் நுனி அமிழும்படி போதுமான இடமுடைய அளவுள்ள கரண்டி, a measure; table spoon full —egg shell like spoon.

முட்டைக் கரு, cicatricle of an egg.

முட்டைக்கல செயநீர், அண்ட செயநீர், pungent liquid extracted from the white of an egg and other salts.

முட்டைக் காளான், முட்டை வடிவத்தைப் போன்ற ஓர்வகைக் காளான்; குடைக் காளான், an ovaly shaped mush room.

முட்டைக் கிலோதம், see முட்டைச் சிலந்தி,

முட்டைக் கூடு, egg shell.

முட்டைக் கோங்கு, தணக்கு, which see.

முட்டைக் கோசு, Cabbage — Brassica oleracea capitata.

முட்டைக் கோழி, முட்டையிடுங் கோழி, fowl which is laying eggs; 2. பெட்டைக் கோழி, hen.

முட்டைச் சாம்பல், எரு முட்டையை எரித்த தினால் கிடைத்த சாம்பல், cowdung ash.

முட்டைச் சிலந்தி, ஓர் வகைச் சிலந்தி, a kind of carbuncle — ulcer of the shape of an egg; 2. ஓர் வகை சிலந்திப் பூச்சி, a kind of spider.

முட்டைத்த குத்தல், (முள் + தைத்த + குத்தல்) முள் தைத்தது போன்ற குத்தல் வலி, acute piercing pain like the run of a thorn.

முட்டைத் தோல், முட்டைக்கருவின் மேலாக கவர்ந்திருக்கும் சவ்வு, a membrane lining inside the egg.

முட்டை நாறி, see எருமுட்டைப் பீநாறி, a plant — Ballota disticha.

முட்டைப் பாசி, ஓர் நீர்ப்பூடு, a water plant; 2. நீர்ப்பாசி, Utricularia stellaris; 3. நீர் மேல் நெருப்பு, which see.

முட்டைப்பை, இதுவே சினைப்பை, ovarium.

முட்டை முடக்கெலும்பு, முழங்காலெலும்பு, knee bone — Patella.

முட்டையிற் பிறக்கிற, முட்டையிற் றேன்றுகிற — oviparous.

முட்டை யோடு, முட்டையின் மேலோடு, egg shell; 2. கோழிமுட்டையோடு, இது லோகங்களை தகர்த்துச்சாடும், fowl egg shell. It calcifice minerals.

முட்டை வெண்கரு, முட்டைக் குள்ளிருக்கும் வெள்ளைக்கரு, white of an egg — the albumen.

முட்பஷா, பன்றிமுள், spine of the porcupine.

முட்பலா, ஆண்மையை யுண்டாக்கும் ஓர் வித பலா; வேர்ப்பலா, a species of Jack that promotes the potency of men.

முட்பலாசு, முள்முருக்கு, a tree — Erythrina indica; 2. இலைப்புரசு, Butea frondosa.

முட் பன்றி, முள்ளம் பன்றி, an animal; Porcupine; Hedge hog — Echinus.

முட் பாகல், ஓர் வகைப் பாகல், a variety of bitter gourd.

முட் பாஷாணம், பன்றிமுள், spine of the Porcupine; hedge of an hog.

முட் பிரண்டை, bristly plant — Vitis setosa.

முட்புளிச்சை, sour prickly stem; 2. காட்டுக் காய்ச்சுரை, Hibiscus suraltensis a herbaceous plant with speckled prickly stem and yellow flowers; bark gives fibres; leaves used as greens.

முட்புறக்கனி, பலாப்பழம், jack fruit.

முட்பூலா, முட்பூல், முட்பூலாஞ்சி, } ஓர் வகைப் பூலாச்செடி, a kind of பூலா, which see.

முட்பொலவு, see முள்ளுப்புலவு.

முஷ்டி, பெண்களின் கடி தடத்தில் விரல்களை மடக்கி முட்டியினுல் மெல்லெனக் குத்தல், pressing the pubic region with the fist; 2. முடங்கியகை, fist.

முணர் சலம், மிடர்சலம்; எவ்வளவு தொண்டையுட் கொள்ளுமோ அவ்வளவுநீர், mouthful of water.

முண்டக நாயகம், சூரியகாந்தி, Sunflower plant.

முண்டகம், மலர் தேன், honey of flowers; 2. பனஞ்சாறு, Sap of Palm tree; 3. மார்பின் கீழ் 4 அங்குலத்தில் கனத்து விம்மி வலித்துக்காணும் ஓர் நோய், a disease marked by swelling and pain just, below the chest.

முண்டகம், கருக்குவாளி மரம், a tree; 2. தாமரை, lotus; 3. தாழை, fragrant Screw-pine; 4. நெற்றி, forehead; 5. முட்செடி, a thorny plant; 6. முள்ளி, a thorny shrub —Solanum indicum; 7. நீர்முள்ளி, a thorny plant—Barleria longifolia alias Hygrophila auriculata alias Astercantha longifolia; 8, கருப்புக்கட்டி, jaggery.

முண்டக்கன் காக்காசி, பெரிய கண்களையும் அதில் கரியமறுவும் வாய்ந்த தண்ணீரில் தலைகீழாய்த் தொங்கும் ஓர் சிவப்பு கடல் மீன், இதன் உறுப்புகள உபரசச் சரக்கில் சேர்ந்தவை, a sea fish.

முண்டக விருட்சம், see முண்டினி, called also கோபக்கண்ணி, அல்லது கோத்திர விருச்சம்.

முண்டகவேணி, பொன்னுவாரை, a plant —Cassia auriculata.

முண்டகாக்கினி, கருப்புக் காக்கணம், Clitoria ternatea (typica) which bears blue flowers.

முண்டக்கண்ணிப் பறவை, ஓர் கடற் சிறு மீன், கொசுப் புழுக்களை தின்று பிழைக்கும், a small fresh water fish which lives on mosquito and its Larva,

முண்டபலம், தேங்காய், cocoanut.

முண்டம், தலை, head; 2. உடற் குறை, headless trunk; 3. மொட்டைத்தலை, bald head; 4. நெற்றி, fore head; 5. நிர்வாண உடம்பு, naked body; 6. தலை கை கால் மற்றவுடல், trunk of the body.

முண்டவெலும்பு, bone of the trunk of body.

முண்டளவு குழிவெட்டல், digging a pit up to the hight of the hip.

முண்டன சிரம், மொட்டைத்தலை, Shaved head.

முண்டனம், வழுக்கைத்தலை, baldness.

முண்டனி, கொட்டாங்கரந்தை, a plant — Spheranthes hirtus; 2, நொச்சிவேர், the root of Vitex negundo.

முண்டா, that portion formed between the head of humerus and the clavicle — Acronial angle.

முண்டாணி, 16ல் 3 பாகம்; ie 3/16 மாகாணி 1/16.

முண்டி, மொட்டைத் தலையன், one with shaven head.

முண்டிதம், மொட்டை, baldness.

முண்டினி, முண்டினி விருட்சம், a tree useful in alchemy, மரத்தைத் தட்டினுல் பால்வரும்; காயசித்தியாகும்; குளிகை சித்தியாகும்: இது சதுரகிரியில் முண்டக வனத்தில் உள்ளது; இது ஆலவிருட்சம் போலும்; இலை சிறியதாகவும் காய்கள் கல்லத்திக்காய் போலவுமிருக்கும்; அடி முதல் நுனி வரை முண்டகமாக விருக்கும்; மரத்தைக் குத்தினுல் பால் வடியும்; இப்பாலை ¼ படியாக 30 நாளைக்கு சாப்பிட்டு வர மூர்ச்சையாகும்; அப்பொழுது பசும்பாலைக் காய்ச்சி தேன் விட்டு அடிக்கடி ஒரு கரண்டி வீதம் மூர்ச்சை தெளியும் வரை கொடுத்துக் கொண்டேவந்தால் மூர்ச்சை தெளிந்து ஒரு வாரத்திற்குள் சட்டை கழற்றும்; உடம்பு தங்க நிறமாகும்; மல ஜலம் வேதிக்கும், காயசித்தியாகும், the description of the tree and its use in rejuvenation are given above.

முண்டினி யெலும்பு, bone of the trunk.

முண்டீரம், ஓர் கீரை, a plant.

முண்டுகள்ளி, Euphorbia trigona.

முண்டுதல், முரண்டு பண்ணல், forcing against as the foetus in the womb.

முள்முரண்டை, ஓர் கொடி; a climbing caper — Merua arenaria.

முள் முருக்கம், see முருக்கம். கருப்பாசயத்தில் கறுத்துத் தடித்து உதிரத்தினை போக்கிவிடும்; good for uterine blood tumour.

முள்முருக்கு, see முருக்கு.

முள் மூங்கில், மூங்கில், bamboo.

முள் மூவிதழ், சப்பாத்துக் கற்றாழை; இலைக் கற்றாழை, prickly aloe—spiked aloe.

முள் வள்ளி, சுணை வள்ளி, which see.

முள் வாயன், கறையான்; white ant.

முள் வாமம், சிறு குறுந்தொட்டி; சிற்றாமுட்டி, a plant — Pavonia Zelaynica.

முள் வெண்டை, சுணை வெண்டை, hairy lady's finger — Hibicus esculentus.

முள் வெளுச்சிகம், முல்லிலவு, silk cotton tree — Bombux malabaricum.

முள் வெள்ளரி, ஓர்வகை வெள்ளரி, a variety of cucumber with thorny edges.

முள் வேங்கை, ஓர் மரம், a tree. See முள்ளு வேங்கை, Bredelia spinosa.

முள் வேல், வெள்வேல், a white species of a tree — Acacia ferrugenia.

முள்ளங் கத்தரி, காறற் கத்திரி, a plant — Solanum insanum.

முள்ளங்கி, வெள்ளை முள்ளங்கி; வாதப் பிணி கரப்பான் வயிற்றெரிச்சல் குத்தல், குடல் விருத்தி, பல் சிலந்தி, குன்மம், மூலக் கடுப்பு, முதலியவை தீரும்; an annual herb of the cabbage family root grown to an enormous size as long and stout as man's leg, rising partly above the ground contains small quantity of colourless oil — garden radish — Raphanus sativus. There are several varieties of Radish, முள்ளங்கி வகைகள்:

1. முள்ளங்கி, Radish.
2. வெள்ளை முள்ளங்கி, white radish — Raphanus sativus.
3. மஞ்சள் முள்ளங்கி, carrot — Daucus carota.
4. சிவப்பு முள்ளங்கி, pink radish — Raphanus sativus.
5. சுவற்று முள்ளங்கி or ஆற்று முள்ளங்கி, wall radish—Bluemea aurita.
6. பெரிய முள்ளங்கி, large radish.
7. சின்ன முள்ளங்கி, small radish.
8. சதுர முள்ளங்கி,
9. வன முள்ளங்கி, same as No. 11.
10. கெம்பு முள்ளங்கி,
11. காட்டு முள்ளங்கி, forest country radish — Sonchus oleraceous.

Note: The oil contains sulphur. If forms a white precipitate with corrosive sublimate and yellow with bichloride of platinum. The root and seeds are diuretic and used for urinary and venereal diseaes.

முள்ளங் கிழங்கு, முள்ளங்கிக் கிழங்கு, root tuber of radish.

முள்ளங்கி விதை, முள்ளங்கிவிதை, seeds of radish.

முள்ளடி, முள்ளடிக்கிழங்கு,

முள்ளந் தண்டின்மை, Amyelia.

முள்ளந் தண்டு, முள்ளெலும்பு, veretebral முதுகெலும்பு, back bone.

முள்ளந் தண்டு, முள்ளெலும்புகளின் கோர்வை, vertebral column.

முள்ளத் தண்டுக்கொடி, முள்ளந்தண்டிற்குள் ஓடும் வெண்மையான கயிறு போன்ற ஓர் நரம்புக்கொடி. a long cord or column of nervous matter contained in the canal of the spine — Spinal cord.

முள்ளந் திராய், a tree.

முள்ளம் பன்றி, முட்பன்றி, an animal Porcupine.

முள்ளமு வேணை, அமுவணை மரம், Lawsonia spinosa.

முள்ளறுகல், (நீர்த்துவாரத்தில்) முள்ளுளதாகி உறுத்தல், a disease inflammation in the tip of the penis.

முள்ளிங் கத்திரி, ஓர்வகை காரல் கத்திரி, a kind of thorny brinjal—Solanum insanum.

முள்ளி, ஓர் முள் செடி, a thorny shrub — Solanum indicum; 2. நீர் முள்ளி, Astaracantha longifolia.

முள்ளி— a general term for thorny plant. It is generally affixed to their name. Following are the varieties of முள்ளி:

1. அடுக்கு முள்ளி, thorn bush — Indian bishop.
2. ஆற்று முள்ளி, same as No. 3.
3. கழுதை முள்ளி, holly leaved bear's breech — Delivaria ilicifolia alias Acanthus ilicifolius.
4. செம்முள்ளி, barleria.
5. வெள்ளை முள்ளி, Barleria cuspidata.
6. நீர் முள்ளி, Asteracantha longifolia.
7. வரட்முள்ளி, which see.
8. கறி முள்ளி, thorny brinjal—Solanum agreste.
9. பப்பர முள்ளி, Solanum jacquini.

முள்ளிக் காய், ஓர்செடி, இதுவே கறிமுள்ளிக் காய், a plant — Solanum xanthocarpum.

முள்ளிக் கீரை, குப்பைக்கீரை, இது தங்கத் தைப் பற்பமாக்கும். இதற்குக் காட்டு முள் ளிக்கீரை யென்றும் பெயர். Amaranth spined — Amaranthus Spineses. It is said to calcify gold, a poultice is applied for bubo and abscess. கட்டிகளுக்குபயோ கிப்பது.

முள்ளிக்கோழி மீன், கடலிலுள்ள ஓர்வகைக் கோழி மீன்.

முள்ளிச்சி, பிரம்பு cane — Slender rattan — Calemus rotang.

முள்ளிச் சிவப்பு, குப்பை முள்ளிக்கீரை, red variety of Amaranthus spinoses.

முள்ளித்தலாதி, வெங்காயம்; onion —Allium cepa.

முள்ளிப் பாலை, see பாலை.

முள்ளிப் பிஞ்சு, முள்கத்திரி பிஞ்சு; tender therned brinjal — Solonum melongena.

முள்ளி மூலம், நீர் முள்ளி வேர்; see முள்ளி வேர்.

முள்ளிலவம் பட்டை, இலவமரத்தின் பட்டை bark of silk cotton tree. Bombax malabaricum — It is demulcent, diuretic, tonic, astringent; used as decoction.

முள்ளிலவம் பிசின், gum of Bombax malabaricum; it is astringent and demulcent.

முள்ளிலவிகம், கோங்கிலவு; see கோங்கு.

முள்ளிலவு, முள்ளிலவம் பருத்தி; கோங் கிலவு, பேயிலவு; see கோங்கு.

முள்ளிலாத வேல், caesalpinia coviaria.

முள்ளிலைச் சாறு, எட்டிச்சாறு; juice of the leaves of nux vomica tree.

முள்ளில்லாக் கற்றாழை, நாகபடக் கற்றாழை; snake hood aloe.

முள்ளி வேர், நீர்முள்ளி வேர், root of Hygrophila auricalata alias Astercantha longifolia.

முள்ளிறால், பாறையிறால்; spiny lobster.

முள்ளிற் கச்சிகம், கொழுமிச்சை, நாரத்தை; bitter orange.

முள்ளு, மீன்முள்; fish bone.

முள்ளுக் கடம்பை, Nepaul berberry — Berberries nepalensis.

முள்ளுக் கரணை, see மிளகரணை.

முள்ளுக் கருக்குவா, கருக்குவாச்சி; Jagged jujube— Ziziyphus trinervia.

முள்ளுக் களா, ஊசிக்களா; thorny carondah — Berberis nephalensis. It is so called from its black sour berries — Indian berberry— Berberis aristata — B. angustiflia— Shrub 6-10 ft, flowers yellow, berries shrivelled and much compressed and dark brown and black in colour; acid in taste. They are smooth, soft and moist; contain dark brown pulp. It generally contains no seed. Native of Himalayas. Watery extract called Rasoot is prepared in hilly districts from sliced root, stem and branches. Root bark is diaphoeratic, antiperidic and tonic

of great value in intermittent and remittent fevers and in general debility from what ever cause Rasoot febrifuge is an external remedy in eye diseases useful in all kinds of haemorrhages in diarrhoea, jaundice etc. Fruit eaten and dried in sun like raisins — other species are nepalensis and concinna.

முள்ளுக்கள்ளி, Opuntia dillenii.

முள்ளுக் கற்றுழை, முள்ளுடைய கற்றுழை; இதன் இருபக்கத்திலும் முனையிலும் முட்கள் பொருந்தியிருக்கும்; see இலைக்கற்றுழை— Prickly aloe; spiked aloe.

முள்ளுக் கிழங்கு, thorny yam.

முள்ளுக் கீரை, தங்கத்தை பற்பமாக்கும் ஓர் வகைக் கீரை; see முள்ளிக்கீரை.

முள்ளுக் குப்பை, கொட்டை யிலந்தை;—Seed jujube — Zizyphus xylopyra.

முள்ளுக்குள்ள பட்டை, Berberis aristata found in Nilgris and Himalayas and used as tonic. It is also used in ague and intermittent fevers. see முள்ளுக்களா.

முள்ளுக் கொடிச்சி, see கண்டங்கத்திரி, தூதுவளை; a climber—Solanum trilobatum,

முள்ளுக் கொழுஞ்சி, see முட்கொழுஞ்சி.

முள்ளு சியக்காய், see முள்ளு சீங்கை.

முள்ளு சீயக்காய், சீயக்காய்; Acacia pinnata.

முள்ளுச் சங்கு, conch which possesses spikes; 2. முட் சங்கன் செடி — Azema tetra cantha.

முள்ளுச் சிங்கை, see சிங்கை முள்ளு.

முள்ளுச் சீங்கை, முள்ளு சீயக்காய் மரம்; soap tree — Acacaia pinnata.

முள்ளுச் சீதா, புளிப்பலா; a plant — Anona muricata. Prickly custard apple fruit resembles large custard apple with soft thorn, like points. Nutritious but insipid.

முள்ளுச் சுண்டெலி, leggada platy thrix.

முள்ளுச் சூலி, சதுரக்கள்ளி: a spurge — Euphorbia quadrangularis.

முள்ளுடுப்பன், முள்ளுடுப்பை; which see.

முள்ளுடைய மூலம், முட்களுடைய வேர் அல்லது கிழங்கு; a root containing thorns.

முள்ளு திராட்சை, thorny grapes

முள்ளு நங்கை, பாம்பு கடிக்குபயோகிக்கும் ஓர்வித வேர்; a kind of root used as an antidote in snake poisons.

முள்ளு நாயகம், ஓர் கொடி;a creeper.

முள்ளுப் பலா, ஓர் வகைப்பலா; a kind of jack tree — Artocarpus integrifolia.

முள்ளு பலாச்சி மீன்; a gray fish — Diaden hystrix.

முள்ளு முருக்கு, see முள்முருக்கு.

முள்ளு முருங்கை, see முள் முருக்கு.

முள்ளு மூங்கில், மூங்கில்; bamboo.

முள்ளுப் பூலாத்தி, Flueggia leucopyrus.

முள்ளு வாயு, முள்ளைப் போல் குத்தலையுண்டாக்கும் ஓர் வித வாயு நோய்; a kind rheumatism attended with shooting pin prick pain.

முள்ளு வாளை, a sea fish; not useful in diet.

முள்ளு வெள்ளரி, கக்கரிக்காய், a prostate plant — Cucumis sativus.

முள்ளு வேங்கை, ஓர் மரம்; a tree — Spinous kino tree — Briedelia spinosa.

முள்ளெலி, hedge hog, bristle rat —Erinaceus micropus; E. nudiventris.

முள்ளெலும்பு, முள்ளந் தண்டெலும்பு; vertebrae முதுகெலும்பு; vertebral column.

முள்ளெலும்புள்ள, spinal.

முறண்டகம், see முறணடுகம்.

முறண்டுகம், அவுபலபாஷாணம்; a kind of arsenic.

முறபம், செங்கழுநீர், a kind of flower; water lily.

**முறப்பா,** இஞ்சி முதலியவை கூட்டிக் காய்ச்சிய சர்க்கரை முறுகற்பாகு; (இஞ்சி முறப்பா) a preserve in honey or sugar syrup.

**முறி,** இலை; leaf; 2. தளிர்; young leaf; 3. உயர்ந்த வெண்கலம்; a superion bronze; a pure bell metal

**முறி கட்டி,** உயர்ந்த வெண்கலக்கட்டி; a mass of bell metal.

**முறிக்குதல்,** see முறித்தல்.

**முறிச் சூலை,** ஆண்குறியிலும் குதத்திற்கு மேலும் அடிக்குடலிலும் ஓடி ஓடி குத்தலும், கீழ் வயிற்றில் தொப்புளைச் சுற்றிச்சுற்றி இழுத்தலுமாகிய இக்குணங்களோடு கூடிய ஓர் வகைச்சூலை; a kind of rheumatism affecting the penis abdomen and the navel causing intense pin prick pain.

**முறிதிரிசூலை,** ஓர் வகைச்சூலை; a kind of rheumatism.

**முறித்த தேன்,** சூடுசெய்த தேன்; clarified honey.

**முறித்தநீர்,** cold water in which a very hot piece of brick or iron is quenched.

**முறித்தற்கள்ளி,** சதுரக்கள்ளி; square Spurge—Euphorbia antiquorum.

**முறிந்த எலும்புக்கூட்டி.,** ஓர்வித மருந்தெண்ணெய்; பெருஞ் செருப்படையிலைச்சாறு, தேள் கொடுக்கி, வெண் பூவுள்ள வட்டக் கிலுகிலுப்பையிலை, சிறு செருப்படை இலை, கருந்துளசி இலை, ஊமத்தன் இலை, துளசி இலை இவைகளின் சாறு சமனெடை கொண்டு ஆல் அரசு இச்சி, பாலை மருதோன்றி முருங்கை கல்லிச்சி மைக் கொன்றை, பொன்முருங்கை இவைகளின் பட்டை இவைகளை இடித்துச்சலம் விட்டுக் காய்ச்சி இறுத்து, மேற்படி சாறுகளுடன் கலந்து இத்துடன் காசுக்கட்டி, களிப் பாக்கு பொடித்துப் போட்டுப் பிறகு பூத கரப்பன் பட்டை நற்சங்கம் வேர்ப்பட்டை இடித்துக் காய்ச்சி வடிகட்டி முன் சாற்றுடன் கலந்து விளக்கெண்ணெய் இலுப் பெண்ணெய் புங்கெண்ணெய் நல்லெண்ணெய் வேப்பெண்ணெய் இவைகளைச் சேர்த்து 3 தினம் ஒரு பானையில் வைத்து பிறகு இலவங்கத்தைப் பொடி செய்து போட்டுக் காய்ச்சி திரளும் பதத்தில் வடிகட்டி வெள்ளைத் துணியில் நனைத்துப் போட்டு வெந்நீர் விட்டுருவ எலும்பு பொருந்தும்; முழங்கால் வாதத்திற்கும் நெருப்புச் சுட்ட புண்ணுக்கும் போடலாம்; the preparation of an oil which can be applied for fractures, burns and rheumatic affections is given above which see.

**முறிப்பு,** see முரிப்பு.

**முறி வஸ்து,** antiseptic.

**முறிவு,** மக்கள் மருந்து வகையுள் ஒன்று; a kind of medicine causing reaction. 2. விஷப்பிரதி விஷம்; antidote. 3. எலும்பு முறிதல்; fracture.

**முறி வுரை,** மருந்தை முறிக்கும் வஸ்து; antagonist medicine.

**முறி வெட்டியான்,** ஓர் கடற்காளான்; a kind of sea fungus.

**முறு கல்,** முதிர்தல்; முறுகக்காய்ச்சல்; over heating.

**முறுகு கஞ்சா,** முதிர்ந்த கஞ்சா; well grown Ganja — Indian hemp — Cannabis sativa.

**முறுக்கல்,** திருப்பல்; twisting; distorting.

**முறுக்கல்,** tortion.

**முறுக்கவரை,** திருகின அவரை; twisting beans.

**முறுக்கித் தாபம்,** நரம்புகளை முறுக்கும் ஓர் விதசன்னி; a kind of delirium marked by twitching of the nerves.

**முறுக்கி பதனுட்சி,** தீவதாட்சி; which see.

**முறுக்கியபால்,** பிழிந்தபால்; squeezed juice or milk.

**முறுக்கு,** twist.

**முறுக்கு,** ஓர்வித வலி; a kind of twisting pain. 2. பிழிதல்; twisting.

**முறுக்குக் கட்டை,** நரம்புகள் முறுக்கேறிய வுடம்பு அல்லது வலியுள்ளவுடம்பு; painful body.

**முறுக்கு சர்ப்பம்,** உடம்பெல்லாம் திருகு கள்ளியைப்போல் முறுக்கித் துன்பத்தை யுண்டாக்குமோர் பாம்பு; a snake whose bite causes twisting pain in the body.

**முறுக்கு நோய்,** வயிற்றி லுண்டாகுமோர் வகை வலி; griping pain in the stomach.

முறுக்கு பீன்சு, square bean; tursted bean Psophocarpus teragonolobus; a large plant with blue flowers — 6-8 inches long and ½ in wide.

முறுக்கும் கள்ளி, a plant – Pisonia ciculata.

முறுக்கு வலி, Torminia.

முறுக்கு வாயு, a disease which causes twisting pain in the body.

முறுக்கு விடல், எழும்போது கைகால்களை நீட்டி வளைத்தல்; the action made while yawning.

முறுக்கு விரியன், முறுக்கு சர்ப்பம்; which see.

முறுக் கெண்ணெய், a medicated given for முறுக்குவாயு.

முறுக் கேறல், நரம்பு பலப்படல். nerves becoming strong.

முறுக் கேற்றல், நரம்பைப் பலப்படுத்தல்; stimulating the nerves.

முறு வஞ்சி, முத்து; pearl.

முறுவல், தீ முறுகல் பாஷாணம்; phosperous. 2. பல்; tooth.

முறுவல் செடி, bashful tree; laughing plant shameless plant; west Indian cock's spur — Pisonia alba — a shrub 6 or 7 ft. high dense large leaves. See காரிண்டு.

முறை, குணம், disposition. 2. பழமை; antiquity; 3. முறைமை system as in வைத்திய முறை; 4. மறுத்துப் போதல்; becoming stiff; 5. புத்தகம்; book; 6. ஒழுக்கம்; manners; morals.

முறைக் காய்ச்சல், நரம்பிற்குள்ளே இரத்தத் திற்த கெட்ட வாசனை ஏற்படுவதாலுண் டாகி தடுத்து வரும் காய்ச்சல்; intermittent fever after 48 hours caused by impurity of the venous blood. There are three principal varieties in intermittent fever. The quotidian fever coming once every day; the tertian every third day; with an interval of one clear day usually coming on about noon; the guartern coming once every fourth day leaving an interval of two clear days.

During intermittent fever, the liver and spleen or lungs become affected leading to blood deterioration, anema or enlarged spleen. The Symptoms:- langour, debility restlessneess, yawning and stretching and sense of depression about the stomach. In other instances there is uneasiness or pain in the legs, back and loins, noises in the ear or simply head ache and shivering. The pulse becomes more frequent and increase of temperature. The treatment in this fever in children must be conducted in the same principles as advised for adults excepting medicines given in accordance with the age. 2. அடுத்தடுத்து வரும் சுரம்; alternative fever.

முறை சுரம், see முறைக்காய்க்சல்.

முறைசுரம் போக்கி, antiperiodic.

முறை திட்டந்தப்பாமல், "முறை திட்டந் தப்பாமல் கற்பமேற முந்தவே" — according to the rules & regulations laid down.

முறை நோய், periodic disease.

முறை பாகம், வைத்திய நூலில் சொல்லிய படி அனுசரிக்கும் விதி; according to the system laid down in the medical science.

முறை பாடு, நான்கு பாடுகளிலொன்று; one of the four 'பாடு'.

முறைபாடு கைபாடக, — according to laid rules in the texts and experience.

முறை பிறழ்தல், deveation from the natural or regular course.

முறை மசக்கி, முறை மயக்கி; which see.

முறை மயக்கி, குப்பைமேனி; a plant — Acalypha indica a vermifuge.

முறை மாறல், சுரம் காலந்தவறிவரல்; fever coming irregularly and not at the usual hour.

முறை மூலம், திப்பிலி நாவல்; a tree.

முறை யிடல், விதித்தல்; establishing or framing rules as in preparation of medicines.

முறை வியாதிரோதி, முறைக்காய்ச்சல் முத லிய முறை வழியாய் வரும் நோய்களைத் தடுக்கும் மருந்து; antiperiodic.

முற்கம், பச்சைப்பயறு; green gram.

முற் காசு, கோரைக் கிழங்கு; a fragrant root of a grass — Cyperous rotandus.

முற் குறண்டி, see ஊசிக்குரண்டை.

முற் குறி, premonitory symptoms (பூர்வரூபம்) prodromata.

முற் கூவம், திரளங் கொடி; which see.

முற் பகல், பகற் காலத்து முன்பகுதி; முன் னேரம்; forenoon.

முற் படிரம், சந்தனம்; sandal wood.

முற் பல், முன்வாய்ப்பல்; fore tooth — incisors.

முற் பனி, மார்கழி தை மாதங்களில்பெய்யும் பனி; dew falling in the months of December and January.

முற் பேசி, anterior muscles.

முற்ற, முழுவதும்; எல்லாம்; whole.

முற்றல், முதிருதல்; ripening as in fruits becoming chronic as in diseases. 2. முப்பு; old age.

முற்றின நோய், நாட்சென்ற நோய்; chronic diseases.

முற்று, முடிவு; end; 2. முற்றல்; ripening; maturing. 3. முழுவதும்; the whole.

முற்றுங் கடந்தவன், பாசத்தினின்று விடு பட்டவன்; (ஞானி) one who had completely remounced the world.

முற்றுரத்தி, see முற்றெண்டை.

முற்றெருந்தின் செவி; எழுத்தாணிப்பூடு; style plant — Launca pinnatifida.

முற்றெண்டை, முள் + ஆதொண்டை; thorny creeper — Capparis horrida alias C. quadriflora.

முனுக்கம், சுரை; a creeper or climber; bottle gourd — calabash — Logenaria vulgaris.

முனி, அகத்தி; a tree — Coronilla grandiflora. 2. ஞானி; one is well accomplished in Dhyana, Yoga and other excellent accquirements. 3. அகத்தியமுனி; Agastiyar — Siddhar. 4. தேன்; honey (in Mantric science). 5. ஓர் தேவதை; a spirit as வாழ்முனி; நோக்கமுனி; சடாமுனி; சந்நியாசிமுனி.

முனி சடிலம்; தவனம்; a fragrant leaf.

முனிதளம், அகத்தி; a tree — Sesbania grandiflora.

முனித் துருமம், காரகத்தி; black sesbane.

முனிந் துரை, வெந்தயம்; a plant — Fenugreek — Trigonella foenumgraecum.

முனிபகா, வரகு; a millet — Kodo millet — Paspalum scrobiculatum.

முனிபட்சி, அவல்; flacked rice.

முனி பத்திரி, செவ்வகத்தி; red variety of Sesbania grandiflora.

முனி பிடித்தல், possession by the pirit Muni.

முனிபித்தலம், தாமிரம்; copper.

முனிப்பூண்டு, அகத்தி; a tree — Sesbania grandiflora.

முனி மூத்திரம், கல்லுப்பு; rock salt.

முனி யகத்தி, பிரம்பு; rattan — Calamus rotang.

முனிவர் பூசித்த லிங்கம், கெண்டகச்சிலை; the phallus that Agastiar worshiped.

முனி வோன், நாரை; heron.

முனைகுழயப் பண்ணுஞ்சூரன், வாணமுகந்தி; sulphur used in fire works.

முனைக் கல், கற் சிட்டம்; over burnt light brick.

முனைச் சுழி, சுழிமுனை; which see.

முனைமுதலாசம், நாரை; heron.

முன், பழமை; oldness. 2. பக்கம்; side. 3. லவணம்; salt. 4. முதல்; first; chief 5. முன்னுல்; front anterior.

முன் கரப்பன், as opposed to பின்கரப்பன்; see கரப்பன்.

முன்கரு பின்கரு, முன்கருவும் பின்கருவுங் கூடக்கூட்டி.

முன் கலந்த விருட்சத்தி, வில்வம்; a sacred tree — Bael tree — Aegle marmelos.

முன் கலித நாதம், discharged ovum.

முன் கழுத்து, front of the neck.

முன்கீழமைந்த, situated in front and below — Antero inferior.

முன் குடுமி, lock of hair near the fore-head.

முன் குரைத்தான், பித்தளை: brass.

முன்குறி, பூர்வரூபம்; Premonitary; symptoms.

முன்கை, கெண்டைக்கை; முழங்கைக்கும் குளசுக்கும் இடையேயுள்ளது; fore arm.

முன்கை வாதம், முன்னங்கை இரண்டும் முகமும் வீங்கி வலிக்கும் ஓர் வாத நோய்; a kind of rheumatism affecting the fore-arms.

முன் கோலம், நிலப்பனை; ground palm — Curculigo orchioides.

முன் சரிவு, anteverson.

முன் தொடரி, ஓர் வகைத் தொடரிப் பூண்டு; as opposed to பின்தொடரி; a thorny shrub.

முன் தோல், முன்றோல்; fore skin of the penis the prepuce — Acrobystia.

முன் தோல் வீக்கம், inflammation of the prepuce — Posthitis; Acrobystitis.

முன் பக்கம், from the front to one side — Anterolateral.

முன் பனி, சாயுங்காலப்பனி; evening dew which occurs in December and January.

முன்பனிக்காலம், early dew season December January.

முன் பின் தொங்கல், தேவாங்கு; an animal—Sloth.

முன் புருவம், anterior bicepetal ridge.

முன் மனி, கொட்டைக் கரந்தை; a plant; Indian globe thistle — Sphaeranthus hirtus.

முன் முருக்கு, See முள்முருக்கு.

முன் மூளை, cerebrum (seat of intellect).

முன் வயிறு தள்ளிய, abdomino anterior.

முன் வழுக்கை, தலையின் முன் பக்கத்தின் வழுக்கை: balness in front of the head — Calvities.

முன் வளைதல், bending forward — Antiflextion — anticurvature.

முன் வாய், உதடு; lip. 2. வாய்முகனை; edge of the mouth.

முன் வாய்ப்பல், வாய் முன்னிருக்கும் பற்கள்; front teeth — Incisors.

முன்விசுண்டை,

முன்றினி, முண்டினி: which see.

முன் றுடரி, நாயுருவி; a plant; Indian burr — Achyranthus aspera. 2. see மிளகரணை.

முற்றொடரி, ஓர் செடி; a prickly shrub as opposed to பின்தொடரி.

முன்றோல், ஆண்குறியின் நுனியில் கவர்ந்திருக்கும் தோல்; prepuce of the penis.

முன்னங்கால், முழங்காலிற்கும் பாதத்திற்கும் நடு; that portion of the lower extremity between knee and ankle — leg; 2. மிருகங்களின் முன்பக்கத்திற்கால்: the fore foot of an animal or quadriped.

முன்னங் கேயம், பிடங்குநாறி; a tree. See கிருஷ்ணபலை.

முன்னங் கை, முன்கை; fore arm.

முன்னடிமாது, இலந்தை; jujube tree — Zizyphus jujube.

முன்னடைப்பன், மாட்டு வியாதி: a disease of the cattle.

முன்னணை, முதற்பிள்ளை; the first child.

முன்னந் தலை, நெற்றி; fore head.

முன்னந் தொடை, தொடையின் முன்பக்கம்; front or anterior of the thigh.

முன்னமரம், முன்னை; a tree — which see.

முன்னம், கருத்து; intention; 2. சீக்கிரிமரம்; a tree—Mimosa. 3. மனம்; mind. 4. முன்; infront.

முன்னர், நெஞ்சு; mind. 2. இடங்காலங்களின்முன்: previous.

முன்னல், நெஞ்சு; mind. 2. கருதுதல்; intention.

முன்னுகக் கொடி, பிள்ளைத் தாய்ச்சிக்கொடி; placental cord.

முன் னிசிவு, a disease in which the body of the patient is curved internally- Emprosthotonos. See தனுர் வாதம், see அந்துராயாமம்.

முன் னிரவு, இராத்திரியின் முன்பகுதி: early period of the night. 2. முதல்நாள்; இராத்திரி; night of the previous day.

முன்னிருட்டு, as opposed to பின்னிருட்டு; darkness in the early part of the night.

முன்னிருத் தை, சதுர்த்தி; fourth day after new moon or full moon.

முன்னிலைச் சாறு, முன்னே சொல்லிய இலைச் சாறு; juice of the leaf told before.

முன் னீர், முதலில் உண்டாகும் நீர்; first formed water. முன்னே சொன்ன நீர்; water referred to previously as in இந்நீரை முன்னீர் செய்தல். 3. வெடியுப்புத் திராவகம்; nitric acid. 4. சோற்றுக் கற்றாழைச் சாறு; juice of aloes.

முன்னீர்க் கோவை, நீர்க்கோவையினுலுண்டாகிற கோழை வாய்வழியால் சென்று உமிழும்படி வெளிப்படுதல்; the sputum passing through the mouth instead of nasal passages. It is opposed to பின்னீர்கோவை.

முன்னீர் செய்தல், to prepare the fluid said before.

முன்னீர்மையாக் கொள்ளல், முன் பாக மருந்தாக சாப்பிடல்; taking medicine first.

முன்னுச்சி, உச்சிக்குழி: anterior fontanelle.

முன்னுணர்ச்சி, பூர்வ ஞானம்; fore sight fore knowledge.

முன்னுருசி, fore taste.

முன்னுருக்கிரும்பு,

முன் னேரம், முற்பகல்; fore noon; இரவுமுன்; before night fall குறித்த காலத்திற்கு முன் before the appointed hour.

முன்னை, பசு முன்னை, a small tree — Premna latifolia alias P. integrifolia.

இதன் வகைகள் varieties :-

1. எருமை முன்னை — Premna mysorensis.
2. காட்டு முன்னை — Croton repandum.
3. பேய் முன்னை — Premna serratifolia.
4. செடி முன்னை—smooth teak( கொழுக்கட்டைத்தேக்கு) —Premna latifolia.
5. நுலி முன்னை — Strobilanthus barbatus.
6. பசு முன்னை — Premna latifolia alias P. integrifolia.

முன்னைக் கீரை, அஸ்தி சூட்டைத் தணிக்கும்; leaves of the tree 'முன்னை' which see.

முன்னை வேர், முன்னை மரத்தின்வேர்; root of the tree 'முன்னை' Premana latifolia.

மூ, மூப்பு, old. 2. மூன்று; three in combination.

மூகம், ஊமை; dumbness. 2. மௌனம்; silence; 3. ஓர் மீன்: a fish.

மூகரன், செவிடன்; a deaf man; 2. ஊமை; a dumb man.

மூகன், ஊமை; dumb man.

மூகை, சங்கஞ்செடி, a plant — fourspined monetic — Azema tetracantha alias Monetia barlerioides. 2. ஊமை; a dumb man.

மூகைச் சிலேட்டுமம், கழுத்துக்குள் ஊமையைப் போல் சத்தித்து கோழையைத் தள்ளும் ஓர் நோய். a diseases marked by the appearance of some sound like that made by the dumb, in the throat and copious phlegm which is thrown out.

மூகைப்புல், முயற் புல், which see.

மூகையலரி, அலரிமரம்; a tree — Nerium odorum.

மூக் கடியான், adenoids.

மூக்கடைத்தல், மூக் கடைப்பு, சிலேட்டுமம் அதிகரிப்பதினால் வாயுவை விசை கொண்டெழுப்பி மூக்குத் துவாரங்களை அடைத்தல்; a hindrance of breath through the nose. The condition under which the up coursing உதானவாயு (udana vayu) of the region of the head is deranged in its passage by a sub-charge of Kapham and obstructs the passages of the nostrils.

மூக் கடைப்பான்,

மூக்கம் பாலை, a plant — Alstonia scholaris.

மூக்கம் பூயம், மூக்கப் பூயம், புரசு, a tree—Butea frondosa.

மூக் கத்தாரி,

மூக் கரசா, பனிப்பயறு; dew gram—Phaseolus aconitifolius.

மூக் கரணை, a plant.

மூக்கரணை மூலம், மூக்கரணை வேர்; root of மூக்கரணை.

மூக் கரிக்கல், மேகவியாதி சம்பந்தத்தினால் மூக்கைத்தின்று விடுதல்; a borrowing sore of the nostrils from syphilis; rodent ulcer of the nose.

மூக் கரைச்சாரணை, ஓர் வெண் கொடி; a creeper See சத்திசாரணை; See காட்டுச்சாரணை.

மூக் கரையன் வேர், root of மூக்கரையன்.

மூக் களவாயிடல், புடம் போடுங்கால் குப்பியின் கழுத்துக்கு மேல் வரும்வரை மணலிற் புதைத்தல்; in sandbath calcination to put sand upto the neck of the crucible.

மூக் கறட்டை, ஓர் பூடு; a prostate plant — hog weed; — Bauhavia procumbens.

மூக் கறுப்பான், மூக்கின் சம்பந்தமான ஒரு வியாதி; a disease of the nose.

மூக் கறை, மூக் கற்ற; noseless. 2. மூக்குக் குறைவு; defective nose. 3. மூக்கில்லா; congenital absentee of nose — Arhinia.

மூக் கறைச்சி, அரிதாரம்; yellow orpiment: 2. ஓர் செடி; a plant. 3. சவர்க்காரம்; soap.

மூக் கறையன், மூக்குக் குறைந்தவன்; மூக்கில்லான்; a person of deformed or amputaled nose.

மூக் கன், பெரிய மூக்குள்ளான்; man of large nose. 2. கொம்பேறி மூக்கன்; a snake.

மூக் காங்கன், புத்திர சீவி; a plant.

மூக்காங் கொழுந்து, நாசிமுனை: tip or point of the nose.

மூக் காஞ்சி — Cynometra travan corica.

மூக் காந்தண்டு, மூக்கினடுத்தண்டு; bridge of the nose.

மூக் கால் நீரருந்தல், மூக்கின் வழியாய் நீர் பருகல்: இதனால் கண்ணோய் போம்; to take water through nostrils — this is a cure for eye diseases.

மூக்காவலை, } ஓர் பூடு; a plant see முட்
மூக்காவலை, } காய் வேளை.

மூக்கிகம், வசம்பு; a plant; sweet flag—Acorus calamus.

மூக்கி மரம், ஓர் மரம்; a tree — Garcinia pictoria alias G. mordia.

மூக்கிரட்டை, இரட்டைபிர மட்டை; see மூக் கரட்டை; It is diuretic.

மூக்கிரத்த வொழுக்கு, bleeding nose — Epistaxis.

மூக்கிலழகி, குமிழ்; a tree — Kashmere tree —Gmelina arborea.

மூக்கிலா மொக்கு, மராட்டி மொக்கு; which see.

மூக்கிலி, மூக்கறை; deformed nose; 2. சொக் கலிப்பூடு a plant. 3. கோஷ்டம்; a fragrant root — Costus arabicus.

மூக்கில், வசம்பு; a plant; sweet flag—Acorus calamus.

மூக்கில் தும்மி, நாக சிங்கி; which see.

மூக்கில் நீர்பாய்தல், running nose—Catarrh of the nose.

மூக் கிழந்தான், மூக்கரைச் சாரணை; a white creeper — Trianthima monogyna.

மூக் கிறைச்சி, ஓர் பூடு; a plant.

மூக்கிற் கரியார், குன்றிமணி, a twiner — Abrus precatorius.

மூக் கிற்கல், காக்கை; crow.

மூக் கினி, முந்திரி; grape vine —Vitis vinifera.

மூக்கினில் மூச்சேருது, மூக்கு வழியாய் மூச்சு விடமுடியாது வாயின் வழியாய் விடல்; in ability to breath through the nose.

மூக்கின் தசை துணுக்கு, சதையின் மூக்க டைப்பு; growth of flesh in the nose.

மூக்கு, முக்கோண வடிவமாய் முகத்தின் நடு வில் மேலுதட்டுக்கு மேல் தோற்றமான முற் பகுதியாகும் நாற்றப் புலனின் ஓர் கருவி; இது எலும்புகளினாலும் முருந்துகளாலும் உண்டாகி வெளிப்பக்கம் தோலினாலும் உட் பக்கம் சளிசவ்வினாலும் மூடப்பட்டிருக்கும்; நடுவில் பிரிக்கப்பட்டு இரண்டு துவாரங் களை யுடையவுறுப்பு; a triangular organ situated above the upper lip prominently. It is formed of bones and cartilages out side and muscles and mucus membrane inside. நாசி; nose.

மூக்குக் கண்ணாடி, வெள்ளெழுத்து முதலிய கண் ரோகத்தினால் பார்வை குறைந்த கால த்து, தோற்றத்திற்காகப் போடும் கண்ணாடி; spectacles for the eyes for short and long sight.

மூக்கக் காவலம், புரசு; a tree — Butea frondosa.

மூக்குக் கிழங்கு, கிளிமூக்குக் கிழங்கு

மூக்குக் குரிய, நாசியைப்பற்றிய; pertaing to nose — Nasal.

மூக்குக் கொழுந்து, மூக்காங் கொழுந்து; which see.

மூக்குச் சதை, மூக்கிற் சதை வளர்ச்சி; adenoids: — polypus.

மூக்குச் சலாகை, தமிழ் வைத்தியத்திற் சொல்லியுள்ள 26 சத்திர கருவிகளிலொன்று one of the 26 surgical instruments mentioned in Tamil Medicine. Nasal forceps.

மூக்குச் சளி, மூக்கினின்று ஒழுகும் சளி; மூக்கூளை; mucus from the nose — Snot

மூக்குச் சிந்தல், நாசியினின்று சளியை வெளிப்படுத்தல்; blowing the nose.

மூக்குச் சிலந்தி, abscess or ulcer in the nose.

மூக்குச் சீறுதல், see மூக்குந் சிந்தல்.

மூக்குச் சுழித்தல், மூக்கு நெறித்தல்; to shrink the nose.

மூக் குண்ணலி, மூக்குக் குறையும் புண்; ulcer destroying the nose.

மூக்குத் தண்டு, மூக்கினடுப் பகுதி; bridge of the nose.

மூக் குத்தி, Bochavia rependa.

மூக்குத்திக் காய், மருதன்காய்; a creeper.

மூக் குத்திக் கொடி; a prostate plant—Boehavia rependa — alias B. verticillatus.

மூக்குத்திப் பூ, flower of Lantana indica.

மூக்குத்திப் பூச்செடி, a shrub — Lantana indica.

மூக்குத்திப் பூடு, ஓர் பூண்டு; a plant; Vernonia cinerca — Ventilago cinerea — கூத்தன் குதம்பை.

மூக்குத் துவாரம், nostrils.

மூக்குத் தூள், புகையிலைப் பொடி; snuff 2. ஆக்கிராணப் பொடி; snuffine.

மூக்கு நீரொழுக்கு, nasal catarrh.

மூக்கு நீர், மூக்குச்சளி; the watery mucus from the nostrils due to cold or nasal catarrh or other causes.

மூக்கு நீர்ப்பாய்ச்சல், coryza. 2. மூக்கிற்குள் மருந்து நீரைப் பாய்ச்சல்: அதாவது உட் செலுத்துதல்; injection of a medicinal fluid into the nose — Rhinenchysis.

மூக்குநீர் வடிதல், மூக்கினின்று சளி ஒழுகல்; watery discharge from the nostrils see மூக்கொழுகல்; a disease of the nose in which there is constant transparent slightly discoloured water like secrection (of kapham) through the nostrils at night — Fluent corsza.

மூக்குப் பாம்பு, larged nosed serpent — Lepidic Colubriformes.

மூக்குப் பிளவை, மூக்கில் வரும் ஓர் சிலந்தி; an ulcer or abscess of the nose.

மூக்குப் புத்து, cancer of the nose.

மூக்குப் புழு, maggot in the nose.

மூக்குப் பொடி, புகையிலைப் பொடி; snuff மூக்கிலிடுக்கும் ஆக்கிராணப் பொடி; a medicated powder used as a snuff in diseases.

மூக்கு முருந்து, cartilage of the nasal septum; மூக்கு மீன்; a kind of fish.

மூக்கு மூலம், மூக்குச்சதை வளர்த்தி பீநசம்; growth of flesh in the nostrils producing catarrh, excess sneezing, shortness of breath, nasal speech, head ache etc — Polypus.

மூக்குயர்தல், மூக்கு நீண்டு காணுதல்; இது ஓர் மரணக்குறி; nose appearing to be elongated. This is one of the symptoms of death

மூக்கு ரணம், ulcer nose; இது சுண்ணாம்பு நீரால் கழுவப் போம்.

மூக்கு ரத்தம், epitaxis.

மூக்கு ரந்திரம், nostrils.

மூக்கு வறட்சி, a diseases of the nose in which difficulty of respiration is caused by the drying up and consequent thickening of the mucus accumilating in the passages of the nostrils through the action of the deranged Vayu and Pitham — Parchedness of the nostrils — Xeromegeteria.

மூக்கு வெட்டல், செங்கொட்டை சுத்தி செய்வதற்காக அதன் மூக்கு முனையை வெட்டி யெறிதல்; to cut the nose, or any nose like projections as in marking nut.

மூக்கு வெட்டி, சேங்கொட்டை, marking nut —Semicarpus anacardium.

மூக் குளி - மூக்கொலி, நாசியில் பிறக்கும் சத்தம்; the noise of the nose.

மூக் குறட்டை, see மூக்கறட்டை.

மூக் குறண்டி, see மூக்குரட்டை.

மூக்குரு வேர், ஓர் மருந்து வேர்; the root of a herb.

மூக் குறை, மூக்கிலிடு மருந்து; a medicine introduced into the nose — Errhine.

மூக் கூளை, மூக்குச்சளி; mucus from the nose.

மூக்கொட்டு, பொய் மூக்கு ஏற்படுத்தல்; the process of affixing an artificial nose — Rhino plastic operation.

மூக்கொலி, மூக்குளி: which see.

மூக் கொழுகல், running of the nose.

மூக் கொழுக்கு, discharge from the nose — Aporrhinosis.

மூக் கொற்றிக்காய், the fruit of Thun bergi racemosa used in culinary preparations.

மூக்கொற்றிக் கோரை, see கோரை.

மூக்கொற்றிப் பூடு, கூத்தன் குதம்பை — Inula indica alias Lantana indica.

மூக்கோலம், புழுங்கலரிசி; boiled rice.

மூங்கா, கீரி; mungoose.

மூங்காப் பிள்ளை, கீரிப்பிள்ளை; mungoose.

மூங் கிலரிசி, மூங்கிற் கொட்டை; bamboo sago — bamboo seed — seed of Bambusa arundenacea.

மூங் கிலிலை, மூங்கிலின் இலை; bamboo leaves. குடற்சூலை, வயிற்று நோவு, இரத்தத்தடிப்பு, பிரசவ அழுக்கு இருமல் கண் சிவப்பு போம்; it is used as emmenagogue. It is useful in diseases of the stomach, cough and to increase the flow of lochia.

மூங் கிலுப்பு, ஓர் வகையுப்பு; a medicinal salt found in bamboo. The selicious concretion known as. The selicious concretion known as tabasheer is a bluish white concrete substance; a secrection from the joints of the reed in a state of disease mal formation or fracture. It consists of 90½% of silica, a minute quantity of lime and vegatable matter. Refractive power is lower than that of any other substance, whether solid or fluid. With certain oils which it imbibes, it becomes as transparent as glass. It is unaffected by fire and acids. Sticks to the tongue. It is medicinally a a stimulant and aphrodisiac.

மூங்கி லூமத்தை, ஓர் ஊமத்தை; a plant. Dhatura milal.

மூங்கில், ஓர் மரம்; இது பல வகைப்படும்; அவையாவன:-

1. மூங்கில் bamboo — Bombusa arundinacia.
2. கல் மூங்கில்; male bamboo — Bambrosa stricta.
3. வேசி மூங்கில்; Crinicum asiatica.
4. காட்டு மூங்கில்; Dendrocalamus strictus.
5. சிறுமூங்கில்; small solid bamboo — same as No 4.
6. பொன் மூங்கில்: — Oxytenanthera bourdillosi.
7. கெட்டி மூங்கில்; same as No 2.
8. நெட்டை மூங்கில்;
9. முள் மூங்கில்; same as No 4.
10. உக்கா மூங்கில், மலையாளத்து மூங்கில்; Hooka bamboo: Malabar bamboo — Ochalandra Travancurea Bamboo — Bambusa arunnacea — Bamboo tilda. Young shoots are eaten; used as pickles and chutney. It is an emmenagogue. It belongs to a class of giganti grasses, strong rooted perennial plant with jointed hollow stems, rardy solid and varying greatly in size. They are distinguished as male and female. The latter embracing all the common species with hallow stems, and the former (Bambusa stricta ஆண் மூங்கில்) having nearly a solid core. The English bamboo cane is a species of rattan. The root of the bamboo is diluent, the bark a specific in eruptions and the leaves anthelmentic and emmenagogue seeds eaten by the poor classes like paddy.

மூங்கில் புல்லூரி, மூங்கிலின் மேற் புல்லூரி; bamboo parasite.

மூங்கில் போத்து, மூங்கில்முளை; the shoot or sprout of bamboo.

மூங்கில் முத்து, மூங்கிலில் பிறந்த முத்து; bamboo pearl.

மூங்கில் முளை, மூங்கிலின் முளை; shoot of bamboo.

மூங்கிற் குத்து, மூங்கிலின் கூட்டம்; cluster of bamboo.

மூங்கிற் குருத்து, அடிபட்ட இரத்த வீக்கங்களைப் போக்கும் தளிர்; the tender leaves of bamboo is capable of curing contused swelling — Bamboo plast.

மூங்கிற் குழாய், பண்டை காலத்தில் மருந்து, தேன் முதலியவை கெடாதபடிக்கு வைப்பதற்காகச் செய்யும் மூங்கிற் குழாய்; a hallow bamboo used for preserving honey, medicines etc.

மூங்கிற் புல்,

மூங்கு, சிறு பயறு; small pulse.

மூங்கை, ஊமை; dumbness.

மூங் கையர், ஊமையர்; dumb person.

மூஷகரி, செருந்தி, which see.

மூஷணம், மிளகு, pepper — Piper nigrum.

மூசரச் சாரம், சவுட்டுப்பு, salt extracted from fuller's earth.

மூசல், சாதல், dying.

மூ சாந்தம், வெண்டாமரை, white lotus plant.

மூசாந்திகம், மரவிழி; which see.

மூச்சாப்பு, மந்த சுவாசம்; defficient breathing.

மூஷாம்பரச் சூரணம், powder of black bole.

மூ சாம்பரம், உரைந்த மலை கற்குழையின் பால், கரிய போளம் — black bole. See கரிய போளம்.

மூஷாம்பரம், See கரிய போளம்.

மூசாலை, சோம்பு, which see.

மூசி, பொன்னுங்காணி, a prostate plant — Illecebrum sessile.

மூசிகப் பாஷாணம், எலிப் பாஷாணம், a kind of arsenic. 2. வெள்ளைப் பாஷாணம்; white arsenic.

மூசிப் போதல், கெட்டுப் போதல், decomposed.

மூசு, கெடு, perish; decompose.

மூசுண்டை, eatables.

மூசு மல்லிகை, வீரிய விருத்தியை யுண்டாக்கும், ஓர் வகைப் பூ; flower that is aphrodisiac.

மூசை, மண் குளகு, crucible.

மூசைச் சாரி, மயூரச்சிகை, a plant.

மூசை மண், மூசை செய்வதற்கு தகுதியான மண், clay fit for making crucible.

மூசை மாற்றல், உலோகங்களை உருக்கும் போது மூசை பழுதுபடும் போலிருப்பின் உள்ளடங்கிய வஸ்துவை மறு மூசையிற் போட்டுருக்கல், to change crucibles white melting metals if necessary.

மூசை யழுகவூதல், மூசை சிவக்கும் வரை நெருப்பிலிட்டு உலோகத்தை உருக்கல், melting metals till crucible is turned red hot.

மூசையிலிடல், மூசையிலிட்டுருக்கல், to put into the crucible for melting.

மூசையிலேயுருக்கி, திராய், a metal.

மூச் சடக்கம், உயிரடங்கி நிற்றல், suspended animation. 2. ஓர் நோய்; a disease in which breath is restrained.

மூச்சடக் கல், சுவாச பந்தம் பண்ணல், to retain the air breathed in and suppress breathing.

மூச்சடங் கல், இறத்தல், dying; collapsing.

மூச்சடங் கியசூதம், மடிந்தரசம், mercury which is killed and lost its physical and chemical properties.

மூச்சடைப்பு, மூச்சுத் தடை, suffocation asphyxia. 2. மூச்சு மறிப்பு, obstruction of respiration.

மூச்சற்ற, பிராணனற்ற, breathless.

மூச்சாடாய், உயிர் தங்கி நிற்றல், breathing; 2. மூச்சுத்திணரல், gasping for breath.

மூச் சிழுத்தல், மூச்சை உள் வாங்கல், drawing in breath.

மூச்சிறுகல், strangulation.

மூச்சு, சுவாசம், உயிர்ப்பு, life; breath. 2. பலம்; strength. 3. air taken in and given out at each respiration — Tidal air.

மூச்சு கந்தம், a plant —Pterospermum suberifolium alias — P. heyneanum.

மூச்சுக் கலயமிடல், மூச்சுப் பிடிப்புக்காக மண் கலயத்தைப் பழுக் காய்ச்சி நீரில் கவிழ்த்தல், method of using the vessel to releive catch in the chest; see மூச்சுக் கலயம்.

மூச்சுக் கலயம், காய்ச்சி நீரிலிட்டுக் கவிழ்க்க மூச்சுப் பிடிப்பு நீங்கும் வரை நீரிலிருந்து விடுபடாதிருக்கும் மண் கலயம், an special earthern vessel which is made red hot and immersed with mouth downwards into water contained in a bigger vessel. It will not easily come out. It is beleived that it can be taken out only when the catch in the chest is releaved.

**மூச்சுக் குத்து,**

**மூச்சுக் குரிய,** சுவாச சம்பந்தமான; respiratory.

**மூச்சுக் குழல்,** மூச்சு விடும்போது காற்றுப் புகுங் குழாய்கள், சுவாசக் குழல்; bronchial tube air passage.

**மூச்சு சுழித்து வாங்கல்,** மூச்சுத் திணறல்; which see.

**மூச்சுத் தாங்கல்,** see மூச்சடைப்பு.

**மூச்சுத் திணறல்,** a paroxysmal dyspnoea; broken wind.

**மூச்சு நிதானம்,** new powers of respiration succeeding to the first breathlessness.

**மூச்சுப் பறிதல்,** பலயீனப்படல்; growing weak; 2. மூச்சு வெளிப் போதல்; breathing out.

**மூச்சுப் பிடித்தல்,** மூச்சடக்க அப்பியாசித்தல் to sit at and practise to suppress breathing.

**மூச்சுப் பிடித்துக் கொள்ளல்,** catch in the chest.

**மூச்சுப் பிடித்து முக்கல்,** to hold and strain breath as in labour.

**மூச்சுப் பிடிப்பு,** மூச்சு விடுகிறபோது ஏற்படும் வலி, catch in the chest — pain during breathing.

**மூச்சுப் பேச்சின்மை,** சுவர்ணையற்ற நிலைமை; unconsious.

**மூச்சு முட்டல்,** மூச்சு விடமுடியாமை; difficult respiration — Dyspnoea — breathing hard.

**மூச்சு வாங்கல்,** சுவாசம் உள்வாங்கல்; gasping for breath. This may occur in Preumonia bronchitis, and asthma and also in kidney and heart diseases. 2. inhaling — inspriation. 3. மேல் மூச்சு வாங்கல்; hard breathing.

**மூச்சு விடல்,** சுவாசம் விடல்; expiration,

**மூச்சுவிட முடியாமை,** Oppressen of the brething, Pulmanary collapse with failure of the air to enter the lungs due to nerve injury, weakness etc.

**மூச்சு விடாப் பிறப்பு,** still born.

**மூச்சுறுப்பு,** சுவாச அவயவம்; organs of respiration.

**மூச்செடுத்தல்,** மூச்சு உள்ளே வாங்கல்; to inhale deeply.

**மூச்செறிதல்,** நெடு மூச்சு விடல்; sighing; 2. சுவாசம் விடல்: respire.

**மூச்செறிவு,** see மூச்செறிதல்.

**மூச்சை,** மூர்ச்சை; swooning. 2. மயக்கம்; unconciousness.

**மூச்சொடுங்கல்,** சாதல்; dying. 2. மூச்சடங்கி நிற்றல்; suppression of breath.

**மூச்சொடுங்கி நிற்றல்** a condition marked by interrupted or suppressed respiration and consiousness — Suspended animation.

**மூச்சொடுங்கிப் போதல்,** இறத்தல்; expiring.

**மூஞ்சி,** முகம்; face.

**மூஞ்சு சுண்டல்,** முகங் கருகல்; growing dark in the face.

**மூஞ்சுறு,** / **மூஞ்சூறு,** எலி யினம்; shrew mouse — musk rat; blind mouse.

**மூஞ் சூற்று முள்ளன்;** ஓர் கிழங்குக் கொடி; a creeper plant.

**மூஞ்சை,** கோணிய முகம்; a deformed face. 2. நீண்ட முகம்; long face; 3. நீண்ட மூக்கு; long and protruding nose.

**மூஷி ககர்ணி,** / **மூஷி கபர்ணி,** எலிச் செவிக்கீரை; a hairy prostate plant-rat's ear plant — Ipomaea reniformis Merremia gangetica (emarginata).

**மூஷிகம்,** பெருச்சாளி; bandicoot.

**மூடக பாலை,** இலைக்கள்ளி; leafy spurge — Euphorbia neriifolia.

**மூட கருப்பம்,** அடியிற் கண்ட காரணங்களினால் கருப்பையிலிருக்கும் குழந்தை பிறந்து போய் விட்டாலும் அல்லது உயிருடன் இருந்து கொண்டு வெளி வராது மாறுக விருக்கும் நிலைமை; false presentations

and difficult labour. Causes are: Sexual intercourse during pregnancy, riding on horse back, or in any sort of conveyance, a very long walk, a flase step, a fall, a pressure on the womb, lying down on an uneven surface, or in an uneven posture, fasting, valumtary repression of any natural urging of the body, partaking of extremely bitter pungent things, eating in inordinate quantities of alkaline substances, dysentery, use of emetic or purgatives, swinging in a swing or hammock, indigestion and use of medicines which induce the labour pain, or bring about abortions and such like causes tend to expel the foetus from its fixure. These causes tend to sever the child from the uterine wall with its placental attachment owing to a kind of uterine contraction just as a blow tends to severe a fruit from its pedicle.

**Definition:-** Mudagarbham is an obstructed foetus which is brought in an inverted posture at the entrance of the vaginal canal and is impacted at that place owing to the Apana vayu getting disordered and not operating towards the expulsion of the foetus.

1. மேடு பள்ளமுள்ள விடத்தில் படுத் ஆத் தாறுமாருகப் புரளுவதினாலும் கெட்ட செய்கைகளினாலும் வயிற்றினிலிருக்கும் குழந்தையின் கையும், காலும் உள்ளே சிக்கிக் கொண்டு பிண்டம் வெளிப்படாதிருத்தல்.

2. பிரசவ காலத்தில் இயற்கைக்கு விரோதமாகக் கால்கள் கீழாகவோ அல்லது ஒரு கால் ஒரு கை முன்னதாகவோ வெளிப்பட்டாலும் அல்லது உடம்பு குறுக்கிட்டு வெளிவராமலும் திரும்பியிருக்கும் நிலைமை.

3. இளங்கரு வாதாதிகளாலும் தகாத நடத்தைகளினாலும் ஒருவேளை கரைந்தும் கரையாமலும் பிண்டம் விழும் நிலைமை.

4 சில பெண்களுக்குக் கருப்பையில் வாதாதிக்கத்தால் கட்டுப்பட்டிருக்கின்ற இரத்தமானது காரசாரஉஷ்ணமுள்ள வஸ்துக்களினால் கரைந்து விழும்; (இதனை பிசாசு அறைந்ததென வீண்தூறாக சொல்லப்படும்.)

5. எந்தக் கருப்பமாவது பிரசூத வாயுவினால் முறுக்குண்டு அடிபடும்போது அதிக கருப்ப வேதனையுண்டாகி அக்குழந்தையானது அவ்வாயாசத்தினால் அசைவற மயங்கிக் கிடக்கும்பேசது அவ்வேதனை திடீரென நின்று அதனால் தாய்க்கு 2, 3, நாள்வரை பிரசூத வேதனை காண்பதும் குழந்தை வெளிப்படாதிருக்க பிறகும் அவ்வேதனை நின்றுபோவதுண்டு; அத்தருணத்தில் உயிருடனிருக்கும் குழந்தையை கை சாதகத்தினாலும் ஆயுதத்தினாலும் உபாயமாக வெளிப்படுத்தவேண்டும். அப்படிச் செய்யாது குழந்தை மரித்ததென நினைத்து அக்குழந்தையை சேதித்தால் தாயாருக்கும் சேதமுண்டாகும்.

1. A sort of false presentation in which the foetus comes with its hand, leg and head turned up wards and with its back firmly obstructed at the entrance to the vagina.

2. The sort of presentation in which the hands, feet and head of the child. come out with its body impacted at the entrance to vagina.

3. The type in which only a single hand and the head of the child come out with the rest of the body obstructed at the same place.

4. The type in which the child remains obstructing the head of the passage in a horrizontal position like a blot.

Note: These are different sorts of presentations but Ayarvedic science avers that there are only four. In some works the presentation is described in eight different forms or posture Operation in volving destruction of the foetus — Craniotomy—may bring fatal results to the mother.

**மூட கர்ப்பம்**, வாதத்தினால் முறைதவறி கருப்பம் விளைவிக்கப்பட்டு அனேகவகையாக யோனி மார்க்கத்தை நோக்கி வெளிப்பட முயலுதல், abnormal prepentations caused by Vatham.

**மூட கர்ப்பம்**, கருப்பத்திலிறந்த பிள்ளை, dead foetus.

**மூடக் கொத்தான்**, முடக்கொற்றான், balloon vine a creeper — Cardiospermum halicacabum.

**மூட மயிர்**, Trichiasis.

**மூடமா**, காட்டுமா, wild mango — Buchanania latifolia.

**மூடம்,** மந்தாரம், dusk; 2. மயக்கம், stupor. 3. எட்டு மரக்கால் அளவு; a measure of 8 marakkals; 4. குளிர், chill; cold.

**மூடல்,** கண்மூடல்; dying; closing eyes. 2. மூடுதல்; to cover. 3. வாய் மூடல், மௌனம் சாதித்தல்; to preserve silence.

**மூட வாதம்,** மலசல பந்தப்பட்டு நாபியை அனுசரித்து குடலை யிழுத்துப்பிடித்து வயிற்றுக்குள் வேதனை யுண்டுபண்ணும் ஓர்வகை வாத நோய், 2. கர்ப்ப வாயுவினால் பிண்டம் வெளிப்படாதிருத்தலாலும் இந்நோய் பிறக்கும், இம்மூடவாதத்தினால் வயிறுப்பல் உடம்பு மறத்தல், குத்தலுண்டாகும், a disease marked by constipation suppession of urine, pain and stiffness round the navel. This may be caused by the obstruction to the foetus from being delivered.

**மூட வைத்தியம்,** பாமர வைத்தியம், quackery.

**மூட வைத்தியன்,** Charlatan — Psuedialius.

**மூடனம்,** மிளகு, pepper — Piper nigrum.

**மூடாதியந்தம்,** முட்டைச் சிலந்தி, a kind of abscess. 2. a kind of spider.

**மூஷா துத்தம்,** துருசு; blue vitriol—Copper sulphate.

**மூடி,** கொத்தமல்லிப் பூண்டு, a plant; Corriander—Coriandrum sativum. 2. மேல் மூடி, lid.

**மூடிக நஞ்சு,** எலி விஷம், rat poison.

**மூஷி கபர்ணி,** Salvina cucullata.

**மூடிகம்,** பெருச்சாளி; bandicoot. 2 எலி, rat.

**மூஷிகம்,** பெண்களின் அதரத்தில் சிவக்கும் படி பல்லைப் பதிய வைத்தல், ஓர் தந்தக் குறி, biting mark on the lips of the woman.

**மூஷிகாதிய தைலம்,** a medicated oil used on the rectum for prolapse of the rectum.

**மூஷிக் காய்,** எலிச்செவி; See மூஷகபர்ணி.

**மூடிக் கீரை,** எலிச்செவிக் கீரை, a prostate weed — Merremia gangetica (emargineta).

**மூடு கிளிஞ்சில்,** கும்பிடு கிளிஞ்சில்; bivalve shell.

**மூடு சவ்வு,** அடைக்குஞ் சவ்வு; valve.

**மூடு சன்னி,** மொய்யற் சன்னி, ஓர் வகை சன்னி; Catalepsy — Convulsion caused by cold where in one lies speechless.

**மூடு சீலை,** கவசமிடும் துணி; cloth to cover medicine or medicinal vesael.

**மூடு சுரம்,** காமச் சுரம்; fever due to passion.

**மூடு பனி,** மறைக்கும் பனி, mist; thick fog.

**மூடு பித்தம்,** ஓர் வகை பித்த ரோகம், இதனால் நகை பணம் இவைகளைக் கண்ட இடங்களில் புதைத்தல் முதலிய தடுமாற்றங்கள் உண்டாம்,

**மூட்டம்,** மூளல்; kindinling fire.

**மூட்டம் கலைத்தல்,** break up of clouds.

**மூட்டம் போடல்,** நெருப்புப் புகை கிளம்பல்; kindling fire — gathering of black clouds.

**மூட்டல்,** பற்றச் செய்தல்; to set fire.

**மூட்டளவு,** முழங்கால் வரை; up to the knee. as in மூட்டளவு குழி வெட்டி; pit knee deep.

**மூட்டாத அக்கினி,** காமத்தீ, அதிபோகம்; fire of passion.

**மூட்டு,** பொருத்து; joint, articulation.

**மூட்டுக் கரடு,** arthritic calculus.

**மூட்டுதல்,** see மூட்டல்.

**மூட்டுத் தாபன ரோகம்,** மூட்டுகள் வீங்கும் நோய்; inflammation of the joints — Acroarthiritis.

**மூட்டு நோய்,** arthropathy.

**மூட்டுப் பிசகு,** எலும்பின் பொருத்து இடம் விட்டு நழுவியிருத்தல்; dislocation of a joint — abarticulation

**மூட்டுப் பூச்சி,** bug.

**மூட்டுப் பூச்சி மருந்து,** vermifuge—for bugs.

**மூட்டுப் பெயர்வு,** dislocation; laxation of a joint — Aparthrosis.

மூட்டு முடிகள், கபால மூலத் துவாரத்தினிரு பக்கங்களிலுள்ள பிதுக்கங்கள்; condyles.

மூட்டு வலி, மூட்டில் காணும் வேதனை; pain in the joints — arthralgia; arthrodynia.

மூட்டு வளர்த்தி, arthrophyte.

மூட்டு வியாதி, மூட்டுகளில் வரும் நோய்; disease affecting the joints—Arthropathies.

மூட்டு விலகல், மூட்டு பிசகல்; dislocation of joint.

மூட்டு வீக்கம், மூட்டுகளில் காணும் வீக்கம்; swelling of the joint — Arthrocele; arthropyma.

மூட்டு வேதனை, மூட்டுகளில் காணும் வலி; Rheumatic pain in the joints.

மூட்டைக் கொல்லி, சிறுதும்பை; which see.

மூட்டைத் தூக்கி, முடக் கற்றான்; palsy curer — Cardiospermum halicacabum.

மூட்டை நாறி, ஓமவல்லி; a plant — country borage.

மூட் டோடு, முழுவதும் மூட்டோடே வியாதி யெழுந்திடு மென்பீரே; completely.

மூணுப்பு, வழலை; the three salts obtained from the soil of fuller's earth during the full moon or new moon day.

மூணுப்பு செயநீர், பூநீரு செயநீர்; pungent liquid extracted from the three salt obtained from fuller's earth.

மூண்டன், மிளகு, pepper — Piper longum.

மூதண்ட கஷாயம், அறுகம் வேரும் மிளகும் சேர்த்து காய்ச்சிய கஷாயம், decoction of pepper and the internodes of the dub grass — Cynodon dactylon.

மூதண்ட கன்னி, தூதுவளை, a prickly climber — Solanum trilobatum; 2. பிரமியிலை, bramia plant — Gratiola moniera.

மூதண்டக் கொடி, சீந்திற் கொடி, moon creeper —Tinosphora cordifolia.

மூதண்ட சத்தி, கெந்தக பாஷாணம், a kind of arsenic.

மூதண்ட சித்திச்சி, கருமத்தை, a black or blue variety of dhatura.

மூதண்ட சூதகளிகம், பிரண்டை, a climber—Vitis quadrangularis.

மூதண்ட சரக்கு,

மூதண்டப் புளி,

மூதண்டப் பிரமியம்,

மூதண்டத் தாடுவடங்கள், சித்தா முட்டி, a plant — Pavonia zylanica.

மூதண்ட நாதம், a kind of sulphur used in fire works.

மூதண்ட மாட்டுவித்த மூர்க்கன், சவர்க் காரம், soap.

மூதண்ட மாட்டுவித்தோன், துருசு, blue vitriol; 2. காந்தம், load stone — Magnet.

மூதண்டமூலி, வில்வம், a sacred tree — bael tree—Aegle marmelos.

மூதண்டம், கொம்மட்டி, a melon. 2. அறுகம் வேர், dub grass. 3. சரக்கொன்றை, a tree —Cassia fistula. 4. நாதம், ovum.

மூதண்ட லேகியம், ஓர் வகை ஆயுள் வேத முறைப்படி செய்த லேகியம், an electuary prepared by process of Ayurveda.

மூதண்ட வெட்டை, திரா மலை, mountain containing the ore of a metal. திரா.

மூதம், இந்திரியம், which see.

மூதா, தம்பலப்பூச்சி, the cochineal insect.

மூதிகா, } மூதிக்கம், } சிவனார் வேம்பு, Shivaj's neem — a plant — Indigofera asphalathi folia.

மூதிதம், எருக்கிலை, leaf of a plant calotrophis gigantia.

மூதிரம், அவரை, a twiner — Dolichor lablab.

மூதிரா விருக்கும், எருமை விருட்சம், a variety of Euphorbia.

மூதிரி, எருமை, buffalo.

மூது, பழமை, (மூதுரை) old; 2. பெரியது; மூதண்டம், large.

மூதுகரி, எலிப்பயறு, a pulse.

மூதேவி மூலி, சிறு பூளை, a plant — woolly caper — Achyranthes lanata.

மூதை, இசங்கு, see முதைக்காலி.

மூதைக் காலி, இசங்கு, Cleodendron inerme; 2. Azima tetracanthe.

மூதைவியம், see பெரியாணங்கை.

மூத்த வாரை, பச்சோந்தி, green lizard.

மூத்தன், கந்தக பாஷாணம், a kind of arsenic.

மூத்தானுப்பு, சிறு நீருப்பு, as in "கண்ணவே மூதானுப்பில் காட்டிடுவெகு நன்றுச்சே" salt from the urine; 3. முப்பு see மூத்திரக் கல்,

(கொ-வா-காவி.)

மூத்திர உதா வர்த்தம், A repression of the desire of making water.

மூத்திர உதிரவாதம், மூத்திர வாந்தி, நெஞ்சுலர்தல் நித்திரை பங்கம் வயிறு நோவு, அதிவிக்கல், இருமல், அடிவயிற்றில் கனத்தலுடன் வலி ஆகிய விக்குணங்களைக் காட்டு மோர் வகை வாத நோய், a vatha diseases marked by sleeplessness drying of the throat, pain abdomen, cough hiccups, heaviness in the lower abdomen etc.

மூத்திரகத தோஷம், dosha caused by Pitha —collecting the urine.

மூத்திரக் காதம், நிர்ப்பந்தித்துக்கொஞ்சமாய் வருதல் அல்லது சொட்டாய் விழல், retention of urine and intermittent flow of urine during micturition.

மூத்திர கிரீச்சரம், Stranguary is a disease marked by severe pain and difficulty in passing urine.

**Causes:** Besides venereal diseases bringing about the urethral stricture, there are other causes, errors in diet, eating before the digestion of the previous meal, indiscrete in taking meals, riding, suppression of the natural urgings specially stools and urine; sexual excess.

**Symptoms:** They vary according to the derangement of the three humours; (1) Vatha: In this the urine is voided at small intervals, and sometimes in drops ouring to excessive pain the urethra, rectum and groin; (2) Pitha: urine is yellow or red, pain and burning sensation during micuration: (3) Kapham: sense of heaviness and obstruction is felt in the penis and the rectum, urine shiny, slight inflammation and swelling of the penis; (4) Injuries to the genital organs; violent blow, affecting urethra kidney and the bladder.

General symptoms are flatulence of the stomach stone in the bladder, inflammation of the urethra pain in the chest, shivering through shock.

மூத்திர கோசம், குண்டிக்காய், kidney.

மூத்திரக் கசடு, uropsammus — sediment in the urine.

மூத்திரக் கடுப்பு, நீர்க் கடுப்பு, disurea— Urrodynia.

மூத்திரக் கட்டி, urinary abscess.

மூத்திரக் கட்டு, see மூத்திர பந்தம்.

மூத்திரக் கருவி, Urinary organs.

மூத்திரக் கல், மூத்திரப் பையிலுண்டாகுங் கல், இதற்கு இசரோம சாளு என்று யுனனிப் பெயர், urinary calculus of stone.

மூத்திரக் கல், a deposit of salts in the urine— urinary calculus; 2. முப்பு (கொங். பரிபாஷை) Triple salt prepared from the salt obtained from the soil of fuller's earth.

மூத்திரக் கழலை, மூத்திர தாரையிலேற்படும் கழலை, a tumour or growth in the urethra —Urethropyma.

மூத்திரக் கழலை, a swelling untaining urine — uroncus, a cyst containg urine — urinoma.

மூத்திரக் காய், kidney.

வறட் டிருமல், வறட்சியினுல் ஏற்படும் இருமல்.

வறட்டுச் சொறி, ஓர் வகைச் சொறி, a kind of itch.

வறட்டுப் பிரசவம், dry labor.

வறட்டுப் புழுக்கை, தீய்ந்து வெளிப்படும் மலம், over dried faeces.

வறட்புள்ளின் தோஷம், குழந்தைகளுக்கு விடாத தலையசைவு வயிற்றுப் போக்கு வேற்றுக் குரல் முதலான குணங்களை யுண் டாக்கு மோர் வகைப் பறவை தோஷம், a morbid condition in children said to have been caused by the evil effects of birds, it is marked by diarrhoea, and tossing of head from side to side etc.

வறட்பூலா, ஓர் வகைப் பூல், a kind of grass; 2. வெள்ளைப் பூலாஞ்சி, poola bearing white fruits. see பூலா.

வறண்ட, உலர்ந்த, hot and dry.

வறண்முள்ளி, ஓர் முள்ளி, a thorny shrub.

வறதாரு, கறிமுள்ளிக் கீரை, which see.

வறநிதிக் காந்தம், சந்திர காந்தம், which see.

வறப் பீகம், மிளகாய் நங்கை, which see.

வற முள்ளி, ஓர் முள்ளி, a thorny shrub.

வறவறப்பு, state of skin in dew season.

வறவு, கஞ்சி, rice gruel.

வற வொட்டி, ஓர் பூடு, a plant.

வறளாரை, வரளாரை, a plant on dry soils.

வறள் மாந்தம், a disease caused by indigestion in children.

வறன் மூலம், ஓர் மூலம், a variety of pilse, marked by very hard stools; மலம் தீய்ந்து வெளி் காணும்.

வருளம், கொடி வேலி, a plant — Plumbago Zeylanica.

வரேுதி நங்கை, சங்கினி, one of the four classes of woman.

வறு வறுத்தல், fry; roast.

வறுத்தவுப்பு, சில பத்தியங்களுக்குச் சேர்க் கும்படி வறுத்துக் கொள்ளும் உப்பு, fried salt used when on diet.

வறுத்திடித்தல், fry and pound.

வறை, துவட்டற் கறி, fried meat.

வறைக் காய்ச்சல், see வறட் காய்ச்சல்.

வறைமா தளச்சி, நல்ல மாதளை, a kind of pomegranate.

வறையல், துவட்டற் கறி, fried meat; 2. பிண்ணாக்கு, oil cake.

வறையாடு, குறும்பாடு; மலையாடு, mountain sheep; பல மூலிகைகளைத் தின்னும், இதன் இறைச்சி சனத் நோய்களையும் பலவினத் தையும் போக்கும்; Its meat is good for health.

வற்க சஞ்சீவி, கருங்குன்றி, black jeweller's bead.

வற்க மார்க்கம், நாயுருவி, a plant — Indian burr — Achyranthes aspera.

வற்கம், மரவுரிப் பட்டை, மரப்பட்டை, bark of a tree; 2. கஞ்சி, rice gruel.

வற் கலம், see வற்கம்.

வற் காலி, வெள்ளாடு, goat.

வற்கு, ஆடு, sheep; 2. கஞ்சி, rice conjee; 3. அழகு, beauty.

வற்குசா, கார்போக வரிசி, babchi seeds — Psoralia corylifolia.

வற்குலிகம், வலியான் குருவி, a swift bird.

வற் சகம், பிள்ளை, child.

வற்சதரம், இளங்கன்று, young calf.

வற்ச நாபம், } ஓர் விஷ மருந்து, aconite; a poisonous root.
வற்ச நாபி, }

வற் சமம், குடச பாலை, a tree—Hollarrhena antidysenterica.

வற்சம், மார்பு, chest.

வற்சல மணி, கோரோசினை, bezoar—Concretion found in cow or ox.

வற்சை, குழந்தை, child.

வற்றக் காய்ச்சல். சுண்டக் காய்ச்சல், boiling to dryness.

வற்றக் காய்ச்சி. மெலிந்த மனிதன், emaciated man.

வற்ற லோகம், உருக்கு, steel.

வற்றல், அடைகாய், dried vegetable; 2. மெலிதல், becoming lean; 3. உலறல்; drying; வற்றல் வகை: 1. நெல்லி வற்றல், 2. சுண்டை வற்றல்; 3. கத்தரி வற்றல்; 4. மணத்தக்காளி வற்றல், முதலியன; varieties of dried vegetables.

வற்ற வைத்தல், சுண்டக் காய்ச்சல், heating till it becomes solid.

வற்றுத மேனி, துருசு, copper sulphate.

வற்றுலை, ஓர் கிழங்கு. a kind of root.

வற்று, உலறு, to dry; 2 சுண்டல், evaporate: 3. பலவீனப்படு, to emaciate.

வற்றுதல், காய்தல், drying; 2, வடிதல், as in வீக்கம் குறைதல், becoming reduced or resolving.

வற்று பதம். as in வற்றுபத மெழுகில், சுண்டி ஒழுகுபதமாய் வரும் சமயத்தில், a state of dryness.

வன அரித்திரா, காட்டு மஞ்சள், wild—turmeric.

வன ஆர்த்திரகம், wild ginger — Zingibar cassumunar.

வனகர்ப்பாசம், வனகார்ப்பாசம், } Hibiscus vitifolius. See பாரத்துவாசி.

வன குக்கிடம், காட்டுச் சேவல், wild fowl.

வனக் கதலி, காட்டு வாழை, wild plantain tree.

வனக் கந்தம், காட்டுக் கருணை, a plant; wild yam.

வனக் கவம், காட்டுப் பசு, wild cow.

வனக்கறி மாதர், வெள்ளாடு, goat.

வனக் கற்பாசி, see வனகர்ப்பாசம்.

வனக்கன்னி, மருதாணி, a tree — Naildye. — Lawsonia spinosa.

வனக் காந்தம், சந்திர காந்தம், which see.

வனச கந்நம், தாமரைக் கிழங்கு, root of lotus.

வனசக் கதலி, காட்டு வாழை, wild plantain tree.

வன சங்கடம், கடலை, pulse.

வனசத் துளசி, முள் துளசி, a weed — Acantho spermum hispidum.

வன சந்தனம், அகில், eagle wood; 2. தேவ தாரு, a fragrant wood.

வனசந்திரிகை, காட்டு மல்லிகை, wild jasmine.

வனச பத்திரம், தாமரையிலை, lotus leaf.

வனசபத்திரி அரிதாளரம், தாளகம், orpiment in smooth shining gold coloured scales. See பிண்ட அரிதளம்.

வனச மூலி, நாயுருவி, a plant; Indian burr — Achyranthes aspera.

வனசம். தாமரை, aquatic plant — lotus; 2. மூங்கில், bamboo — Bambusa arundinacea.

வன சம்பங்கி, இதுவே திருவாத்தி, a plant — Bauhinia racemosa.

வனச ரஞ்சனி, பெண் முலை, breast,

வனச ரோசனை, bamboo manna.

வனசா, சிறுவிடுகொள், which see. கற்கடக சிங்கி, a drug — a gall growing in the tree — Pistacia integerrima. It looks like crab's leg.

வனசிருங் காடம், யானை நெருஞ்சில், which see.

வன சீரம், காட்டுச் சீரகம், wild cumin seed.

வன சீவி, வன்னி, a tree.

வன சூகரம், காட்டுப்பன்றி, boar.

வன சூலம்,

வனசை, சந்தனம், sandal.

வன சோபனம், தாமரை, lotus.

வனச் சார்பு, முல்லை நிலம், sylvan tract.

வனச் சுவை, நரி, fox; 2. புலி, tiger; 3. நாவி, aconite.

வனஸ் பதி, பூவா மரம், tree bearing fruits without flowers as அத்தி.

வனஸ் பத்தியம், பூத்துக் காய்க்கு மரம், trees bearing flowers and fruits.

வனதாரி, see மூக்கத் தாரி.

வனதித்தம், குடசபாலை, a tree — Hollarrhena antidysenterica

வனதித்தா, வட்டத்திருப்பி, a twiner — Cissampelos pareira.

வனதீபம், சண்பகம், a flower; Champaca; 2. சோதி விருட்சம், which see.

வன துர்க்கி, கடுக்காய், Indian gall nut.

வன துர்க்கி சேய், கடுக்காய் பிஞ்சு, tender-Indian gall nut.

வனதேவிச் செடி, see குத்துப்பிடாரி.

வனத்தவசி முருங்கை, குருகத்திப்பூடு, a plant.

வனத்தி, தூதுவளை, a thorny shrub — Solanum tribobatum.

வனத்திடு விரட்டி, காட்டெரு முட்டை, wild dung cake.

வனத்தில்லை, தில்லை, a tree — Excoccaria agallocha.

வனத்துக் குடோரி, கடுக்காய், Indian gall nut.

வனத்து முட்டை, see வனமுட்டை.

வனத் துளசி, காட்டுத்துளசி, wild basil

வனத் தெரு. காட்டெரு முட்டை, காட்டெருவு, dung found in forest.

வனத் தேரி, ஆவரஞ்செடி, a shrub — Cassia auriculata.

வன நங்கை, மலை நங்கை, a plant.

வன நரம், குரங்கு, monkey.

வனந்தரி வாளுயர், காட்டெருமை, wild buffalo.

வனபதி, பூவாது காய்க்கு மரம், a tree yielding fruits without flowering.

வன பத்தியம். see வனபதி.

வன பலம், யானைத் திப்பிலி, a plant— Pericarps of Pothos officinalis — a large variety of Piper longum.

வன பாதவம், காட்டு மரம். wild tree.

வனபிப்பிலி, காட்டுத் திப்பிலி, wild piper longum; 2. யானைத் திப்பிலி; see வன பலம்,

வன போசனம், காய்கிழங்கு அருந்தல், living on fruits and roots of the forest.

வனப் பதி, ஆல், Banyan tree — Ficus bengalensis.

வனப் பதியம், பூவாமற் காய்க்கு மரம், See வனபதி.

வனப் பருத்தி, காட்டுப் பருத்தி, Herbaceous cotton — Gossypium herbaceum.

வனப் பிச்சி, தகரை, a plant — Cassiatora.

வனப் பிரமி, சதுரகிரியில் விளையும் ஓர் மூலிகைச்செடி, இது கொடியாகப் படர்ந்து இலை நெல்லி இலையைப் போல் தடிப்பாக இருக்கும், இதை ஞாயிற்றுக் கிழமையும் பூச நட்சத்திரமும் கூடிய சுப தினத்தில் சாப நிவர்த்தி செய்து சமூலமும் பிடுங்கி, வந்து சூரணித்து 30 நாள் புளித்த காடியில் கலக்கிப் புசித்துவர, காய சித்தியாகும், a herb growing in Sathuragiri hills; it is creepers it must be collected on an auspecious day as said above (See Tamil version) and made into powder and mixed with காடி, and taken 30 days, the body becomes rejuvenated.

வனப்பிரமி, பெரிய பிரமி; காட்டுப் பிரமி, a plant.

வனப் பிரமை, ஓர் கற்ப மூலிகை, a rejuvenating plant.

வனப்பிரியம். குயில், a singing bird — Indian cuckoo; 2. கொடி முந்திரிகை, vine grapes; 3. இலவங்கப்பட்டை, cinnamum bark.

வன மஞ்சரி, see கோழியவரை.

வன மைத்தாங்கி, ஆகாச கருடன், sky root; a creeper — Bryonia chigaea.

வனமரை, ஓரிதல்த் தாமரை, a lotus of one petal — Ionidium suffruticosum.

வன மல்லி, காட்டு மல்லிகை, wild jasmine.

வன் மல்லினி, இருவாட்சி, a variety of jasmine —Jasminum sambac.

வனமா, வனமாசம், } கொடிவேலி, a plant — Plumbago zeylanica.

வனமாகு மூலி, ஆவரஞ் செடி, a shrub — Cassia auriculata.

வன மாசிகம், முள்ளிக் கீரை, a thorny greens.

வனமா மூலி, நன்னாரி, Indian sarsaparilla —Hemeidesmus indicus.

வன மாருதம், இந்திர கோபம், a red velvety insect.

வனமாலி, பிரமி, a medicinal prostate plant — Gratiola monieri; 2. பிரம தண்டு, an ask coloured thorny plant with yellow flowers—Mexican poppy, Argentina — Argemona Mexicana.

வனமாலைப் பூடு, மருளூமத்தை, a variety of Dhatura.

வன மாவாரம், வனம் + ஆவாரம்; தகரை, Cassia tora.

வன மிகுத்திரி, காயாங்குலை, a plant.

வனமிகு மூலி, ஆவாரை, a shrub — Cassia auriculata.

வன மிரட்டி, வனமரிட்டி; மணியாட்டங் கொடி, which see.

வன மீகம், புற்று மண், the earth or mud of the white ant-hill.

வன மீன், முதலை, an animal — Crocodile.

வன முசுட்டை, மலை முசுட்டை.

வன முட்டை, காட்டெரு முட்டை, dung found in the forest.

வன முரை, முதிரை, காய் தனியங்கள், pulses.

வன முழுதாளி, எட்டி மரம், a tree bearing poisonous fruit — Strychnos nux vomica.

வன முள்ளாலி, பெருங் குறிஞ்சான், which see.

வன மூலம், விழி, a medicinal plant.

வனமூலி, வில்வம், a holy tree — Crataeva religiosa.

வன மூலிகை, காட்டு மூலிகை, plants of wood lands; 2. ஆவாரை, a shrub — Cassia auriculata.

வன் மூலிகை, ஆவாரை, a shrub — Cassia auriculata; 2. காட்டு மூலிகை, forest herb.

வன மேதிகை, Melilotus parviflora alias Trifolium.

வன மோசை, காட்டு வாழை, wild plantain tree.

வன மௌவல், காட்டு முல்லை, wild jasmine.

வனம், அழகு, beauty; 2. சுடுகாடு, cremation ground; 3 துளசி, Ocimum sanctum; 4. நீர், water; 5. கண்ணின் மூன்று சுவச் சங்களுள் முற்பகுதியிலிருக்கும் அறைகளில் நிரம்பியிருக்கும் தெளிந்த நீர், Aqueous humour; 6. பனங்கள், Palmyra toddy; 7. புற்று, anthill.

வனய மாணி, Seseli indicum.

வன யீட்டி, ஓர் மூலி, இது சாரத்தைக் கட்டி தமனிய மாக்கும், a rare drug capable of consolidating salammoniac and used for transmuting any metal into gold.

வன ரஞ்சனி, முலைப் பால், breast milk.

வனராச பூண்டு, சிறு தும்பை, a small variety of leucas.

வனருகம், தாமரை, lotus.

வன லட்சுமி, வாழை, plantain.

வனலதா, காட்டுக் கொடி, a wild creeper.

வனவசம், சந்தனம், sandal (red sanders) —Pterocarpus sandalinus.

வனவரம்பை, காட்டு வாழை, wild plantain tree.

வனவரீகி, மலை நெல், paddy grown in mountains.

வனவாசனம், நாவி, a poisonous root—aconite.

வனவாசி, யோகி; சித்தன், Yogi or Siddhar.

வனவிந்து, See விந்து.

வன விலாசினி, ஓர் செடி, a plant.

வனவுல், பெண் மரம், female tree.

வனுகி, முயல். hare; rabbit.

வனுசம், காட்டாடு, wild sheep.

வனுமலகம், காட்டு நெல்லி, wild Indian goose berry — Phyllanthus emblica.

வனி, செஞ் சித்திரமூலம், a plant — Plumbago rosea.

வனிதா, ஞாழல், European saffron.

வனீரம் காட்டுத் திப்பிலி, Piper longum of the wild species.

வனுக்கு, துருசு, blue vitriol — Copper sulphate.

வனோதலாட மூலி, பொற்றலைக் கையாந் தகரை, a prostate plant — Eclypta prostata.

வனேற் சாகம், காண்டா மிருகம். an aquatic animal — Rhenoceros.

வன் கண், நச்சுக் கண், evil eye.

வன்கனத்தம், தவசி முருங்கை, wild moringa tree.

வன் காய், கடுங்காய், unriped hard fruit.

வன் கிழம், வலுகிழம், a very old person.

வன்சிரம், ஓர் மீன், a fish. See வஞ்சரம்.

வன்சுரம், கடுமையான சுரம், burning fever.

வன்துருக்கி, வன் துர்க்கி, } கடுக் காய், Indian or black myrobalans.

வன் தோஷம், திரிதோஷம், the three vitiated humours.

வன் பிணியுறல், suffering from drasticor virulent disease.

வன்புற்று, ஓர் வகைப் பிளவை, அரை நெறி வீங்கி அரையாப்புக் கட்டியைப் போற் காணும், a hard tumour usually proceeding from the induration of a gland, often terminating in a cancer — Scirrhous.

வன்மம், gall.

வன்மரம், உள்ளே வயிரம் பாய்ந்த மரம், the heart of a tree, the inner solid portion of tumber.

வன்மரை,

வன் மலைத் தங்கம், சாலக் கிராமம், a species of ammonite yellow in colour commonly found in the Gandaka river.

வன்மனம், கல் நெஞ்சு, iron heart; stone heart.

வன்மிகம், ஓதம், wet; 2. ஓர் வகைக் கிரந்தி. the knotty undurated eruptions which gradually appear on the soles palms, joints, neck and in the region above clavicle resembling an ant-hill in shape. The ulcers are attended with pricking pain, burning and itching sensation followed by much purulent discharges.

வன் மீகம், புற்று, ant-hill.

வன் மீன், முதலை, crocodile.

வன்மை, வல்லமை, strength.

வன்னக் கல், மந்தாரச்சிலை, sky coloured stone; 2. பல வர்ணக்கல், stone of many colours.

வன்னக் கூர்மை, கல்லுப்பு, rock salt.

வன்னசை, பேசியின் தலைப்பிலே தொடுத் திருக்கு வயிரமுள்ள நார் போன்ற ஓர் வெள்ளை வஸ்து. a hard insensible bundle of fibres by which a muscle is attached to a bone.

வன்னசை நார், கபாடங்களின்அடிப் பாகங் கள் சடரச் சுவர்களோடு இணைத்துக் கட்டு மோர் வித நுற்பமான தசை நார், the tendinous strings which connect the colomnae carnae of the heart — Ventricles with the Ventricular valves.

**வன்ன பிரசாதினி**, நேய மரம், a tree.

**வன்னப் புரு**, இரைப்பு, ஈளையை நீக்கும் ஓர் புரு, a dove whose flesh cures phlegm and asthma.

**வன்னமதை**, கோரோசனை, bezoar found in cattle.

**வன்னம்**, தங்கம், gold.

**வன்னாடி**, கடின நாடி, hard pulse.

**வன்னி**, ஓர் மரம், soma tree — Prosopis spicigera 2. காமத்தீ; 3. இலிங்கம், cinnabar; 4. வெள்வேல், Acacia ferruginca; 5. கொடி, creeper; 6. நெருப்பு, fire; 7. சன்னி, delirium; 8. மாவிலிங்க மரம், which see; 9. சேங் கொட்டை, marking nut; 10. வெள்ளை நாகணம், which see; 11. கந்த பாஷாணம், a kind of arsenic; 12 சவர்க் காரம், soap; 13. see முன்னை; 14 கொடி வேலி, a plant — Plumbago zeylanica.

**வன்னி கருப்பம்**, மூங்கில், bamboo — Bambusa arundinacea.

**வன்னி கற்பம்**, இலிங்க பாஷாணம், a kind of arsenic; 2. லிங்கக்கட்டு, consolidated cinnabar; 3. உலாந்தா லிங்கம், cinnabar of Holland; 4. சடைக்கஞ்சா, ganja.

**வன்னிகா**, பொடுதலை, a prostate plant —Lippia nodiflora; 2. வன்னி, which see; 3. see வாகை.

**வன்னி குன்மம்**, ஓர் வகைக் குன்மம், a variety of Gunma disease —Dyspepsia.

**வன்னி கெற்பம்**, இலிங்கக் கட்டு, consolidated cinnabar.

**வன்னிகை**, பொடுதலை, a prostate plant — Lippia nodiflora.

**வன்னிக் காசிகம்**, முள்ளுக் கத்தரி, a thorny brinjal.

**வன்னிக்காரம்**, அக்கிரா காரம், a flowering tree of North Africa — Anacyclus pyrethrum; only its root is used in medicine.

**வன்னிக்காய்**,

**வன்னிக் கீரை**, முள்ளிக் கீரை, a vegetable greens.

**வன்னி குருத்து வேலன்**, சீமை வெள்வேல், a tree — Acacia ferruginca.

**வன்னி சுரம்**, நெருப்பு சுரம்; கொடிய சுரம், virulent fever.

**வன்னி சூட்சம்**, தூணியாங்கிஷம், which see.

**வன்னி தீபனம்**, கிருமி சத்துரு, which see.

**வன்னித்தீ**, நவச்சாரம், ammonia.

**வன்னித் தீயோன்**, see வன்னித்தீ.

**வன்னித்துடரி**, முன்ரெுடரி, which see.

**வன்னித் தும்பை**, புத்தி தெளிவை யுண்டாக்கும் ஓர் பெருந் தும்பை, which see.

**வன்னி நாளி**, பவள மறுகு, (சுவாசத்தைப் போக்கும்) a kind of grass.

**வன்னி நிமிளை**, அஞ்சனக்கல், sulphurate of antimony.

**வன்னிப் பட்டை**, bark of soma tree.

**வன்னிப் பிரியம**, கொடி வேலி, a plant with rubificent action — Plumbago zeylanica.

**வன்னி பொக்கிஷம்**, } நெய், ghee.
**வன்னி பொக்கியம்**, }

**வன்னி மண்டல சித்தன்**, இரச வாத முறை கலை இயற்றிய சித்தர்களில் ஒருவர், a Siddhar versed in alchemy.

**வன்னி முருங்கை**, முள் முருங்கை, which see.

**வன்னியடுப் பேற்றல்**, தீ மூட்டல், to set fire.

**வன்னியம்**, பெரு முத்தக் காசு, which see.

**வன்னியா**, இரும்பிலி, a small tree — Maba buxifolia.

**வன்னியாமம்**, see நத்தைச் சூரி.

**வன்னியிடல்**, தீ மூட்டல், to set fire.

**வன்னியின் கெற்பம்**, இலிங்க பாஷாணம், a kind of arsenic.

**வன்னி லோகம்**, செம்பு, copper.

**வன்னி வண்ணம்**, செந்தாமரை, red lotus; 2. செவ்வாம்பல், red water lily.

**வன்னி வாகை**, கருவாகை, fragrant acacia tree — Abizzia odoratissium.

**வன்னி விருக்கம**, வன்னி மரம், soma tree.

**வன்னி வீசம்**, பொன், gold.

**வன்னீர்**, உவர் நீர், brachish water.

**வன்னெத்து**, see நத்தைச்சூரி.

**வன்னெற்று**, வன்னெத்து, which see.

வா, அத்தி, fig tree — Ficus glamerata.

வாகசம், பெரும் பாம்பு, a big snake.

வாகட நூல், வைத்திய நூல், medical science.

வாகடபாரி, பச்சோந்தி, green lizard—Chameleon.

வாகட முறை, வைத்திய நூலில் சொல்லிய முறை, according to medical science — Officinal.

வாகட முறையற்ற, நூலை அனுசரியாத; unofficinal.

வாகடம், வைத்திய நூல், (வாகு + அடம்) ஒழுங்காக நோய்களைப் போக்கு முறையைக் கூறுவதாகிய நூல் என்று விரித்துடன் மொழித் தொகைப் பெயராகவமையும், ஆதலின் நோய்களைப் போக்கு முறையை ஒழுங்காக் கூறும் இந்நூலில் வல்லவர் தாம் வாகடம் எனப்படுவர், வாகு — உடம்பு — ஒழுங்கு, அடம் — (அடு + அம்) அடுதல், அடுதலைக் கூறும் நூல், medical science — Therapeutics, Pharmacopoeia.

வாகட விதி, வைத்திய நூலிலுள்ள விதிகள், Rules of Pharmacopoeia.

வாகம், செங்கீரை, a red leaf plant; 2. பலண்டுறுக பாஷாணம், a kind of arsenic; 3. புயம், shoulder; 4. கோமேதகம், Cinnamon stone.

வாகரம், கோணாய், wolf.

வாகவி, செங்கீரை, red leaf.

வாகனப்பாலி, திருகுகள்ளி, milky spurge —Euphorbia tirucalli.

வாகணு, } பனிப்பயறு, dew gram — Phaseolus aconitifolius.
வாகணுசி, }

வாகிடி, நீர்ப் பன்றி, water or sea hog.

வாகியம, கலவியில் பெண்கள் கோசத்தின் பூணை சும்பித்தல், sucking the glans, penis by woman.

வாகினி, பாதிரி, a tree — Bignonia chelonoides.

வாகு, தோள், shoulder: 2. அழகு, beauty; 3. தொட்டால்வாடி, a sensitive plant — Mimosa pudica.

வாகுசம், எள், sessamon seed; 2. குப்பைக் கீரை, some rubbish greens; 3. கிளி, parrot.

வாகுசி, கார்போகவரிசி, a fragrant seed — Psoralea corylifolia.

வாகுசிவிரை, வாகுசி, which see.

வாகுடையாள், வாலுளுவை யரிசி, seeds of intellect plant — Celastrus paniculata.

வாகுதம், ஓர் பறவை, a bird.

வாகு மூலம், தோள் மூலம், shoulder; 2. கைக்குழி.

வாகுருடம், எருக்கிலை, leaf of madar — Calotropis gigantia.

வாகுலம், மகிழங்கனி, the fruit of the tree —Mimusops elengi.

வாகுவம், வஞ்சி, a creeping plant — Calamus rotang.

வாகுனி, கீழ்க்காய் நெல்லி, a plant — Phyllanthus. see பெருங்காரை.

வாகென்பு, தோட்பட்டை யெலும்பு, shoulder blade — Scapula.

வாகேசுவரி, வாணி, Goddess of learning.

வாகை, இதுவே காட்டு வாகை மரம், a tree — Albizzia lebbek; 2. தசமூலத் தொன்று, one of Dass moolam; 3. நிலவாகை, a plant —Cassia senna.

The varieties of வாகை:

1. அடக்கு வாகை, Albizzia lebbek.
2. காட்டு வாகை, common sirissa.
3. பெரு வாகை, same as No I.
4. சிற்றிலை வாகை, fragrant sirissa — Albizzia odoratissima.
5. கருவாகை, Mimosa marginata.
6. மலை வாகை, hill sirissa — Albizzia procera alias Pithecolobium coriaceum.
7. கொண்டை வாகை, same as No 6.
8. நல்ல வாகை, Albizza procera.
9. சிலை வாகை, Albizzia stipulata.
10 பிலிவாகை, கல் துரிஞ்சில், Albizzia odoratissima.
11. சாயல் வாகை, Albizzia amara.
12. சீமை வாகை, Enterolobium saman.

**வாகைப் பிசின்**, gum or resin from Albizzia.

**வாகைமேற் புல்லுருவி**, 108, கற்ப மூலிகைகளில் ஒன்று, parasite of Albizzia is one of the rejuvenating drugs.

**வாக்கத்த மூலி**, இலுப்பை, mohwa tree — Bassia tatifolia.

**வாக்கம்**, சரக் கொன்றை, a tree with beautiful hanging yellow flowers—Cassia fistulla.

**வாக்கா மூலி**, பொன்னூமத்தை, a variety of dhatura with yellow flowers.

**வாக்கியேசம்**, சிறு நீலி, a plant small variety of Indigofera sumatrana.

**வாக்குக் கண்**, சாய்ந்த பார்வை, squint eye.

**வாக்குப் பசப்பி**, சதகுப்பை, the dill or —Sowa A. Peucedanum graveolens.

**வாங்கல்**, நீங்குதல், clearing; abating as in உஷ்ணம் வாங்கல்; 2. தரித்தல், as in தலை வாங்கல், removing; severing.

**வாங்கலோ**, மருக்காரை, which see.

**வாங்கற் கழுத்து**, கோணைக் கழுத்து, Wry-neck.

**வாங்கிச நாசி**, உதிரிமாரி, which see.

**வாசக சுரசம்**, ஆடாதோடை, juice of Adathoda vasica.

**வாசக மந்திரம்**, சிவசக்தி; அட்சரப் பொருள்களை உள்ளத்திலே சிந்தித்து அவைகளை அறிவிக்கும் அரிய மந்திரங்கள்; some mantrams.

**வாசகம்**, ஆடாதோடை, a shrub — Adathoda vasica.

**வாசகன்**, காகபாஷாணம், a kind of arsenic.

**வாசகி**, கொத்தான், a twiggy plant — Cassyta filiformis.

**வாசகை**, அரக்காம்பல், an aquatic plant.

**வாசமங்கை**,

**வாசதம்**, கழுதை, an animal — ass.

**வாசந்தம்**, ஒட்டகம், an animal — camel; 2. குயில், a singing bird — Indian cuckoo.

**வாசந்தி**, ஆடாதோடை, a shrub — Adathoda vasica; 2. குருக்கத்தி, a tree — Goertnera racemosa.

**வாசந்திரம்**, கொத்தமல்லி, coriander seed — Coriandrum sativum.

**வாச புட்பம்**, புங்கு, which see.

**வாசம்**, அரிசி, rice; 2. இலாமிச்சை, a a grass with fragrant roots — Andropogon muricatus; 3. மாசிப்பச்சை, which see; 4. நெய், ghee; 5. நீர், water; 6. சாதிலிங்கம், vermilion; 7. சண்பகம், a fragrant flower—Champaca; 8. வாசனை, scent; 9. வாயு, wind.

**வாசவிலை**, கிச்சிலி, citrus fruit; bitter orange.

**வாச வுப்பு**, கல்லுப்பு, rock salt.

**வாச வெண்ணெய்**, வாசனை வெண்ணெய், scented oil.

**வாசற் பீடம்**, பெண்குறி, mons veneris.

**வாசலி**, பாதிரி, a tree — Bignonia chelonoides; 2. குங்குமச் செவ்வந்தி, which see; 3. பொற்றிலை கையாந்தகரை, yellow flowering — Eclypta prostata.

**வாசனைக் கன்னி**, சாதிபத்திரி, mace.

**வாசனைக் கெந்தி**, புன்னை, a tree; which see.

**வாசனைச் செம்பு**, வாத முறையில் உபயோகிக்கும் ஓர் வித தயாரித்த செம்பு. இச் செம்புக்கு 4 பங்கு வெள்ளி கூட்டி உருக்கப் பொன்னும், artificial copper prepared by alchemical process, if added to 4 parts of silver it is transmuted into gold.

**வாசனைத் தாம்பூரம்**, சுத்த செம்பு, see வாசனைச் செம்பு.

**வாசனைத் திரவியம்**, கந்த வருக்கம், perfumes.

**வாசனைத் தைலம்**, கூந்தலுக் குபயோகிக்கும் ஓர் தைலம், Pomatum; 2. சந்தனாதி தைலம், oil prepared with sandal wood as chief ingredient.

**வாசனைப் பண்டம்**, See வாசனைத் திரவியம், aromatic substances.

**வாசனைப் பரிட்சை**, examination by smell; one way of diagnosing by smell of discharges, pus etc.

வாசனைப்புல், இது ஒரு பொதுப் பெயர், வாசனையுடைய புற்கள், common name for fragrant grasses, காவட்டம்புல், lemon grass — Andropogon nardus; தரகம்புல், கற்பூரப்புல், பினசப்புல், மாந்தப்புல், பேய்ப் புல், காமாட்சிப் புல், (geranium grass) முதலியன.

வாசனைப்புல் கிழங்கு, கோரைக் கிழங்கு, tuber of nut grass — Cyperus rotundus.

வாசனைப்புல் லெண்ணெய், கற்பூரப்புல் லெண்ணெய், oil of Andropogon schoenanthus.

வாசனைப் பூலிகம், சந்தன அத்தர், sandal wood oil.

வாசனைப் பொடி, கந்தகப் பொடி, scented powder.

வாசனை மரம், சந்தன மரம், Sandal wood tree —Pterocarpus sentalinus.

வாசனை மருவி, புனுகு, civet.

வாசனை மல்லி, சாதி மல்லிகை, a variety of good smelling jasmine.

வாசனை யலரி, கஸ்தூரி அரளி, a small tree or shrub — Nerium odorum.

வாசனை யற்ற, having no odor.

வாசனை யூட்டல், நறுமணை முண்டாக்கல்; மாந்திரபூர்வமாய் பிம்பத்தில் தெய்வ சக்தி யேற்றிப் பூஜை செய்தல், to creat good smell.

வாசனை வெற்றிலை, கற்பூர வெற்றிலை, a variety of betel leaf.

வாசனை வேதிகம், கிராம்பு, clove — Eugenia caryophyllata.

வாசனை வேர், வெட்டிவேர், khus-khus — Vetiveria zizanioides.

வாசா, ஆடாதோடை, a shrub—Adathoda vasica.

வாசாங்கம், மூக்கரைச் சாரணை; a creeper.

வாசாங்கியம், மிளகு, pepper—Piper nigrum.

வாசாணி மூலி, செவ்வா மணக்கு, red variety of Caster — Ricinus communis.

வாசாதி, ஆடாதோடை, a shrub — Adathoda vasica.

வாசாதி கிருதம், ஆடாதோடை கிருதம், medicated ghee with Adathoda vasica as chief ingredient.

வாசாலம், பெருங்குறிஞ்சி, which see.

வாசி, சுவாசம், respiration; 2. புல்லுருவி, parasitic plant; 3. குதிரை, horse; 4. பறவை, bird; 5. மூக்குரு; which see; 6. உயிர்; "பாலகனே வாசியென்று லுயிர்தானப்பா" life.

2. சீவர்களுடைய நாசியில் சுவாச நிசுவாசமாய் உலாவிவரும் பிராணு வாயு சத்தி சிவ வடிவாகிய சந்திர சூரியர் என் னும் அந்த சுவாசமே வாசியாகும்; அவ்வாசி நாள் ஒன்றுக்கு 21000 சுவாசமாக நடந்து வருகிறது, இதனுல் மனம் சுழல்கிறது.

3 வாசி என்பது பிராண வாயுவாகும்;அந்த வாசியைத் தம்வசப்படுத்தி நடாத்தவல்ல பெரியோர்களே சகல சித்திகளையும் பெறு வார்கள்; சுழிமுனையில இடகலையாகிய சந் திரன் சேரில் பஞ்ச பூதங்களும் அறிவும் ஒடுங்கும். பிங்கலையாகிய இரவி சேரில் ஐம் புலனும் அறிவும் பெருகும். அந்த இரவிமதி ஒன்றுகக் கூடி, சுழிமுனை இடததில் நிற்கில் அறிவும் தசவாயுவும் ஒடுங்கும். ஆதலால் அவ்வாசியின் மத்திய நிலையில் மூலத்திலும் குய்யத்திலும் நாபியிலும் இதயம் கண்டம் குருபதியிலும் எழுந்தருளிய ஆதார மூர்த்தி களை சதாகாலமும் சேவித்து நிற்பவர்கள் தாம் மெய்ஞ்ஞானிகளாவர், Vasi is the air or oxygen (vital air) that passes through the nostrils. If it passes through the right nostril it is Surya Kalai; If it passes through the letf it is Chandra Kalai; if it passes through both it Suzhumunai. Every 20 minutes the passage must change. One must respire 21,000 times a day i.e, 15 minute. If the Chandra Kalai unites with the Suzhumunai knowledge and senses become dull; but if Surya Kalai unites they became keen if both unite with Suzhumunai everything becomes dull.

Only those who control this respiration and six centres (ஆதாரம்) are the real men of Wisdom.

வாசி கட்டல், to control the breath.

வாசி கந்நகம், ஓர் பூண்டு, a plant.

வாசி கரண சிகிச்சை, விந்தின் வீரியத்தை வளரச் செய்து காமவிச்சையை அதிகப் படுத்தும் ஓர்வித பரிகாரம்; பலப்புஷ்டி வீரியம் இவைகளைத் தருமருந்து, the art of increasing the secreations of semon to promote sexual desire — Aphrodiac treatment, one of the eight parts or Tantrams describing the means of increasing the verite power by giving tone to the weakened organs of generation.

வாசி கரணம், அன்புடைக் காமம், mutual love or passion.

வாசி கலை, சூரிய கலை, vital air passing through the right nostril.

வாசி கெந்தா, அமுக்கிரா, a plant—Withania somnifera.

வாசிக் கல், காக்கைக் கல், a black load stone.

வாசிக் குயிர், சுத்த சலம், nutrient fluid.

வாசிக் குறி, signs of respiration.

வாசி கூட்டல்,

வாசி கொள்ளுதல்,

வாசி சித்தன், சித்தரில் தேறினவன், best of Siddhars.

வாசி சித்தி, attainment of perfection in the practice of respiration.

வாசி சோதி, அறிவு, knowledge.

வாசிட்டம், இரத்தம், blood.

வாசிட்டாதி மூலி, சதுரக் கள்ளி, square Spurge — Euphorbia antiquorum.

வாசித் தண்டு, ஆண்குறி, penis.

வாசித்த பத்திரி, முத்திருக்கஞ் செவி, which see.

வாசி நிலை, the state of respiration.

வாசி நீர், ஆகாய நீர், rain water; 2. பனிக் குடத்து நீர், liquor amni; 3. சுத்த சலம், nutrient fluid.

வாசி பட்சம், கடலை, bengal gram.

வாசி பார்த்தல், to see how the air passes whether through the right or left or both nostrils.

வாசி புட்பம், காசாங்கம், which see.

வாசி போசனம், பயறு, pulse.

வாசிப் படுத்தல், சௌக்கியப் படுத்தல், to cure.

வாசிப் பழக்கம், பிராண வாயுவை முறைப்படி சுவாச பயிற்சி செய்தல், practice of yoga or respiration.

வாசிப் பிரமம், வகாரம், the mystic letter 'Va'.

வாசிப் பூடு, கட்டுக் கொடி, a creeper that coagulates water — Cocculus villosus.

வாசி யாக்கல், குணப்படுத்தல், curing.

வாசி யோட்டம், the course of respiration.

வாசி யோட்டல்,

வாசி லயம், subjugation of respiration.

வாசி லிங்கக் கரு, see வாசிலிங்கம்.

வாசி லிங்கம், ஆண்குறி, penis.

வாசி வருமிடம், மூச்சு பிறக்குமிடம், அதாவது நுரையீரல், source of respiration i.e, the lungs.

வாசினி, வெண்குதிரை, white horse; 2. காவட்டம் புல், lemon grass — Andropogon nurdus.

வாசினை, see வாசனை.

வாசீ கரணம், வீரியத்தை யுண்டாக்கும் பதார்த்தம், aphrodisiaces or medicines which increase the sexual powers.

வாசு, இருவேலி, Khus-khus — Vetiveria zizanioides; 2. ஓர் வாயு, a gas.

வாசுகம், சவட்டு மண், fuller's earth.

வாசுகன் மூச்சு, கருமுகிற் பாஷாணம், a kind of arsenic.

வாசுகி, விந்து, semen; 2. ஓர் நாகம், a cobra; 3. see ஆத்தி மல்லிகை; 4. நாகமலை, zinc-ore.

வாசுகி கற்பம், கார்போகவரிசி, a fragrant seed; babehi seeds — Psoralea corylifolia.

வாசுகிக் கொடி, காக பாஷாணம், a kind of arsenic.

வாசுகி நாதன், சூதபாஷாணம், a kind of arsenic.

வாசுகிந்தன், எருமை முன்னை, a tree — Premna latifolia.

வாசுகின் பேதி,

வாசுடா, பலகறை, cowri.

வாசுதேவ மூலிகை, வெள்ளை நீர்முள்ளி, a thorny plant bearing white flowers.

வாசுவாயு,

வாச்சாங்கம்,

வாசு பிகை, ஓர் பூடு, a herb—Pimpinella involucrata.

வாசை, } ஆடாதோடை, a shrub — Adathoda vasica.
வாச்சி, }

வாஞ் சிகம், மூங்கிலரிசி, seeds—Concretions of bamboo.

வாஞ்சிக் கொடி, முல்லை, a variety of jasmine.

வாஞ்சி மலை, see விடத்தாரி.

வாஞ் சினி, காமி, a passionate person.

வாட நாழி, பேய்ப்புடலை, a bitter wild snake gourd good for fever; — Tricosanthes laciniosa.

வாட பதி, உடம்பின் கொழுப்பு, fat of the body —adipose tissue.

வாடபூமாது மூலி, கொட்டைப் பாசி, which see.

வாடமையான பருப்பு, see ஏரழிஞ்சில்.

வாடல், மெலிதல், emaciating; 2. பலவீனப் படல், growing weak.

வாடவசி, தொட்டி பாஷாணம், a kind of arsenic —red orpiment.

வாடாக் குறிஞ்சி, குரவகம், a flowering tree whose flowers do not change colour in whithering — Lawsonia alba.

வாடாக் கொடி, கருநொச்சி, which see.

வாடாச் செடி, ever green plant.

வாடாத்தம், ஆல், banyan tree — Ficus bengalensis.

வாடாப் பூ, வாடா மல்லிகை, தென்னம் பூ. பனம் பூ, பரிக்காத பூ, which see.

வாடா மல்லிகை, ஓர் சிவப்பு பூச்செடி, a plant whose flowers do not fade — Gomphrena globosa.

வாடா முட்செடி, மஞ்சட் பூவுள்ள ஓர் செடி, a thorny plant with yellow flowers — Furze.

வாடி, தொட்டால்வாடி, a sensitive plant — Mimosa pudica.

வாடிகம், பேராமணக்கு, castor seed large variety —Ricinus Communis.

வாடிக்கை, பழக்கம், habit.

வாடிக்கைச் சுரம், சாதாரண சுரம், hectic fever; fever that comes routinely.

வாடி வதங்கல், காய்ந்து சுருங்கள், drying and shrinking.

வாடு, வதங்கு, fade; 2. மெலி, emaciating; 3. கருவாடு, dried fish.

வாடை, வாசனை, smell; as in மருந்து வாடை: 2. வெண்கடுகு, white mustard.

வாடைய வலன், பேராமுட்டி, a plant — Pavonia odorata.

வாடை வசியம், (in magic) enchanting, charming.

வாட் கோரை, ஓர் வகைக் கோரைப்புல், a kind of nut grass.

வாட்சி, மல்லிகை, இருவாட்சி, a variety of jasmine.

வாட் சூலை, ஓர் வகைச் சூலை நோய், a kind rheumatic pain.

வாட்ட சாட்டம், a person with good physical body.

வாட்ட முகம், drooping face.

வாட்டம், சோர்வு, fatigue; 2. வாடல், fading.

வாட்டல், உலர்த்தல், drying; ustulation; 2. சுடல், roasting; frying; 3. துன்புறுத்தல், teasing; 4. Exsiccation.

**வாட்டாங் கொடி**, See ஆட்டாங் கொடி.

**வாட்டாழை**, கடற்றாழை. which see.

**வாஷ்டி**, பருத்தி, cotton.

**வாட்டிப் பிடிப்பான்**, தழுதாழை, a shrub — a hedge tree — Clerodendron phlomoides.

**வாட்டிப் பிழிதல்**, squeezing the juice after slight heating as in betel.

**வாட்டிய புட்பம**, சந்தனம், sandal — Pterocarpus santalinus.

**வாட்டியம்**, சந்தனம், sanders — Pterocarpus santalinus.

**வாட்டி யாயினி**, அதிபலை.

**வாட்டுதல்**, வதக்கல், toasting — the process of removing moisture from solids or organic tissues — Desiccation.

**வாட் பல்**, *(வால் + பல்)* serrated tooth — toothed like a saw.

**வாண கத்தி**, அரசமரம், a sacred tree — Ficus religiosa.

**வாண கந்தி**, அரச மரம், pepul tree — Ficus religiosa; 2. ஓர் பாஷாணம், a kind a prepared arsenic; 3. ஓர் கந்தகம், a variety of sulphur — stick sulphur; rock sulphur.

**வாணகந்தி யுப்பு**, வெடியுப்பு, salt petre.

**வாண காந்திகம்**, சோதிப்புல், which see.

**வாணக் கா**, நெல்லிப் பருப்பு, kernel of the fruit—Emblica — Indian gooseberry,

**வாணரம்**, மூளையையும் முதுகந்தண்டங் கொடியையும பற்றிய நோய், inflammation of the brain and the spinal card — Meningitis.

**வாணவாதம்**, கால் கையை சுருக்க வாங்கி இழுத்து கடுத்து நோயை யுண்டாக்கும் ஓர் வகை வாத நோய், a kind of rheumatism.

**வாணவுப்பு**, வெடியுப்பு, potassium nitrate.

**வாணுள்**, வாழ் நாள், life time.

**வாணி**, சாதிபத்திரி, mace; 2. அசமதாகம், a variety of Omum — See வாணிகம்; 3. மனோசிலை, red orpiment; 4. கோழை நீர், mucilage; 5. இந்துப்பு, epsom salt; 6. வாலுளுவையரிசி, seed of a plant — Celastrus paniculata; 7. முடிமாமிசம், flesh of the head; 8. சரஸ்வதி, Goddess of learning.

**வாணி கச்சம்**, வறட்சுண்டி, a species of sensitive plant — Mimosa tripuctra.

**வாணிகம்**, அசம தாகம், Carum roxburghiana.

**வாணிச்சிமேனி**, மாணிக்கம், one of nine gems — Ruby.

**வாணிதம்**, கள், toddy; 2. அகத்தி, a tree — Sesbania grandiflora alias Coronilla grandiflora.

**வாணிதி**, மனோசிலை, red orpiment; red arsenic; 2. மூங்கில், bamboo.

**வாணி மலர்**, வெண்டாமரை, white lotus plant.

**வாணில்**, பலண்டுறுக பாஷாணம், a kind of arsenic.

**வாணீகம்**, உலோகத் திராவகம், which see.

**வாண்டியம்**, பேராமுட்டி, a plant — Pavonia odorata.

**வாத கணம்**, தேரைக்கணம், a disease caused by congenital heat.

**வாத கணம்**, a disease of the children caused by congenital heat. It can affect them at any age within 13.

**வாத கண்டகம்**, குதிகால்களை ஊன்றி நடக்க முடியாமலிருக்கும் ஓர் வாத நோய், wind humour gets vitiated and affects any bone or bones of the ankle and causes much pain when walking. It is in my opinion due to the inflammation and growth in the calcaneous bone growth of spur in the calcaneous bone (by C. D ).

**வாத கண்டம் பகலாதி**, கருமத்தை, black or blue variety of dhatura.

**வாத கதம்**, வாயுவினால் கண் இரைப்பைகள் சிமிட்ட முடியாது கொஞ்சமாக சிமிட்டுதல், partial immobility of the eyelids due to vitiated wind humour,

**வாதகப சமனி**, அசம தாகம், a variety of omum which see. It brings down excited wind and phlegm humours.

**வாதகப தொந்தம்**, combination of Wind and Phlegm humours.

வாதகபப் பிரமேகம், venereal urinary symptons affecting the wind and phlegm humours

வாத கபம், See வாதகப தொந்தம்.

வாதகப வரம், கருப்பு அகரம், which see.

வாதகப விருத்தி, பலா, Jack fruit tree — Artocarpus integrifolia.

வாதகம், பாரிச வாயுவினால் ஏற்படும் இடுப் புப் பிடிப்பு, rheumatic pain; 2. சூதகவாயு, dysmenorrhoea.

வாத கரப்பன், குழந்தைகளுக்கு உடல் வெளுத்து, கண் சிவந்து தடித்துக் காணும் ஓர் நோய், a disease of the children marked by red eyes, and pale body.

வாத கரம், drugs that expel exited wind.

வாத கருஷணம், வாதத்தினால் உள்ளடியிற் சாணி பதித்து வைத்தது போல் தோன்றி பாதமெங்கும், குதிநரம்பு, கால்கள் முழுவ தும் பாரித்து, திமிருண்டாகி குனியவும் நிமிரவும் முடியாது காலுளைக்குமோர் வாத நோய், (யூகி 800) a disease of the foot caused by the vitiated wind humour marked by numbness of the part, and inability to bend or stretch and a feeling of something sticking to the foot and enlargement of the limb.

வாதகலை, சூரியகலை, vital air passing through the right nostril.

வாதகள கண்டம், see, புரைக் குழல்.

வாதகள கண்டம், புரைக்குழை, cyst.

வாதகாசம், நடுவிழியைக் கடுத்து நொந்து சுழித்துள்ளே இழுத்துக் கொண்டு இமை கள் வீங்கி, தூக்கமற்று தலைவலி கண்ணீர் வடிதல் அதிவேதனை முதலிய குணங்களைக் காட்டுமோர் தீராத கண்ணோய், an incurable eye disease affecting the pupil of the eye marked by the contraction of the part, pain, swelling of eye lids, head ache. watering of eyes etc, Asthma caused by wind humour a pulmonary complaint: 2. கனத்த பொருளை மெல்லிய வுருவாகக் காண்பிக்கும் ஓர் வகைக் கண் காச நோய், an eye disease which shows thick objects as thin.

வாதகாமாலை, தேமுலர்ந்துமுகமும் அதைத்து வெளுத்து மூலத்தில் அக்கினி மந்தித்து அன்னத்தை ஒழித்து கை கால் ஓய்ந்து பலங்குன்றி அயர்ந்து புறங்காலமைத்து மலங்கட்டி வயிறு பொருமி ஆயாசத்தை யுண்டாக்கும் ஓர் வகை காமாலை, jaundice of Vatha type. Early stage of jaundice marked by nausca, lasstitude of the limbs, loss of appetite etc.

வாத காவியம், அகஸ்தியர் செய்த பஞ்ச காவியத்தில் வாத முறையைப்பற்றிச் சொல்லும் ஓர் பிரிவு, a medcal treatire by Saint Agastya.

வாத கீர்ச்சரம், burning sensation during micturation.

வாத குடிலம், வாதப் பிடிப்பு, stiffness of joints caused by wind humour.

வாத குண்டலி, வாயுவானது தொப்புளின் கீழ் வயிற்றில் அதிக வலியை யுண்டாக்கி, பாம்பைப் போல் சுற்றிக் கொண்டு மூத்தி ரத்தைத் தடுத்து உடம்பில் மரத்தலுண்டு பண்ணி, மூத்திரம் துளித்துளியாய் விழச் செய்யும் ஓர் நோய், a disease caused by stricture of urine due to the incarceration of vayu in the region of sacrum. The bodily vayu deranged and aggravated through an extremely parched condition or through the voluntary repression of an urging towards micturation affects and retains the urine in the bladder causing to resolve in eddles with in the cavity of the organ. It allows the urine to pass in small quantity or even to dribble out in dropes with pain. It is a violent type.

வாத குண்டலிகா, வாயு கீழுமேலுமாய், சுழன்று குண்டலியைப் போல் ஓடியுண்டா கும் ஓர் நோய், a disease caused by the windy state of the body.

வாத குண்டலிகை, நீரடைப்பு, stricture of urine.

வாத குதம், obstructed anus.

வாதகுதோதரம், a stomach disease characterised by obstructed stomach

வாத குன்ம நாசினி, திப்பிலி, long pepper — Piper longum.

வாத குன்மம், ஈரலும் நெஞ்சும் வற்றி ஒரு பக்கத்தைப் பற்றி வயிறுளைந்து குடலைப் புரட்டி வலித்து செரியாமல் கைகால் ஓய்ச் சலை யுண்டாக்கும் ஓர் வகைக் குன்மம். a kind of dyspepsia caused by the affection of liver and the chest, marked by indigestion, anerexia, weariness of the limbs etc.

வாத குன்மம், a kind of dyspepsia accompanied by pain in the region of the heart and the belly. dryness of the throat and of the mouth, suppression of vayu (flatus), irregularity of digestion and other symptoms due to the deranged condition of the bodily vayu.

வாத கோபம், excitement of the wind humour.

வாத கோபம், உடம்பி லெழும் கொதிப்பு, aggravated wind humour.

வாத கோபனம், சிறு தும்பி, which see.

வாதக் கடல், நவசாரம், a salt — Ammonium chloride.

வாதக் கடுப்பு, வாதவலி, pain due to wind humour.

வாதக்கட்டி, வாதத்தினுல் ஏற்படும் ஒருவகை கட்டி, பெண்களுக்கு அதிக சையோகத்தி னுல் காணும் கட்டி, See வட்டி ரோகம், an abscess caused by excess of wind humour.

வாதக் கதிப்பு, See வாத கோபம்.

வாதக் கரப்பன், கருங்கரப்பான், eczema which is black.

வாதக் கரு, வாதஞ் செய்வதற்கு ஆதாரமான கரு வங்கம்; தங்கம், நாகம், துருசு, அயம் ஆகிய இவ்வைந்துஞ் சேரில் தங்கமாம், the nucleus required for practising alchemy are; lead, gold, zinc, copper sulphate and iron.

வாதக் கழலை, a tumour marked by pricking pain, burning in the throat, dryness in the palate, dark coloured veins; it is rough to the touch, slow in growth, and rarely suppurates. In course of time gets fixed.

வாதக் காய்ச்சல், வாதத்தினுல் ஏற்படும் காய்ச்சல், fever caused by excited wind humour.

வாதக் கால், யானைக்கால், elephantiasis of the leg. The swollen parts assume a black colour in vatha type, and are fell rough and uneven to the touch; pain is felt at the seat of the disease, and the skin begins to crack.

வாதக் கால், elephantoid leg — Trophedema.

வாதக் கிராணி, excess of pungent, bitter, astrengent, hot and in hormoniously combined food excites Vayu as a result of which the digestive fire is vitiated. In the same way insufficient or scanty food, fastings suppressions of calls of nature, tiring walks excessive sexual indulgence are amongst other causes which tend to vitiate the vayu. In this type, the food is digested with much difficulty resulting often in acidity, vomiting and purging occur together leading to emaciation and weakness. Watery, frothy and noisy stools are evacuated followed by cough and hard breathing severe aching pain is felt at the anus, abdomen, chest and head.

வாதக் கினி, see குமிள்; see மகிழம்பூ; see முட்பலாசு.

வாதக் கினி, மயிர் மாணிக்கம், a twiner which see It is Rheumatism destroyer.

வாதக்குடல் விருத்தி, see குடல் விருத்தி.

வாதக் குடோரி, வாதமுறையில் மருந்தின் இனங்களை மாற்றி, பொன்னுகச் செய்ய உபயோகப் படுத்துவதற்காக, கொங்கண வர் நூலில் சொல்லியபடி தயாரித்த ஓர் கார மருந்து, a pungent medicine told by Konganavar for use in alchemy.

வாதக் குடோரி, வாதத்திற் குபயோகிக்கும் ஓர் வகைப் பதங்கம் மண்ணைத் தொட்டு உருக்கிட சத்தாகும் உபரசங்களெல்லாம் சத்தாகும், குடோரி விட்டால் வாதம் கடினம், a sublimate used in alchemy, without it transmutation is impossible.

வாதக் குடைச்சல், நரம்பைப்பற்றிய ஓர் வித வலி, a kind of nervous disease — Neuralgia.

வாதக் குடைச்சல், boring pain—chronic rheumatic pain — Rheumatalgia.

வாதக் கொடி, see வாதங்கொல்லி.

வாதக் கொதி, வாதத்தினு லெழும் கொதிப்பு, heat evolved by the aggravation of wind humour.

வாதங் கிரை கற்ருழை, aloe.

வாதாங் கினி, ஓர் மரம், a tree.

வாதங்குரா, ஞாழல், European saffron.

வாதங் கொல்லி, கரு நெல்லி, black Indian gooseberry.

வாதங் கொல்லி, கரு நொச்சி, black variety of Vitex negundo — Rheumatism destroyer.

வாத சங்கிரதி, நாவல், Jamboo tree — Eugenia jumbulena alias E. Cumin.

வாத சஞ்சலம், வெட்டி வேர், khus-khus — Vetiveria zizanioides.

வாத சஞ்சீவித் தைலம் வாதத்தைப் போக் குந் தைலம், a medicated oil used for rheumatice diseases.

வாத சமூலம், சிறுகாஞ் சொறி, which see.

வாதசம், வாத சம்பந்தமானது, that which is due to deranged vayu.

வாத சயித்தியம், combination of wind and phlegm humours.

வாத சரீர சுரம், fever due to the vitiation of wind humour.

வாத சரீரம், ஊதிய உடம்பு; பருத்தவுடம்பு, corpulent body.

வாத சன்னி, உடல் காய்ந்து வியர்த்து கண் சிவந்து நாவு கருத்து மலசலங்கட்டி, துன் புறுத்தும் ஓர் வகைச்சன்னி, a delirious fever characterised by fever, sweating, redness of the eyes blackness of the tongue constipation and suppression of urine.

வாத சாட்டியம, இது காம தூரப் பெண் புணர்ச்சியா லுண்டாகும், bodily pain due to having intercourse with one oversexed woman.

வாத சாட்டியம், வாதத்தினல் உண்டாகும் உடம்பு வலி, gnawing pain in the body caused by the wind humour.

வாத் சாத்திசுரம். Vatha fever which is curable.

வாதசாம சுரம்,

வாத சாரதி, நெருப்பு, fire.

வாத சாரம், வில்வம், a sacred tree; its leaves ara used for worshipping God Siva to cool him down — Bael tree — Aegle marmelos.

வாதசாரி, காகோளி, a plant; which see.

வாத சிரோமணி, நவச்சாரம், sal ammoniac.

வாதசிரோ ரோகம், See வாதத்தலைவலி.

வாதசிலேட்டும தொந்தம், combination of wind and phlegm humours.

வாதசிலேட்டும விசர்ப்பி, கிரங்கி விசர்ப்பி, skin disease like itch caused by the humours, wind and phlegm,

வாதசிலேட்டும விசர்ப்பி, See கிரந்தி விசர்ப்பி.

வாத சிலேத்தும சுரம், குளிர் சுரம் கண்டு வாய் பிதற்றலும் பற்கடித்தல் காதடைத் தல் கண்ணொளி மயங்கல் நாவு தடித்தல் இருமல் இரத்தம் விழல் தொண்டைக் கம்மல் முதலிய குணங்களைக் காட்டும் ஓர் வகை சுரம்; கபவாத சுரம், Fever born of wind and Phlegm humours — A type of fever accompanied by aching pain, cough vomiting, shivering, coryza, cold, sense of heaviness of the limbs aversion to food a feeling of general numbness.

வாத சீதம், வாத சீதளம், See வாத சயித்தியம்.

வாதசீதிடம், அடி வயிறு, the lower abdomen.

வாத சுபாவம், எலும்புகளுக்கு ஆதாரமாகி அவைகளைப் போஷித்தல், இரத்தத்தோடு தடிப்பாக்கி இறுக்கிக் கொள்ளுதல், இரைப் பையில் முள் போலிருக்கும் வஸ்துகளில் இது விழ்ந்து கூர்மையாக்குதல், natural qualitie of Vatham which see above.

வாதசுர நாசனி, அரைக்கீரை, a variety of greens; Amaranthus which is useful in Vatha fevers.

வாத சுரம், உடல் கடுத்து சந்து பொருத்து களையும் கீழ் முதுகும் இரு விலாவும் நொந்து குளிர் நடுக்கம் தோன்றும் ஓர் வகை சுரம், a fever accompanied by pain in the head, chest and limbs, shivering, irregular fits of fever, dryness of the throat, lips and the mouth and loss of sleep—Dengue fever,

வாத சுரம, தயிர், curd.

வாதம்சுரம போக்கி, சிறு தேக்கு, knot plant — Clerodendron serratum.

வாத சுரோணிதச் சூலை, வாயுவினல் உண் டாகும் சூதகவாயு, See சூதகவாயு.

வாத சூலாங்குசம், வாத மடக்கி கஷாயம், சதுரக்கள்ளிச்சாறு இவைகளை ஆதியாகக் கொண்டு திரி கடுகுடன் கொதிக்க வைத் துக் கொடுக்கும் மருந்து, இதனல் வாதப் பிடிப்பு வாத சூலை போம்; a medicine for artherities, gout and rheumatic gout.

வாத சூலைக்கட்டு, உடல் கனத்து திமிருண் டாய் விறுவிறுத்து பிடரியையும் பாதத்தை யும் பற்றி இழுத்து கைகால் விரல்கள் வீங்கி கடுத்துளைந்து நடக்க வொட்டாமல் செய்யுமோர் நோய், a painful inflammation affecting the muscles of the nape and foot. toes hand and fingers attended often by swelling and stiffness; artheritis or gout — Rheumatic gout. Gout firs attacks the small joints such as toes, and fingers and rheumatism the larger joints. Gout generally attacks those leading a luxurious life, where as rheumatism the ill clothed and ill fed sorrs. Gout is a disease of advanced life but rheumatism often attacks the young. But gout may be combined with rheuma-

tism, when it is known as rheumatic gout. In some characteristics gout resembles rheumatism. Gout is a very painful affection arising from uric acid generated in the blood and deposited in the tissues. It may be a sequence of heriditary predeposition.gout most frequently comes on during the night and abates towards morning

**வாதசூலை சன்னிபாதம்**, Arthrotyphoid.

**வாதசூலைப் பிடிப்பு**, See வாதசூலைக்கட்டு.

**வாத சோகை**, குழந்தைகட்கு உடம்பு தடித்து உதடு வெடித்து சுரம் கைகால் அசதி மூலத்தில் கடுப்பு ஆகியவிக் குணங்களைக் காட்டு மோர் வித சோகை, a disease of the children marked by fever, swelling of the body, lasstitude, pain in the anus etc.

2. உடம்பு அதைத்து கைகால் ஓய்ந்து நாவறண்டு நீர் வெதும்பி பொன்னிறமாயிறங்கும் ஓர் சோகை, a disease where in urine is scanty and of yellow colour, the body is swollen and pale.

**வாத சோணிதம்**, ருது காலத்தில் பெண்களுக்குண்டாகும் சோணிதத்தைப் பற்றிய நோய், menstrual disease; See வாதநீர்.

**வாதச் சலிப்பு**, ஈரம் நரம்பில் தாங்கிய ஓர் வகை வாத நோய், a kind of neuralgia through cold

**வாத சௌமியசுரம்**,

**வாதஞ் சனி**, திப்பிலி மூலம், root of long pepper.

**வாததி**, ஓர் வகைப்பூ நீர்ச்சாதி, a kind of salt growning in the soil of fuller's earth.

**வாத தீட்சணிய சுரம்**, high fever due to wind humour.

**வாத தேகக்கூறு**, melanchlic temperament.

**வாதத் தம்பம்**, வாதம் கதித்து காலின் புறவடியைப் பற்றி குடைச்சலும் வீக்கமுண்டாய் உடம்பெங்கும் வலி திமிர் முதலியவை யுண்டாக்கு மோர் வகை வாத நோய், (யூகி—800) a kind of rheumatic pain caused by aggravated wind humour marked by boring pain swelling in the legs accompanied by numbness.

**வாதத் தலைவன்**, சவர்க்காரம், saline efflorescence found in the soil of fuller's earth.

**வாதத் தலைவலி**, கண் புருவம் நெற்றி ஆகிய இவைகள் இற்று விழுவது போல் வலித்து காதிரைச்சல் கண்டு நரம்புகள் புடைத்து மூக்கில் சலம் வடிதலாகிய ஓர் தலைவலி, இதற்கு வடமொழியில் வாத சிரஸ்தாபமெனப் பெயர், a fit of violent head-ache marked by sounds in the ears, oozing of watery fluid from the nose and a feeling that the forehead, eyes and eyebrow are falling out. It comes without any apparent cause and becomes worse in the night, and is relieved by pressure or being bandaged or by an application of fomentation round the head. It is caused by deranged vayu.

**வாதத்தானம்**, பாத முதல் நாபி வரை, place of Vatham from navel to foot.

**வாதத்திற்காதி**, } சவர்க்காரம், See வாதத் தலைவன்.
**வாதத்திற் காதியான்**, }

**வாதத்தி லாதியான்**, சவர்க்காரம், See வாதத் தலைவன்.

**வாதத்திற் குயிரானவுப்பு**, நெபத்திகை, a salt which is like life for alchemy.

**வாதத்திற்குயிர்**, உப்பு, See வாதத்திற் குயிரானவுப்பு.

**வாதத்திற்கொப்பாய் நின்றோன்**, நவச்சாரம், sal ammoniac — Ammonium chloride.

**வாதத்துக் குயிர்**, நாகம், zinc.

**வாதத்தை நிறுத்தல்**, வாத வேலையை நிலை நிறுத்தல்; அதாவது சித்தி உண்டாகும்படி செய்தல்; இதற்கு பல வழிகளும் தெரிந்திருக்கவேண்டும்; அவையாவன:

1. "போக்கோடே சவர்க்கார குருவைப் பண்ணு"

2. "வாகாகு உப்பை நன்றாய்க் கட்டியாடு"

3. "மருவியதன் பூரத்தைஉப்புபண்ணு"

4. "தாகாகும் தாளகத்தை நீறுபண்ணு"

5. "சமர்த்துடனே வங்கத்தைச் சுண்ணம் பண்ணு"

6. "வேகாதது ருசியைத்தான் குருவாய்ப் பண்ணு"

இப்படி இதெல்லாம் செய்யத் தெரிந்தால் வாதத்தைக் கொள்ளாச்சு; அதாவது இழிந்த உலோகங்களை எளிதில் பொன்னாகச் செய்ய செய்யலாம், (போகர்—7000.) to establish one self as an alchemist one must prepare the above substances which are ofcourse very difficult to prepare.

வாதத் தொந்திப்பு, combination with wind humour.

வாத நகைரணம், இடுப்பைச் சுற்றிலும் ரணங்கண்டு பசி தீபன மில்லாதிருத்தல், இது முத்து பற்பத்தினுல் தீரும், ulcer round the waist, and loss of appetite. It said to be cured by the calcined pearl.

வாத நமை, itching due to Vatham.

வாதநாசத் தைலம், a medicated oil given for affections of joints. it causes purging.

வாத நாசனம், ஆமணக்கு, castor plant.

வாத நாசனி, மிளகு, pepper; 2. கடுக்காய், gallnut; 3. கொடிக்கள்ளி, creeping milk hedge — Sacrostemma intermedicum drugs that destroy Vatham, see above.

வாத நாசன், பூனைக்காலி, which see.

வாத நாடி, மூவகை நாடிகளில் ஒன்று உடம்பிலுள்ள வாதத்தின் குணத்தைக் காட்டும் நாடி, one of the three pulses felt at the wrist, it indicates the quality of wind humour in the body.

வாத நாராயனமரம், வாத ராயணம், இதுவே வாதமடக்கி; ஆதிநாரயன மரம்.

வாத நாராயணரசம், Juice of the leaves of வாத நாராயணன.

வாத நாராயணன், ஓர் மரம், a tree — Delonix elata

வாத நிகண்டு, இரசவாத நிகண்டு, Vocabulary of alchemy.

வாத நிராம சுரம், fever caused by indigestion due to vatham.

வாத நீர், ஈரலில் உற்பத்தியாகி மண்ணீரலினுல் கிரகிக்கப்பட்டு அவ்விடத்தில் தங்கி பிறகு நரம்பின் வழியாய் இரைப்பையில் விழுந்து பசியை யுண்டாக்கும், a fluid said to have been secreted by liver and absorbed by the spleen and then carried through the veins to the stomach there by causing hunger — Rheumatic humour; flatulency.

வாத நீர்கொண்ட, வாதவுடம்புள்ள, body of vatha temperament.

வாத நீர்ச்சூலை, உடல் புண் போல் உளைந்து கை கால் விரல்கள் வீங்கி, திமிரடைந்து விறுவிறுத்து முகம் தலை மெய் வியர்த்து வெதும்பி ஐயமும் பித்தமும் ஓடிக்காணும் ஓர் வகைச் சூலை நோய், a kind of rheumatism due to வாதநீர் which see, affecting the fingers and toes. It is marked by tenderness of the body swelling of the fingers and toes numbness. excessive perspiration in the head, face and body.

வாத நுட்பம், மூலிகைப் போக்கு சத்து வகை பாஷாணப் போக்கு வாத முறைக்கு வேண்டிய இரகசியமான விஷயங்கள் the various secrets and intricacies involved in alchemy. See வாதவித்தை நுட்பம்.

வாத நூல், It is a secret science concerning the transmutation of the metals — the hermatic art. It throws light on the mysteries of transmutation and distingishes the hetrogenous combustibility of volatile parts of the ingredients and exhibits how the same may be conducted to the grade of perfection. It also defines all about quick silver and in-combustible sulphur etc., and how they are transmuted into true gold — Occult chemistry — Hermetic Science.

வாத நோய், See வாத ரோகம்.

வாத பரியாய ரோகம், அன்னிய தோஷ வாத ரோக குணங்களுடன் வக்கிர பார்வையும், சதா வீக்கத்தையு முண்டாக்கும், a disease with all symptoms of deranged wind humour and swelling and quint eyes.

வாத பாண்டு, தாதுகெட்டு பலங்குறைந்து உடம்பின் நிறம் கருகி வாடி, பாதம் உளைந்து உதிரம் வற்றி பசி கெட்டுக் காணும் ஓர் நோய், (யூகி — 1200) a type of Pondu marked by black colour of the eyes and the skin and by the prominent appearance of black coloured veins on the surface. The stool urine and finger nails will also be black owing to deranged vayu.

வாத பாண்டு சூலை, முகம் வயிறு முதுகு அரை துடை புறங்கால் இவ்விடங்களில் தைத்து அப்பர்ந்து விறுவிறுத்து அசைவுகளில் மோதும் ஓர் வகை சூலை நோய், a disease being formerly connected with a defluxion of humours. It is characterised by general anasarca and pain and immobility of the joints.

வாதபித்த அரி, கொம்மட்டி, melon.

வாதபித்த காமாலை, a variety of Jaundice due to combination of bile and wind humours.

வாதபித்த கோபனி, கண்பூ, opaque spot in the eye.

வாதபித்த சமனி, தும்பி; கானல் மா, புட்கர மூலம், கிளுவை, the drugs that nutralise the combination of wind and bile humours. which see.

**வெள் வேம்பு,** ஐந்துப்பு, five salts.

**வெள் வேலஞ் சாராயம்,** arrack prepared from the bark of Mimosa ferruginea.

**வெள் வேலம் பட்டை,** வெள்ளை வேலம் பட்டை, bark of the iron coloured mimosa — Mimosa ferruginea.

**வெள் வேலான்,** வேல், a tree — Acacia arabica.

**வெள் வேலிகம்,** வேலிப் பருத்தி, hedge cotton twiner —Daemia extensa.

**வெள் வேள்,** வேல மரம், Acacia leucophlacea; 2. பட்டை சாராய மரம், a tree arrack acacia; இது 20-25 அடி உயரம்; கூரான முட்களுண்டு; இதில் மூன்று வகையுண்டு; ரொம்பவும் பூத்து மூக்குத்தூள் நிறமாயிருக்கும்; சித்திரை வைகாசியில் பூக்கும்; 2 முதல் 6 விரைகள் தட்டையாய் இருக்கும்; பூக்கள் சிறிதாயும் மஞ்சளாயும் இருக்கும்; இது கொற நாடு கடற் கரை ஓரங்களிலும் குற்றாலம் ஆந்திர தேசத்திலும் விளையும்; இதன் பட்டையை வெல்லத் தண்ணீரில் நனைத்து சாராயம் காய்ச்சுவதற்கு உபயோகப் படுத்துவார்கள், இது ரொம்பவும் துவர்ப்பு; இதன் கஷாயத்தோடு இஞ்சி முதலிய சாமான்கள் சேர்த்து பல்லுக் கத்து வார்ப்புண்டாக்க, குடிநீராக உபயோகப் படுத்தலாம்; இதில் மற்றொரு வகை இலைகள் அடர்த்தியாயும் முட்கள் சாதாரணமாய் கிளைகளில் சிறிதாயும் சொர சொரப்பாயும் விரைகள் சிறுத்தும் நீளமாயும் வளைவாயும், பூக்கள் உருண்டையாயும் இருக்கும்; இது கொர நாட்டு சமுத்திரக்கரை யோரங்களுலுள்ள காடுகளிலும் மலைகளிலும் விளையும், இதின் பட்டையிருந்து வரும் சாரத்துடன் பனங்கள் சர்க்கரை சேர்த்து மதுக்காய்ச்சுவதுண்டு; ஆவணி புரட்டாசியில் பூக்கும்; இன்னும் ஒரு வகைக்கு குடை வேல் பார்க்கவும், Arrack is prepared with its bark.

**வெள் வௌவால்,** ஓர் மீன், a rhomboid sized white fish.

**வெள்ளகில்,** அகில் மரம், a white species of eagle wood tree — Aquilaria agalocha.

**வெள்ளச்சி,** ஓர் வகை தொட்டி பாஷாணம், a kind of arsenic; பவள மல்லேரிசிலை, a variety of arsenic; 2. சீனக்காரம், Alum.

**வெள்ளச்சி குப்பி,** பொன்னிமிளை, yellow bismuth.

**வெள்ளஞ்சு,** காட்டுப் பச்சிலை, Dalbergia lanceolaria; 2. நல்வெள்ளஞ்சு, which see.

**வெள்ளடை,** வெள்வெற்றிலை, white betel leaf.

**வெள்ளடம்பு,**

**வெள்ளடைப் பாகக்கழிதல்,** purging white matter.

**வெள்ளடைப்பு,**

**வெள்ளட்டை,** wood louse.

**வெள்ளம்பர்,** வெண்மை நிறமான ஓர் வகை அம்பர், white amber.

**வெள்ளயில்,** Dysosylum malabaricum.

**வெள்ளரசு,** ஓர்வகை அரசமரம், a variety of peepal tree.

**வெள்ளரணை,** சிலைப்பேன், louse.

**வெள்ளரளி,** பாலரளி, oleander bearing white flowers — Nerium odorum alias Nerium alba.

**வெள்ள நீர்,**

**வெள்ளராதீதம்,** வெண்சாரணை, which see.

**வெள்ளரி,** ஓர் பழக்கொடி, a creeper cucumis sativus; 2. Dodonaea viscosa.

**வெள்ளரிக்காய்,** cucumber—Cucumis sativus.

**வெள்ளரிசி,** பச்சரிசி, raw rice.

**வெள்ளரிஞ்சி,** Dalbergia paniculata.

**வெள்ளரிதாரம்,** வெளுத்த அரிதாரம்; இதை வெள்ளியில் சேர்த்திட ஓன்பது மாற்றுகும், white realgar.

**வெள்ளரிப்பழம்,** ஓர் பழம், musk melon; கபம் விளையும—fruit of cucumber.

**வெள்ளரிப் பிஞ்சு,** இதனால் முத்தோஷம் போம், tender fruit of cucumber; diuretic.

**வெள்ளரிப்பூசணி,** முலாம் பூசணி, cucumis melon — a creeper.

**வெள்ளரி விதை,** பிரசித்தமானது; வெண்மை, தித்திப்பு, குளிர்ச்சி, மூத்திரம் அதிகப்படுத்தும்; வரட்சி நீக்கும், நீர்ப்பை இரப்பை சுத்தி செய்யும், உஷ்ண சுரம், இரத்தக் கொதிப்பு, தாகம், வெட்டைச் சூடு, நீர்ச் சுருக்கு, பிரமியம், கல்லடைப்பு இவைகள் போம், It is a good diuretic.

முலாம்பழ விதை: இதுவும் வெள்ளரி விதையைப் போன்றது; இதன் குணமும் அவ்வாறே; மலத்தை இளக்கும்; ஆண்மை உண்டாக்கும்; இதை அரைத்துப் பூசுவதினால் முகத்தில் கருப்புப் புள்ளிகள் நீங்கும், it is used as வெள்ளரி விதை.

**வெள்ளரிவித்து,** வெள்ளரி பழத்தின் விதை; இது நீர்க்கட்டு, நீர்க்கடுப்பு, கல்லடைப்பு, சதையடைப்பு, தசை வெடிப்பு, கிரிச்சுரம் போகும். the seeds of cucumber fruit—It is diuretic.

**வெள்ளரி விரையெண்ணெய்,** வெள்ளரி விதையினின்று இறக்குந் தைலம், an oil extracted from the seeds of cucumber of musk melon.

**வெள்ளரிவேர்,** root of cucumber.

**வெள்ளரை,** cleidion jawanicum.

**வெள்ள லத்திப்பட்டை,** bark of வெள்ள லத்தி which see.

**வெள்ளலரி,** ஓர்வகை அலரிப்பூ மரம்; a tree வெள்ளரளி, Nerium odorum bearing white flowers.

**வெள்ளல்லி,** வெள்ளாம்பல்; இது பீலிசத்துக்குப் பலத்தைக் கொடுக்கும்; மதுமேகத்தைப் போக்கும், white water lily — Nymphae stellate bearing white flowers.

**வெள்ளல்லி விரை,** சுக்கில விருத்தி, ஈரல் பீலிக கண்டம் இவைகள் பலப்படும், See செவ்வல்லி, seeds of white water lily.

**வெள்ளல்லி வேர்,** root of white water lily.

**வெள்ள வரை,** வெள்ளை யவரைக் கொடி; அவரை, kitchen lablab bearing white fruits —Doliclus lablab.

**வெள்ளழிஞ்சில்,** white variety of அழிஞ்சில் which see.

**வெள்ளழுகல்,** அழுகி வெண்ணிறம் பூத்தல், formation of white coating-fungus growth - after putrefaction

**வெள்ளறுகு,** இது இந்தியாவில் மைதானங்களில நீர்ச் சதுப்புள்ள நிலங்களில் விளையும்; இதன் கஷாயம் குன்மம், நீர்ச்சுருக்கு, சொறி சிரங்கு, வெட்டைச்சூடு, கீழ் வாயு இவைகள் போம், இது மூதண்டகாயத்திற்கு உபயோகமானது. இதனால் வாதக் குடல் விருத்தி, கீல் பிடிப்பு, நரம்புக் கிரந்தி போம்; பத்தியம் பால் சாதம்; See வெள்ளையறுகு பசும்பாலில் அரைத்துக் கலக்கி உண்ணவும், a small plant—Exacum hyssopifolium good for gonorrhoea, and diabetes —Herbaceous; stem quadrangular, seeds numerous; whole plant is used medicinally tonic, stomachic & laxative; useful in dyspepsia, and general debility substitute for British gentian on account of its betterness.

**வெள்ளனி,** வெண் பாதிரி மரம், a tree — Stereospermum Chelonoides.

**வெள்ளாங்கம,** see வெள்வரியங்கம்.

**வெள்ளாங்கு,** see வெள்ளாஞ்சு.

**வெள்ளாங் குருகு,** ஓர் பறவை, a bird.

**வெள்ளாடு,** இதன் மாமிசம் சாதாரணமாக உண்ண வுதவும், வெள்ளாட்டுக் கறி, பால், மூத்திரம் முதலானவைகள் வைத்தியத்தி லுபயோகப்படுவதால் இது சிறந்ததாகக் கொள்ளப்படும், an animal—goat white ovis. The ordinary goat; a long legged animal; much commoner than sheep. It generally corresponds with Hircus aegagrus alias Capra hircus. Horns subangular. The males are generally bearded and emit a strong odour. There are several varieties and the chief of them are the long and the short legged race. Much medicinal virtues are attached to goat's milk (See பால்) Flesh tough and tasteless though much eaten by Hindus.

**வெள்ளாட்டம்,** Heptapleuram Venu.

**வெள்ளாட் டிறைச்சி,** meat of goat. It is useful in diet.

**வெள்ளாட்டுக் கண்டம்,** வெள்ளாட்டு உப்புக் கண்டம், salted dried meat of goat.

**வெள்ளாட்டுக் கத்தல்,** Bleat.

**வெள்ளாட்டுக் குட்டி,** kid.

**வெள்ளாட்டு நீர்,** வெள்ளாட்டு மூத்திரம்; இதில் எஃகு அயம் வெட்டையாகும், urine of a she goat has a pungent and bitter taste and it proves curative in cases of cough, consumption, jaundice, chlorosis and dyspnoea Steel and iron are turned brittle when dipped, several times in it, after making them red hot again and again.

**வெள்ளாட்டு நெய்,** Goat's ghee; it proves curative in cases of cough, consumption and dyspnoea.

**வெள்ளாட்டுப் பால்,** வெள்ளாடு காரம் கசப்பு முதலிய சுவையுள்ள பூண்டுகளை மேய்வதனால் தண்ணீரையும் சொற்பமாகக் குடித்து ஓடித் திரிவதால் அதன் பாலானது எளிதில் சீரணமாகக் கூடியதுடன் க்ஷயம், சுரம், சுவாச காசம், அசீரணபேதி இவற்றைப் போக்கும்; பசுவின் பாலுக்கு மேல் விசேஷ குணமுண்டு; பசிதீபன முண்டாகும்; அசீரண பேதியைக் கட்டும்; இது பற்றியே அமெரிக்கா முதலிய நாடுகளில் குழந்தைகளுக்கு வேண்டிய அளவு இப்பாலையே உப

யோகிக்க வேண்டு மென்று அபிப்பிராயப் படுகிறார்கள்; இப்பாலை க்ஷய ரோகிகளுக்கு மெத்தவும் உபயோகிக்கலாம்; இது மருந்துகளுக்கு மெத்தப் பிரயோசன மாகும்; இது எளியாரின் பசு என்று பெயர்; வெள்ளாடுகள் வீட்டில் இருந்தால் க்ஷய ரோகம் ஒரு வருக்கும் வராதென்று சிலர் அபிப்பிராயம்; மலைப் பிரதேசங்களில் மேயும் வெள்ளாட்டுப் பால் மிகவும் சிறந்தது, goat's milk is very useful for consumptive patients. Goat's milk—It is superior to cow's milk in its quality and is specially beneficial to persons suffering from Phthisis and is efficacious in dyspnoea, caugh and haemoptysis. It proves curative in all diseases as it lives upon bitter or pungent herbs and drinks less quantity of water. It also cures ascites, piles, worms in the intestines oedema etc.

வெள்ளாட்டுப் பித்து, bile of goat.

வெள்ளாட்டுப் புழுக்கை, உருக்கு அல்லது எஃகு என்னும் உலோகத்தைப் புறப்பமாகச் செய்யும்; மகோதரத்தையும் வாத நோயையும் நீக்கும்; 2. வெள்ளாட்டின் மலம், the dung of goat is capable of reducing steel into an oxide. It is useful in cases of ascites, and rheumatism.

வெள்ளாட் டெச்சு, See வெள்ளாட்டுப் புழுக்கை.

வெள்ளாட்டு வெழுபிச்சி, bile of goat.

வெள்ளாத்தி போளம், வெள்ளை போளம், myrrh tree.

வெள்ளாந்தை, ஓர் ஆந்தை, a bird — owl; 2. மலைப் பாம்பு, mountain snake.

வெள்ளாமணக்கு, castor plant bearing white seeds.

வெள்ளாம்பல், a flower — white waterlily flower—Nymphae lopess. It tubers are boiled and used in piles.

வெள்ளாயினெய், வெள்ளெண்ணெய், white oil.

வெள்ளாரை, நஞ்சுக் கொடி, umbilical card.

வெள்ளாரைச் சுன்னம், கூடற் சுன்னம், a medicinal powder prepared out of umbilical cord.

வெள்ளாலம்பூ, Henny cyclia vemusta

வெள்ளாவி, துணியினின்று எண்ணெய் கக்கி அழுக்கு நீங்குவதற்கு வண்ணான் உழ மண்ணிட்டு வேக வைத்தல், boiling clothes by washerman in fuller's earth solution.

வெள்ளா விதட்டல், ஆவி பிடித்தல், vapour bath.

வெள்ளாவி நீர், வண்ணான் வெள்ளாவிக்காக வைத்து எரித்த நீர், இதில் உடம்பு குளித்தால் சொறி போம், the liquid that remains after boiling the clothes in fuller's earth solution.

வெள்ளாவிக் கிழங்கு,

வெள்ளா விரை, ஓர் ஆவிரை, a plant — Cassia auriculata.

வெள்ளாவி வைத்தல், ஆவிபட வைத்தல், to keep in the vapour.

வெள்ளானை, வாலை ரசம், mercury extracted from virmilion and other mercurial compounds.

வெள்ளானை யத்தி, இரசம், mercury.

வெள்ளி, இது ஓர் வகை உலோகம்; இதைத் தமிழ் வைத்தியர்கள் பஸ்பம் செந்தூரம் சுன்னமாகவும்; ஐரோப்பியர் உப்புகளாகவும் செய்து மருந்துகளில் உபயோகிப்பார்கள்; இதன் பஸ்பம் மேகப்படை வெள்ளை தீரும்; தாது விருத்தி உண்டாகும்; வெண் பொன், silver Argentum; 2. வெண்மை, whitenes; 3. கருக்கன் வெள்ளி, impure silver; 4. சொக்க வெள்ளி, pure silver; 5. கல் வெள்ளி, hard and inferior with much alloy; 6. இரச வெள்ளி, silver obtained from mercury; 7. நவகிரகத்தி லொன்று one of nine planets; Venus a planet of love and harmony.

Note: Pure silver is always soft, white with brilliancy and ductile. It is found mixed with other metals in ores and it is subsequently purified. In medicinal preparations it is found used in combination with other metals as gold, iron etc. It enters into the combination of several other medicines in common use and used in the treatment of diseases chiefly nervous. It is useful in the enlargement of prostate.

வெள்ளி அப்பிரகம், Indian mica — gray — granulated makes silver sand.

வெள்ளிக் கட்டன், வெள்ளை கட்டுகளையுடைய விரியன் பாம்பு, Russell's viper. See கண்ணாடி விரியன்.

வெள்ளிக் கண், wall eye.

வெள்ளிக் காசு, ஓர் மீன், a fish.

**வெள்ளிக் காடிக்காரம்,** காடிக்காரம், Silver nitrate — Ag $NO_3$. இது கண் இரப்பைகள் வீங்கி இமைக்குள் பூ வளர்ந்திருப்பதைக் கரைக்கும், lunar caustic — Argentina nitrus; useful for eye diseases.

**வெள்ளிக் குன்றம்,** இரசிதமலை, silver mountain.

**வெள்ளி செம்பாக்கி,** செங்கத்தாரி வேர்ச் சாறு, root juice of செங்கத்தாரி, which see.

**வெள்ளிச்சி,** கழுதை மான் புள்ளி, which see.

**வெள்ளிச் சுண்ணம்,** மூலச்சூடு போம்; சிறு பிள்ளை தேகம் போல் விசை கொண்டிருக்கும்; நடந்தால் இளைப்பு தோன்றுது, a white calcined powder with properties of calcium.

**வெள்ளிச் செம்பு,** silver transmuted into copper.

**வெள்ளிண்டங் கொடி,** a thorny shrub — Acacia typica.

**வெள்ளிண்டு,** நுரையிண்டு; ஓர் வகை யிண்டஞ் செடி, angular stalked acacia — Acacia intsia; a thorny climbing shrub; flowering in rainy season; soft bark is used for washing body. The hill variety called gray acacia.

**வெள்ளித் தகடு,** Silver sheet.

**வெள்ளித்தி,** Dalbergia sissoides.

**வெள்ளி நிமிளை,** bismuth.

**வெள்ளி நிமிளை பற்பம்,** இதனால் அளவிற் கதிகமான பசிதீபன முண்டாம், calcined powder of வெள்ளி நிமிளை.

**வெள்ளிநீ துருசு,** காடிக்காரம், silver nitrate.

**வெள்ளி பழுத்தல்,** பொன்னுதல், silver transmuted into gold.

**வெள்ளி பற்பம,** இருமல் தொந்தரவினால் தூக்க மில்லாதிருந்தால் இருமல் தணிந்து தூக்க முண்டாகும்படி செய்யும்; அன்றியும் நரம்புகளைப் பலப்படுத்தி இரத்தத்தைச் சுத்தி செய்து இரத்த பித்த நோயைப் போக்கும், calcined silver good for sexual weakness.

**வெள்ளிப் பிரதிநிதி,** தார மாட்சிகம். which see.

**வெள்ளிப் பொடி.** வெள்ளி ராவிய தூள், silver filings; 2. வெள்ளி மணல், silver ore.

**வெள்ளி மடந்தான்,** ஒரு சிறு ஆற்றுக் கெண்டை மீன், a very small river fish.

**வெள்ளி மடந்தை,** Mussa conda frondosa.

**வெள்ளி மணல்,** வெள்ளி கலந்த மணல், silver ore; 2. வெண் மணல், white sand.

**வெள்ளி மண்,** உபரசச் சரக்கி லொன்று, one of the natural substances mentioned in Siddha medicine.

**வெள்ளி மயமான,** வெண்ணிறமான, Argent.

**வெள்ளி மயிர்த் தழை,** white leaf plant. See வெள்ளிலை.

**வெள்ளி மலை,** mountain containing silver ore; 2. கைலயங்கிரி, abode of God Siva.

**வெள்ளி மித்துரு,** கோடா சூரி, a kind of arsenic.

**வெள்ளி முலாம்,** staining with a preparation of silver — Argentation — silver gilt.

**வெள்ளிய காகச்சி,** வெண் கரும்பு, white sugar-cane — Saccharum officinarum.

**வெள்ளியங் குன்று,** வெள்ளி மலை, which see.

**வெள்ளி யப்பிரகம,** வெள்ளை யப்பிரகம, white mica.

**வெள்ளி யமபலம,** இரசித மலை, mountain containing silver ore.

**வெள்ளியைப் பெற்ற கன்னி,** முண்டினி விருட்சம, which see.

**வெள்ளி ரேக்கு,** வெள்ளிலைத் தகடு, thin Silver leaf — Argentum.

**வெள்ளிலை,** விளா, wood-apple tree; 2. வெற்றிலை, betel leaf.

**வெள்ளிலைச் சுண்ணம,**

**வெள்ளி லோத்திரம்,** விளாம் பட்டை, bark of wood-apple tree; இதனால் தாவர விஷம் எலும்புருக்கி பெரு வயிறு வியங்க ரோகம் சுரந் கம்மலை போம்.

**வெள்ளில்,** விளா மரம், wood-apple tree — Feronia elephantum..

**வெள்ளிறகு மந்தாரை,** see வெள்ளை மந்தாரை.

**வெள்ளிறால்,** ஓர் வகை யிறால், a kind of white prawn — Cancer serratus. See நெய் மீன்.

**வெள்ளிண்டு,** See வெள்ளிண்டு.

**வெள்ளீயக் கலப்பு,** pewter.

**வெள்ளீயச் சீலை.** உபரச வகைகளில் ஒன்று one of the 120 natural substances mentioned in Siddha medicine.

**வெள்ளீய பற்பம்,** ஓர் பற்பம், calcined powder of tin. Good for skin diseases.

**வெள்ளீயப் பிறப்பி,** வெள்ளை நாகணம், which see; 2 வெங்கலம், bronze.

**வெள்ளீய மணல்,** ஓர்வகை உபரசச் சரக்கு, one of the 120 natural substances mentioned in Tamil medical science.

**வெள்ளீயம்,** இதன் பஸ்பம் மலத்தை விர்த்தி பண்ணவும் மேகத்தைப் போக்கவும் பசி தீபனத்திற்கும் உபயோகப்படும்; வெண்ணாகம், white lead — Stannum pewter.

**வெள்ளீய ரசம்,** tin and mercury alloy.

**வெள்ளீரல்,** மலக்குடர், mesentery; நுரையீரல், lungs.

**வெள்ளுகா,** உகா மரம், which see.

**வெள்ளுடும்பு,** white guana.

**வெள்ளுடை,** small leaved holly—Ilex wightiana.

**வெள்ளுடைக் கழிச்சல்,** வெள்ளை மலக் கழிச்சல், white coloured purging.

**வெள்ளுடைப்பு,** வெள்ளெடுப்பு.

**வெள்ளுடைப்பு,** அரைத்த சோறு போல் குழந்தைகள் வெண்மையாகக் கழிதல், diarrhoea in children due to indigestion.

**வெள்ளுடைப்புக் கிராணி,** chronic white coloured purging.

**வெள்ளுப்பு,** வெள்ளை யுப்பு, white common-salt; 2. அழுக்கெடுத்த வுப்பு, table salt.

**வெள்ளுரம்,** வெள்ளீ யுரம், a medicine prepared with tin and other mineral salts.

**வெள்ளுருலி,** Dalbergia paniculata.

**வெள்ளுளுவை,** வெண்மையான ஓர் உளுவை மீன், a species of white river fish.

**வெள்ளுள்ளி,** வெள்ளைப் பூண்டு, garlic —Allium sativum.

**வெள்ளுள்ளித் தைலம்,** வெள்ளைப் பூண்டுத் தைலம், oil extracted from garlic.

**வெள்ளுள்ளி நெய்,** வெள்ளைப் பூண்டி னின்று தயாரிக்கும் மருந்து நெய்; இது பெண்கள் அஸ்திவெட்டைக்கு கொடுக்கலாம், medicated ghee prepared with garlic as chief ingredient.

**வெள்ளுள்ளிப் பருப்பு,** பூண்டுப் பல், tooth of garlic.

**வெள்ளுமத்தை,** ஓர்வகை யூமத்தை, dhature bearing white flowers — Datura alba.

**வெள்ளெடுப்பு,** வெளுப்பான பேதி; கழிச்சல்; white coloured diarrhoea.

**வெள்ளெண்ணெய்,** மரவெண்ணெய், wood-oil tree of India — Dipterocarpus indicus.

**வெள்ளெரி,** நரம்பிலுண்டாகும் கட்டியைப் போக்கும் ஓர் பூண்டு, a plant.

**வெள்ளெரிக்காய்,** see வெள்ளரிக்காய்.

**வெள்ளெருக்கங்காய்ப் பஞ்சு,** இக்காயின் பஞ்சை ஷெ பாலில் தோய்த்து பட்டாணி பிரமாணம் உண்டை செய்து 2, 3, மாதப் பிண்டங்களை வெளிப்படுத்தக் கொடுக்கலாம், the hairs on the seeds of the Calotropis can be used to expel 2 or 3 foetus. The method of administering it is given above

**வெள்ளெருக்கம் பழுப்பு,** the yellow old leaf of Calortropis which bears white flowers.

**வெள்ளெருக்கம்பால்,** சுளுக்கு மகாவாதம், சன்னிபாதம் போம், the milk of calotropis is rubificient can be used externally for sprain etc. It enters into the prepartion of some medicated oils.

**வெள்ளெருக்கம்பால்,** வெள்ளைப் பூவுடைய எருக்கஞ்செடியின் பால், milk from the (white) Calotropis.

**வெள்ளெருக்கனுப்பு,** salt extracted from the ashes of the calotropis.

**வெள்ளெருக்கு,** வெள்ளைப்பூ பூக்கும் ஓர் வகை எருக்கஞ்செடி, calotropis bearing white flowers.

**வெள்ளெருக்குத் தைலம்,** "நாட்சென்ற வெள்ளருக்கின் தைலந் தன்னில், ரசம் நீறும் நவச்சாரம் கட்டிப்போமே" (*பிரம - 200*). medicated oil of calotropis. An old oil calcifies mercury and binds sal ammoniac.

**வெள் ளெருக்கு நார்,** இரசமணியை கோப்ப தற்காக, கயிறாகத் திரித்த எருக்கம் நார், fibre extracted from (white) calotropis is used as waist thread for infants and to thread mercury ball.

**வெள் ளெலி,** வெள்ளையெலி, white rat.

**வெள் ளெலிச்செவிச் செடி,** கத்தரிமணி யிலை; which see.

**வெள் ளெலும்பு,** நாய் கடித்த வெள்ளெலும்பு, white bone without any flesh.

**வெள் ளெழுச்சி,** white impetigo.

**வெள் ளெழுத்து,** கண் புகைச்சலினால் உருவங்கள் புலப்படாது கண் கூசிப் படிக்க முடியாது மறைக்கும் ஓர் கண்ணோய். an eye disease marked by inablity to read. 2. கண் புகைச்சல், short sight—an eye sight due to old age.

**வெள் ளெழுத்து,** கண் கூசும்; கிட்டப் பார்வை தோற்றாது; கண்ணொளி குறைந்து பார்வையில் மயங்கச் செய்யும், short sight due to old age. It begins at about 37 year of age. சாதாரணமாக 37 வயதிற்கு மேல் பித்த தோஷ ஒளியானது விரியும்போது பிறந்து கருவிழியில் அற்பபுகை மேகம் கம்மியதுபோல் செய்து நுட்பமான பொருள்களைப் பார்க்கவொட்டாமல் மறைக்கும் ஓர் வெகுக் கண்ணோய்; ஆனால் 45 வயதிற்கு மேல் பித்தவொளி குறையுங்காலத்து சரிவரத் தோற்றும்; அப்படித் தோற்றாவிட்டால் வாயு சேர்ந்துகொண்டு திமிர ரோகம் ஆரம்பிக்கும், It may resolve after 45 years of age. It is due to bilious affection

**வெள் ளெள்,** வெள்ளை எள், white gingelly seeds; 2. கழுவிச் சுத்தம செய்த எள், washed and rubbed gingelly seeds which look white.

**வெள்ளேறன்,** பழுதா யிரும்பு, waste iron.

**வெள்ளை,** சங்கு, chank or conch; 2. சுண்ணாம்பு. lime; 3. வெட்டை, gleet; 4. மேக வெட்டை, orchitis; 5. வெண்மை, whiteness; 6. பொரித்த சீனு காரம், roasted Alum.

**வெள்ளை,** வெள்ளைப் புரசு, bastared kino — Butea frondosa bearing white flowers; 2. ceruse (white oxide of lead); 3. வெள்ளாட்டுக் குட்டி, kid; 4. வெள்ளி, silver; 5. பற்பம், calcined medicinal powder. 6. வெள்ளைப் பாஷாணம், white arsenic; 7. சங்கு பாஷாணம், Sanku Pazhanam; 8. கள், toddy; 9. இளவயது, young age: 10. சவுக்காரம், soap; 11. பூவழலை, which see; 12. முட்டையின் வெண்கரு, white of an egg.

**வெள்ளை அதிவிடயம்,** white attee.

**வெள்ளை அப்பிரகம்,** white mica.

**வெள்ளை அல்லி,** இதுவே அல்லி, water lily bearing white flowers.

**வெள்ளை ஈருவல்லி,** கூட்டரளி மரம், which see.

**வெள்ளை உப்பி,**
**வெள்ளை உப்பில்லாங் கொடி,** } as opposed to கருப்பு உப்பிலாங் கொடி, ordinary stinking swallow wort — Pentatropis micrphylla.

**வெள்ளை கட்டுதல்,** வெள்ளை ஒழுக்கு நிற்றல், cured gonorrhoea.

**வெள்ளை கொட்டல்,** வெட்டை ஒழுக்கு, gonorrhoea.

**வெள்ளைக் கடம்பு,** See வெண் கடம்பு, white cadamba.

**வெள்ளைக் கடுகு,** white mustard — Brassica alba; pungent in taste; digestive, heat making in its potency. It gives a condition of parchedness in the system; prolonged or excessive use may cause haemoptysis.

**வெள்ளைக் கடுக்காய்,** அமிர்தக் கடுக்காய், white gall-nut of cuddappa white myrobalan — Terminalia pallida

**வெள்ளைக் கடுப்பு,** ஓர் நோய், a disease.

**வெள்ளைக் கண்,** croton viridis.

**வெள்ளைக் கண்டங் கத்திரி,** ஓர் வகை வெள்ளைப் பூவுள்ள கண்டங் கத்திரி, Solanum jacquini bearing white flowers and fruits. It is a thorny shrub.

**வெள்ளைக் கண்டம்,** காயசித்திக்காகச் சித்தருண்ணும் மூலிகை, a herb eaten by Siddhars for rejuvenation.

**வெள்ளைக் கண்டர்,** வெண் துரிசு, white vitriol — Zinc sulphate.

**வெள்ளைக் கண்ணி,** ஓர் பூடு, a plant — Clerodendron infortunatum.

**வெள்ளைக் கத்தரி,** வெண் கத்தரிக்காய், white brinjal.

**வெள்ளைக் கத்திரி,** ஓர் வகைப் பாம்பு, a variety of snake.

வெள்ளைக் கத்தலை, a sea fish — Sciaena miles.

வெள்ளைக் கஸ்தூரிப் பட்டை, ஓர் மரப் பட்டை, the bark of a tree.

வெள்ளைக் கரடி, கரடி, white bear.

வெள்ளைக் கரந்தை, See வெண் கரந்தை.

வெள்ளைக் கரிசலாங் கண்ணி, கரிப்பான், ordinary Eclipta aiba.

வெள்ளைக் கரு, முட்டையின் வெண் கரு, white of an egg — albumen.

வெள்ளைக் கருங்காலி, ஓர் மரம்; ஏறு பித்தம் பெரு வயிறு சுரு மேகம் போம், egg fruited ebony — Dyosphyrus oocarpa.

வெள்ளைக் கருடன், ஓர் வகைக் கருடன், a variety of brahmini kite.

வெள்ளைக் கருடன் கிழங்கு, white variety of sky root.

வெள்ளைக் கரும்பு, white sugar-cane—Saccharum officinarum.

வெள்ளைக் கலியாண முருக்கம், வெள்ளைப் பூ பூர்க்கும் கலியாண முருக்கு மரம், Erythrina indica (bearing white flowers) albiflora.

வெள்ளைக் கலுவம், வெள்ளைக் களிமண்ணால் செய்த சீமைக் கலுவம், mortar made of white stone.

வெள்ளைக் கல், 3 மாதத்திய கருப்பிண்டம், 3 months old foetus; 2. அண்டகக்கல், which see; 3 சுக்கான் கல், lime stone; 4. மழை, which see; 5. கல்லுப்பு, rock-salt; 7. படிகக்கல், crystal.

வெள்ளைக் கல், பங்குனி மாதத்தில் பனியிரவில காற்றில்லாக் காலத்தில் கதிர்போல் வளர்ந்திருக்கும் ஓர் கல்; உவர் நிலத்தின் அடியில் இருக்கும் கல், the stone found at the bottom of the fuller's earth or the efflorescence grown in the soil of fuller's earth in the month of March—April.

"கல்லென்றால் வெள்ளைக்கல் மாக்கலல்லால்
கருங்கல்லும் செங்கல்லும் சுக்கானல்ல"

—(அக—பின்)

வெள்ளைக்கல் சுண்ணம், பிண்டச் சுண்ணம், a white medicinal powder made from the foetus of three months old; 2. slaked lime; நிலத்தி னடியிலிருக்கும் வெள்ளைக் கல்லைக் காளவாயில் வேக வைத்து நீற்றி எடுக்கும் சுண்ணம்.

வெள்ளைக்கல் சுத்தி, உவர்மண் தரையின் அடியிலிருக்கும் வெள்ளைக் கல்லை உவர் மண்ணில் தண்ணீரூற்றி, கலக்கி அதில் கழுவி யெடுப்பது, washing the stone in the solution of fuller's earth, is its purification.

வெள்ளைக்கல் செயநீர், அண்ட செயநீர், a pungent prepared liquid from அண்டக் கல், which see.

வெள்ளைக்கல் பிரமம், See வெள்ளைக்கல்.

வெள்ளைக் கல்லுப்பு, பிண்டவுப்பு, salt extracted from வெள்ளைக்கல் which see.

வெள்ளைக் கவுரி, white cowri.

வெள்ளைக் கழற்கொடி, வெள்ளைக் கழற்சிக் காய்க்கொடி, Bonduc-nut creeper bearing white nuts—Caesalpinia bonducella.

வெள்ளைக் கழிச்சல், மாந்தக் கழிச்சல், diarrhoea in children which is coloured white—Caused by indigestion.

வெள்ளைக் கற்கண்டு, சீனிக் கற்கண்டு, sugar candy.

வெள்ளைக் கற்பொடி, வெள்ளைக் கற்சுண்ணாம்பு நீறு, white slaked lime.

வெள்ளைக் கற்றாழை, ஓர்வகை கற்றாழை, a variety of Aloe.

வெள்ளைக் காக்கட்டான், See வெள்ளைக் காக்கணம்.

வெள்ளைக் காக்கணம், வெள்ளைக் காக்கட்டான், a twiner bearing white flowers—Clitoria ternatea (albiflora).

வெள்ளைக் காக்கி,

வெள்ளைக் காசுக்கட்டி, as opposed to சிவப்புக்காசுக் கட்டி, white Catechu — Hyderabad Catechu.

வெள்ளைக் காஞ்சொறி, காஞ்சொறி, a plant —Tragia involucrata; See எருமைக்காஞ் சொறி.

வெள்ளைக் காட்டாமணக்கு, white jatropha.

வெள்ளைக் காட்டாமணி, உத்தாமணி; see வேலிபருத்தி.

வெள்ளைக் காந்தி, ஓர் மலை மூலிகை, a mountain herb.

வெள்ளைக் காயா, ஓர் காயா, Bilberry tree —Memecylon aungustifolium.

வெள்ளைக் காரச்சீலை, வெள்ளைப் பாஷாணம், கௌரி, குங்கிலியம், சவுட்டுப்பு, வெ.குங்கிலியம், சுட்ட துணிச்சாம்பல் பொடி செய்து காய்ச்சித் துணியிலூட்டிய காரச்சீலை, (காரபிளாஸ்திரி) a plaster prepared with the drugs mentioned above.

வெள்ளைக் காரம், வெண்காரம், borax— Biborate of soda -- Sodabiboras.

வெள்ளைக் காரன்கவளி, தேர்க்கள்ளி, which see.

வெள்ளைக் காரி, உவர் நிலம், fuller's earth.

வெள்ளைக் காவளை,

வெள்ளைக் காவேளை,

வெள்ளைக் கிரிகர்ணி, அவுரி, indigo plant.

வெள்ளைக் கிலுகிலுப்பை, a white species of Crotalaria pulcherrima.

வெள்ளைக் கிளி, சீனக்கிளி, Cockatoo.

வெள்ளைக் கீரை, வள்ளைக் கீரை, a kind of vegetable green.

வெள்ளைக் குங்கிலியம், இதுவே குங்கிலியம், a kind of white frankincense — Resin of Boswellia serrata.

வெள்ளைக் குசும ரோகம், ஓர் வகை நோய், a kind of disease.

வெள்ளைக் குட்டம், leucoderma.

வெள்ளைக் குதிரைக் குளம்பு, இதைச் சுட்டுக் கரியாக்கித் தடவ சில விரண நோய் குணப்படும், white horse hoof — its burnt ash bucals ulcers.

வெள்ளைக் குதிரை மேலிருத்தல், } கள், சாராயம் முதலியன
வெள்ளைக் குதிரை மேலேறல், } குடித்தல், being intoxicated with drinks.

வெள்ளைக் குழம்பு,

வெள்ளைக் குந்திரிக்கம், இது கட்டிகளாயும் வெளிர் பச்சை அல்லது மஞ்சள் நிறமாயும் இருக்கும்; இத்துடன் மெழுகு எண்ணெய் சேர்த்துக் களிம்பு செய்து மேலே ரணங்களுக்குப் போடலாம்; உதிரச் சிக்கலை நீக்கும்; வயிற்றில் மரித்த பிண்டத்தை வெளியாக்கும்; சூரணித்துப் பல் வலிக்குப் போடலாம், வெள்ளை டாமர், Indian copal — white dammer — Vateria indica. It is used intenally for gonorrhoea, ulcers, stomach, and as ointment for external ulcers.

வெள்ளைக் குமுதம், கருவிழி ரோகம், an eye diseases of cornea.

வெள்ளைக் குன்றி, வெள்ளைக் குண்டு மணி, white jeweller's bead — Abrus precatorius bearing white seeds.

வெள்ளைக் குன்றிகம், See வெள்ளைக் குந்திருக்கம்.

வெள்ளைக் குன்றி மணி வேர், இதை வாயிலடக்க சகல விஷம் தீரும், licorice.

வெள்ளைக்கெளிறு,

வெள்ளைக்கொடி, கற்பூர வெற்றிலை; see கற்பூரக் கொடி.

வெள்ளைக் கொடி வேலி, வெள்ளை சித்திர மூலம், lead wort bearing white flowers — Plumbago zeylanica.

வெள்ளைக் கொமபு, நரை மயிர், grey hair.

வெள்ளைக் கொய்யா, ஓர் வகை கொய்யாப் பழம், white guava fruit — Psidium pyrifermis.

வெள்ளைக் கொழுஞ்சி, See வெண் கொழுஞ்சி.

வெள்ளைக் கோங்கு, Hepta parviflora.

வெள்ளைக் கோஷ்டம், white costus arabica.

வெள்ளைக் கோட்டும்பை, தும்பை, leucas.

வெள்ளைக் கோரான், Ixora bearing white flowers — Ixora polyantha.

வெள்ளைச் சங்கங்குப்பி, cleodendron inerme.

வெள்ளைச் சங்கு, ஓர் வகைச் சங்கு, white conch; 2. சங்கஞ் செடி, four spined monetia — Azema tetracantha.

வெள்ளைச் சங்குப்பி,

வெள்ளைச் சதிகம், வெண் மிளகு, white-pepper.

வெள்ளைச் சந்தனம், white sanders.

வெள்ளைச் சரும ரோகம், leucorderma.

வெள்ளைச் சர்க்கரை, சீனிச் சர்க்கரை, white sugar.

வெள்ளைச் சவடு, white saline earth.

வெள்ளைச் சாடரணை, See வெண் சாரணை.

வெள்ளைச் சாமந்தி, ஓர் வகைச் சாமந்திப்பூ, white chrysanthemum — white chamomile.

வெள்ளைச் சாரடை, கண் வியாதிகளைப் போக்கும் ஓர் மூலிகை. See வெள்ளைச் சாரணை.

வெள்ளைச் சாரணை, ஓர் வகைச் சாரணை; சத்தி சாரணை; இதன் சாறு பாஷாணத்துக்கு சுருக்கு கொடுததுக் காட்ட வுதவும், a plant — Trianthema decandra — good diuretic used for eye diseases also.

வெள்ளைச் சாறுவேளை வேர். இது ஓர் காய கற்பம்; முற்றிய வேரைச் சூரணம் செய்து குன்றி மணி முதல் 40 குன்றி மணி 40 நாளைக்கு ஒவ்வொன்றாய்க் கூயர்த்திக் கொண்டே வந்து பிறகு ஒவ்வொன்றாய்க் குறைத்துக் கொண்டே வர நோயணுகாது; கிடைக்கா விட்டால் காட்டுச் சாறுவேளை யாவது பதிலாக உபயோகிக்கலாம், root of Trianthema decandra. It can be used as a rejuvenating drug; 2. நீரிறங்கக் கொடுக்கும் வேர், It is a diuretic.

வெள்ளைச் சாரை, உப்பு மணி, solidified salt made into beads; 2. கட்டிய கல்லுப்பு, consolidated salt; 3. வழலை. which see.

வெள்ளைச்சி, இரசித பாஷாணம், a kind of arsenic.

வெள்ளைச் சித்திர மூலம், lead wort bearing white flowers —Plumbago zeylanica.

வெள்ளைச் சிந்தூரம், சவ்விரம், per-chloride of mercury.

வெள்ளைச்சி முலைப்பால், சிவப்பு நிறப் பெண்ணின் முலைப்பால், the breast milk of a fair coloured woman; மருந்துக் குதவும். it is useful for preparing internal medicines opposed to கரு மாதர் முலைப்பால், which is good for eye diseases and to prepare medicines for the eye.

வெள்ளைச் சிலந்தி, Gomphia angustifolia.

வெள்ளைச் சிறு வழுதலை, white small brinjal.

வெள்ளைச் சீந்தில், ordinary moon-creeper— Tinospora cordifolia.

வெள்ளை ஜிரிகி, ஓர் பூடு, a plant white species of pharbitis nil ruber as opposed to சிவப்பு ஜிரிகி.

வெள்ளைச் சுக்கான், ஓர் வகை உபரசச் சரக்கு, white lime stone — One of 120 natural substances mentioned in Tamil Siddha medicine.

வெள்ளைச் சுரம்,

வெள்ளைச் சுறு, white shark fish.

வெள்ளைச் சூரைச் செடி, See சூரைச் செடி.

வெள்ளைச் செந்தூரம், ஈய வெள்ளி, white-lead.

வெள்ளைச் செம்பை, வெள்ளைப்பூ பூர்க்கும் சிற்றகத்தி, Cassia cuspidata bearing white flowers.

வெள்ளைச் செவ்வந்தி, white chamomile — white chrysanthemum.

வெள்ளைச் சேரான் கொட்டைப் பழம், white marking nut fruit.

வெள்ளைச் சோளம், வெண் சோளம், white Sorgham — Sorghum vulgare.

வெள்ளை டாமர். See வெள்ளைக் குந்திரிகம்.

வெள்ளைத் தகரை, தகரை, sulphur flowered — Cassia glauca.

வெள்ளைத் தமபட்டன்,

வெள்ளைத் தாமரை, வெண்டாமரை; இப் பூவால் ஈரலில் அதிகரிக்கும் உஷ்ணம், மருந்து வேகம் 8-ம் போம், white lotus flower. It is prescribed for heat produced in the liver and produced by medicines.

வெள்ளைத் தாம்பிரம், German silver.

வெள்ளைத் தாளகம், realgar.

வெள்ளைத் தினை, white Italian millet.

வெள்ளைத் தில்லை,

வெள்ளைத் துத்தம், பால் துத்தம், white vitriol.

வெள்ளைத் துத்தி, abutilon.

வெள்ளைத் துரசை, cetis wightii.

வெள்ளைத் துரட்டி மரம், வெள்ளைத் திரட்டு, } a curved thorny variety (white + iron hook + tree) நாக்குழிஞ்சான், wood is white silky backed round leaved tree, covered all over with greyish pubescence—Capparis grandis.

வெள்ளைத் துரத்தி, capparis grandis.

வெள்ளைத் துரிசு, இதுவே துருசு வெள்ளை, calcined blue vitriol.

வெள்ளைத் துவரை, வெண் துவரை, white coloured red-gram — Cajanus cajan.

வெள்ளைத் துளசி, ordinary sacred toolasy as opposed to black toolasy — Ocimum sanctum.

வெள்ளைத் தூதுவளை, வெள்ளைபூ பூக்கும் ஓர் வகை காய சித்தி மூலிகை, three lobed night shade baring white flowers—a rejuvenating drug — Solanum trilobatum (albiflora).

வெள்ளைத் தூள்,

வெள்ளைத் தேக்கு, வெண்டேக்கு, white teak

வெள்ளைத் தேமல், a fungus disease of the skin.

வெள்ளைத் தேன், பத்தியத்திற் குதவும், white honey.

வெள்ளைத் தேன் மெழுகு, cera alba.

வெள்ளைத் தொட்டாற் சிணுங்கி, touch me-not plant bearing white flowers.

வெள்ளை தோல், வெண் குட்டம், leucoderma.

வெள்ளை நண்டு, ஓர் வகை நண்டு, white-crab.

வெள்ளை நமை, see வெள்ளை நாகை, button tree — Anogeissus latifolia.

வெள்ளை நன்னாரி, as opposed to கருப்பு நன்னாரி, ordinary sarsaparilla.

வெள்ளை நாகணம, வெள்ளை நேர்வாளம், a purgative shrub — Croton tiglium; Mussell creeper bearing whiteflowers — Clitoria ternatea (typica) bearing white flowers.

வெள்ளை நாகணத்தி,

வெள்ளை நாகை, Anogeissus latifolia.

வெள்ளை நாங்கு, Asteriastigma macrocarpum.

வெள்ளை நாயுருவி, வெண்ணாயுருவி, ordinary Indian burr — Achyranthus aspera.

வெள்ளை நாவல், white Jamun; இதற்குக் குணமதிகம்; அகப்படுவ தரிது; see வெண்ணாவல்.

வெள்ளை நாவி, வச நாவி, Aconite root as opposed to கரு நாவி.

வெள்ளை நாவினி, வெள் வேலங்காய், fruit of white babool tree — Acacia leucophtaea.

வெள்ளை நீர்முள்ளி, கற்ப மூலிகையி லொன்று; இதன் சமூலத்தில் தாம்பூரம் பற்ப மாகும்; பூவின் சாற்றினால் சூதம் கட்டும், a rejuvenating drug thorny plant with white flowers — Hygrophila auriculata.

வெள்ளை நீலாம்பரம், Barleria cristata.

வெள்ளை நுணா, Morinda citrifolia.

வெள்ளை நெல், வெள்ளைச் சிறு மணியன், a small white paddy.

வெள்ளை நொச்சி, வெண்ணொச்சி, Vitex negundo

வெள்ளை புரளுதல், மல்லாந்து கிடத்தல், lying with face upwards.

வெள்ளைப் பசலி, வெண் பசலை, a creeper — Basella alba.

வெள்ளைப் பசளை, வெண் பசளைக் கீரை, a creeper — Basella alba.

வெள்ளைப் படலம், ஓர் கண்ணோய். பாலா டையைப் போலும் பளிங்கைப் போலும், சிலருக்குக் கறுததும் கண்களில் சதை படர்ந்து கண்களை மூடித்திறக்கும் போ தெல்லாம் உறுத்தி, பார்வை புகைச்சல் போற் கம்மியிருக்கும், an eye disease marked by flesh growth which is white in colour; 2. வெள் விழியில் சவ்வு படர்ந்து கண் புகைச்சல் பார்வை மங்கல் முதலிய குணங் களை யுண்டாக்கும, a spreading growth in the white of the eye i.e., in the sclerotic coat.

வெள்ளைப் பட்டாணி, பட்டாணி, peas-white.

வெள்ளைப் பயன், Vatica Roxburghii.

வெள்ளைப் பவளம், ஓர் வகைப் பவளம், white coral.

வெள்ளைப் பனங் கிழங்கு, Polypodium taxifolium.

வெள்ளைப் பஊயேறி, ஓர் வகைக் கடல் மீன், a silvery white sea fish with brown spots in the upper third of body in front half — Ambassis dussumicri.

**வெள்ளைப் பாகல்,** வெள்ளைப் பாகற்காய்க் கொடி, climber bearing white carilla fruit (bitter gourd) — Momordica charantia.

**வெள்ளைப் பாஷாணக் கட்டு,** இப்பாஷாணக் கட்டு மருந்தினால் சுக சன்னி முதலிய சன்னி, சுர வகைகளும் குன்மம் இவைகளைப் போக்கு வதும் தவிர கைகால்களுக்கு வலிவும் இரத்த ஓட்டம் முதலியவைகளை வளரச் செய்து இம்மருந்தின் வல்லபத்தால் தீரும்.

**வெள்ளைப் பாஷாண சுத்தி,** தாளித்த கற் சுண்ணாம்பை சலததில் கரைத்து, தெளி விறுத்தி, பாஷாணத்தை சிறு துண்டுகளா கச் செய்து துணியில் முடிந்து கிழிக்கட்டி ஷெ தெளிவு தண்ணீர் அடங்கிய பாத்திரத் திரத்தில் தொங்க விடவும்; பிறகு அடுப்பின் மேல் வைதது எரித்து சுண்ணாம்பு நீர் எல் லாம் சுண்டிய பின் கீழேயிறக்கி, பிறகு சூடாறிய பின் பாஷாணத்தைக் கொம்புப் பாகல் பழத்தைக் கீறி அதற்குள் பாஷா ணத் துண்டுகளை செலுத்தி நூலாற் சுத்தி மண் சட்டியிற் போட்டு புடமிட வேண்டி யது; ஆறினபின் எடுத்து மறுபடியும் பாக லிற்குள் ளை வைத்து மடக்கி மடக்கி மூன்று தடவை செய்து எடுக்க சுத்தியாகும்; Purification of white arsenic. It is first boiled in clear calcium hydroxide solution, and then inserted into carilla ripe, and long fruit and tied with third; then it is heated with cowdung cakes. The process is repeated twice more. According to Ayurveda it is purified by soaking in the juice of lime fruit or the liquid obtained from the corm of the plantain tree.

**வெள்ளைப் பாஷாணம்,** ஓர் வகைப் பாஷா ணம்; இதுவே எலிப் பாஷாணம்; கவுரி பாஷாணம் தொட்டி பாஷாணம்; சங்கு பாஷாணம்; இது உலோகங்களைப் போல் பூமியிலிருந்து வெட்டி யெடுக்கப்படும், white oxide of arsenic — Arsenicum album, (Arsenious acidum) It is a stomachic and general tonic promoting appetite and cardiac action *and stimulating mental activity.* It is of great value in irritative dyspepsia, chronic superficial skin diseases as psoriasis, pimpligus eczema etc.

*மலேரியா சுரம் கொய்னாவில் குணமாகா* விடில் வெள்ளைப் பாஷாணம் குணம் தரும் *சிறிய பிரமாணங்களாய்க்* கொடுக்க இரத்த சுத்தியையும் உண்டாகுதம், *1/60* to *1/12* நெல்பிரமாணம் கொடுக்கலாம்; அயத்துடன் சேர்த்துக் கொடுத்தால் (red corpuscles) செங்கூறு கடம் சோணிதம் (Haemoglobin) இரத்ததில் விர்த்தியாகும்; பாண்டுவுக்கும் கொடுக்கலாம் இது ஓர் உபயோகமான *மருந்துச் சரக்கு;* வெகு *சாக்கிரதையாய்க்* கையாளாவிடில் அபாய முண்டுபண்ணும்; விஷ சுரம், குளிர் காய்ச்சல் இவற்றில் மேற் கண்ட விதப்படி கொடுக்க, *சாப்பிட்ட* ஒரு மணி நேரத்திற்குப்பிறகு கொடுக்க குண *மாகும்; யானைக்கால்* வியாதியில் உண்டான சுரத்துக்கும் குஷ்ட ரோகத்திற்கும் உபயோ கித்து வரலாம்; இதன் நிறம் வெள்ளை மஞ் சளாயிருப்பதை அரிதார மென்றும் சிவந்தி ருப்பதை மனோசிலை என்றும் வெள்ளையாய் இருப்பதை வெள்ளைப் பாஷாண மென்றும் சொல்வதுண்டு; இதன் புகை வெள்ளைப் பூண்டு வாசனையாய் இருக்கும்; வியாத பேத காரி, பலகாரி குணமுண்டு; இது பாஷாண மாகையால் சாப்பிடக்கூடாது; இது கெட்ட விஷம்; மேலேபோட்டால் மயிர்களை நீக்கி புண்ணாக்கும்; சுரம் சீதசுரம் விஷசுரம், வாத சூலை, முகசன்னி இருமல், கக்குவான் சுவாச காசம் சூரிய வர்த்த வாதம் பெரு வியாதி இவைகளில் உபயோகிக்கலாம், சர்மரோகம் விப்புருதி பெரும்பாடு பாம்பு கடி, குன்மம், அசீரணம், அதிசாரம் சூதக்காடும் சன்னி சூதக்கட்டு இரத்த க்ஷீண ரோகம் நுரையீரல தாபன ரோகம் காமாலை ரோகம் மது மேகம் இவை களுக்கு இதை உபயோகிக்க குணமாவ தாகும்; இதன் செய நீர்க்கு வெள்ளைப் பாஷாணத்திற்குள்ள குண முண்டு. white arsenic is used for malarial fevers and certain anaemias. It is used as pills and calcined powders. Pepper decoction is an antidote for its poisoning symptoms.

**வெள்ளைப் பாதிரி,** a tree — Sterospermum chelonoides.

**வெள்ளைப் பாயறு,** எருக்கிலை, leaf madar — *Calotropis gigantea.*

**வெள்ளைப் பாவட்டை,** Pavata indica bearing white flowers.

**வெள்ளைப் பித்தளை,** German silver.

**வெள்ளைப் பிரமியம்,** gonorrhoea.

**வெள்ளைப் பிரமேகம்,** பெண்கள் யோனியிற் காணும் வெள்ளை, white venereal discharge in woman.

**வெள்ளைப் பில்லாஞ்சி,** ஓர் செடி, a plant or shrub bearing white fruits as opposed to *கருப்பு பில்லாஞ்சி,* See *பூலா* — Phyllanthus multiflorus or Fluggea leucopyrus.

**வெள்ளைப் பிள்ளை,** Hemicyclia travancorica.

**வெள்ளைப் பீர்க்கு,** white luffa.

**வெள்ளைப் புளிச்சைக்கீரை,**

**வெள்ளைப் புடலை,** white coloured snake-gourd — Trichosanthes anguina.

**வெள்ளைப் புள்ளி,** கரப்பான், eczema.

**வெள்ளைப் புரசு,** Mundetia suberosa.

**வெள்ளைப் புனல் முருங்கை,** இது சாதாரண புனல் முருங்கையைப் போலிருக்கும்; பூ வெள்ளையாயிருக்கும்; இதன் சதைப் பட்டையைக் கொண்டு வந்து பாக்கு வெற்றிலையுடன் சேர்த்து மென்று வாயில் அடக்கிக் கொண்டு இதை நீளமான இரும்புத் தகட்டை உலையில் ஊதி பழுக்கக் காய்ந்த உடன் அதில் வாயிலிருக்கிற தம்பல உமிழ் நீரை 10 தரம் உமிழ்ந்து குருக்கிட அது பழுக்கும்; பழுத்த அதை செந்தூரமாக்கி புசிக்க காய சித்தியாகும். மற்றொரு முறை: மேற்படி மரத்தின் பிசினை எடுத்து வந்து 45 நாள் ஒரு பணவிடை விதம் புசித்துவர காய சித்தியாகும்; பத்தியம் பாலும் சோறும், two methods of rejuvenating the body are given above; ஓர் கற்ப மூலிகை, a rejuvenating drug.

**வெள்ளைப் புனுகு,** இராசாக்கள் நெற்றியில் திலகமாக உபயோகிப்பது, white civet used as a mark in the fore head by Rajahs.

**வெள்ளைப் பூகிகம்,** வெள்ளரி, cucumber —Cucumis sativus.

**வெள்ளைப் பூசனி,** பெரும் பூசனி; கலியாண பூசனி; சாம்பற் பூசனி, ash gourd creeper —Benincasa cerifera.

**வெள்ளைப் பூடு,** வைத்திய முப்பு, medicinal three salts; 2. garlic — Allium sativum.

**வெள்ளைப் பூண்டு,** இதற்கு உஷ்ணகாரி, கபஹாரி, கிருமி நாசினி, சினித்தகாரி, மூத்திர வர்த்தினி குணங்களுண்டு; இதற்கு வெள்ளுள்ளி யென்றும இன்னொரு பெயருண்டு; நாக்குப் பூச்சி ரோகம், நீர்க்கோவை, சலதோஷம், இருமல் இவைகளுக்கு உபயோகிக்க குணமாகும்; கட்டிகளுக்கும் வயிற்றுப் பிசத்திற்கும் உபயோகிக்க சௌகரியமாவதுண்டு; சலதோஷம் இருமல், சுவாசகாசம், கிருமி ரோகம் இவைகளுக்கும் உபயோகிக்க நல்ல குணத்தைக் கொடுக்கும், மருந்திற்குப் புதுதானதே உபயோகப்படும்; கடையில் விற்கும் உள்ளிப்பற்கள் குணமிராது: குழந்தைகளுக்கு சுரத்துடன கூடிய அல்லது பின்னால் காணும் இருமல், மார்ச்சளி இவைகளைக் குணப்படுத்தும்; இதன் சாற்றை சர்க்கரை சேர்த்துக கொடுத்தால் சலதோஷ இருமலுக்கும் சுவாச காசத்திற்கும், காது வலிக்கும உபயோகமாகும்; சிறு நீர் இறங்காமல் அடி வயிறு உப்பிசங் கடப்படும்போது இதை நசுக்கி சலம் விட்டு கிளறி நாபியில் வைத்துக் கட்டினால் தீரும் சுரம், அம்மை இவைகளால் பைத்தியம், புலம்பல், உண்டானால் அதற்கும் இதை நசுக்கி உள்ளங்கால்களில் கட்ட நித்திரை போதலும் உண்டாகும்; இதை பாலில் வேகவைத்துக் கட்டிகளுக்கு கட்டவுடையும்; இதில் Allyl sulphide என்னும் சடுகுயில் ஆவியாகக் கூடிய (volatile lipuid) சத்து உண்டு. அதற்த மருந்து குணமுண்டென்றும் அத்தைலத்தினால் சயம் முதலிய ரோகங்களுக்கு காரணமாக உள்ள நுண்ணுயிர்களைக் (germs) கொல்லும் என்றும ஐரோப்பியரின் அபிப்பிராயம். எளிதில் சீரணமாகித் தாதுக்களுக்குப் பரவும்; இதை வெங்கத்தோடு அரைத்து க்ஷயரோக சமபந்தமான வியாதிகளுக்கு கூட்டு மருந்தாக (poultice) உபயோகப்படும்; இதன் சாற்றை lotion ஆக தயார் செய்து சீழ் பிடித்தரணங்களைக் கழுவ ஆறும், garlic. Allium sativum; persons consuming large quanties of garlic are singalarly immune from the attacks of epedemic diseases. This acts as stimulant, expectorant, anthelmintic, refregirent and diuretic. It is used as condiment. It can be roasted and used as medicine.

**வெள்ளைப் பூண்டுச்சாறு,** இதை விரலால் தொட்டு உள்நாக்கின் வளர்ச்சிக்குத் தடவ சுருக்கமாகும், juice of garlic; elongated uvula is cured if touched with this juice

**வெள்ளைப்பூண்டு தைலச் சத்து,** the essential oil of garlic ($(C_3H_5)_2S$). Allyl sulphide.

**வெள்ளைப்பூ துத்தி,** வெண்பூவிடும் ஓர்வகை துத்தி. Indian mallow bearing white flowers —Abutilon indicum (albiflora).

**வெள்ளைப் பூத்தாளி,** வெண்பூ விடும் ஓர் வகைத் தாளி, a kind of தாளி yielding white flowers — Country Traganth — Stercutia urens.

**வெள்ளைப் பூந்தூதுவளை,** வெள்ளைத் தூதுவளை, prickly shoonday bearing white flowers— Solanum trilobatum (albiflora)

**வெள்ளைப் பூலா,** இதன் வேரை அரைத்து வெள்ளீயத்திற்கு நடவிபுடம் போட தூளாகும், white honey shrub — tin plate smeared with the paste of its root and submitted to calcination it becomes brittle. (powedery)

**வெள்ளைப் பூலாஞ்சி,** வெள்ளைப் பூலா, which see white honey shrub which bears white fruits — Fluggea leucopyrus.

**வெள்ளைப் பூலாத்தி,** mountain ebony — Bauhina variegata.

**வெள்ளைப் பூவி,** கோவை, Coccinia indica.

**வெள்ளைப் பூவில் நதங் கட்டி,** விஷ்ணு கரந்தை, a plant —Sphoeranthes indicus.

**வெள்ளைப் பெருங்காயம,** ஓர் வகை வைப்புப் பெருங்காயம், இதை குஜராத் பம்பாய் கல்கத்தா, சூரத்து இவ்விடங்களில் ஏராளமாய் செய்து விற்பனைக்கு வரும; இது கருப்பு பெருங்காயத்தைப் போலிருக்கும், white asafoetida.

வெள்ளைப் பெரும்பாடு, இரத்தம் வெண்மையாக மாறி ஒழுகப் பெற்ற ஓர் பெரும்பாடு, leucorrhoea.

வெள்ளைப் பொன்னாவிரை, ஓர் ஆவிரை, a white species of cassia — Cassia obovata.

வெள்ளைப் போக்கு, வெள்ளை பொழுக்கு நோய், gonorrhoea.

வெள்ளைப் போளம், வாலேந்திர போளம், which see (white + gum) a kind of recinous gum — Balsamodendron myrrh. அரேபியா தேசத்தில் விளையும் ஓர் கற்றாழை செடியிலிருந்து கீறி யெடுத்து சேகரிக்கப்படும் ஓர் வகை ரோசனதைப் போன்ற கருஞ் சிவப்பும் கசப்பும் வாசனையுமுடைய ஓர் வகைப் பிசின், (It is also called வாழர்த்தி போளம், woman in child bed and myrrh) Bayce balsam; myrrh, woman bole — Balsamodendron myrrha. A small tree with a whitish grey bark-found in Arabia and in the range of hills which run parallel in African shore to Somali coast. It is a gum resin spontaneous by deposited in the cortical layers; occurs in the form of tears of irregular shape of variable size Somewhat translucent of a reddish yellow, or reddish brown colour, has an agreeable aromatic odour and a bitter acrid taste, partly insoluble in water, alchol and ether. It is adulterated with Indian googals Medicinal uses are same as native googals used with olibanum as a constituent of perfumes and ungents.

NOTE: With the liquid myrrha of the ancients no drug of modern times has been identified.

வெள்ளை மட்டி, வெள்ளை மருது, which see.

வெள்ளை மந்தாரை, ஓர் வகை வெள்ளைப் பூஞ்செடி, a flowering plant — Bauhinia acuminata; 2. ஓர் கற்ப மூலிகை, a plant used in longevity of life.

வெள்ளை மருது, வெள்ளைப்பூ பூக்கும் ஆற்று மருத மரம், a tree — Terminalia arjuna myrobalan.

வெள்ளை மருதை, see வெள்ளை மருது.

வெள்ளை மாதளை, ஓர் மாதளை மரம், a pomegranate bearing fruits which one white inside.

வெள்ளை மிளகாய், வெண் மிளகாய், white chilly.

வெள்ளை மிளகு, வெண்ணிறமான மிளகு, 25-30 அடி உயரமுடையது; பழத்தின் நிறம் சிவப்பு; இதனுள் 2 மிளகுகள் இருக்கும்; வாசனையுடையது, உஷ்ணகாரி, உதரவாத காகாரி குணங்களுண்டு; இதை வயிற்று வலி கிரகணி சிலேஷ்ம வாதம் சிழ்ப்பிரமேகம ருட்சை ஆகியவைகளுக்கு உபயோகிக்க நல்ல குணத்தைத்தரும்; கீல் வாதத்திற்கு மேலே போடலாம், white pepper is only black-pepper rid off its skin. In the form of decoction it is given as an antidote to arsenic poisoning (by C. D). 2. தோலைப் போக்கின மிளகுப்பழத்தின் வித்து, pepper rid of its skin; 3. ஓர் பழத்தின் விதை, seed of a fruit.

வெள்ளை முயல், white rabbit.

வெள்ளை முருக்கு, வெள்ளைப் பூவுடைய கலியாண முருக்க மரம், a thorny tree bearing white flowers—Erythrina indica (albiflora).

வெள்ளை முழி, an eye in which the white part is very large wall eye — It is a popular name for glaucoma (a disease of the eye.)

வெள்ளை முள் முருங்கை, வெள்ளைப் பூ பூக்கும் கலியாண முருங்கை, a thorny tree bearing white flowers — Erythrina indica (albiflora).

வெள்ளை முள்வேல், Acacia latronum.

வெள்ளை முள்ளி, ஓர்வகை முள்ளி, a plant — Barleria caspidata.

வெள்ளை முள்ளு, Acacia latronum.

வெள்ளை மெழுகு, சுத்தி செய்த தேன் மெழுகு, purified honey wax.

வெள்ளை மேகம், white venereal discharge.

வெள்ளை யகில், வெள்ளை நிறமான அகிற் கட்டை, white species of eagle wood.

வெள்ளை யஞ்சனக்கல், white antimony which is opplied to the conjunctive to ensure acute vision.

வெள்ளை யடம்பு, white adambo.

வெள்ளை யடுக்கரளி, ஓர் அடுக்கலரி, Nerium bearing double whorl flowers — Nerium odorum.

வெள்ளை யணு, white corpuscles.

வெள்ளை யத்தி, கல்லத்தி, a kind of fig tree.

வெள்ளை யப்பிரகம், white mica.

வெள்ளை யம்புலி, முட்டையின் வெண்கரு, white of an egg—albumen.

வெள்ளை யம்மான் பச்சரிசி, சாதாரண அம்மான் பச்சரிசி, as opposed to சிகப்பு அம்மான் பச்சரிசி, a prostate plant —Euphorbia hirta.

வெள்ளை யரிங்கை, வெள்ளுருவை, which see.

வெள்ளை யலரி, Nerium odorum (bearing white flowers) albiflora. See வெள்ளலரி.

வெள்ளை யவரை, Dolichos lab lab (tropical) bearing white fruits—Kitchen garden white lab lab.

வெள்ளை யவுரி, வெண்ணிறமான அவுரிச் செடி, a white species of indigo plant.

வெள்ளையன், Acacia latronum.

வெள்ளையள் முள்ளு, குடைவேல், Acacia plomifrous.

வெள்ளையா, Holoptelia integrifolia.

வெள்ளை யாதளை, white castor i.e., castor plant bearing white seeds.

வெள்ளை யாமணக்கு, castor plant bearing white seeds — Ricinus communis.

வெள்ளையாமிதம், see வெணமுள்ளிக் கீரை.

வெள்ளை யாவரை, ஓர் வகையாவரை, a plant.

வெள்ளையா விரை, see வெள்ளையாவரை. a plant.

வெள்ளை யானைவேர், மாங்கிஷம், which see.

வெள்ளை யிண்டு, Acacia intsia.

வெள்ளையிலை, வெள்ளை மடந்தை, Mussaenda frondosa.

வெள்ளை யீரல், see வெள்ளீரல்.

வெள்ளை யீருள்ளி, வெண்ணிறமான வெங்காயம், white coloured onion — Allium cepa.

வெள்ளை யூதம், see வெண்கடுகு, white mustard.

வெள்ளை யூமத்தை, வெள்ளுமத்தை, Dhatura bearing white flowers—Dhatura alba.

வெள்ளை யெருக்கு, madar bearing white flowers — Calotropis gigantea — albiflora.

வெள்ளை யெழுத்து, see வெள்ளெழுத்து.

வெள்ளை யெள்ளு, கழுவி சுத்தி செய்து மேல் தோலைப் போக்கிய எள்ளு, sesame washed and cleaned of its skin; 2. white variety of sesame — Sesamum orientale.

வெள்ளை யொழுக்கு, ஓர் மேக நோய், a venereal disease in which there is frequent discharge of semen — a transparent mucous discharge from the urethra.

வெள்ளை யோக்காளம், வெறுவாய் குமட்டல்; "சோபித் தடும்பிணி வந்திடுக்கும் அரோசிகம் தினந்தினம் வெள்ளை யோக்காளம், (புலஸ்கற்பம் 300) nausea.

வெள்ளை ரசிதம், வைப்பு பாஷாணங்களில் ஒன்று, one of the prepared arsenic; 2. வெள்ளி, silver.

வெள்ளை ரோசனம், white resin.

வெள்ளை ரோசா, Indian white rose — Rosa alba — a cooling medicine in fever.

வெள்ளை வசநாபி, ஓர் வகை வசநாபி, a white aconite root.

வெள்ளை வட்டைச் சாரணை, Trianthema pentandra.

வெள்ளை வண்ணாத்தி, ஓர் பூச்சி, a white butterfly.

வெள்ளை வதனத்தி, ஓர் மூலி, a plant.

வெள்ளை வர்க்கம், வெள்ளெருக்கம் பால், milk taken from madar — Calotropis bearing white flowers.

வெள்ளை வள்ளைக் கிழங்கு, வெண்ணிறமான வள்ளி, white sweet potato—a creeper — Ipomoea digitata alias Ipomoea batatas.

வெள்ளை வர்க்கம் பால், வெள்ளெருக்கம்பால், milk taken from calotropis bearing white flowers.

வெள்ளை வாடா மல்லிகை, பால் வாடா மல்லிகை, a white species of amaranth — Gomphrena globosa.

வெள்ளை வாதரக் காட்சி, ஓர் மரம், a tree.

வெள்ளை விரலி, வெள்ளை விரானி, வெள்ளை விருளி, } விலாரி; ஓர் செடி, a plant.

வெள்ளை விட்டுணு கரந்தை, வெள்ளைப்பூ பூக்கும் ஓர் வகை மூலிகை, a species of white flowered விஷ்ணு கரந்தை, which see.

வெள்ளை விளா, See வெள் விளா.

வெள்ளை விழில், white discharge — leucorrhoea.

வெள்ளை விழி, white of the eye.

வெள்ளை விக்கம், பிரசவித்த பெண்களுக்கு ஒரு கால் வெளுத்து மினுமினுப்புடன் காணும் விக்கம், the white swelling of lying in woman in one of the legs, attended with shining and unyielding enlargement — Phlegmasia dolens.

வெள்ளை வீழ்ச்சி, வெள்ளை விழல், which see.

வெள்ளை வெங்காயம், வெள் வெங்காயம், white onion — Allium cepa.

வெள்ளை வெட்சி, வெள்ளைப் பூவுடைய வெட்சிப் பூஞ்செடி, a small tree—Ixora stricta.

வெள்ளை வெட்பாலை, இது ஓர் மரம்; இதற்கு இந்திர விருட்சம் என்று பெயர், a tree.

வெள்ளை வெற்றிலை, கற்பூர வெற்றிலை, a white species of betel leaf with camphor flavour.

வெள்ளை வேங்கை, ஓர் வகைவேங்கை மரம், a tree — Albizzia procera.

வெள்ளை வேலன், வெள்வேல், a tree—Acacia leucophloea.

வெள்ளை வௌவால், a sea fish, rhomboid in shape white shiny in colour; edible fish of good taste.

வெள்ளொடை, ஓர் ஒடை மரம், a tree — Wrightiana.

வெள்ளொதியம் பட்டை, bark of வெள்ளோதியம்.

வெள் ளோக்காளம், வெறும் வாயை ஓக்காளித்தல்; கக்கலில்லாத ஓக்காளம், nausea when water alone is emitted.

வெள் ளோடல் தேங்காய், cocoanut.

வெள் ளோத்திரம், See வெள்ளி லோத்திரம்.

வெள் ளோந்தி, வெள்ளை யோணன், white species of chamelion; 2. கள், toddy.

வெறி, அச்சம், fear; 2 கலக்கம், bewilderment; 3. கள், toddy; 4. நாற்றம், smell; 5, நோய், disease; 6. மயக்கம், giddiness; 7. பைத்தியம், madness; 8. பிசாசம், devil; 9. ஆடு. sheep; 10. போதை, fury from liquor; drunkness.

வெறி கொள்ளுதல், மயக்கங் கொள்ளல், becoming giddy; 2. பைத்தியம் பிடித்தல், becoming mad.

வெறிக் கடுக்காய், பேய்க் கடுக்காய், a kind of wild gallnut.

வெறிக்கக் குடித்த, வெறி யுண்டாகும்படி குடித்த, drunken.

வெறிக்கப் பார்த்தல், பரக்கப் பார்த்தல்; ஓர் மரணக்குறி, staring; a death symptom.

வெறிக்கல், சுக்கான்கல், lime-stone.

வெறிக் குணம், பைத்தியக் குணம், mad-quality; 2. ஓர் மூர்க்கக் குணம், eccentric; 3. மஸ்து கொண்ட குணம், lusty.

வெறிக்குதல், See வெறி கொள்ளல்.

வெறி சிங்கி, ஓர் விரண நோய், ulcer.

வெறிச்சி, அழுகண்ணி, a plant found in marshing places from which water contionusly oozes out — a carnivorous plant — Drosera indica; 2. சண்பகம், a flower—champaca.

வெறிதரு மருந்து, மயக்கத்தை யுண்டாக்கு மருந்து, an intoxicating drug — Bang.

வெறித்த சிங்கம், உப்பு மணி, a bead made by melting the consolidated salt which is not soluable in water but melts; 2. கட்டிய கல்லுப்பு, consolidated rock-salt; 3. முப்பு, the three universal salts.

வெறித்த பார்வை, பயங்கரப் பார்வை, fearful look.

வெறித்தல், மயக்குறல், being intoxicated or stupified.

வெறி நாய், பைத்தியம் பிடித்த நாய், mad-dog.

வெறி நாய் கடிப்பைத்தியம், வெறி நாய்கடியால் ஏற்பட்ட பைத்தியம், canine madness.

வெறி நீர், சாராயம், arrack; 2. பானம், drink causing giddiness.

